உ

ஓம் தத் சத்.

ஸ்ரீ தாண்டவராய சுவாமிக ளருளிய

# கைவல்லிய நவநீதமும்

திருத்துருத்தி இந்திரபீடம்

ஸ்ரீ கரபாத்திர சுவாமிகள் ஆதீனத்துக்குரிய

ஸ்ரீமத்

**ஈசூர் - சச்சிதானந்த சுவாமிகள்**

இயற்றியருளிய

## விருத்தியுரையும்.



இவை சென்னை - இந்திரபீடம்

சங்கமூர்த்தியும் ஒற்றியூர் ஞானாசிரியர்

ஸ்ரீ பி. ஆறுமுக சுவாமிகளின்

மாணவருமான வேதாந்த பிரசங்கமாமேகம்

ஸ்ரீலஸ்ரீ

**ரா. சுப்பிரமணிய ஆச்சாரியார் அவர்கள்**

வேண்டுகோளுக்கிணங்கி ஷை ஆதீனம்

ஸ்ரீ தண்டறை சுப்பராய ஆச்சாரியார் சுவாமிகள்

மாணவர்

**மதுரை ஸ்ரீ S. கந்தசாமி பிள்ளையவர்கள்**

தமக்குரிமையான

மதுரை ஸ்ரீ மீனம்பிகை அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றுதவியது.

உ

ஓம் தத் சத்.

ஸ்ரீ தாண்டவராய சுவாமிக ளருளிய

# கைவல்லிய நவநீதமும்

திருத்துருத்தி இந்திரபீடம்

ஸ்ரீ கரபாத்திர சுவாமிகள் ஆதீனத்துக்குரிய

ஸ்ரீமத்

ஈசூர் - சச்சிதானந்த சுவாமிகள்

இயற்றியருளிய

# விருத்தியுரையும்.



இவை சென்னை - இந்திரபீடம்

சங்கமூர்த்தியும் ஒற்றியூர் ஞானாசிரியர்

ஸ்ரீ பி. ஆறுமுக சுவாமிகளின்

மாணவருமான வேதாந்த பிரசங்கமாமேகம்

ஸ்ரீலஸ்ரீ

ரா. சுப்பிரமணிய ஆச்சாரியார் அவர்கள்

வேண்டுகோளுக்கிணங்கி ஷை ஆதீனம்

ஸ்ரீ தண்டறை சுப்பராய ஆச்சாரியார் சுவாமிகள்

மாணவர்

மதுரை ஸ்ரீ S. கந்தசாமி பிள்ளையவர்கள்

தமக்குரிமையான

மதுரை ஸ்ரீ மீனாம்பிகை அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பெற்றுதவியது.

ஏழாம் பதிப்பு

காப்பிரைட்] 1988 [ரூ. 22

ஓம் தத் ஸத்.

பரப்பிரம்மணே நம :



அகண்டபரிபூரண சச்சிதானந்த அவாங் மநோகோசர ஆதி மத்தியாந்தரகித சொருப சாக்ஷாத்கார நிஷ்டரும், வேதாந்த மகாவாக்கிய லக்ஷியார்த்தத்தைச் சந்தேக விபரீத மற அங்கை நெல்லிக்கனிபோல் முமுட்சுக்களுக்கு அநுக்கிரகிக்கும் அதுல்ய வித்வச் சூடாமணியும், இந்திரபீடம் கரபாத்திர ஸ்வாமிகள் பரம்பரையில் வந்த பிறைசை ஸ்ரீ அருணாசல சுவாமிகள் மாணாக்கரும் ஸ்ரீமத் ஜகத்குரு சங்கர பகவத் பாதாசாரியாரால் நிலை நிறுத்தப்பட்ட அத்வைத சித்தாந்தத்தை தமிழ்நாட்டினர் பலரும் எளிதிலுணருமாறு

பல வேதாந்த கிரந்தங்களைப் பிரசித்தஞ் செய்தவருமான

## ஸ்ரீமத் ஈசூர் சச்சிதானந்த சுவாமிகள்

### வெண்பா.

சார்பிறவி நோய்தீர்க்கும் தத்துவஞா னப்பொருளைப்
பார்முழுதும் ஓங்கவைத்த பைங்குரவர்! - நேர்பெரிய
இந்திரபீ டத்தார்ந் திருந்தசச்சி தானந்தர்
கந்தமலர்த் தாள் நமக்கோர் காப்பு.

ஓம் தத்சத் — குருவே நம :

# ஈசூர் - சச்சிதாநந்த சுவாமிகள்

சுருதி, ஸ்மிருதி, புராணாதிகளான சதுர்தச வித்தைகளையுடைய வைதிக பூமியாகும் இப்பரதக் கண்டம். இதன் தென் பாகத்தில் ஈடுமெடுப்புமற்ற தமிழக முள்ளது.

**நாடும் ஊரும்**

இஃது பல நாடுகளை யுடையதேனு மவற்றுள் மிகச் சிறப்புடையது தொண்டை வளநாடு. இஃது சான்றோருடைத் தென்னுஞ் சிறப்பினைப் பண்டை நாளிலிருந்தே பழமொழியாகப் பெற்றுத் திகழ்கின்றது. இதிற் பலவூர்களடங்கியுள்ளன. இவற்றுள் பெருமை மிக்கவூர் ஈசூர் என்னும் திருப்பதியாகும்.

இத்தகைய திருப்பதியின்கண்ணே பலவகைத் தொழிலாளர்களும் தத்தம் நெறியில் வழுவாது இனிது வாழ்ந்து வந்தனர்.

**குலமும் பெற்றோரும்**

அவர்களுள் வேட்கோவர் மரபில் வந்த திரு - சுப்பராயப்பிள்ளை யென்பவர் சிவநேயச் செல்வராய்த் தம்மை யடுத்தார்க் குதவியாற்றி யாண்டுள்ளார் போற்றும் நற்குணசீலராய் வாழ்ந்து வந்தார். இவரது இல்லறம் நல்லறமாய்த் திகழக் கற்புடைய செல்வி முனியம்மாள் அவர்கள் வாழ்க்கைத் துணைவியாக அமைந்தார்கள்.

இவ்விருவரும் இல்வாழ்வில் தங்கடமை பிறழாது வருவிருந்து, வப்பலூட்டியும் தம்மாலியன்றளவு பிறவுதவிக ளாற்றியும் வந்தனர்.

**பிறப்பு**

இவற்று லவர்கள் இல்லறம் பண்பும் பயனு முடையதாயிற்று. இப்புண்ணியப் பேற்றாலும் தமிழகத்துச் சாதன சதுட்டய மிக்குள்ள உத்தம ஞான பரிபாகிகள் செய்த தவப் பேற்றாலும் வேதமுடிவான சித்தார்த்த போதக மகாவாக்கிய லட்சியார்த்தப் பொருளே திரண்டு ஒரு மானிடச் சட்டை சாத்திக்கொண்டு, அவர்களுக் கோராண் மகவாய் 4917 க்குச் சரியான யுவ ஆண்டு அவனியில் தோன்றியது. தங்கட் காண்மகவு நன்னாளில் தோன்றியதைக் கண்ட பெற்றோ ரளவற்ற மகிழ்ச்சி யெய்தினர். அவர் தம் முறவோர் கொண்ட வுவப்பு உரைக்குந் தரமன்று. பத்து நாளுங் கழிந்த பதினோராம் நாள் உறவோர் தாய்க்கும் மகவுக்குஞ் செய்ய வேண்டிய சடங்கைச் செவ்வனே செய்து, சேய்க்குஞ் சச்சிதாநந்தம் என நாமஞ் சூட்டித் தொட்டிலிட் டகமகிழ்ந்தனர்.

சச்சிதாநந்தரும் வளர்பிறைபோன்று நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து மூன்றும் மாதம் பெற்றோருடன் சென்னைப் புரசைக்கடுத்த குயப்பேட்டையென வழங்கும் சண்முக ஞானபுரத்திற்கு வந்து சேர்ந்தனர். இளமைப் பருவம் ''விளையும் பயிர் முளையிலே தெரியும்'' என்பதற் கேற்ப அவர் வளர வளர அவருடன் பொறுமை, அடக்கம், அன்பு, வாய்மை, பயனிலபாராட்டாமை முதலிய நற்குண நற்செய்கைக ளெல்லாம் வளரலாயின.

அக்காலத்தில் தோப்பா பரதேசி யென்னு மொரு மகான் சென்னையி லிருந்தனர். இவரைப் போற்றாத மக்களில்லை இம் மகான் ஒருநாள் தம் மிருப்பிடத்திலுள்ள திண்ணையி லுட்கார்ந் திருந்தபோது அதிகாலை ஏறக்குறைய மூன்று மணிக்கு, 'அடுத் துள்ள குயப்பேட்டை யெனும் சண்முகஞானபுரத்தில் ஞானப் பிள்ளை அவதாரஞ் செய்துளது; போய்ப்பார்'' என்று சிலர் சொல் வது போலச் சத்தத்தை உணர்ந்தார். உடனே விழித்துப்பார்த்து, ஒருவரையுங் காணாமையால் விடியுமட்டும் காத்திருந்தார். விடிந்த பின்னர், நேரே சண்முகஞானபுரம் போந்து, குழந்தை யிருக்கு மிடத்தைக் கண்டுபிடித்து, அதைத் தூக்கித் தோளில் வைத்தாநந் தக் கூத்தாடி, ''இக்குழந்தையால் இவ்வுலக முய்யும்'' என்று கூறிச் சென்றதோடு நில்லாமல் தினஞ்சிலகாலம் பார்வை யிட்டும் வருவாராயினர்.

பாலகர் சச்சிதானந்தர் பருவம் ஐந்து கடந்ததும் பாலர் பள்ளியில் படிக்கலானார். ஓதாதுணருமுத்தம கவிஞரேபோன்று ஆசிரியர் கூறுமுன் பாடங்களெல்லாம் பரபரப்புடன் வந்தன. அதுகண்டஆசிரியரும் அனைவரும் ''வருங்காலத்தில் சச்சிதாநந்தன் தன் பெயரை விளக்குவான். இது திண்ண' மென்றனர். இன்ன ணம் இவர் ஆண்டுதோறும் பல வகுப்புகள் கடந்து பலநூற்களைப் பயின்றார் தோப்பா பரதேசியின் சட்சு தீக்ஷையின் காரண மாகவோ தம் நற்குணச் செய்கையாலோ, நற்புலமை வளர்ச்சிக் குரிய இலக்கிய இலக்கண நூற்களைக் கற்க, அப்போது சண்முக ஞானபுரத்திலிருந்த வித்துவ சிரோன்மணியான திரு. விசாகப் பெருமாளையர் தம் சோதரர் திரு. சரவணப் பெருமாளைய ரவர்களிடம்

முறையே சங்க நூற்களையும் பஞ்ச இலக்கணங்களையும் விடாது பாடங்கேட்டனர்; கேட்ட பாடங்களைச் சிந்தித்தல் தெளிதல்களால் போற்றிப் புலவராயினர்.

**தொழில்**

கல்வி கேள்விகளால் தம் இளமைப் பருவத்தைக் கடந்த நம் சச்சிதாநந்தர் ஊதியங்கருதி யுத்தியோகஞ் செய்யப் பிரியங் கொண்டனர். அவர் முதன் முதலில் சென்னைக் கிறித்தவ உயர்நிலைப் பள்ளியில் தமிழ்ப் புலமை நடாத்த விண்ணப்பஞ் செய்தார். அப்போது அப்பள்ளிக்குத் தலைவராயிருந்தவர் இவரை வகுப்புத் தந்து பரிசோதிக்க, இவரது போதனாமுறை திறமையா யிருந்தது. அதனாலிவர் தேர்ந்தெடுக்கப் பட்டுத் தமிழாசிரியராகப் பணியாற்றி வந்தார். அன்றியும் தம்மை யடுத்தவர்க்கும் இலக்கண விலக்கிய பாடங்களைப் போதித்து வெளியிடத்திலும் நற்பெயரைப்பெற்றார்.

**திருமணமும் குடும்பமும்**

கற்றவழி நிற்கு மாற்றலுடைய இப்பெரியாரது திருமணப் பருவத்தைக் கண்ட உறவினர்கள் இவரை யில்லறம் படுத்த முயன்றனர் அவர்களது முயற்சி பெருமை பெறச் சச்சிதாநந்த ஆசிரியரும் திருமணஞ் செய்து கொள்ள இசைந்தனர். அப்போது தம் மரபிற் சிறந்திருந்த எழிலார் செல்வி வேம்புலி அம்மை யாரைப் பெற்றோர் மகிழ, வுற்றோர் களிக்கச் சிறந்த முறையில் திருமணஞ் செய்து கொண்டனர். என்றாலும் அவருக்குக் குடும் பத்தி லழுந்திய வுள்ள மில்லை. அதனாலவர் சனகாதி முனிவர்களே போன்று பார்ப்பவர்க்குக் குடும்பத்தி லொட்டி யிருப்பவராகத் தோற்றிக் கொண்டிருந்தார். இவர் தாம் உபாசனா மூர்த்தமாய்க் கொண்ட சிவமுருகனைத்திரிகாலமும் உபாசித்து வந்தார்.

**ஞான குருவைப் பெறல்**

இன்னணம் சச்சிதாநந்தர் பொறி கரணங்கள் யாவும் தூய நெறியில் நிற்க, பொய்யகற்றிப் புகழ் வாழ்வு வாழ்கின்ற சமயத்தில் ஆத்ம ஞானியாம் ஸ்ரீ-பிறைசை அருணாசல சுவாமி களைத்தம் ஞானகுருவாகப் பெற்றார். ஸ்ரீ பிறைசை அருணாசல சுவாமிகள், சண்மத ஸ்தாபக ரென்னும் சிறப்பினையுடைய ஆதி ஸ்ரீ சங்கர பகவத் பாதாசாரிய சுவாமிகள் நான்கு பீடங்களை அமைத்தார். காஞ்சியில் காமகோட்டி பீடத்தை அமைத்த பின்னர், அப்பெருமான் இந்திர பீடத்தை யேற்படுத்தினார். இது சோறுடைத் தென்னும் சோழ

ழனநாட்டில் காவிரியாற்றின் கரையிலுள்ள திருத்துருத்தி யென்னு மூரிலிருக்கிறது இந்தப் பீடத்தில் பிராமண குலத்தி லவதரித்துப் பரமாம்ச சந்நியாசியாய் எழுந்தருளியிருந்து பற்பல மாணவர் களுக்கு ஞானோபதேசம் செய்தவரும், கரபாத்திரசிந்தனை வாக்கிய மெனும் நூலையியற்றியவருமான ஸ்ரீ கரபாத்திர சுவாமிகளின் வழி வந்தவரும் சத்தப் பிரகரணம், தசகாரிய மகா வாக்கியம், சசிவன்ன போதம், ஞானவாசிட்டம், வேதாந்தசூளாமணி, கைவல்லிய முதலிய வேதாந்த நூற்களுக் குரையாசிரியருமான பிறையை-அருணாசல சுவாமிகள் தாமெழுதிய ஞானவாசிட்ட நூலினுரைக்குப் பிழை திருத்தம் செய்யவேண்டி, ஸ்ரீ ஆழ்வார் சுவாமிகளோடு சண்முக ஞானபுரத்திலிருந்த திரு. சரவணப் பெருமாள் ஐயரிடம் வந்து அவரை யுதவும்படி கேட்டுக் கொண்டார். அதற்கவர், ''எனக்கு நேரமில்லை; ஆனால், என்னிடத்தில் வாசித்து வித்துவத் தன்மை மையை யடைந்த சச்சிதாநந்தம் இருக்கிறார் அவரிடத்தில் பிழை திருத்தம் பார்த்துக் கொள்ளுங்கள்'' என்று கூறிச் சிபார்சும் செய்தார். ஞானவாசிட்ட ஞானநூலைப் பிழை பார்த்து வந்த திரு. சச்சிதாநந்தரும் பிறையை-ஸ்ரீலஸ்ரீ அருணாசல சுவாமியை ஞானாசிரியராகக் கொண்டார்.

கொண்ட நம் சச்சிதாநந்தர் குருவுக்கு ஆப்த மங்கம் தானம் சற்பாவ மென்னும் நால்வகைப் பணிகளாற்றி யவரதன்பினைப் பெற்றார். குருவும் நித்தியா நித்திய வஸ்துவிவேகம் முதலிய சாதன சதுட்டயங்களையும் ஆத்ம ஞான நூற்களையும் உபநிடதங்களையும் சதுர்வித வேத வாக்கிய லட்சியார்த்தங்களையும் அவர்க்குப் போதித்து வேதத்தின் உபதேச வாக்கியத்தை யும் உபதேசித்தார் ஸ்ரீ சச்சிதாநந்தரும் சிரவண மநந நிதித்தியாசனம் புரிந்து, அபரோக்ஷ சாட்சாத்கார நிலை யைப் பெற்று, பாஹிய திருட்டியின்றிச் சதா அந்தர் முகதிருட்டி யுள்ளவராய்ச் சித்திரதீபம் போலவும், சித்திரப் பதுமைப்போலவும் நிர்விகற்ப சக்ஜ நிஷ்டானுபவ நிரதிசயாநந்த வாழ்விலிருந்து ததாகாரமாக விளங்கினார். அவ்வப்போது தாமியற்றி வந்த திருப்பணிகளால் குருவினது பூரண அருளையும் பெற்றுப்பெருமை யாய்த் திகழ்ந்தார்.

ஆத்ம ஞான மறிதல் அநுபவங் கோடல்

தம் மாத்ம குருவான ஸ்ரீலஸ்ரீ பிறைசை அருணாசல சுவாமிகள் தாமெழுந்தருளி யாவர்க்கும் ஞானோபதேசம் செய்து, தமக்குக் கிடைத்த மடத்தை மாணவ மணியான ஸ்ரீ சச்சிதாநந்தர் வசம் பிரசங்கஞ் செய்யுமாறு விடுத்துத் தமது ஜனன பூமியையடைந்து. கி.பி. 1866-ஆம் ஆண்டு ஆத்ம நிலையை யெய்தினர்.

இந்திரபீட குருபாரம்பரியம்

அவரளித்துச் சென்ற இந்திர பீடத்தில் நந்தம் ஈசூர் சச்சிதா நந்த சுவாமிகளெழுந்தருளி, அத்துவித மத போதகாசிரியராய்ப் பல நூற்களைப் பல பேர்க்குப் போதித்து வருவாராயினர். இவர் அபரோக்ஷ ஞானனந்த சுவாநுபூதியினைத் தாமனுபவிப்பதோடு, தம்மை யடுத்த சாதன சதுட்டயமுள்ள முமுட்க்சுகளது அஞ்ஞானந்தகாரத்தை நீக்குதற் கொரு ஞானசூரியராயும் நின்று, நியாயம், சோதனை பொருத்தமுற வேதாந்த பிரசங்கம் புரிந்து, சந்தேகங்களை யெல்லா மொழித்து வந்தார். அக்காலத்தில் இவரைப் பார்ப்பவ ரெல்லாரும் "பிரம்மம் போகிறது; பிரம்மம் போகிறது" என்று சொல்லுவார்கள் என்றால், இவர் கலங்கா நிலைமையுள்ள சித்தத்தைப் பெற்றவ ரென்று தற்சொருபத்திலேயே யழுந்தி விளங்கினரென்றுந் தெரிகின்றது.

இவரது சொற்பொழிவு சென்னையின் நாலா பக்கங்களிலும் பரவி பிரசாசதானியைப் சூழ்ந்துகொண்டது. இதனால், வருந்திய பிற கொள்கையினர் கிறித்தவருள்பட இவரை யண்மித் தம் மதச் சித்தாந்தப்படி வினவினர். வினவியவற்றுக்குத் தகுந்தவிடைகளைத் தந்ததன்றி, நம் சச்சிதாநந்த ரவர்களை விடையிறுக்குமாறு சில வினாக்களையும் விடுத்தனர். விடையிறுக்க முடியாதவர்கள் பணிந்து சென்றார்கள்.

தகுதிவாய்ந்து தம்மையடுத்த பேர்கட்கெல்லாம் இந்திரபீடக் குரு சச்சிதானந்த சுவாமிகள் மகாவாக்கிய ஞானோபதேசம் புரிந்து பகிர்முக திருஷ்டியை நிவர்த்தித்து, அந்தர்முக திருஷ்டியுள்ளவர்களாக்குவித்து, நிர்விகற்ப ஞானனந்த வாரிதியில் மூழ்கச் செய்தனர். இவர்க்கு மாணாக்கரானோர் பல்லோராயினும் இன்று புலப்பட சமாதியா யிருப்பவர்கள் ஸ்ரீலஸ்ரீகள் சுவாமி வேங்கட சுப்பாநந்தா, கூப்பர் முனிசாமி, புவனகிரி மலையாளத்து சுவாமி, சாதுரத்தின சற்குரு பெரியோன், தண்டறை சுப்பராயசுவாமி ஐயாக்கண்ணு

சுபேதரர், ஒற்றியூர் ஞானசிரியர் ஆறுமுகசுவாமிகள், பவழத்தங்கவேலையர் ஆகிய இவர்களே.

நூலியற்றல்

இவ்விதம் ஞானப் பிரசங்கம் செய்கையில் துவிதபேத வாதத்தைப் பூர்வபட்சஞ்செய்து அத்துவித அபேத வாதத்தைச் சித்தாந்தஞ் செய்யுமாறு தர்க்கம்புரிய நேரும் சமயத்தும், தாம் தமது அந்தர்முக திருக்காகார நிலையிற் பிறழாது நின்று பேசுவதல்லது, பகிர்முக திருசிய ஆகாரப் பிறழ்ச்சியினின்று பேசுதலின்று. இவர் செய்யும் ஞானப் பிரசங்கத்தோடு அப்போதைக்கப்போது தமது சகஜ ஞான-நிட்டை யிலுதித்த சுவாநுபவங்களையும் "ஏகமேவாத்வைதம்" என்னும் சுருதி வாக்கியத்துக்கு மாறுபடும் அஞ்ஞான காரியமாயும் துக்க காரிமாயு முள்ள துவிதபேதங்களை நிராகரித்தலையும் அமைத்து, திருக்கு திரிசிய விவேகம், பிரத்தியக்ஷாநு பூதி விளக்கம், எதார்த்த வாதம், வேதாந்த இலக்கணம், உத்தமவாதம், ஜீவகாருணிய சுவானுபூதி விளக்கம் ஆகிய நூற்களை யியற்றி யிவ்வுலகமுய்ய வழங்கினர். அன்றியுமிவர் கைவல்லிய நவநீதம், வேதாந்த சூளாமணி, சசிவன்னபோதம், பிரபுலிங்கலீலை, சொரூபசாரம், உபநிடதம், *பகவத்கீதையாகிய இந்நூற்களுக்குப் பெருமையான வுரையியற்றிப் பெருமையுற்றுர்.

அருங் குணங்கள்

தமது கிருகத்திலேனும் வேறு எவ்விடத்திலேனும் வேதாந்த நூலுணர்ச்சியில்லாதவரிடத்திற் பேச இவர் மிக அருவருப்புடையரா யிருந்தனர். தக்க பரிபாகிகளேனும் ஞானநுபூதியுடையவரேனும் நேரிட்டு விட்டாலோ அவருள்ள முவக்குமாறு நியாயத்தாலும் பரீட்சையினுலும் பொருத்தத்தினுலும் கடல் போன்ற தமது துரியாதீத சுவாநுபவங்களை யெடுத்துச் சொரிந்து பிரமாநந்த சமுத்திரத்தில் அவரை மூழ்கச்செய்வார். அத்துவைதத்-திற்குத் துவைதம் சாதகமெனக்கூறுது, அதுவே சித்தாந்தமெனக் கூறுதலைக் கேட்ட லிவர்க்குக் கர்நகடூரமாயிருக்கும் இலவுகீகமான வார்த்தைகளைப் பேசுங்காலததும் மற்ற இலவுகீக சந்தர்ப்பத்தும் அந்தர்முக திருட்டியிலேயே நின்று வியவகாரஞ் செய்வார். இவரெப்-போது ஞாயம், சோதனை, பொருத்தம் இவற்றிற்கியையப் பிரபல

*இக்கீதையுரையை யாரோ களவாடி விட்டனர்.

சுருதி சம்பந்தமான அத்வைத விசாரம் செய்வதேயன்றி, அற்பசுருதி சம்பந்தமான கர்மமாதிகளைப் பற்றி விசாரஞ் செய்வதேயில்லை. சமயம் நேரிட்ட போது பிரபல சுருதி விசாரத்துக்குரிய முமுட்சுக்களின் முன்னர் அவைகளை மறுத்தும் சொற்பொழி வாற்றுவர். இதனால், சத்தாதி விடய ஆகாரத்தில் பிரியப்படும் பரிபாகிக எல்லாத அமுமுட்சுக்களிற் சிலர் வெறுப்புற்று இவரை யிகழ்ந்து வந்தனர். இதைப் பற்றி யார் என்ன இகழ்ந்தாலும் என்ன புகழ்ந்தாலும் இவர் பொருட்படுத்துவதில்லை. இவர் தாம் செய்தொழிலால் ஈட்டிய அசையும் அசையாத பொருள்களையெல்லாம் தம்முபாசனா மூர்த்த மாயமைந்த சண்முகஞானபுரத்தில் கோயில்கொண்டுள்ள கந்தப் பெருமானுக்கு நித்திய பூசைக்கெழுதியுள்ளார். சுருங்கக் கூறின் இவர் காலத்திலிருந்தவருள் மிகச் சிறந்தவரான ஸ்ரீமத் இராமலிங்க அடிகள், இவரைப் பாராட்டியுள்ளாரெனின் இவர், குணம் மிகப் பாராட்டத்தக்கதாம்.

இவ்வாறு இம்மகான் ஏறக்குறைய முப்பதாண்டு வரையில் வேதாந்தச்சொற்பொழிவுகளைப்புரிந்து, யாவருள்ள முமுள்ளுமாறு புகழொடு விளங்கி யிருந்தார். இனித் தமதுடலில்லாது விதேகமுத்தியடையுங் காலஞ் சமீபித்த தென வுணர்ந்து, பார்த்திப வாண்டு, கார்த்திகைத் திங்களாதி வாரமொன்றில் வழக்கம்போலச் சொற்பொழிவாற்றி முடிந்தவுடன் ஆண்டு கூடியிருந்த மாணக்கர்களை மிகக் கருணையுடனோக்கி, ''நீவிரெல்லீரும் அடுத்த தையாண்டு தைபூசத்துக்குள்ளாக இடைவிடாது போந்து, இன்னுந் தெரிந்து கோடற்கியைந்த அரிய விரகசியங்களை யையந்திரிபறத் தெரிந்து கொள்ளுங்கள்'' என்றுணை யிட்டருளினார். அன்று தொடங்கி, இடைநடுவில் பாக்கியாயிருந்த சில மாணக்கர்களுக்கும் ஞானோபதேசம் செய்து, சச்சிதானந்த சிவோகத்தி லமர்ந்திருந்தார். அப்போதவரை யண்டியிருந்த மாணவர்கள் இவரை நோக்கி, ''தேவரீர் விடுக்கு முடலை யெங்கு வைக்க உத்தரவு?'' என வுசாவினார்கள். அதற்கவர் ''மலத்தை யெங்கு வைப்பீர்கள்?'' என்றெதிர் வினவி யாண்டுப் போடும்படி கூறினார். அன்றியும் இம்மகானது உடலைச் சீடர்கள் போட்டோ எடுக்கும்போது இவ்வுடல் நானல்லவே என்றும், இந்த உடலையா நானென்று உங்களுக்குப் போதித்தேன் என்றும், எதார்த்த

(margin note: விதேகமுத்தி கைவல்லியம்)

நானைக்கண்டு போட்டோ எடுத்துக் கொள்ளுங்களென்றுங் கூறினார். தான் எழுதிய திருக்கு திருசிய விவேக நூற்கு முதற்பக்கத்தில் (டைட்டில் பேஜில்) தம் பெயர்முன் சுவாமிகள் என்று அச்சடித்துக்-காண்பிக்கும்போது இவ்வுடல் சுவாமியா என்று கூறி சுவாமிகள் எனனும் பட்டத்தை அகற்றிவிட்டுடு முதற்பாகத்தில் சச்சிதானந்தப் பிள்ளையென்றே போடுமாறு கட்டளை யிட்டனராம் மேலேகுறிப் பிட்ட நாட்களுக்குள் தனியே அபரோக்ஷ சாக்ஷாத்காரமான பரி பூரணசிவன் முத்தியிலிருந்து ஆங்கிலம் 1886 ஆம் ஆண்டு ஜனவரி திங்கள் 21-ம் நாளுக்குச் சரியான பார்த்திப வருடு தைத்திங்கள் 10ம் நாள் குருவாரம் இரவு 10-மணிக்கு ஆயில்லிய நட்சத்திரம் கூடிய நேரத்தில் பிராரத்துவ அந்தியதநுவை விடுத்துரியாதீத விதேக கைவல்லிய முத்தியடைந்து பரிபூரணபிரம்ம சொரூபரானார்.

[இம்மகானது திருமேனி, இவர் வாசம் செய்திருந்த சென்னை, புரசைக் கடுத்த சண்முகஞானபுரம் கந்தசாமிகோயி லுக்குத் தானமா யளித்துள்ள இல்லத்தின் பின்பக்கத்திலேயே சமாதி செய்யப்பட்டுள்ளது அச்சமாதிக்கு நித்திய நைமித்திய பூஜைகள் சிறப்பாக நடந்து வருகின்றன. இம்மகான் இல்லறத்தி-லிருந்து உள்ளத் துறவறம் பெற்று முத்திபெற்றவர்]

சுபம் சுபம் சுபம்

திருத்துருத்தி இந்திரபீடம்
வேதாந்த பிரசங்க மாமேகம்,
ஸ்ரீலஸ்ரீ ரா. சுப்பிரமணிய ஆச்சாரியார்
மாணவர் இந்திரபீடம் புலவர் வே. த. அர்ச்சுனனார்.

---

## ஸ்ரீ கரபாத்திர சுவாமிகள் ஆதீன வழிமுறை

வந்த மாணவர்கள்

1. தத்தாத்திரேய சுவாமிகள்
2. செங்கமல சுவாமிகள்
3. முத்தைய சுவாமிகள்
4. சுப்பிரமணிய சுவாமிகள்
5. நாகை-அருணாசல சுவாமிகள்
6. பிறைசை-அருணாசல சுவாமிகள்
7. ஈசூர்-சச்சிதானந்த சுவாமிகள்
8. தண்டறை சுப்பராய ஆச்சாரியசுவாமிகள்
9. மதுரை, கந்தசாமி சுவாமிகள்
10. ,, ஆவுடையப்ப சுவாமிகள்

ஓம்

பரப்பிரஹ்மணே நம:

# சாற்றுக்கவிகள்

வியாசர்பாடியில்

ஞானசூரியராக வெழுந்தருளியிருந்த

ஸ்ரீ ராமாநுஜ யதீசுவரரவர்கள்

இயற்றியருளிய

சுலோகம்

1. கைவல்ய நவநீதஸ்ய வியாக்கானம் கிருதவான் ஸ்வயம்
   ஸச்சித் கைவல்ய நவநீதஸ்ய வியாக்கானம் கிருதவான் ஸ்வயம்
2. ஸச்சிதாநந்த ரூபோஸௌ, லோகானுக்கிரஹ காம்யயா
   திக்கா லாத்தியநவ சின்னாநந்த சின்மாத்ர மூர்த்தயே
3. ஸவானுபூத்யேக மானாய நம: சாந்தாய தேஜஸே,
   ஸச்சிதாநந்த ரூபாய நித்யா யாக்லிஷ்ட காரிணே
4. வியாஸபுரியாம் நிவாஸ்ஸ்த்த ராமாநுஜ யதி ஸ்வயம்
   ஜ்ஞாத் வாக்ரந்தார்த்த விஸ்தாரம்ச லிகிதம் ஜ்ஞான முத்ரயா

[கருத்து: சச்சிதாநந்த வுருவாக வுடைய இவ்வுலகத்தை யுய்விக்க வேண்டுமென்ற கோரிக்கையால், திக்குக்கால முதலிய வற்றால் பாதிக்கப்படாத முடிவற்ற சின்மாத்திர மூர்த்தமாய் அனுபவமொன்றா லறியக்கூடியவரை வணங்கிச் சாந்தமுந் தேஜசுமுடைய ஸ்ரீமத் சச்சிதாநந்த சுவாமிகளால் சுயமாக எழுதப்பட்ட கைவல்லிய நவநீத நூலின் அகலவுரையை, வியாசர்பாடியில் எழுந்தருளியுள்ள தன்னையறிந்த ஞானியான இராமாநுஜயதீ யென்னும் பெயருடைய நான் மிகவும் பாராட்டுகிறேன்]

---

சென்னைச் சர்வகலாசாலைத் தலைமைத் தமிழ்ப்பண்டிதர்

இயற்றமிழாசிரியர்

கோ. இராஜகோபாலப் பிள்ளையவர்கள்

இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

சிச்சிதா னந்தவநன் குணற்றலெனப் பலசெப்பி மறையின் சீர்த்த
உச்சிதா னந்தமறு வொருபெருவா னொளியாத லுரைத்த வாறு
நச்சிதா னந்தலில தெனவுணர்த்து கைவல்ய நவநீ தக்குச்
சச்சிதா னந்தப்பேர்ப் பெருந்தகையோ ருரைவிரித்துச் சாற்றி னானால்.

வித்வான்-திருமயிலை

சண்முகம் பிள்ளையவர்கள்

இயற்றிய

கலிவிருத்தம்

தன்னனு பவம்புவி தனிற்கைவலி யந்தான்
என்னநனி சொற்றுலகி னின்னமெறு வித்தான்
மன்னுபிர மத்துருவ மாவிவண் வயங்கும்
தன்னுகரி ருண்டவ னெனுந்தவனு மன்னே. (1)

இத்தகைய நூற்கிய லுணர்ந்தனு பவஞ்சால்
மெய்த்தவ ரலாதவர் விளக்கம துருரென்
றித்தரைமி சைப்பிறைசை யின்னவிரு வோனன்
முத்தனரு ளுசலன் மொழிந்தனனெ ருரையே. (2)

இன்னவுரை யாருட னசைக்குரிமை யின்றேல்
இன்னபடி யென்றறி கிலாரென லுணர்ந்தீண்
டன்னபெரி யோன்சச் சிதானந்த னெனவந்
துன்னரும் விருத்தியுரை யென்றுரைசெய் தானல். (3)

அன்னவுரை பாடிய மெனப்பொலிவ தல்லால்
இன்னபரி சென்றெமனே ராலிவ ணறிந்தே
பன்னிடு தரத்ததல வென்னினும் பரிந்திட்
டென்னென வுரைக்குது மெடுத்ததனை யம்மா. (4)

---

திரிசிரபுரம் காலேஜ்-தமிழ்ப்பண்டிதர்

அ. க. அமிர்தலிங்கம் பிள்ளையவர்கள்

இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரிய விருத்தம்

சீர்பூத்த மறைமுடிவிற் றிரண்டபெருஞ் சொற்றொடரின்
றிறத்து வண்மைக்
கூர்பூத்த பயன்சுருங்கி விரிவகைதாண் டவராயக்
கோமா னன்பாற்

பேர்பூத்த செழுந்தமிழாற் கைவல்ய மெனவொருநூல்
பிறங்கச் செய்தான்
பார்பூத்த மான்பமைந்தோ ரந்நூலின் சிற்றுரைசீர்
பற்ற வாற்றை. (1)

தேர்ந்துதர முற்றவர்க டம்மையன்றி மற்றையருஞ்
செவ்வ னேகொண்
டோர்ந்துய்யு மாறுபயன் விரியவுரைத் தருள்கென்ன
வுரைப்ப வன்பே
கூர்ந்துமுதற் சுருதியுத்தி யனுபவங்கள் கற்குமுணங்
கொள்ள வாய்மை
நேர்ந்துவிசே டம்பயப்ப விருத்தியுரை செய்துலகி
னிலவித் தானல். (2)

அச்சுதா நகமான மறைமுடிவே தானக
வசல மான
வுச்சிதார்த் தப்பயனே யுள்ளொளியா னுணர்ந்துபய
னுற்று மல்கு
மிச்சிதா பாசரிலக் கணமுடித்துத் தன்னியற்பேர்க்
கிசைந்த வுண்மைச்
சச்சிதா நந்தபயன் றனை வனுபூதித்
தலைவன் மன்னே. (3

திருவல்லிக்கேணி

## வேங்கடாசலப் புலவரவர்கள்

இயற்றிய

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வேதாந்த மென்னும்பாற் கடலை யுண்டு
வீங்கிருளை விலக்கும்வெண் மதிய மேபோல்
ஓதார வேலையெலாங் கையிற்றி ரட்டி
யுண்டமுனி யரசென்ன வதிச யித்துத்
தாதார்ந்த துளவணிவோன் மாலே யானன்
தாமரையி லொளிர்வோனு மறைவா யுற்றன்
சீதார்ந்த கைவல்ய விருத்தி கண்டே
சிச்சிதா சுத்தசிவஞ் செய்தார் நாணே.

சேலம் ஜில்லா வக்கீல்

அத்துவிதானுபவி

## அப்பாசாமிபிள்ளையவர்கள்

இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

திருமருவு மான்முதற் றேவாயாரினுமிக்க
சிவசொரூப மேகருணையால்
செகமதனில் ஞானபரி பாகருக் காகவே
தேசிகோத் தமமூர்த்தமாய்
மருமலர்ச் சோலைசெறி யீரூ ரெனும்பதியில்
வந்தவ தரித்துமேலாம்
மகிமையுள வத்துவித நிலையிஃதெனத்தெரிய
வகுத்தருள் புரிந்தன்றி
உருவநா மந்தன்னை யுள்ளபடி யாராயி
லுனையன்றி வேறில்லையென்
றுண்மையை யுணர்த்துநவ நீதகை வல்யபத
வுரையினை மிகத்தெளிவதாய்
அருமையென மகிழவே கரதலா மலகமென
வருளியவி ருத்தியுரையை
அச்சிலு மியற்றிவைத் தருளினன் சச்சிதா
னந்தசற் குருநாதனே.

நேரிசை வெண்பா.

அருத்தமெனும் பொன்மலருக் கானந்த வாச
விருத்தியுரை செய்தான் விளங்கத் — திருத்தியாய்
அச்சமொழிந் தன்பர்க் கறிவின்ப மேலிடவே
சச்சிதா னந்தகுரு தான்.

கட்டளைக்கலித்துறை.

அய்யா குருசச்சி தானந்த மேயறி வாம்பொருளே
மெய்யாந் திருசியம் வேறுமன் றென்றன் றெனவிரித்தே
செய்யா மொழிநிகர் நின்னுரை யாமிதைத் தேர்ந்தவர்க
ளுய்வா ரயிக்க கதிபெறு வார்சத்ய முண்மையிதே.

### மட்டு விருத்தம்.

உருவ நாமந் தனைநோக்கா துணர்வே பொருளா நோக்கு தற்கே
கருவி யாய நவநீத கைவல் லியமா நூலு ரைக்குப்
பெருகும் விருத்தி யுரைய ளித்த பெருமா னேநின் பேருதவிக்
கொருகைம் மாறுங் கண்டி லன்யா னுன்றாள் சரணஞ் சரணமே.

---

திருமூலர்மரபு

சதாசிவப் பிரஹ்மயோகியின் மாணாக்கர்

### தே-சுப்பராய் முதலியாரவர்கள்

இயற்றிய

### நேரிசையாசிரியப்பா.

இருநிலத் தெம்மதத் தவரு மிரிய
ஒருதனி யாயொளி ரிந்திர பீடத்
துதித்துச் சுருதி யுத்தி யனுபவ
மிதயத் தியையத் தேர்ந்துகை வல்ய
நூற்கு விருத்தி யுரைதனை நுவன்றனன்
தோற்கப் போலி ஞானியர் சொரூப
நிச்சயம் விளக்கு நிபுணன்
சச்சிதா னந்தத் தனிப்பெய ரோனே

---

இந்நூலுரையாசிரியர் மாணாக்கர்

### சேலம்-கோமளேசுவர முதலியாரவர்கள்

இயற்றிய

### நேரிசை வெண்பா.

அகல்வரிய வஞ்ஞான வாரிருளை நீக்கும்
புகல்வரிய மெய்ஞ்ஞானம் பூட்டும்—இகல்வரிய
சச்சிதா நந்தகுரு சாமி விரித்துரைத்த
வுச்சிதகை வல்ய வுரை.

---

சுவகீயாநந்தப்ரஹ்மயோகீந்திரர்

மாணாக்கரும்

அத்வைதவிவேகஸமாஜ ஸ்தாபகருமாகிய

மணிமங்கலம்-திருவேங்கட முதலியாரவர்கள்

இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

உலகுயிர் பரத்தி னுண்மை யுருவனு மொருவ னீசூர்த்
தலமுற வவத ரித்துத் தகைபெறு கைவல் யத்துக்
கிலகுறும் விருத்தி யென்ன விசைத்தனன் றப தத்தை
நலமுறத் தெரித்த சச்சி தானந்த ஞான வேந்தே.

---

அத்வைதவிவேக ஸமாஜத்தாரி லொருவரும்

ஷை முதலியாரவர்கள்

மாணாக்கருமாகிய

வாயலூர்-சபாபதி முதலியாரவர்கள்

இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பல்லாரும் வியந்தேத்தக் கைவல்ய நவநீதப் பனுவன் மேய
சொல்லாரும் பொருளையெலா மால்வித்திற் பெரியதரு தோற்று
மாபோல்
கல்லாருங் கனிந்துணர வாடியினில் விரித்துரைத்தான் கனமே
யென்னும்
செல்லாரும் பொழிலீசூர்ச் சச்சிதா நந்தபர சிவஞ ஞனே.

---

உ

கடவுள் துணை.

# கைவல்லிய நவநீதம்.

## முகவுரை.

---

இந்நூற் குரைசொலப்புகுவார் அனுபவிகளாகவேண்டும். அனுபவமாவது யாதானு மொன்றை நான்கு காலத்தினு மித்தையாக்க வேண்டும்; அங்ஙன மித்தையாயதைப் பரமாக்கவேண்டும்; அங்ஙனம் பரமாயதைத் தானாக்கவேண்டும். இங்ஙனமாக்கற்கு வலியின்றேல் யுத்தியினாலேனும் அங்ஙனமாக்கவேண்டும் யுத்தியாவது ஞாயம், சோதனை, பொருத்தம் இம்மூன்றாயினையவதும்ீஇம்மூன்றனும் முரணின்றிக் கூறுவதுமாம். இங்ஙனமேனுங் கூற வலியின்றேல், சுருதி முகத்தாலேனும் அங்ஙன முரணின்றிக் கூறவேண்டும். கூறலாவது யுத்திக்கு மாறின்றிக்கூறல். மாருவது உபமான உபமேய சாதாரண தருமங்கட்குப் பொருத்தமின்றிக் கூறல். இங்ஙனம் மாறிக்கூறுவதினும் வாய்பொத்திக் கிடைக்கை நன்று ஏனெனில் அனுபவமில்லா-விடத்து அனைத்தையுஞ் சின்மாத்திரமாக்கி யனுபவித்தல் கூடாது. யுத்தியே னுமின்றேல் பிரபலசுருதியென்பதற்கு விக்கினம் வரும். சுருதிமாத்திரத்தாலாயிலுங் கூறப்புகின் ஏனையபண்டிதர் வித்வான்-களைக் காட்டினும் தாம் வேதாந்த சாம்பிரதாயத்தா ரென்பதி லென்சிறப்பு? எந்நூல் கிரந்தகர்த்தர்களுந் தத்தங் காத்தை வாக்கியப் பிரயோகத்திலேனும், செய்யுட் பிரயோகத்திலேனு மமைத்தனர். அங்ஙன மமைத்ததை யுணரவேண்டின் எழுத்துச் சொற்பொருள் யாப்பலங்காரந் தருக்கமுகத்தாலன்றிக் கூடாது. ஆயிற் பண்டிதரே சாலுமெனின், வேதாந்தானுபவ ரசமுமுண்டேற்சாலும். இன்றேற் பதவுரைக் கதிகாரிகளன்றிச் சாம்பிரதாயத்தாரல்லர். சாம்பிரதாயத் தாரெனத் தம்மைக் கொள்ளிலோ, யுத்திக்கு முரணாது சுருதியனுபவங்

கூற வேண்டும். அங்ஙனமின்றேல் தான்தோன்றிச் சாம்பிரதாயத்தார் எனப்படுமன்றே! இங்ஙனமாவதினு மூடமௌனமா யிருக்கை பிறர் மதிக்கைக்கு நன்கு சிறப்பு. இஃதன்றியும் குருத்தனம் விழையாதார் எங்கணுமில்லை; விழையினுந் தத்த மையந்திரிபகன்றுரலர்; அகன்றுற்போற் காட்டினும் பிறர்பா லேன்செய்வர்? உண்மையை ஞான நூல்போல் ஞாயம், சோதனே, பொருத்த மென்னு மிம்மூன்று மூகத்தாற் கன்மம் பத்தி யென்னும் அற்ப சுருதிக ளுணர்த்தா வென்பதை எங்ஙன நிலையுறுத்தவல்லார்? யாரேனு மிங்ஙன முரணின்றி யுணர்த்த வல்லரா யுரையிடின் அஃது யாமேற்ப மல்லமென்பர்; யாதினுலென வினவில், எமது சாம்பிரதாயத்தா ரல்லராதலினென்பர். ஞாயஞ் சோதனே பொருத்தமுளவேற் கூடாதென்னே? இங்ஙனமின்றி யெம தாசான் சொல்வதைக்கேட்ட லெமது மரபென்பர். இவர்களிடுமுரை யென்சிறப்பிற்றே, அதையேற்கும் விவேகமென்சிறப்பிற்றே, முற்று முணர்ந்தாரே யிதனை யறியவேண்டும். இதனினும் யாமுணர்த்த வேண்டுவதென்னையுளது? இதுநிற்க, இன்னுமுரைக்கிற் பெருகுமாதலிற் சுருக்கி யுரைத்தாம்.

---

கடவுள் துணை.

# கைவல்லிய நவநீதம்.

## தத்துவ விளக்கப்படலம்.

கேவலத்தின்றன்மை கைவல்லியம்; நவநீதம் வெண்ணெய்; எனவே, அன்னியமாகாது தானேதானாய நிலையெனப் பெற்றும். இவ்விருபதமு மாரியம். தன்னைத்தான் விசாரிப்புழிச் சுத்தாசுத்த சகல கேவலமிறந்து தான்மாத்திர மிஞ்சிநிற்கும்; நிற்கவே சச்சிதானந்தம் விளங்கும்; விளங்கவே நிரதிசயானந்தமதாம். ஆகவே யனைத்து மிங்ஙனமாகவிளங்கும்; விளங்கவேதானே யனைத்துமா யன்றாய் முடியும்; முடிவதா லிது கேவலமெனப்படும்; படுவதால் இதனை நவநீத மென்றார். ததியனைத்துங் கடைந்துழியன்றி வெண்ணெ யாகாததுபோ லிங்குந் தத்துவங்களனைத்திலுந் தன்னைத் தான் விசாரியாதுழித் தானேதானாக விளங்காது. ஆதலிற் றன்னை நவநீத மெனக் கொண்டாய்; கொள்ளவே தானாகிய நவநீதமென்றாயிற்று; கைவல்லியம் தனித்துநிற்கை. மூடசுழுத்தியும் குண்டலிசத்தியு மிங்ஙனமாதற் கிடம்பெருதோவெனின், நனவிற்சுழுத்தி யாதுக்கென வினை வாராது காக்கவேண்டும். என்னை? ''வினவிற்பரத்தை யறிவுறாதற்கவத்தை புலன் வினைமாறியே, நனவிற்சுழுத்திநிலை வரினப்பொருட்டிகமு நலனாகவே'' என்றார் தத்துவராயர். இந்நூ லலங்காரமென்றற்போல இந்நூல் கைவல்லிய நவநீதமென்னல் காரியவாகுபெயர். நவநீதகைவல்லியமென்னாது கைவல்லிய நவநீத மென்னல் உருவகம்.

### இந்நூலுரையாசிரியர் நிலைமை

முன்னர் இந்நூலுக்குரைசெய்தார் இந்நூல் ஆசிரியருடைய கருத்து சிறிதேனும் வழுவாது சுருதி யுத்தி யனுபவ வொற்றுமை நயத்தா லுணர்ந் துரைசெய்தனரன்றி யேனையோர்போலன்று. இதனை யாங்காங் கனுபவத்தாற் காணலாம்.

இவருரைமேற் பழுதுரைப்பாரை மறுக்க விருத்தியுரையாக்கப் புகுந்தனம். விருத்தியுரையாவது காண்டிகையுரையின் மிக்கது. என்னை? ''சூத்திரத்துட்பொருளன்றியுமாண்டைக், கின்றியமையாதியாவையும்விளங்கத், தன்னுரையானும் பிறநூலானு, மையமகல வைங்காண்டிகையுறுப்பொடு, மெய்யினை யெஞ்சாதிசைப்பதுவிருத்தி'' என்றார் நன்னூலார்.

## நூல்

### 1-கவி. அவதாரிகை.

[சீவேசுரராகவும், கூடஸ்த பிரமமாகவும் விளங்குவது யாதோ அது தன்னையடைபவர்க்கு அகோசரமாகவும், கோசரமாகவும், அருளிறையாகவும், குருமூர்த்தமாகவும், உபாசனு மூர்த்தமாகவுந் தோன்றிநிற்கும். அதை அங்ஙன மங்ஙனம் வழுத்துவான் புகுந்தார் இக்கவியில் வஸ்துவை அகோசரமாகத் துதிக்கின்றார்.]

பொன்னில மாத ராசை பொருந்தினர் பொருந்தா ருள்ளந்
தன்னிலந் தரத்திற் சீவ சாக்ஷிமாத் திரமாய் நிற்கும்
எந்நிலங் களினு மிக்க வெழுநில மவற்றின் மேலா
நன்னில மருவு மேக நாயகன் பதங்கள் போற்றி

(இதன் பொருள்) பொன்னிலமாதராசை பொருந்தினர் பொருந்தா ருள்ளந்தன்னில் (எ-து) -பொன் மண் பெண்ணிவைகளில் விருப்பமுடை யோரும் அகன்றோருமாகிய இவ்விருவருள்ளத்தின்கண், அத்தரத்திற் சீவசாட்சிமாத்திரமாய்நிற்கும் (எ-து)—ஆகாயத்தைப் போலச் சீவசாட்சிமாத்திரமாக விளங்குவோன், எந்நிலங்களினுமிக்க வெழுநிலமவற்றின்மேலா நன்னிலமருவும் (எ-து) - எவ்வகைப் பதவி-நிலங்களினு மிகச் சிறந்த அல்லது அஞ்ஞானபூமிகளினுமிகச்சிறந்த வெழுவகையாயுள்ள ஞானபூமிகளினு மேலாயுள்ள துரியாதீதத்தி லீசசாட்சிமாத்திரமாக விளங்குவோன் யாவனோ? ஏகநாயகன் பதங்கள் போற்றி (எ-து) —அந்த வேகநாயகனது திருவடிகட்கே வந்தனம்.எ-று.

பொருந்தினர் பொருந்தாரென்பதனால் அஞ்ஞானியும் ஞானியுமெனக்கொள்க. அந்தரத்தி லென்பதனால், சந்தனத்தின் கண்ணு மமேத்தியத்தின் கண்ணு நிறைந்துள்ள வாகாயத்திற்குச் சுத்தாசுத்த மின்மையைக் காட்டுங் குறியெனப்பெற்றாம். அதுபோலச் சீவசாட்சி-மாத்திரமாய் நிற்குமென்பதனால், அந்தச் சீவசாட்சியாகிய சைதன்னியம் சலட்சணமாயினும் விலட்சனமெனக் குறிக்க நின்றதெனக் கண்டாம். சாட்சியென்னுது சீவசாட்சியென்றதனால் ஈசசாட்சியெனக் கொண்டாம். ஒருகாற்சுத்தமு மொரு காலசுத்தமுமா யிருப்பினு மிருவகையுமன்றெனக் குறிக்க வுள்ளமென்றார். நிற்கு மருவுமென்பதை யுயர்திணையாண்பாலாக்கியது ஏகநாயகனென்னும் உயர்திணை ஆண்-பாலைப்பற்றியென்க. இதனைப் ''பல்லோர் படர்க்கை முன்னிலை தன்மையி'' லென்னுஞ் சூத்திரவிதியாற்காண்க. யாவனென்னும் வினு வருவித்ததைப்பற்றி அந்தவென்னுஞ் சுட்டு வருவிக்கப்பட்டது.

நிற்கு மருவு மென்னும் வினைகள் கூடஸ்தனாகநிற்கும் ஏகநாயகன், பிரமமாக மருவு மேகநாயகனென முடிக்கிற் பெயரெச்சங்களாம் இக்கவியின் மூன்ருமடியினெதுகை பொதுநகரமாயினும் இனமாதற் பற்றியாதலின் வழுவன்றென உணர்க.

(கருத்து.) எந்த வேகநாயகன் ஞானி யஞ்ஞானிகள் உள்ளத்தின்கண் சீவசாட்சி மாத்திரமாயும், ஞான பூமியேழினு மேலாய துரியாதீதத்திற் பரசாட்சி மாத்திரமாயு மிருக்கின்ருனோ, அந்த வேகநாயகனது திருவடிகட்கு எமது வணக்க முண்டாகுகவென்பது. இங்ஙனமன்றேல் புரணும். சீவசாட்சியா யென்னுது மாத்திரமென மிகைபடக்கூறியது சுயம்பெனக் குறிக்க. எந்நிலங்களினு மென்பதற்குக் கீழேழ் மேலேழ் நிலமெனக் கூறுவது புராண சம்மதம். இன்னும் சகலமத நிச்சயங்களாகிய வெந்த நிலங்களினுமெனப் பொருள்கொள்ளினு மொருசாரமையினு மமையும். சீவ சாட்சி கூறியதுபற்றி ஈசுவரசாட்சி யருளித்தது அருத்தாபத்தி. சீவேசுவரராக விளங்குவ திருவகைச் சாட்சியெனவும், இவ்விருவகைச் சாட்சியாக விளங்குவ தேகநாயகனெனவும் பொருள்படுதலா லிங்கே வணக்க மைக்கிய மெனக் குறிப்பிக்கநின்றது. உள்ளந்தன்னி னிற்கு மேகநாயகனென் னில், நன்னிலமருவு மேகநாயகனெனப் பொருள்கொள்ளுதும். உள்ளந்தன்னில் சீவசாட்சிமாத்திரமாய்நிற்கு மென்றதனுல், மேலா நன்னிலந்தனில் ஈசுவரசாட்சி மாத்திரமாக மருவுமென்ரும். உள்ளந் தன்னில் ஏழாம் வேற்றுமை விரி. நன்னிலம் பண்புத்தொகை. அந்தரத்திலென்பதை யிரண்டிடத்து மொட்டுக. ஏகநாயகனென்பதி லேகமென்றது சாட்சித்துவிதம் அறற்கு மிகைபடக் கூறியதென்க. ஏகநாயகனென்னு நிலைக்குச் சாட்சித்துவிதம் கற்பிதம்; இந்த சாட்சித்துவித நிலைக்குச் சீவேசுவரத்துவிதங் கற்பிதம்; இந்தச் சீவேசுர கற்பித நிலையைக் கற்பிதமென்றுணாரது இவற்றையே ஆண்டான் அடிமை யெனக் கொண்டனர் மதத்தர், அத்துவிதி வணதக்கத்தையும், ஏனைய மதத்தர் வணக்கத்தையுங் குறிப்பிக்க நின்றது, இந்நூலாசிரியரது வணக்கமெனக் கொள்க. அவற்றினு மென்றவும்மை தொக்கு நின்றமையின் வருவிக்கப்பட்டது. ஏனைய மதஸ்தர் வணக்கம் பேதமெனவும், இந்நூலாசிரியர். தமது வணக்கம் அபேதமெனவுங் காட்டப் போற்றி யென்ருர். ஏகநாயகன் போற்றி யென்னுது பதங்கள் போற்றி யென்றமையின், பதங்கள் இருவகைச் சாக்ஷிகளாகிய கூடஸ்த பிரமமெனக் கொள்க. அவயவியை யன்றி யவயவ மின்மைபோல, ஏகநாயகனை யன்றி யிருவகைச் சாக்ஷியு மின்மையின் பதங்கள் போற்றியென்ருர். ஏனைய அவயவங்களுக்கு வணக்கங் கூருதது தம்மை யிழிந்தோரெனக்

காட்டற்கு. சீவேசருக்குச் சலட்சண விலட்சணமா யிருத்தலிற் சாட்சியென்றார். நன்னிலமருவுமேக நாயகனென்பது குருவெனினு மமையும். (1)

2 - கவி. (அ — கை.)

[நிறுத்தமுறையானே வஸ்துவைக் கோசரமாக இக்கவியில் துதிக்கின்றார்.]

ஈன்றளித் தழிக்கும் செய்கைக் கேதுவா மயனாய் மாலாய்
ஆன்றவீ சனுமாய்த் தானே யனந்தமூர்த் தியுமாய் நிற்கும்
பூன்றமுத் தனுமா யின்பப் புணரியா தவனாய் நாளுந்
தோன்றிய விமல போத சொரூபத்தைப் பணிகின் றேனே.

(இ-ள்.) ஈன்றளித்தழிக்குஞ் செய்கைக் கேதுவாம் (எ-து) — சிருட்டி திதி சங்காரஞ்செய்யுங் கிர்த்தியங்கட்குக் காரணகர்த்தர்களாகிய, அயனாய் மாலாயான்ற வீசனுமாய் (எ-து) - பிரமாவாகியும் விஷ்ணுவாகியும் சிறந்த உருத்திரனாகியு மிருப்பதுமன்றி, தானே யனந்தமூர்த்தியுமாய் (எ-து) — தானே யின்னு மனவிறந்த மூர்த்திகளாகியும், நிற்கும் பூன்றமுத்தனுமாய் (எ-து) — இருந்தபடியிருக்கும் பரிபூரண ஞானியாகியும், இன்பப் புணரியாதவனாய் (எ-து) - பிரமாநந்த சாகரத்திலுதிக்கு ஞானசூரியனாகியும், நாளுந் தோன்றிய விமலபோத சொரூபத்தைப் பணிகின்றேனே (எ-து) — சதோதயமாக விளங்குங் களங்கரகிதமான பிரக்ஞா சொரூபத்தை வணங்குகின்றேன். எ-று.

இங்கே கோசரமாவது ஞானம்; இந்த ஞானமே யிங்ஙனமாகக் கூறிய வனந்த பேதங்களுமா மென்பது தோன்றத் தானேயெனத் தேற்றேகாரங் கொடுத்தனர். புணரியாதவனென்னுது இன்பப்புணரி யாதவன் என்றதனுல், ஞானசூரியனென்றும். என்று மொருதகைத் தாக விளங்குதலென்பார், நாளுந்தோன்றிய வெனவும், சமஸ்தமுமாக நின்று விளங்குவதாற் பிரக்ஞாசொருபத்திற்கு வணக்கமெனவுங் கூறினர். இதுபற்றி வேதமாதாவால் நான்கு வேதத்தினு முடிவா யுள்ள மகாவாக்கிய நான்கனுள் முதல் வாக்கியமாகப் பிரக்ஞானம் பிரமமெனக் கூறப்பட்டதெனக் கொண்டாம்.

வினு : — இந்தப் பிரக்ஞான மென்பதைக் கோசரமெனக் கொள்வதென்னை ?

விடை : — அறிவு, ஆனந்தமென விரண்டாம்; அவற்றுள் அறிவன்றிச் செகசீவபரமுண்டாயி னறிவன்றி யானந்த முண்டகா

லாம்; இன்றே லக்ஷுமின்ரும். எங்ஙனமெனின், சோதனையி லறிவாக முடியாத திரி. பதார்த்தங்களி லொன்றுமில்லை. இவைகள் அன்னிய மாகாதிருக்க ஆனந்தமென்ப தெங்ஙன மன்னியமாக முடியும்? யாமு மறிவாதலாலெம்மா லிதனை விசாரித்தனுஷ்டித் ததுவாகக்கூடும் ஆதலின் கோசரமெனத்தகும்.

வினு :— அறிவே சிருட்டி திதி சங்காரமாயதை யெங்ஙன மறியலாம்?

விடை: – அறிவாகிய சத்தையன்றிப் பிராதிபாலிகம், விவகாரிகம், பாரமார்த்திகமென்னுஞ் சத்து மூன்றில்லை. பிராதிபாலிகசத்தே சிருஷ்டி, விவகாரிகசத்தே திதி, பாரமார்த்திகசத்தே சங்காரமாம். ஆதலி னிதனை மறுத்தற் கிடமின்றென்க.

(க-து) ப்ரக்ஞாசொரூபமே சிவமாதலி னதனையே பொருளாக இங்கே வணக்கங் கூறியதென்பது. இந்த வணக்க மெல்லாமாய் நிற்குமவசரத்தின்மே னின்றது. (2)

3 - கவி. (அ—கை)

[நிறுத்தமுறையானே வஸ்துவை யருளிறையாக
இக்கவியில் துதிக்கின்ருர்.]

எவருடை யருளால் யானே யெங்குமாம் பிரம மென்பாற்
கவருடைப் புவன மெல்லாங் கற்பித மென்ற றிந்து
சுவரிடை வெளிபோல் யானே சொரூப சுபாவ மானேன்
அவருடைப் பதும பாத மனுதினம் பணிகின் றேனே.

(இ-ள்) யானே யெங்குமாம் பிரமம் (எ-து) - நானே யெங்குமாய் நிறைந்துள்ள பிரமசொரூபமென்றும், கவருடைப் புவனமெல்லா மென் பாற் கற்பிதமென்றும் (எ-து) - அனந்தபேதமாகத் தோற்று நின்ற வண்ட நிரை பலகோடிகளு மென்னிடத்தில் மித்தையென்றும், எவருடையருளால் யானேயறிந்து சுவரிடைவெளிபோற் சொரூப சுபாவமானேன் (எ-து) – யாருடைய வனுக்கிரகத்தினுல் நானேயறிந்து சுவரிலு நிறைந்துள்ள வாகாயம் போல் சாட்சாத்கார சொரூப சுபாவ மானேனே? அவருடைப் பதுமபாத மனுதினம் பணிகின்றே னே (எ-து)— அந்த மகானுடைய தாமரைமலர் போன்ற பாதங்களைச் சதாகாலமும் நமஸ்கரிக்கின்றேன் – எ-று.

என்று என்பதை யீரிடத்துமொட்டுக. எண்ணும்மைகள் தொக்கு நின்றன. யானே பிரமசொரூபமென்ருக்கியவிடத்ததிலுள்ள சமஸ்த பேதங்களு மென்பாலாதலால் என்பாற் கவருடைப் புவனமெல்லா

மெனவும், அனைத்து மெனது சொரூபமாக விளங்கலிற் கற்பித மெனவும், இங்ஙனமாய நிலையை அறிபுக்கறிவாகநின் றருளிறை யறிவிக்க அங்கறிந்தது யானே யாதலால் யானே யறிந்தெனக் கூட்டிப் பொருள்கொண்டாம். சுவரிடை வெளிபோ லென வுவமித்தது தடையின்மையைக் குறிக்க. அந்திருந்தபடி யிருந்தே னென்பதை விளக்கச் சொரூபசுபாவமானேனெனவும், இங்ஙன முணர்த்த வல்லா ரெங்கணு மில்லையென்னு மருமைதோன்ற எவருடை யருளால் எனவும், கைம்மாறு வேறின்மையின் பணிகின்றேன் எனவுங் கூறினர்.

(க-து.) சமஸ்தமு மித்தையாக்கி, அவற்றை பிரமமாக்கியது மன்றியானுகவு மாக்கினுரென்பது விசேடம். இதனுல் விளங்குவ தியாதெனில் என்னைத்தவிர யாதொன்றுமில்லையென்பது. என்னை? "என்னைத்தவிரமற்றிங் கேதுமில்லையென்னுணை, பொன்னைத்தவிர விலாப்பூடணம்போற் — பொன்னையுரு, வேருக்கிப் பேருரைத்த வேற்றுமைபோ னம்மையுமவ், வாருப் பகுத்துரைத்தோமால்." என்று சொரூபஞானதேசிகரோதுதலின்.

சுவரிடையென்பதி லும்மை தொக்குநின்றது. நேரே விளங்காமை யாற் கொண்டுகூட்டிப் பொருளுரைத்தாம். இக்கவியி லிவ்வருளிறை யாலாயபயன் எனக்கயலெனக் கொண்டிருந்த பிரமம் யானே யென்றும், சகலவுலகமு மென்னிடத்திலென்றும், அவை வெறும் பொய்யென்றும், அவற்றைச் சின்மாத்திரமாக்கிக் காட்டலா லென்னை யன்றி யில்லையென்றும், எந்தச் சுபாவமாக வேண்டியதோ அது வானேனென்றுங் கொள்ளக்கிடந்தது. (3)

4 - கவி. (அ—கை.)

[நிறுத்தமுறையானே வஸ்துவைக் குருமூர்த்தயாக இக்கவியில் துதிக்கின்ருர்.]

என்னுடை மனது புந்தி யிந்திய சரீர மெல்லாம்
என்னுடை யறிவி னுலே யிரவிமுன் னிமமே யாக்கி
என்னுடை நீயு நானுமேகமென் றைக்கியஞ் செய்ய
என்னுடைக் குருவாத் தோன்று மீசனை யிறைஞ்சி னேனே.

(இ-ள்.) என்னுடை மனதுபுந்தி யிந்தியசரீரமெல்லாம் (எ-து) — என தாகக்கொண்டிருந்த மனம் புத்தி ஐயுணர்வு சரீரமுதலிய வனைத்தை யும், என்னுடைய யறிவினுலே யிரவிமுன்னிமமேயாக்கி (எ-து) — எனதறிவைச் சுயம்பிரகாசமாக விளக்கி யந்த வறிவினுலேயே சூரியு சந்நிதானப் பனிபோலழித்து, என்னுடை நீயுநானு மேகமென் றைக்கியஞ்செய்ய (எ-து) — எனது சொரூபமாகிய நீயென்பதும்,

உனது சொரூபமாகிய நானென்பதும், ஒன்றேயென் றயிக்கியஞ் செய்வான் வேண்டி, என்னுடைக் குருவாத்தோன்று மீசனை யிறைஞ் சினேனே (எ-து) - எனதாசிரிய மூர்த்தமாக வெழுந்தருளிய பரமசிவத்தை நமஸ்கரித்தேன். எ-று

என்னுடை யென்றநான்கு என்னுடையவென் றிருக்கவேண்டு மாதலாலீறுதொகுக்கப்பட்டன. சகலதத்துவங்களையுமெனதாக மெய் யென்றிருந் தவெனதறிவைக்கொண்டேயவற்றைப் பொய்யாக்கினு ரென்பது தோன்ற என்னுடைய மனது புந்தி யிந்திய சரீரமெல்லா மென்னுடை யறிவினலே யிரவிமுன்னிமமேயாக்கி யெனவும், உபாதித்ரயத்தால் நீ நானென்னும் பேதங்காட்டலேயன்றி யறிவினல் சற்றுமில்லையென்பதுதோன்ற, என்னுடை நீயுநானுமேகமென் றைக் கியஞ்செய்யவெனவும், ஞானகதப்பிரத்தியக்ஷத்திலன்றி ஐக்கியமென் பது நிச்சயத்தாலும் பாவனையினலும் பயன்படாதென்பது தோன்ற, இரவி முன்னிமே யாக்கி யெனவுங் கூறினர், என்னுடை நீயு மென்றதனல் உன்னுடை நானுமென்றும். சரீரமென்றது சரீர மெல்லாமென மிகைபடக்கூறியது ஸ்தூலம் சூக்குமம் காரணம் என்பவற்றைக் குறிக்கவென்க.

வினு :- உபாதித்திரயத்தி லொன்ருயிருக்க என்னுடைமன தெனவேறு பிரித்த தெற்றிற்கு?

விடை :— அந்தக்கரணப் பிரதிபலனன் சிதாபாசனென்னு மிடத்தும், பற்றிப்பாயுந் தகையதென்னு மிடத்தும், ஆதார ஆதேய தருமத்தைப் பெருதிருக்கின் மனமொன்றே யெனக்கூறத்தகும். அங்ஙனமனுபவம் யாவர் மாட்டும் இல்லாததால் ஒன்றெனப்படாது. அஞ்ஞானம் சந்தேகம் விபரீதம் அகற்றத்தக்கது பாமசிவத்தையன்றி இன்ருதலால், என்னுடைக் குருவாத் தோன்று மீசனென்ருர். நீயே நான் நானே நீயென்ருயவிடத்து இறைஞ்சினேனென்றது எத்தகை யாய வணக்கமோ அதனை யுணர்ந்தாரே அறியவேண்டும் என்னுடை நீயுநானும் ஏகமென்றவிடத்து, உபாதிசகித அறிவுக்கன்றென்க.

அறிவுக்கறிவாய் நின்றறிவிக்கும் அவ்சரமூர்த்தம் அருளிறை யெனவும், நேரே மானிடச்சட்டைசாத்திவந்து அடியாரைத் தடுத் தாட்கொள்ளு மவசரம் குருமூர்த்தமெனவும் இருப்பது பற்றி இங்ஙன னும் கூறியதென்க. (4)

5 - கவி. (அ கை.)

[நிறுத்தமுறையானே மேற்கூறிய குருமூர்த்தத்தை வணங்கி உண்மையாவது இத்தகையதென இக்கவியிற் கூறுகின்ருர்.]

அந்தமு நடுவு மின்றி யாதியு மின்றி வான்போற்
சந்தத மொளிரு ஞான சற்குரு பாதம் போற்றிப்
பந்தமும் வீடுங் காட்டப் பரந்தநூல் பார்க்க மாட்டா
மைந்தரு முணரு மாறு வஸ்துதத் துவஞ்சொல் வேனே.

(இ-ள்), அந்த முநடுவுமின்றியாதியுமின்றி (எ-து) — ஆதிமத்தியாந்தரகிதமாய் வான்போற் சந்ததமொளிருஞான சற்குருபாதம் போற்றி (எ-து) — ஆகாயத்தைப்போல இடைவிடாதிருந்து சதோதயமாக விளங்குகின்றஞான வடிவமாயுள்ள சற்குருநாதனது திருவடிகளை வணங்கி, பந்தமும் வீடுங்காட்டப்பரந்த நூல் (எ-து) - பந்தநிலையினையதெனவும், முத்திநிலையினையதெனவும் காட்டுவான் வேண்டி விரிவாகக் கூறப்பட்டுநின்ற வேதாந்தசாஸ்திர சாகரங்களை, பார்க்க மாட்டா மைந்தருமுணருமாறு (எ-து) — ஆராய்ந்துணரத்தக்க சக்தியில்லாத சீடருமெளிதிலுணரும்படி, வஸ்துதத்துவஞ் சொல்வேன் (எ-து) - உண்மையாய வஸ்து இஃதெனக் கூறுகின்றேன். (எ-று)

இங்கே சந்ததமென்பது காலத்தின்மேலும், வான்போலென்னுமுவமை இடத்தின்மேலும்நின்றன பரந்தவென்பது நூலென்பதற்குப் பெயரெச்சமாயினும், பிறராலன்றித் தானேபரவுந்தன்மை நூலுக்கின்மையின் அந்த வினையைச் செயப்பாட்டுவினையாக்கினும். அந்தமுநடுவுமின்றி யாதியுமின்றி வான்போற் சந்ததமொளிருமென்னும் விசேடணம் ஞானத்துக்கேயுரியது. அதுவாக விளங்குபவர் ஆசிரியராதலால் ஆசிரியருக்குமாம். ஞான குருவென்னது சற்குருவென மிகைபடக் கூறியது, அஞ்ஞானசந்தேக விபரீதங்களைச் சுருதிமுகத்தால் மாத்திரமகற்றுதல் பற்றியும், இதுவுமின்றியேனையோரும் இப்பெயர் கொண்டது பற்றியுமென்க. சற்குருவென்னது ஞானகுருவென்றது சரியை கிரியா யோகக்குருக்க ளன்றெனப்பிரிக்க, மைந்தருமென்னு மும்மை யிழிவு சிறப்பு. எனவே போதனு சக்தியை விளக்கிற்று.

(க-து) உணரச் சக்தியற்றவர்களும் உணர்ந்துகொள்ளும் விதம் உண்மையைத் தெரிவிக்கப் புகுந்தனரென்பது, இது சீவகாருணியம்; செருக்கன்று. (5)

## 6 — கவி. (அ - கை.)

[முன்னே வஸ்துதத்துவமெனப் பொதுப்படக்கூறி இக்கவியில் அஃதினையதெனக் கூறுகின்றார்.]

படர்ந்தவே தாந்த மென்னும் பாற்கடன் மொண்டு முன்னூற்
குடங்களி னிறைத்து வைத்தார் குரவர்க ளெல்லாங் காய்ச்சிக்

கடைந்தெடுத் தளித்தே னிந்தக் கைவல்ய நவநீ தத்தை
யடைந்தவர் விடய மண்டின் றலைவரோ பசியிலாரே.

(இ-ள்) படர்ந்த வேதாந்தமென்னும் பாற்கடல் மொண்டு முன்னூல் குடங்களினிறைத்துவைத்தார் குரவர்கள் (எ-து) — முன்னுள்ள வேதாந்தாசாரியர்கள் தமது காலத்துக்கு முன்னரே விஸ்தாரமாகச் சொல்லப்பட்டு வரையின்றி விரிந்துள்ள வேதாந்தமென்னும் திருப்பாற் கடலில் மொண்டு தம்மாலாய முதனூலென்னும் குடங்களினிறைத்து வைத்தார்கள். எல்லாம் காய்ச்சிக் கடைந்தெடுத்தளித்தேனிந்தக் கைவல்ய நவநீதத்தை (எ-து) — அக்குடங்களினிறைத்து வைத்த அனைத்தையும் ஒருங்குசேர்த்துக் காய்ச்சிக் கடைந்து அதிலெழுந்த வெண்ணெய்க்குக் கைவல்யநவநீதமெனப் பெயர் தந்து இதனை யாவருமுண்ணும்படி யெடுத்துக் கொடுத்தேன். அடைந்தவர் விடயமண்டின்றலைவரோ பசியிலாரே (எ-து) — இதனைஏற்றுண்பவர்கள் விடயமாகிய மண்ணைத்தின்ன அலைவார்களோ? அலையார்கள்: ஏனெனிற் பசியில்லாதவர்களாதலால், எ-று.

படர்ந்த வேதாந்தமென்னும் பாற்கடலென்பதும், முன்னூற்குடங்களென்பதும், கைவல்யநவநீதமென்பதும், விடயமண்ணென்பதும்உருவகம். வேதமுடிவில் அகண்டபரிபூரணமாக விளங்காநின்ற சுயஞ்சைதன்ய சாட்சாத்காரத்தைப் படர்ந்த வேதாந்த மென்னும் பாற்கட லெனவும், மகான்கள் தத்தமக்கியைந்த அளவு அதையேற்றுச் சிந்தித்துத் தெளிவுற்றதைப்பிறருய்யப் பாக்களிலும் வாக்கியங்களிலுங் குறைவற அமைத்தன ரென்பதை, மொண்டு முன்னூற்குடங்களினிறைத்து வைத்தார் குரவர்களெனவும், அவ்வனுபவ ரசங்களையெல்லா மொருங்கே யென்னுளத்திற் கொண்டு என்னனுபவ ஞானக்கினியி லிளையச் சிந்திக்கச் சிந்திக்கச் சேடித்து நின்றது நிரதிசயாநந்தமாதலால் இதனை யெடுத்துணர்த்தினேனென்பதை எல்லாம்காய்ச்சிக் கடைந்தெடுத்தளித்தே னிந்தக் கைவல்ய நவநீதத்தை யெனவும், இதனருமையுணர்ந் திதனையடையுமாறு அடைந்ததற்குமாறுய நிலையையடையத் தவிப்பரோ நித்திய திருத்தியராதலின் தவியா ரென்பதை அடைந்தவர் விடயமண்டின் றலைவரோ பசியிலாரேயெனவும் கூறியவாறு காண்க. இடுத லேற்றற்பாலதல்லாத கைவல்ய நவநீதமென்னுந் திவ்விய மேலாயநிலையை அதற்கியைந்த மொழிகளாக்கித் தந்தமையின் கைவல்யநவநீதம் விடயமும், அதற்கியைந்த மொழிகளாலாய கவிகளும் அக்கவிகள்மயமாய இந்நூலும், அவ்விடயத்தையுணர்த்தற்கியைந்த துணைக்கருவி-

யாதலால் இந்நூல் சம்பந்தமும், இதனை யுணரவேண்டியவாறு உணர்ந்தனுபவித்தற்குரியார் அதிகாரியும். அங்ஙனம் அனுபவித்த-லாலாயது துக்க நிவர்த்தியும், தடையற்ற வானந்தமும் ஆதலால் இவை பயனும் எனக்கொண்டாம்; கொள்ளவே இந்நான்கும் அனு-பந்த சதுஷ்டய மென்றுமிற்று.

வினு: - எதை விடய மண்ணென்றூர்?

விடை - சர்வமதத்தரும் கூறும் கைலாய முதலிய சகல பதவி-களும் அவற்றுலாய தாரதம்மிய சுகபேதங்களுமென வறிக.

வினு: — இவற்றை மண்ணெண்பானேன்?

விடை: - மண்ணை யாகாரமாக்கியவிடத்து நாசத்துக்கே இடந்-தரல் போல், விடயத்தையே சுகாகார மாக்கியவிடத்து ஓயாப் பிறப்பிறப்பிற்கே யிடந்தரலாலென்க.

(க-து). அனுபந்த சதுஷ்டயத்தினிலை இஃதெனவிளக்கிய-தென்பது. இங்கே விடயமண்ணென்பதின் முக்கியார்த்தம் அறிவுக்-கயலை (6)

7 ஏ-கவி. (அ - கை.)

[மேல் நிறுத்த முறையானே வஸ்துவை உபாசனு மூர்த்தமாகத் துதித்து இந்நூலை இருவகைப்படலமாக்கி அவற்றிற் குரியபெயரை இக்கவியிற் கூறுகின்றூர்].

முத்தனை வேங்கடேச முகுந்தனை யெனையாட் கொண்ட
கர்த்தனை வணங்கிச் சொல்லுங் கைவல்ய நவநீ தத்தைத்
தத்துவ விளக்க மென்றுஞ் சந்தேகந் தெளித லென்றும்
வைத்திரு படல மாக வகுத்துரை செய்கின் றேனே.

(இ ள்) முத்தனை வேங்கடேச முகுந்தனை யெனையாட்கொண்ட கர்த்தனைவணங்கி (எ-து)—பாசமகன்றவனுகியுந் திருவேங்கடாசல-பதிக்கு முகுந்தனுகியும் என்னைத் தடுத்தாட்கொண்டகர்த்தனுகியும் இருப்போனெவனோ அவனைவணங்கி, சொல்லும் கைவல்ய நவநீ-தத்தைத் தத்துவ விளக்கமென்றுஞ் சந்தேகந் தெளிதலென்றும் வைத்திருபடலமாக வகுத்துரை செய்கின்றேன் (எ-து) — சொல்லப்-புகுந்த இந்தக்கைவல்லிய நவநீதமென்னு நூலைத்தத்துவ விளக்க-மென்றும் சந்தேகந் தெளிதலென்றும் இரண்டுபடல வகையாக வகுத்துவைத்து அவற்றைச் சொல்லத்துணிகின்றேன். எ-று.

"ஒருபொருண்மேற் பலபெயர்வரி னிறுதி யொருவினை கொடுப்பது" என்னும் விதியால், முத்தனை வேங்கடேசமுகுந்தனை யெனையாட் கொண்ட கர்த்தனை வணங்கி என்றூர். (7)

8 கவி (அ—கை)

[மேலிரண்டாக வகுத்த படலவகைகளுள் தத்துவவிளக்கத்தை முன்னர்க் கூறுவான் வேண்டி அதனை யேற்றற்பாலனாகிய அதிகாரியின் சாதனசதுட்டயம் கூறப்புகுந்தார், இக்கவியில் அவற்றின் பெயரையும், நிலையையும் முறையே யுணர்த்துகின்றார்.]

நித்திய வநித்தி யங்க ணிண்ணயந் தெரிவி வேகம்
மத்திய விகப ரங்கள் வருபோகங் களினி ராசை
சத்திய முரைக்க வேண்டுஞ் சமாதியென் றுது கூட்டம்
முத்தியை விரும்பு மிச்சை மொழிவர்சாதனமிந் நான்கே.

(இ—ள்) நித்தியவநித்தியங்க ணிண்ணயந்தெரிவிவேகம் (எ-து) —நித்தியவஸ்து, அநித்திய வஸ்துக்களின் நிச்சயங்களைத் தெரிகிற விவேகத்தை நித்தியாநித்தியவஸ்து விவேகமென்றும், மத்தியவிக-பரங்கள் வருபோகங்களினி ராசை(எ-து) —இடையாயுள்ள இம்மை மறுமைகளில் வரும் போகங்களில் வெறுப்புப்பழுதலை இகமுத்திரார்த்த பலபோக விராக மென்றும், சத்திய முரைக்கவேண்டுஞ் சமாதியென்றுறு கூட்டம் (எ-து) - உண்மையாக வுரைக்க வேண்டியவாறு சமாதி-யென்று கொள்ளத்தகும் கூட்டத்தைச் சமாதி சட்கசம்பத்தென்றும், முத்தியைவிரும்பு மிச்சை (எ-து)—ஐக்கிய முத்தியை விரும்பத்தக்க இச்சையை முமூட்சுத்துவமென்றும், மொழிவர் சாதன மிந்நான்கு (எ-து) - கூறத்தகும் இந்நான்கையுஞ் சாதன சதுட்டயமென்பரறி வுடையோர். எ-று. (8)

9 கவி. (அ—கை)

[முன்னர் சமாதிசட்கசம்பத்தென்னுந் தொகையை இனி யிரண்டு கவியில் வகையாக்கிக் கூறுகின்றார்.]

சமந்தமம் விடல்ச கித்தல் சமாதானஞ் சிரத்தை யாருஞ்
சமமகக் கரண தண்டந் தமம்புறக் கரண தண்டம்
அமர்மனே விவகா ரங்க ளருகலே விடலென் றுகும்
அமர்செயுஞ் சுகதுக் காதி யனுபவிப் பதுச கித்தல்.

(இ-ள்) சமந்தமம்விடல்சகித்தல் சமாதானஞ்சிரத்தையாரும் (எ-து)— முன்னர்ச் சமாதிசட்க சம்பத்தென்றார்; அவை சமம் தமம் விடல் சகித்தல் சமாதானம் சிரத்தை யெனவாரும், சமமகக் கரண தண்டம் (எ-து) - சமமாவது அகமாயுள்ள மனத்தைத்தண்டித்தலாம்; தமம்புறக்கரணதண்டம் (எ-து) - தமமாவது புறமாயுள்ள ஞானேந்

திரிய கன்மேந்திரியங்களைத் தண்டித்தலாம்; அமர்மனைவிவகாரங்களருகலே விடலென்றுதும் (எ-து) — விடலாவது தானமர்ந்துள்ள குடும்பவிவகாரங்களைச் சுருங்கச் செய்தலாம்; அமர்செயுஞ் சுகதுக்காதி யனுபவிப்பது சகித்தல் (எ-து) — சகித்தலாவது விடாது கலகஞ் செய்கின்ற சுகதுக்க முதலியவைகளை அவ்வவ்வாறுகா தனுபவித்தலாம். எ-று.

இச்சை செல்லுழியெல்லா மனஞ்செல்லா துகாத்தல் அகக்கரண தண்டமெனவும், முன்பழக்கவழிச் செல்லுழியெல்லாம் பொறிகள் செல்லாது காத்தல் புறக்கரணதண்டமெனவும், விவகாரவிரிவைச் சுருக்கல் அமர்மனை விவகாரங்க ளருகலெனவும், இருவினைப்பயன் வழித்தர யாகாமை சகித்த லெனவும் பொருள் படுமாறுகாண்க. கலகஞ்செய்தல் மனமொருவழித்தா நிற்கச்செய்யா தலையச்செய்தல் (9)

**10 - கவி. இதுவுமது. (அ — கை)**

சிரவணப் பொருளைத் தானே சித்தஞ்சிந் திக்கு மாறு
சரசமா வைக்கு மித்தைச் சமாதான மென்பர் மேலோர்
பரவசற் குருநூ லன்புபற்றலே சிரத்தை யாகும்.
வரமிகு சமாதி யாறு வகையாஞ்சொற் பொருளி தாமே.

(இ-ள்) சிரவணப்பொருளைத் தானேசித்தஞ் சிந்திக்குமாறு சரசமாவைக்குமித்தைச் சமாதானமென்பர் மேலோர் (எ-து) — வேதாந்தசிரவணார்த்தத்தையே சித்தஞ் சிந்திக்கும்படி இனிய லீலையாக நியமித்துக்கொண்ட இந்தச்சன்மார்க்கத்தைச் சமாதானமாவதெனச் சான்றோர்கூறுவர் பரம சற்குருநூலன்பு பற்றலேசிரத்தை யாகும் (எ-து) - சிறந்தசற் குருநாதனனிடத்திலும் வேதாந்த நூலினிடத்திலும் மிக்கவன்புவைவைத்தலே சிரத்தையெனப்படுவதாம். வரமிகுசமாதியாறுவகையின் சொற்பொருளிதாம் (எ-து) — எல்லாவரத்தினுமிக்க ஆறுசமாதிவகையின் சொற்பொருளிஃதேயாம். எ-று.

எனையவற்றைச் சிரவணப் பொருளென்றது வேதாந்த மென்றது சமாதிசட்க சம்பத்து நான்குசாதனத்துள் மூன்றுவதாதலானும், சமாதியாறனுள் சமாதான மைந்தாவ, தாதலானும், பின்சாதன முமுட்சுத்துவ மாதலானுமென்க. தானே யென்னுந்தேற்றேகாரந் தந்தது பிறவன்றேனற்கு. காதானுகர்தலைச் சிரவண மென்றார். பொருளிதாமென்றது தொகுதியொருமை. வேதாந்தார்த்தமாவது அங்கலிங்கார்த்தத்தை மாத்திரம் பிரதிவாதிப்பது ஏனைய கன்ம காண்டம் பத்திகாண்டமெனக் குறிப்பிக்க நின்றன. (க-து) இந்நூலதிகாரிக்கு இந்நான்கு சாதனமும் அங்கமாயிற்றென்பது. (10)

11 - கவி. (அ—கை)

[அவ்வவற்றிற்குரிய சாதனமின்றியக்கண் யாதும் அமையா தென்பதையும், அமையின் அதனருமையையும் இக்கவியிற் கூறுகின்றார்.]

சாதன மின்றி யொன்றைச் சாதிப்பா ருலகி லில்லை
ஆதலா லிந்த நான்கு மடைந்தவர்க் கறிவுண் டாகும்
நூதன விவேகி யுள்ளி னுழையாது நுழையு மாகிற்
பூதசன் மங்கள் கோடி புனிதனும் புருடனுமே.

(இ-ள்) சாதனமின்றி யொன்றைச் சாதிப்பா ருலகிலில்லை (எ-து) — அவ்வவற்றிற்குரிய சாதனமில்லாவிடத்துயா துகாரியத்தையுஞ் சாதிப்பாரு லகெங்கணுமில்லை; ஆதலாலிந்தநான்குமடைந்தவர்க் கறிவுண்டாகும் (எ-து) — ஆகையாலிந்தநான்கு சாதன முடையோர்க்கே ஞானோதயமுண்டாகும் நூதனவிவேகி யுள்ளி னுழையாது (எ-து) — நூதனசாதன விவேகியுள்ளத்தின்கண் ஞானார்த்தத்தை நுழையுமாறெடுத்துக்கூறினுஞ்சற்றும் நுழையாது; நுழையுமாகிற் பூதசன்மங்கள் கோடிபுனிதனும் புருடனும் (எ-து) — நுழையுமானால் அவன் முன் அனேக கோடிசன்மங்களிற் செய்தசிவபுண்ணியங்களாற் சித்தசுத்தியுடையோனாகிப் பரிபாக புருடனென் றெண்ணப்படுவன். எ-று.

பொதுப்படநீதிபற்றிக் கூறியதென்பது தோன்றச் சாதனமின்றியொன்றைச் சாதிப்பாருலகிலில்லை யென்றார். நிச்சயமாதலின் அடைந்தவர்க்கே யெனத் தேற்றேகாரம் வருவித்தாம். ஏனையபாலினும் "ஒருமொழியொழி தன்னினங்கொளற்குரித்தே" என்னும் விதியால் புனிதனென்பதையொட்டுக அஃறிணையிலு முள்ளுக்கத்திரியும் ஞானுக்கினியா லெரிந்ததென்னும் ஐதிகசாம்பிரதாய மிருத்தலிற் கூடும்.

(க-து) ஞானம் சாதனசதுஷ்டயமின்றி யமையாதென்பது. இங்கே அறிவுண்டாகு மென்பது மெய்யுணர்வை. மெய்யுணர்வாவது அயலையறியாது தன்னைத்தானறிதல் என்னை? "மெய்ம்மையறி வல்லதமில் வேறறிவ தெல்லாம், தம்மையறியுமறிவ தேயறிவுதானே" என்றார் தத்துவராயர் சுவானுபூதி நூலையேனும், சுவானுபூதி யுத்தியேனும், சுவானுபூதி நவநவ அற்புதத்தையேனும் இடைவிடா திரவும் பகலுமாக எதிரினின் றெடுத்துப் புலப்படும் வண்ணம் போதிக்கினும் இங்ஙனமாய சத்தஞ் சிறிதும் நுழையாது. செவிடோ? உலகசத்தத்துக்கன்று, என்னை? "கேட்பினுங் கேளாத் தகையவே கேள்வியாற், றோட்கப்படாத செவி" என்றார்திருவள்ளுவநாயனார்

12-கவி. (அ—கை)

[இங்ஙனமாய சாதன சதுஷ்டய அதிகாரியானஒருவன் அதிதீவிர பக்குவ நிலையை இக்கவியிற் கூறுகின்றார்.]

இவனதி காரி யானே னிந்திரி யங்க ளாலும்
புவனதெய் வங்க ளாலும் பூதபௌ திகங்க ளாலுந்
தவனமூன் றடைந்து வெய்யிற் சகித்திடாப் புழுப்போல் வெம்பிப்
பவமறு ஞான தீர்த்தம் படிந்திடப் பதறி னானே.

(இ-ள்.) இவனதிகாரியானேனிந்திரியங்களாலும் புவனதெய்வங்களாலும் பூதபௌதிகங்களாலுந் தவனமூன்றடைந்து (எ-து) - இந்த நான்கு சாதனத்துக்கு மதிகாரியானேனாகிய இவன், மனமுதலியவாறு இந்திரியங்களாலும், பூமியில் தனக்கிடுக்கணாக நேரிடுந் தெய்வச்செயல்களாலும், பஞ்சபூதங்களாலும், அவற்றின் பௌதிகங்களாலும் நேரிடும் மூன்றுவித தாகமடைந்து, வெய்யிற் சகித்திடாப் புழுப்போல் வெம்பி(எ-து) – வெய்யிலாற் சகிக்கப்படாத புழுவைப்போல வதைந்து, பவமறு ஞானதீர்த்தம் படிந்திடப் பதறினான் (எ-து) - சனியாத ஞானதீர்த்தத்தில் மூழ்கிவிட அதி தீவிரமாக விரைவுற்றனன். எ-று.

இவன் தவன மூன்றடைந்து புழுப்போல் வெம்பி ஞானதீர்த்தம் படிந்திடப் பதறினானெனமுடிக்க. ஆந்திந்திரியங்களானேரிடுந்தவனமாவது பொருளல்லவற்றைப் பொருளாக உணர்வதினாலாய சுகதுக்கவதை; புவனதெய்வங்களானேரிடுந்தவனமாவது ஊழானேரிடுந் தனதிஷ்டத்தவறு; பூதபௌதிகங்களானேரிடுந் தவனமாவது மண்முதலிய பஞ்சபூதங்களாலும், இடிமின்னல் வீடிடிந்துவிழுகை முதலியவற்றாலும் நேரிடும்வதை. இவற்றைமுறையே ஆதியாத்மீக மெனவும், ஆதி தெய்வீகமெனவும், ஆதி பௌதீகமெனவும் அறிவுடையோர் கூறுவர். தாபத்ரயாக்கினி யெனினும்பொருள்படும் தவன மூன்றடைந்து புழுப்போல் வெம்பிப் பதறினனென்னுங் குறியா லதிதீவிரனெனக் குறிக்கப்பெற்றாப். தவனமென்பது அக்கினியெனினு மமையும். இந்தத் தாபத்ரயத்துக்கிரையாதா னிவனெனவே, ஏனையர் இயைந்தனரெனப்பொருள்படுதலால் அவர்க ளதிதீவிரரல்லரெனத் தானேகுறிக்கின்றது. இக்குறிகளை வஞ்சகர் தாம்பா லிருப்பதாகக் காட்டினும் விரைவில் மாறுவர்.

(க-து) வெயிலால் வதையுண்டோன் தடாகமுதலிய தீர்த்தத்தில் மூழ்கப் பதறுவான்போன்று தாபத்ரயாக்கினியால் மனச்சாக்ஷியாக வதையுண்டோன், ஏனைய தீர்த்தம் வேண்டாது ஞானதீர்த்தத்திலே-

யே மூழ்கப்பதறுவனென வறிக. பவமறும் என்பதை ஞானத்துக்கு விசேடணமாக்கிப் பவத்தையறுக்கு ஞானமெனப் பொருள்கொள்ளினு மமையும். தெய்வமெனினு மூழெனினு மொக்கும். அறு ஞானம் வினைத்தொகை இது தன்வினை பிறவினைகட்குப் பொது. (12)

13கவி (அ—கை)

[இந்த அதிதீவிர பக்தவன் மேற்கூறிய தாபத்ரயாக்கினி மேலீட்டால் ஈடணத்ரயமுங் கடந்து ஞானசற்குருவுக்காக எங்குந் தேடி யலைந்து கண்டானென்பதை இக்கவியிற் கூறுகின்றார்.]

ஆனவிம் மனைவி மக்க ளர்த்தவி டணைகண் மூன்றிற்
கானவர் வலையிற் பட்டுக் கைதப்பி யோடு மான்போற்
போனவன் வெறுங்கை யோடே போகாத வண்ணஞ் சென்று
ஞானசற் குருவைக் கண்டு நன்றாக வணங்கி னானே.

(இ—ள்.) ஆனவிம் மனைவிமக்க ளர்த்தவீ டணைகண்மூன்றில் (எ-து)—தத்தமக்குரிய வூழாலமைந்த இந்தமனைவியும் இந்தப் புத்திரர்களும் இந்தப்பொருள்களுமாகிய ஈடணத்ரயங்களினின்றும், கானவர் வலையிற் பட்டுக்கைதப்பி யோடுமான்போல் போனவன் (எ-து)—வேடரது வலையிற் சிக்கித் தெய்வகதியால் தப்பித்துக்கொண்டு திரும்பிப் பாராதோடு மான்போலத் தப்பித்தோடிப் போன இவ்வதி-தீவிரன், வெறுங்கையோடே போகாதவண்ணஞ் சென்று (எ-து)—யாதொன்றும் இல்லாததாகப் போகாத பிரகாரம் போய், ஞான சற்குருவைக் கண்டு நன்றாக வணங்கினான் (எ-து) - ஞானாசிரியரைத் தரிசித்து மனப்பூர்த்தியாக வணங்கினான். எ-று

ஈடணத்ரயத்தால் நேரிடுந் துன்பமாவது மனைவிபால் ஐயமருமையும், மக்கள்பால் அவாவருமையும், தாமீட்டிய பொருளின் பால் "இன்னறரும் பொருளை யீட்டுதலுந் துன்பமே, பின்னதனைப் பேணுதலுந் துன்பமே, யன்ன தழித்தலுந் துன்பமே, யந்தோபிறர்-பாலிழத்தலுந் துன்பமேயாம்" என்னுங் கவிப்படி நேரிடுந் துன்பமரு-மையுமே. வெறுங்கையோடே போகாத வண்ணமாவது, சாதன சதுஷ்டய பரிபாகத்தை விளக்க நின்றது. இங்கே நன்றாக வென்பது திரிகரண மொத்தலை.

(க-து) தாபத்ரயாக்கினியால் ஈடணத்ரயத்தைக் கடந்து ஆசிரியரைத் தேடிக் கண்டு வணங்கினனென்பது. (13)

11-கவி (அ—கை.)

[அங்ஙனந்தேடிக் கண்ட ஆசிரியன்பால் தன் குறைகளை முறையிடுகின்ருன் என்பதை இக்கவியிற் கூறுகின்ருர்.]

வணங்கிநின் றழுது சொல்வான் மாயவாழ் வெனுஞ்சோ கத்தால்
உணங்கினே னையனே யென் னுள்ளமே குளிரும் வண்ணம்
பிணங்கிய கோச பாசப் பின்னலைச் சின்ன மாக்கி
இணங்கிய குருவே யென்னை யிரக்ஷிக்க வேண்டு மென்ருன்.

(இ-ள்) வணங்கி நின்றழுது சொல்வான் மாயவாழ்வெனுஞ் சோகத்தா லுணங்கினேன் (எ-து) - ஆசிரியரை வணங்கிநின்றழுது முறையிடலாயினன், (அது குடும்பத்தை மெய்யென்றுன்னு மாயவாழ் வென்னும் சோகத்தினுல் மிக வதைந்தலை) ஐயனே என்னுள்ளமே குளிரும் வண்ணம் (எ-து) - எனதாசிரிய மூர்த்தமாக எழுந்தருளிய கர்த்தனே! என்னுள்ள மாத்திரம் சீதளமாகும்படி, பிணங்கிய கோச பாசப் பின்னலைச் சின்னமாக்கி (எ-து) — பேரின்ப வாழ்வுக்கு மாருயுள்ள பஞ்சகோசமாகிய வலையைத் துண்டுதுண்டாகத் தறித்து, இணங்கிய குருவே யென்னை யிரட்சிக்க வேண்டுமென்ருன் (எ-து) — என் ஐயந்திரிபு அகற்றுவதற்கு இயைந்த குருநாதனே அடியேனைப் பிறவியணுகாவாறு இரட்சிக்க வேண்டுமென்றிரந்தனன். எ-று.

மாயவாழ்வென்பது பொய் வாழ்வு; சோகமாவது துன்பம். எனவே, பொய்வாழ்வு மெய்யாகச் சுகம்போலத் தோன்றலின் மெய்வாழ்வெனத் துணிந்து அனுபவிக்க அனுபவிக்கத் துன்பமேலீட்ட நிகரற்றபலனென்பது பெற்ரும் மாயவாழ்வு சந்தைக் கூட்டம்போல்வது. தேகங்களெல்லாமண் பொம்மைகளாதலின் மீண்டு மண்ணுகின்றன. ஆயினும் வினைவழியே வந்து அணைவதாதலின், "இக்கணமிருக்கு மினிவருங் கணத்தூடிருக்குமோ மரிக்குமோ வுடலம்'' என்ருரறிஞர். ஆதலின் இவ்வுடலைமெய்யென நம்பி நானீயவனவளது வெனக்கொண்டு குலாவி மகிழ்தல் மகிழ்வன்று என்பது பற்றி மாயவாழ்வு என்ருர். இப் பொய்வாழ்வைப் பொய்யென் றுணராது மெய்யெனக்கொள்வதும்; அவற்ருலாய சுகதுக்க வலைகளால் ஓயாதுமொத்துண்பதும், இதுச்சசமென்று அச்சுழலில் தானேயிருக்க மீண்டு மீண்டுங் காமியத் தவமே புரிவதும்; சிற்றின்பத்தையே கருதிச் சலிப்பின்றி உழல்வதும் உள்ளமாதலாலும்; தாபத்ரயாக்கினி வதைத்தவிப்பும், ஈடணைத்ரயத் தவிப்பும் இவ்வுள்ளத்திற்கே யாதலாலும்; உபசாந்தம் வேண்டுவது வேருென்றிற்கும் அன்ருதலாலும் உள்ளமே குளிரும் வண்ணம் எனத் தேற்றேகாரங்கொடுத்தார். பாசமென்பது ஆசையாகிய கயிறு. கயிற்ருற்பின்னியிருப்பது பற்றிப் பின்னலை வலை யென்ரும்

(க-து) துக்க நிவர்த்தி வேண்டு மென்பது. (14)

15 - கவி (அ - கை).

[அவ்வேண்டுகோளுக்கு இயைந்த ஆசிரியர் யான்சொன்னவாறு இயையின் அங்ஙனமாகுதி யென்றனர் என்பதை இக்கவியிற் கூறுகின்றார்.]

அன்னைதன் சிசுவை யைய ளுமைமீன் பறவை போலத்
தன்னகங் கருதி நோக்கித் தடவிச்சந் நிதியி ருத்தி
உன்னது பிறவி மாற்று முபாயமொன் றுண்டு சொல்வேன்
சொன்னது கேட்பா யாகிற் றொடர்பவந் தொலையு மென்றான்

(இ-ள்) அன்னை தன்சிசுவை யையனுமை மீன்பறவைபோல (எ-து) — தாயாகிய ஆமையும், மீனும், பட்சியும் தன் சிசுவைச் செய்யுமாறு போலக்குரு, தன்னகங்கருதி நோக்கித் தடவிச் சந்நிதியிருத்தி (எ-து) — தன்னுளத்திற் சிந்தித்தும் திருநோக்குவைத்தும் அஸ்தமஸ்தக சையோகஞ் செய்தும் இம்மூன்றுமாயினபின் தன் சந்நிதியிலிருக்கச் செய்து, உன்னது பிறவி மாற்றுமுபாய மொன் றுண்டு (எ-து) — இனி உனது சனனத்தை நீக்கத்தக்க ஓர் தந்திர முண்டு சொல்வேன், சொன்னது கேட்பாயாகிற் றொடர்பவந் தொலையுமென்றான் (எ-து) — யான் அதைச் சொல்லுகின்றேன் சொன்ன வாறுகேட்டுநிற்பையாயின் உன்னைவிடாதுதொன்று தொட்டுத் தொடர்ந்து வருகின்ற சனனம் உன்னை விட்டு நீங்குமென்று ஈறுதி மொழிந்தனன் எ-று.

ஐயனுமென்ற உம்மை தொக்கு நின்றது. அன்னை யென்பது வமையன்று; தன் சிசுவென்றதனால் ஆமை மீன் பறவையென்பவை கட்கு விசேடணமாயிற்று. என்னை? "படர்க்கைமுப் பெயரோடணை யிற் சுட்டுப்பெயர் பின்வரும்" என்றார் நன்னூலார். ஆமை மீன் பறவைபோலத் தன்னகங்கருதி நோக்கித் தடவியென்பது நிரனிறைப் பொருள்கோள். இக்கவியில் தன்னென்ப திரண்டுண்டு; ஒன்று ஆமையாதிகளுக்கும், மற்றொன்று தன்னகங் கருதி என்பதனில் குருவுக்கு மெனக்கொள்க. யாதினு லெனில் போல வென்பதை இடையிற் கொடுத்துப் பிரித்ததினு லென்க.

(க-து) அவன் வேண்டுகோளுக்கு இவர் இயைந்ததற் கடையாளம் இவன் தன்னைப்போலாகுக வென்றுன்னலும், நோக்கலும், தடவலுமே யென்பது, ஆமையாதிகளுக்குரியவினையை இவர்மேல் ஏற்றலால் அவைகட்குச் சொல்லாதொழிந்தது சுருங்கச்சொல்ல

லென்னுமழகு. அவைகட்குரிய தனித்தனிவினையும் தத்தங் குஞ்சுகள் தம்மைப்போல் உருப்படற்கென்க.

16 - கவி (அ - கை)

[அங்ஙனமாகுக வென்ற ஆசிரியர் கூறிய ஓர் சிறியதந்திரத்தைக் கேட்டமாத்திரத்தில் அவனெய்திய உவகைமிகுதியைஇக்கவியிற் கூறுகின்றார் ]

தொடர் பவந் தொலையு மென்று சொன்னதைக்கேட்ட நேரந்
தடமடு மூழ்கி னான்போற் சரீரமுங் குளிர்ந்துள் ளாறி
அடருமன் பொழுகு மாபோ லானந்த பாஷ்பங் காட்டி
மடன் மலர்ப் பாத மீண்டும் வணங்கிநின் றீது சொல்வான்.

(இ-ள்.) தொடர்பவந் தொலையுமென்று சொன்னதைக் கேட்ட நேரம் (எ-து) — தொன்றுதொட்டு உன்னைத் தொடர்ந்துவருகின்ற சனனந் தொலையுமென்று குருவானவர் சொல்ல அதைச் சீடன் கேட்டமாத்திரத்தில், தடமடு மூழ்கினான்போற் சரீரமுங் குளிர்ந்துள் ளாறி (எ-து) — வெய்யிலாற் களைப்பட்டோன் பெரிய தடாகத்தில் மூழ்கினால் எங்ஙனமோ, அங்ஙனம் இவனும் தன் மனம் குளிர்ந்தது மன்றிச் சரீரமும் உட்புறமெங்குங் குளிர்ந்து வெப்பமாறி, அடருமன் பொழுகுமாபோ லானந்த பாஷ்பங்காட்டி (எ-து) — அகத்தில் மிக்க அன்பு பெருகுமாறு போன்று புறத்திலும் விழிகளால் ஆனந்த பாஷ்பம் ஒழுகக் காட்டி, மடன் மலர்ப்பாத மீண்டும் வணங்கிநின் றீது சொல்வான் (எ-து) — தாமரைமலர்போன்ற திருவடிகளை மீண்டும் வணங்கியெழுந்து நின்று இதைச்சொல்லப் புகுந்தனன். எ-று.

ஒருவரும் இங்ஙனம் சொல்லக்கேளாமையால் இங்ஙனமாய வியப்புத் தோன்றிற்று. மனங் குளிர்ந்தது மன்றியெனத் தெரிவித்தலால் சரீரமுமென்ற வும்மை இறந்தது தழீஇய வெச்சவும்மை. மடன் மலர்ப் பாதம் வுவமைத்தொகை. (16)

17 - கவி (அ — கை)

[அங்ஙனம் உவகையின் மிக்கோனாகிய மாணாக்கன் ஐயனே உபாய மொன்றுண்டென்றீரே; அதனை யுணர்தற்கு அடியேன் அபாத்திரனாயினும் அதை விளக்கி இரட்சித்தல் தமது கடமையே யென்று இரந்து கேட்டனன் என்பதை இக்கவியிற் கூறுகின்றார்.]

சொன்னது கேட்க மாட்டாத் தொண்டனா னுஞ் சுவாமி
நின்னது கருணை யாலே நீரென்னை யாள லாமே

உன்னது பிறவி மாற்று முபாயமொன் றுண்டென் றீரே
இன்னதென் றதைநீர் காட்டி யீடேற்றல் வேண்டு மென்றான்.

(இ-ள்) சொன்னது கேட்கமாட்டாத் தொண்டனானாலும் (எ-து) — தாமுணர்த்துவதைக் கேட்கச் சக்தியற்ற தொண்டனாயினும், சுவாமி நின்னது கருணையாலே நீ ரென்னை யாளலாமே (எ-து) — குரு சுவாமியே உமது கிருபாகடாட்சத்தினாலே தாங்கள் அடியேனைத் தடுத்தாட்கொள்ளலாமே தடையென்னை? உன்னது பிறவிமாற்று முபாயமொன் றுண்டென்றீரே (எ-து) — உன்சனனத்தை நீக்கத்தக்க உபாயமொன்றிருக்கின்ற தென்றீரே, இன்னதென் றதைநீர் காட்டி யீடேற்றல் வேண்டு மென்றான் (எ-து) — அஃது இத்தன்மையதென்று அதனியல்பைத் தாங்கள் காட்டி அடியேனை இரட்சிக்க வேண்டு மென்று இரந்தனன். எ-று.

(க-து) இவன் இரந்து கோடலைக்கண்டு அகம்பாவம் அற்றவனென்று உணர்ந்தாரென்பது. (17)

18 — கவி. (அ-கை)

[ஆசிரியர் இவனே எமது கருத்துக்கு இயைந்தவனென்று அன்னோன் இரந்து கேட்கும் குறியாலுணர்ந்து உபதேசிக்கத் தொடங்கினர் என்பதை இக்கவியிற் கூறுகின்றார்.]

அடங்கிய விருத்தி யானென் றறிந்தபின் செறிந்த மண்ணின்
குடம்பையுட் புழுமுன் னூதுங் குளவியின் கொள்கை போலத்
தொடங்கிய குருவு மான்ம சொரூபமே மருவ வேண்டி
உடம்பினுட் சீவ னைப்பார்த் துபதேச மோது வாரே.

(இ-ள்) அடங்கிய விருத்தியானென் றறிந்தபின் (எ-து) — விருத்தியடங்கினவனென்று இவனை அறிந்தபின்னர், செறிந்தமண்ணின் குடம்பையுட் புழுமுன் னூதுங் குளவியின் கொள்கைபோல (எ-து) — புரையற அமைந்த மண் கூண்டினுள் புழுவுக்கு முன்னின்று கோஷ்டிக்குங் குளவியின் தன்மையைப்போல, தொடங்கிய குருவு மான்ம சொரூபமே மருவ வேண்டி (எ-து) — அவ்வுபாயம் இனைய தெனத் தெரிவிக்கப் புகுந்த ஆசிரியரும் ஆத்ம சொரூபத்தையே அவனடையவேண்டி, உடம்பினுட் சீவனைப் பாரத்துபதேச மோதுவார் (எ-து) — தேகத்தினுள்ளிருக்கும் சீவனைப் பார்த்து உபதேசிக்கத் தொடங்கினர். எ-று.

தடுக்காது அமைதிபெற நிற்றலே அடங்கிய விருத்தியான் என்றார். புழுவை இரைக்கென்றனர் சிலர். யாதுபற்றி யெனின், புழுவை குளவியாக்கல் எங்ஙனம் பொய்யோ, அங்ஙனமே வேதாந்த முழுவதுங் குற்றலென்பதைக் காட்டவென்க.

வினா :— சமஸ்தமு மித்தையென்று வேதாந்த சாஸ்திர முழுவதும் பிரதி வாதிப்பது பொய்யோ?

விடை :— அனாதியாயிருக்கும் உலகைப் பொய்யென்பதனாற் குற்றமே.

வினா :— பொருளிடங் காலங்களில் ஒன்றேனும் சோதனையில் அல்ல, இல்லையென்று இயையாது, ஆம், உண்டெனப்பட்டே இருக்க வேண்டும். அங்ஙனம் ஒரு பொருளுஞ் சம்மதியாதே; ஆதலின் அனைத்து மித்தையென்னல் குற்றமோ?

விடை :— பொய்யாயின் நமது இச்சா ஞானக்கிரியைகட்கு இயைந்திருப்பானேன்? கர்த்தத்துவ போக்தத்துவமா யிருப்பானேன்? சித்து சடபேதமா யிருப்பானேன்? அரசு குடியென் றிருப்பானேன்? பிறப்பிறப்பென் றிருப்பானேன்? ஆதலிற் குற்றமே.

வினா :— அனைத்தும் பூதவிகாரங்களாதல் என்பதற்குப் பழுதென்னை? சுயம்பெனிற் காட்டலாம். அங்ஙனமே பூதமும் சுயம்பெனின் விகாரமய மல்லா திருக்கக் காட்டலாம். காட்டவலியின்றேல் அது உன் பிழை; நூலின்மேற் பிழையென்னை?

விடை :— இங்ஙனமுணராமையாற் குற்றமெனதேயென்றனன்.

(18)

## 19-கவி. (அ—கை)

[அவ்வுபதேசம் இனையதெனச் சாமானியமாகக் கூறுவதை இக்கவியிற் கூறுகின்றார்.]

வாராயென் மகனே தன்னை மறந்தவன் பிறந்தி றந்து
தீராத சுழல்காற் றுற்ற செத்தைபோற் சுற்றிச் சுற்றிப்
பேராத கால நேமிப் பிரமையிற் றிரிவன் போதம்
ஆராயுந் தன்னைத் தானென் றறியுமவ் வளவுந் தானே.

(இ-ள்) வாராயென் மகனே தன்னை மறந்தவன் பிறந்திறந்து (எ-து)—என் ஞானபுத்திரா! என் பூர்வபக்க சித்தாந்தவழியே வரக்கடவாய்; எவன் தன்னை மறந்தானோ அவன்மாருது பிறந்திறந்து, தீராதசுழல்காற்றுற்ற செத்தைபோற் சுற்றிச்சுற்றி (எ-து)—ஓயாத

சுழற்காற்றில் அகப்பட்ட செத்தைபோல எப்பதவிகளிலும் நிலையின்றிச் சுற்றிச்சுற்றி, பேராதகாலநேமிப் பிரமையில் திரிவன் (எ-து) —அழியாத கால சக்கரமென்னு மயக்கத்தில் திரிந்து கொண்டேயிருப்பன்; போத மாராயுந் தன்னைத்தானென் றறியுமவ் வளவுந்தான் (எ-து)—அறிவினால் ஆராயத்தக்க தன்னைத் தானென் றறியுமட்டும். எ-று.

எங்கெங்கே பூர்வபட்சப் படுத்துகிறேனோ அந்தந்தநிலைகளை விட்டு எங்கெங்கே சித்தாந்தப் படுத்துகிறேனோ அந்தந்த நிலையைவிடாதுபற்றிவருவாயாக வென்பார் வாராய் என்றார். தன்னை மறத்தலாவது அயலைத் தானெனலை. எடுக்கும் உடலெல்லாம் காலவளவில் விடாது மாறி மாறிச் சுழன்று வருதலின் காலத்தைச் சக்கரமென்றார். காலம் இருந்தபடியிருக்க அதனைச்சக்கரமென்றது உடலுக்காயுள் கணித்தலைப்பற்றியும்; அண்டங்கள் சுழன்று வருதலைப் பற்றியும்என்க. பிரேமையென்பதற்குச் சுழலெனப்பொருள் கொள்ளின் காலநேமி யென்பதனுற் பொருந்தும். மயக்கமெனப் பொருள் கொள்ளின் காலநேமியை ஆயுளாகக்கொண்டு மயங்கல் புருடனுதலால் அவன்மேற் பொருந்தும். தான் என்பது போதமாதலால் தன்னால் தன்னை ஆராயவேண்மென்பது தோன்ற, போத மாராயுந் தன்னை யெனவும், அங்ஙனம் ஆராய்ந்த விடத்தன்றித் தன்னைத் தானென வுணர்தல் கூடாமையின், ஆராயுந் தன்னைத் தானென்றறியுமவ்வளவும் எனவுங் கூறினார்.

(க-து) தானே தானுகாத காலமளவும் பிறவி யகலாதென்பது. இது சனனநாச தந்திரம். ஏனையவோ தானெனல் அயலாதற்பாலவாதலின் போலித்தந்திரம். இது மதத்தரிடத்தது; அது வேதாந்தியிடத்த தாதலின் வேதாந்தமே அனைத்தினு மிகையெனல் அருத்தாபத்தி. யாதினுலெனின் சத்து சித்து ஆனந்தத்துக்கு இயைதற்பாலது இனையதெனவும், அநிர்தசடதுக்கத்துக்கு இயைதற்பாலது இனையதெனவும் கலப்புறுது விளக்கச்சேரதனைஞாயம் பொருத்தங்களையுடைமையானென்க.

## 20-கவி (அ - கை.)

[முன்னர்ச் சாமானியமாகக் கூறியதையே விசேடமாகக் கூறுதலை இக்கவியிற் கூறுகின்றார்.]

தன்னையுந் தனக்கா தாரத் தலைவனை யுங்கண் டானேற்
பின்னையத் தலைவன் றானய்ப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன்

உன்னைநீ யறிவா யாகி லுனக்கொரு கேடு மில்லை
என்னைநீ கேட்கை யாலே யீதுப தேசித் தேனே.

(இ-ள்) தன்னையுந் தனக்காதாரத் தலைவனையுங் கண்டானேல் (எ-து) — ஒருவன் தன் எதார்த்த நிலையினையும், தனக்காதாரமாயுள்ள தலைவன் எதார்த்த நிலையினையும் பிரத்தியட்சமாகக் காண்பானாயின், பின்னையத்தலைவன்றானாய்ப் பிரமமாய்ப் பிறப்புத் தீர்வன் (எ-து) - பின்னர் அத்தலைவனே தானாகவும் தானே அப்பிரமமாகவும் ஏகமாய இடத்துச் சனனத்தினின்ற கல்வன். (ஆதலின்) உன்னை நீயறிவாயாகி லுனக்கொரு கேடுமில்லை (எ-து) — உன் எதார்த்தவடிவை நீ யுண்மை-யாகக் காண வல்லையாயின் உனக்கொருதுன்பமு மில்லை; என்னை நீ கேட்கையாலே யீதுபதேசித்தேன் (எ-து) — பிறவித் துயரகலத்தக்க தந்திரம் உணர்த்த வேண்டுமென்று என்னை நீ கேட்டபடியால் இதனை யானுபதேசித்தேன். எ-று

தலைவன், பிரமம். ஐக்கியமாதற்குஇயைதற்பாலது உபாதிரகித கூடஸ்த பிரமமாதலால் இவற்றையே தன்னையும் தனக்காதாரத் தலைவனையும் எனவும், பிரத்தியட்சத்தாலன்றிச்சொல், நிச்சயம், பாவனைமுதலியவற்றால் ஐக்கிய மெய்தாது என்பது தோன்றக் கண்டானேல் எனவும், ஞானகதப் பிரத்தியட்சத்துக்கு முன்னரன்று ஐக்கியமாவதென்பார் பின்னையத் தலைவன்றானாய்ப் பிரமமாய்எனவும், தலைவன்றானாயென்றதனால் தான்தலைவனாயெனவுங்கொண்டாம். ஐக்கியமாதலைப்பற்றி இரண்டு தேற்றேகாரமும்வருவித்தாம். ஐக்கிய மெய்தியக்கால் சனனத்துக் கிடமின்மையின் பிறப்புத் தீர்வன் என்றார். இது வேதாந்தமரபென்பது தோன்ற ஆதலினென்றும். சனனம் அகல்வதற்கு வேறின்மையான் ஈதுபதேசித்தேன் எனவுங் கூறினார்.

**வினா:** — ஐக்கியத்தா லெங்ஙனம் பவ மகலும்?

**விடை:** — எங்ஙனமாய நிலையைக் கூடஸ்தன் பிரமமென்றது? அது தெரியின் ஐக்கியந்தெரியும்; ஆதலின் வெறுஞ் சொல்லா லாவதன்றென்க.

(கரு-து) இதனினு மேலாய ஐக்கியமில்லை யாதலால் இது கிடைத்தல் அரிதரி தென்பதுபற்றி, இதனைத் தத்தமக்குரிய சமயக் கொள்கையின் மேலும் அதிகாரத்தின்மேலும், எச்சிலின்மேலும், யோனியின்மேலும் ஒருங்குபோல் தோற்று மனவொருமையின்மேலும், இன்னும் இவைபோன்றவைகளின் மேலும் வைத்து என்னசாதிக்கினு மைக்கியமாகுமா? ஒருபோதுமாகாதென்பது. **(20)**

21-கவி (அ - கை)

[தன்னைத்தான் அறியவேண்டுமென்ற ஆசிரியரது இலட்சியார்த்தம் அறியாது, தன் இலட்சியார்த்தம் காரணமாக எண்ணித் தன்னைத் தானுணராதார் இல்லாதிருக்க, அவர்கட்குச் சனனந்தவிராதது என்னை யென்ற வினவை இக்கவியிற் கூறுகின்றார்.]

* என்னைத்தா னசடனாக வெண்ணியோ சொன்னீ ரையா
தன்னைத்தா னறியா மாந்தர் தரணியு ளொருவருண்டோ
பின்னைத்தா னவர்க ளெல்லாம் பிறந்திறந் துழலு வானேன்
நின்னைத்தா னம்பி னேற்கு நிண்ணய மருளு வீரே.

(இ-ள்) என்னைத்தா னசடனாக வெண்ணியோ சொன்னீ ரையா (எ-து)—என்னை அவ்வளவு மூடனாக எண்ணியா சொன்னீர் ஐயனே! தன்னைத்தா னறியா மாந்தர் தரணியி லொருவருண்டோ (எ-து)—தன்னைத்தானறியாத மனிதர்கள் ஒருவர் உலகிலுண்டா? பின்னைத் தா னவர்களெல் லாம் பிறந்திறந் துழலுவானேன் (எ-து) — (இங்ஙன மிருக்க) அவர்களெல்லாம் பிறந்திறந் துழல்வ தென்னையோ? நின்னைத் தா னம்பினேற்கு நிண்ணய மருளுவீர் (எ-து)—உன்னையே தஞ்சமாக நம்பிய அடியேனுக்கு உண்மையைத் தெரிவித்தருள வேண்டுமென்று இரந்தனன். எ-று.

அடியேனும் உலகத்தாரும் தன்னைத்தான் உணராதாரல்லவே, இஃதென்ன அதிசயமென்பது தோன்ற, ''என்னைத்தானசடனாக வெண்ணியோசொன் னீரையா, தன்னைத்தானறியாமாந்தர் தரணியு ளொருவருண்டோ'' என்றார்.

(க-து) இவ்வாக்கியத்திற்கு அனுபவம் ஒவ்வாதது என்னை யென்பது.

22-கவி (அ - கை)

[தன்னைத்தானுணருமார்க்கம் இனையதெனத் தெரிவிக்கப் புகுந்தார், இக்கவியில் ஆத்மா நாத்ம விவேகத்தையே தன்னைத்தானறித லெனக் கூறுகின்றார்.]

இன்னது தேகந் தேகி யிவனென வுணர்வன் யாவன்
அன்னவன் றன்னைத் தானென் றறிந்தவ னாகு மென்றார்
சொன்னபின் றேகி யாரித் தூலமல் லாம லென்றான்
பின்னது கேட்ட வையர் பீடையு நகையுங் கொண்டார்.

* 'என்னைத்தான் சடனுவுள்ளத் தெண்ணியோ' வெனப்பாட்டமு முண்டு.

(இ-ள்) இன்னது தேகந் தேகி யிவனென வுணர்வன் யாவன் (எ-து)—தேகம் இன்னதெனவும், தேகி இனையனெனவும் உணர்பவனெவனோ? அன்னவன்றன்னைத் தானென்றறிந்தவனாகுமென்றார் (எ-து)—அப்படிப்பட்டவனே தன்னைத்தானறிந்தோன் என்பவனும் என்றார். சொன்னபின் றேகி யாரித்தல்லா லென்றான் (எ-து)—அங்ஙனம் ஆசிரியர் கூறியபின் இத்தூலதேகத்தையன்றித்தேகியென்பவன்வேறொருவனுளனோ? இஃதென்ன் வியப்பு! அவன்யாரென்றனன். பின்னது கேட்ட வையர் பீடையு நகையுங்கொண்டார் (எ-து)—அதுகேட்ட பின்னர் ஆசிரியர் சிறிது வருத்தமும் பின்னர் நகையுமானார். எ-று.

ஒன்றுந் தெரியாத இவனை எவ்வாறு மெய்யுணர்வு ஆக்குவதென்னும் விசனமும், ஆயினும் அதிதீவிரனாதலினென்னுஞ் சிறிதுவப்புமுண்டாயினமையால் பீடையுநகையும் கொண்டாரென்றார். பொதுப்பட இன்னது தேகமென்றார்; அதனை இவன் இத்தூலமல்லாமலென்றான் எனவே தூலம் சூக்குமம், காரண மென்பவற்றுள் இத்தூல மென்றது வியப்பு, இவ்வியப் பால் உவப்பெய்தினரெனினுமமையும். அயல் ஆகாரமானேன் சுயாகாரமு மாவனெனக்கொள்ளலுவப்பென்க. (22)

23-கவி (அ—கை)

[அநாத்மாவே தானெனில் இது சாக்கிராவத்தை; ஏனையிரண்டவத்தையிலும் தூலங் காணமல் வெவ்வேறாகக் காண அவற்றை யாங்காங்கு கண்டவனும், இவற்றையெல்லாம் ஒருங்கே ஓர்ந்து உணர்பவனும் யார்? அவனைத் தெரிவி யென்பதை இக்கவியிற் கூறுகின்றார்.]

தேகமல் லாமல் வேறே தேகியார் காணே னென்றாய்
மோகமாங் கனவில் வந்து முளைத்திடு மவனார் சொல்லாய்
சோகமாங் கனவு தோன்றாச் சுழுத்திகண் டவனார் சொல்லாய்
ஆகநீ நனவி லெண்ணு மறிவுதா னேதோ சொல்லாய்

(இ-ள்) தேகமல்லாமல் வேறே தேகியார் காணே னென்றாய் (எ-து)—அநாத்மாவைத் தவிர வேறே ஆத்மாவென்பவன்யார்? இருந்தாற் காணப்படானா? இல்லை யாதலிற் காணே னென்றனை. மோகமாங் கனவில் வந்து முளைத்திடுமவனார் சொல்லாய் (எ-து)—மயக்கமாயுள்ள சொப்பனத்தில் தானாகவந்து முளைத்தவனெவன்? அவனார்? சொல்லு, சோகமாங் கனவு தோன்றாச் சுழுத்தி கண்டவனார் சொல்லாய் (எ-து)—மயக்கமாகிய அந்தச் சொப்பனமும் காணப்படாத

சுழுத்தி யவஸ்தையைக் கண்டவ னெவன்? அவன் யார்? அதை யாயினுஞ் சொல் ஆக நீ நனவிலெண்ணு மறிவுதானேதோ சொல் லாய் (எ-து) — இவை யனைத்தும் ஒருங்காகச் சேர்த்து நீ சாக்கிரத்திற் சிந்திக்கு மறிவாவதியாது? அதனையேனுஞ் சொல்லு. எ-று.

இருந்தாற் காணுவென்பது நபாதி; காணுதலால் யானும் கண்டிலனென்பது, நாஸ்தி. இவற்றை மறுக்க அவஸ்தாத்ரயம், காட்சித்ரயம் அபிமானித்ரயம் குறிப்பித்தார். குறிப்பிக்கவே, இவற்றை உணர்வான் தேகி ஒருவ னுளனாகத் தோன்றுகின்றது. தோன்றவே, அத்தேகியெனல் அறிவாகிற பொருளென் விளங்க, ஆக நீ நனவிலெண்ணு மறிவுதா னேதோ சொல்லாய் என்றார். எனவே, அவ்வறிவு பிரத்தியேகாத்ம சொருபமாயிற்று. தேகமே ஆத்மா வென்றது நாஸ்திகம். அதனை மறுக்கச் சீவனெனக் குறிப்பித்தது ஆஸ்திகம் இவவாஸ்திகத்தை மறுக்க அறிவென்றது வேதாந்தம் என்க.

(க-து) அறிவாகிற புருஷன் ஒருவன் இதோவிருக்கின்றானென வாச்சியார்த்தத்தாற் காட்டியதென்பது. (23)

24 - கவி (அ—கை.)

[அங்ஙனம் வினவிய ஆசிரியருக்குத் தேவரீர் ஒருவன் உளனாகக் குறிப்பித்தது மெய்யே; சந்தேகமில்லை. அவன் இனையனெனத் தெரிவிக்கவேண்டு மென்பதை இக்கவியிற் கூறுகின்றார்]

நனவுகண் டதுநான் கண்டநனவுள நினைவு நீங்கிக்
*கனவுகண் டதுமி ரண்டுங் காணுத சுழுத்தி கண்டுந்
தினமனு பவித்த லொக்குந் தெரியவு மில்லை சற்றே
மனதினி லுதிக்கும் பின்னை மறைக்கும்மதருளு வீரே.

(இ-ள்) நனவு கண்டது நான் (எ-து)—சாக்கிராவஸ்தை கண்டதும் நானே; கண்டநனவுளநினைவுநீங்கிக் கனவு கண்டதும் (எ-து) —என்றுற்காணப்பட்டசாக்கிரா வஸ்தையா யுள்ள ஸ்மரணை நழுவிக் கனவாகத்தோன்ற அக்கனவு கண்டதும் நானே; இரண்டும் காணுத சுழுத்தி கண்டும் (எ-து)—இவ்விரண்டவத்தையும் காணப்படாத சுழுத்தியவத்தை கண்டதும் நானே; தினமனுபவித்த லொக்கும்(எ-து) —அங்ஙனமாக யானே தினமனுபவித்துக்கொண்டு வருதலால் தேவரீர் ஒரு புருட னுளனென்பதொக்கும்; சற்றும் ஐயமில்லை; தெரியவு மில்லை சற்றே மனதினி லுதிக்கும் பின்னை மறைக்கும்(எ-து) - அது பிரத்தியட்சமாகக் காணப்படவுமில்லை; இல்லையென்றால் அங்ஙனம்

* சுழுத்திகண்டதும் வேறொன்றேபோல் எனவும் பாடமுண்டு.

நில்லாது உள்ளதாகக் கொஞ்சமனத்தில் தோன்றுகின்றது; அறியலா மெனில் யாதோ அதனை மறைக்கின்றது (ஆதலின்) அதருளுவீர் (எ-து) – அவ்வைய நீங்க அதை யனுக்கிரகிப்பீர். எ-று.

நானென்பதை முதனிலைத்தீவகமாக்கி யேனையீ ரவத்தையிலு மொட்டுக. கனவு கண்டதுமென்றதனுல் நனவுகண்டதுமென்ரும். இவற்ருற் சுழுத்திகண்டு மென்னும் வினையெச்சத்தை வினையாலணை யும் பெயராக்கினும். ஆக்கவே; நனவுகண்டதும் நானே; கனவுகண் டதும் நானே; சுழுத்தி

கண்டதும் நானே என்பது பெற்ரும். கண்டவென்னும் பெயரெச்சத் திற்கு நானென்பதை எழுவாயாக்கில் நனவுகண்டதும் கனவுகண்ட தும் சுழுத்திகண்டதும் என்னும் வினையாலணையும் பெயர்களுக்குப் பயனிலையெங்கே? இருப்பதைவிட்டுத் தோன்ரு வெழுவாயென- நானென்பதை வருவிப்பானேன்? அதுகூடாது. கண்டநனவென்பதற்கு என்ஞல் காணப்பட்டநனவெனப் பொருள் கொள்ளிற் பழுதென்னை? தினமனுபவித்தல் யானுதலால் இதனுலும் நானென்பது மூன்றிடத்து மெழுவாயாதல் பெறப்பட்டது. அஞ்ஞான மகலாததால் தெரியவு மில்லை யெனவும், பூர்வசமஸ்காரம் உள்ளதால் சற்றேமனதினி லுதிக்குமெனவும், குரு வாய்த்தும் விளங்கும் பரிபாககாலம் இன்னும் வராமையால் அதுதடையாதல்பற்றிப் பின்னை மறைக்குமெனவும் காரணங்கண்டாம். திண்ணமாதல் என்பதுதோன்ற, நானேயெனத் தேற்றேகாரம் கொடுத்தாம். எந்த ஸ்மரணையாஞல் நனவாகத் தோன்றிற்ரே அந்த ஸ்மரனை அந்நனவாகிற கோலந்தவிர்ந்த அவசரத்தைக்கண்டநனவுளநினைவு நீங்கி யெனவும், அங்ஙனநீங்கிய அக்கணமேதானே கனவாகத் தோன்றலின் அதனைக் கனவு கண்டது மெனவும், அந்தநனவுகோலம்போலக் கனவுகோல மும்காணுதுநழுவிய வக்கணமே தானே சுழுத்திகோலமாகத் தோன்றலின் அதனை இரண் டும்காணுத சுழுத்திகண்டுமெனவும் கூறியதாகப்பொருள்கொண்டாம். கொள்ளவே அவஸ்தாத்ரயம், காட்சித்ரயம், அபிமானித்ரயமென்னும் இம்முக்கோலமுமாக நின்றதும் ஓர் ஸ்மரணையேயென்க.

(க-து.) இங்ஙனமாக நின்றறிந்தது நானுகத்தோற்றலால் அதனைத் தினமனுபவித்த லொக்கு மென்பதனுற் குறித்தாமென்பது. நினைவு நீங்கி யென்றது வேடத்தை வேடதாரியாகக்கோடல் மரபு. உ-ம். அரசன் வந்தான், தோட்டிவந்தான் என்ருற்போல்வன, பிறவு மன்ன. (24)

## 25 கவி (அ — கை)

[அங்ஙனம் வினவிய மாணாக்கனை விளக்குவான் வேண்டி அதத்துவாவிருத்திலட்சணை, தடத்தலட்சணை, சொருபலட்சணை என்னு மூன்றனுள் தடத்தலட்சணை, அதத்துவாவிருத்திலட்சணை காரணமாக அதிசூக்கு மவஸ்துஉண்மையைத் தெரிவிக்கப்புகுந்தனர் என்பதை இக்கவியிற் கூறுகின்றார்.]

தாலத்தின் மரங்கள் காட்டித் தனிப்பிறை காட்டு வார்போல்
ஆலத்தி னுடுக்கள் காட்டி யருந்ததி காட்டு வார்போல்
தூலத்தை முன்பு காட்டிச் சூக்கும சொரூப மான
மூலத்தைப் பின்பு காட்ட முனிவரர் தொடங்கினாரே.

(இ-ள்) தாலத்தின் மரங்கள் காட்டித் தனிப்பிறை காட்டுவார் போல் (எ-து) — தாம்நின்றநிலத்தருகேநின்ற சிலமரங்களைக்காட்டி அவற்றுளொன்றால் மூன்றாம்பிறையைக் காட்டுவார்போல்வும் ஆலத்தினுடுக்கள் காட்டி யருந்ததி காட்டுவார்போல் (எ-து) — ஆகாயத்திலுள்ள நட்சத்திரங்களைக் காட்டி அவற்று ளொன்றாகிய அருந்ததியென்பதைக் காட்டுவார்போலவும், தூலத்தை முன்பு காட்டி (எ-து)—முன்னர் தூலதேகத்தின் நிலையை விளக்கி, சூக்கும சொரூபமான மூலத்தைப் பின்புகாட்ட (எ-து) - பின்னர் திரிகரணங்களாலுமெட்டுதற்கு அதிசூக்கும சொரூபமாயுள்ள மூலகாரணமான உண்மை நிலையை ஐயமற விளக்குவான்வேண்டி, முனிவரர் தொடங்கினார் (எ-து) — ஆசிரியர் கூறத்தொடங்கினார் எ-று.

மரத்தொகையுள் ஒன்றாலன்றித் தொகையாற் காட்டொணாமையின் தனியென்றார். ஆதலின் தனியென்பதைப் பிறையென்பதற்கு விசேடணமாக்க வொண்ணாது. தாலமென்பதைப் பனையாக்கின் ஆலமென்பதை யாதாக்கவேண்டும்? இவ்விரண்டுமொழிகளையும் தானமாக்க லெவர்க்கு முரணின்றாம். இவ்விரண்டு உவமானத்துள் ஒன்று கீழ்மேல்காட்டல். அதுபோலத்திருசியமாயுள்ள கீழ்நிலையைவிளக்கி மேலாகநின்றுள்ள திருக்குவைவிளக்கல்; மற்றொன்று சமஸ்தத்துள்ளும் ஒன்றைப்பிரத்தியேகமாகக்காட்டல்; அதுபோல் சமஸ்த திருசியத்துள்ளும் திருக்குவைப் பிரத்தியேகமாகவிளக்கல். இவ்விருவகை நயமாக உபதேசிக்கப் புகுந்தனரென்பது தோன்ற இவ்விருவகை உவமானம்கூறினார். ஆலம் திசைச்சொல். இவ்விருநயமும் இந்நூலிலிருப்பதாகத் தெரிக்குதும். ஒன்று பிறைகாட்டல்போல் தஞ்சமாங்குருவுஞ்சொன்ன தத்துவவழிதப்பாமலென்னும் கவியிலும், ஒன்று அருந்ததி காட்டுவார்போல் தன்பதியல்லாப் பேர்கடமையல்ல னல்ல-

னென்று ளென்னுங்கவியிலும், தானே சொப்பிரகாசமென்பதை எல்லாம் கண்டறியுமென்னை யென்னுங்கவியிலுங் காணலாம். ஆதலின் மூன்று இலக்கணையாலும் உபதேசிக்கப் புகுந்தார், இரண்டிற்கு உவமைகூறி யேனையவற்றிற்குக் கூறுரேனும் உவமேயம் கூறியிருப்பதா லுவ-மானம் கோட லருத்தாபத்தியென்க.

(க—து.) இலட்சணார்த்தத்தால்வஸ்துவை விளக்கப்புகுந்தன ரென்பது. (25)

26-கவி. (அ—கை)

[முன்கவியில் தூலமென்பதனாற் பந்தமெனவும், மூலமென்பதனால் முத்தியெனவும் பொருள்படுதலின் பந்தமெனல் மூடமெனவும், முத்தி யெனல் தெளிவெனவுந் திண்ணம்கொண்டு மூடத்தை அத்தியாரோப மெனவும், தெளிவை அபவாதமெனவும் பெயர்தந்து, இவற்றை இரண்டுத்திகளாக்கி உபநிடதமனைத்தும் கூறும்; ஆதலால் இங்கே அத்தியாரோபவுத்தியை முன்னர் தெரிவிக்கப் புகுந்தனனென்பதை இக்கவியிற்கூறுகின்றார்.]

அத்தியா ரோப மென்று மபவாத மென்றுஞ் சொல்லு
முத்தியாற் பந்தம் வீடென் றுரைக்கும்வே தாந்த மெல்லா
மித்தையா மாரோ பத்தாற் பந்தமா மபவா தத்தான்
முத்தியா மிவ் விரண்டின் முந்தியா-ரோபங் கேளாய்.

(இ-ள்.) அத்தியாரோப மென்று மபவாத மென்றுஞ் சொல்லு முத்தியாற்பந்தம் வீடென்றுரைக்கும் வேதாந்தமெல்லாம் (எ-து)— பிரபல சுருதியாகிய வேதாந்தமனைத்தும் அத்தியாரோபம் அபவாதம் எனக்கூறக் கிடந்த இவ்விரண்டுத்தியினால் பந்தம் இனையதெனவும், முத்தியினையதெனவும் கூறுநிற்கும் மித்தையா மாரோ பத்தாற் பந்தமாம் (எ-து)—பொய்யெனப் பொருள்படுவதாகிய ஆரோபமென் பதனால் விளைந்தது பந்தமெனப் படுவதாம்; அபவாதத்தால் முத்தி-யாம் (எ-து)—மெய்யெனப் பொருள்படுவதாகிய அபவாதமென்-பதனால் விளைவது முத்தியெனப்படுவதாம். இவ்விரண்டின் முந்தியா ரோபம்கேளாய் (எ-து)—இங்ஙனம் கூறிய இவ்விரண்டினுள் முன்னர் அத்தியாரோபம் கூறப்புகுவாம் அதனைக்கேள். எ-று.

மித்தையாமாரோபமென்பதனால் சத்தியமா மபவாதமென்றும். பொய்யாலாயது பந்தமென்பதுதோன்ற, மித்தையாமாரோபத்தால் பந்தமா மென்றார். இவையனைத்தும் பின்னர் வருவதால் ஆங்காங்கு விளக்கிக் காட்டுதும்.

(க-து) இரண்டுத்தியுள் ஆரோபயுத்தியை இனிக் கூறப்புகுவ னென்பது. (26)

27 கவி. (அ - கை)

[அத்தியாரோபமெனற்கு அருத்தம் இக்கவியிற் கூறுகின்றுர்.]

ஆரோப மத்தி யாசங் கற்பனை யாவ வெல்லா
மோரோர்வஸ் துவினை வேறே யோரோர்வஸ் துவென வோர்த
னூருடு பணியாத் தோன்ற னரனுகத் தறியிற் றேன்ற
னீரூடு கானற் றேன்ற னிரந்தரம் வெளியிற் றேன்றல்.

(இ-ள்) ஆரோப மத்தியாசம் கற்பனையாவவெல்லாம் (எ-து) ஆரோபமெனவும், அத்தியாசமெனவும் கற்பனையெனவும், இன்னு மிவைபோல் வனவாகக் கூறத்தகுவனவெல்லாம், ஒரோர்வஸ்துவினை வேறேயோரோர் வஸ்துவென வோர்தல் (எ-து) - ஒவ்வொருபொருளை யும் வேறே யொவ்வொரு பொருளாக வுணர்தலும், நாரூடுபணியாத் தோன்றல் எ-து) - பழுதை பாம்பாகத்தோற்றலும், நரனுகத் தறியிற் றேன்றல் (எ-து) - கட்டை கள்ளனுகத் தோற்றலும் நீரூடு கானற் றேற்றல் (எ-து) - கானல் நீராகத்தோற்றலும், நிரந்தரம் வெளியிற் றேன்றல் (எ-து) - வெளி நிரந்தரமாகத் தோற்றலுமாம். எ-று.

இவ்வுருபு மயக்க 'மெல்லாம் "யாதனுருபிற் கூறிற்றுயினும் பொருள் சென் மருங்கின் வேற்றுமை சாரும்" என்னுஞ் சூத்திர விதியாற் றிருத்திப் பொருளுரைக்கப்பட்டன. நிரந்தரம் இடையின்மை. ஆரோபம் அத்தியாசம் கற்பனை இவைபோல்வன, பொய்யென வுணர்த்தற்கு இயைந்தபரியாய நாமங்கள். திருக்கு திருசிய மென் பவற்றுள் திருக்குவின தருமம் ஒன்றை யொன்றுக வுணர்தல். அது பழுதையைப் பாம்பெனவும், கட்டையைக் கள்ளனெனவும், கிளிஞ்சலை வெள்ளியெனவு முணர்தலாம் திருசியத்தின் தருமம் எங்ஙனம் எங்ஙனமாக உணர்தலோ அங்ஙனம் அங்ஙனமாகத்தோற்றல். அது பழுதை பாம்பாகவும், கட்டை கள்ளனுகவும், கானல் நீராகவும், கிளிஞ்சல் வெள்ளியாகவும் தோற்றலென்க.

(க-து) விபரீத மின்னதென்ன உதாரணமுகத்தாற் காட்டிய தென்பது.

28 - கவி. (அ - கை)

[இந்தத் திருஷ்டாந்தத்தை யேற்றற்கு இயைந்த தாஷ்டாந்தம் இனையதென் இக்கவியிற் கூறுகின்றுர்]

இப்படிப் போல நாம ரூபங்க ளிரண்டு மின்றி
யொப்பமா யிரண்டற் றென்று யுணர்வொளி நிறைவா நிற்கு
மப்பிர மத்திற் றேன்று மைம்பூத விகார மெல்லாஞ்
செப்பிய கற்பி தத்தாற் செனித்தவென் றறிந்து கொள்ளே

(இ-ள்) இப்படிப்போல நாமரூபங்க ளிரண்டு மின்றி (எ-து) - யாம் கூறிய இத்திருஷ்டாந்தம்போல நாமரூபங்கள் இரண்டு மில்லாமல், ஒப்பமா யிரண்டற் றென்று யுணர்வொளி நிறைவா நிற்கும் (எ-து) — எங்கு மொருதன்மைத்தாயும், இரண்டென்னும் காரண காரியப் பாகுபாடின்றி ஏகசொரூபமாயும், எங்கு நிறைந் துள்ள ஞானப்பிரகாசமாயு மிருப்பது எந்தப் பிரமமோ? அப்பிரமத் திற் றேன்று மைம்பூத விகாரமெல்லாம் (எ-து)—அந்தப் பிரமத் தினிடத்தில் மெய்போலத்தோற்றும் பஞ்சபூதமும் அவற்றின் விகார முமாகிய அண்டாண்டகோடி சராசரங்களனைத்தும். செப்பியகற்பிதத் தாற் செனித்தவென் றறிந்துகொள் (எ-து)—முன் சொல்லிய கற்பிதத்தினால் உதித்தனவென்று அறிந்துகொள். எ-று.

சுயம்பாகப் பழுதையில் பாம்பென்னு நாமரூபம் எங்ஙனமின்றே? அதுபோன்று சைதன்யமிருத்தலின் நாமரூபங்க ளிரண்டுமின்றி யெனவும், பாம்பென்னும் பிராந்தி தோன்றியவிடத்தும் மறைந்தவிடத் தும் பழுதை அங்ஙனமாகாது ஒருதன்மைத்தாகநின்றவாறு போன்று. விசாரணைக்குமுன் னுள்ளதாயும் விசாரணைக்குப்பின் இல்லாததாயுந் தோன்றுஞ் சகசீவபரம் போலாகாது, ஒருதன்மைத்தாகச் சைதன்ய மென்றும் விளங்கலின் ஒப்பமாயெனவும் கூறினார். பிராந்தி பாம்பாற் பழுதை காரணமும், பாம்பு 'காரியமு மாயிற்று. மெய்யாகப் பாம்பு காரியமாயிற் பழுதையும், 'மெய் யாகக் காரணமாகலாம். 'அங்ஙனமின்றே லிங்ஙனமு மின்றும், ஆகவே காரண காரியத்துவிதம் பழுதைக்கு இன்மையாயவாறு போன்று, பிராந்திச்சகசீவபரத்தால் சைதன்யம் காரணமுஞ் சகசீவபரம் காரியமுமாயின. மெய்யாகச் சகசீவபரம் காரியமாயின். மெய்யாகச் சைதன்யமும் காரணமாகலாம். அங்ஙனமின்றேல் இங்ஙனமு மின்றும். ஆகவே காரண காரியத்துவிதம் சைதன்யத்துக் கின்மையால் இரண்டற்றெனவும், பழுதைக்குக் காரண காரியப் பிராந்தி வந்த போதுமது துவிதமாகவில்லை நீங்கியபோதும் ஏகமாகவில்லை. இரண்டு காலத்தும் பழுதை இருந்தபடி யிருக்குமாறுபோன்று சைதன்யத் துக்குக் காரணகாரியப்பிராந்திவந்தபோதும் அதுதுவிதமாகவில்லை; நீங்கியபோதும் ஏகமாகவில்லை. இரண்டுகாலத்தும் சைதன்ய மிருந்த படி யிருத்தலால் ஒன்றுயெனவும், இங்ஙனமாயவஸ்து தன்னுருவாக

முயல்வார்க்குஇலக்காக நிற்கும் குறியெனத்தோன்ற உணர்வொளி நிறைவா நிற்குமெனவுங்கூறினர். இங்ஙனநிற்பது எந்தப் பிரமமோ வென்றது எஞ்சிநின்றது. பாம்பு கள்ளன் முதலிய பிராந்தி தோற்றற்கு ஆதாரம் பழுதை கட்டை முதலியவை யாயினாற்போலச் சகமுதலிய திரிபதார்த்தப்ராந்தி தோற்றற்குப் பிரமமென்பது ஆதாரமென விளங்க, அப்பிரமத்திற் றேன்று மைம்பூதவிகாரமெல்லாஞ் செப்பிய கற்பிதத்தாற் செனித்தவென்றும், சமஸ்தமும் உண்மையெனக் கோடலைத் தவிர்தற்குக் கற்பிதத்தாற் செனித்தவென் றறிந்துகொள் ளேயென்றுங்கூறினர். இத்திரிபதார்த்தமும் சோதனையில் ஆம் உண் டெனற்கியைந்து உறுதியாக நில்லாது அல்லவில்லையெனற்கே இயைந்துறுதியாக நிற்பதென்னை? ஆதலின் இவ்வுதாரண மனைத்தும் ஐயமின்றி யேற்றற் பாலதென வுணர்க.

(க-து) தாஷ்டாந்தத்தினிலே திருஷ்டாந்தத்தினால் விளங்கக் கூறியதென்பது, நாம ரூபங்களிரண்டுமின்றி யென்பதற்கு அவாங் மனோகோசரப்பிரமமெனப் பொருள்கொள்ளினு மமையும். அப் பிரமத்திற் றேற்றுமென்பதை ஏழாம் வேற்றுமையிடப்பொருளாக்கி யுரைகூறியதுமன்றி, ஐந்தாம்வேற்றுமை நீங்கற்பொருளாகவேனும் ஏதுப்பொருளாகவேனு முரை கூறினு மமையும். ஏதுப்பொருளாக வமைவது அந்தப் பிரமம் இங்ஙனமா குகவெனச் சங்கற்பிக்க அந்தப் பிரமசங்கற்பத்தா லுதித்தவெனக் கோடலையும், ஏழாம வேற்றுமையிற் கோடல் அலை, திவலை, நுரைகடலிலுதித்தொடுங்கு மாபோ லென்னலையுமென்க இது வேதாந்தி சம்மதம்; ஏனைய பிறர் சம்மதம். இவை பெருகுமாதலிற் சுருக்கினும். (28)

## 29 - கவி (அ - கை)

[அனைத்தும் கற்பிதத்தா லுண்டாயது எங்ஙனமென வினவிய மாணுக்கனைநோக்கி, முன்னர் செனித்தவென்னுஞ் சிருட்டியை யுகபத்சிருட்டி கிரமசிருட்டி யென இரண்டாக்கி, முன்னர் உகபத்சிருட்டிகூறுவான்புகுந்தார். இக்கவியில் அவ்வியத்தத்தில் முக்குணவுதிப்பைக் கூறுகின்றார்.]

அதுதானெப் படியென் றக்கா லநாதியாஞ் சீவ ரெல்லாம்
பொதுவான சுழுத்தி போலப் பொருந்துமவ் வியத்தந் தன்னி
லிதுகால தத்துவப்பே ரீசனுட் பார்வை யாலே
முதுமூல சுபாவம் விட்டு முக்குணம் வியத்த மாமே.

(இ-ள்.) அதுதானெப் படியென் றக்கால் (எ-து) – அந்தச் சிருட்டிவகைதா னெங்ஙனமெனக் கேட்கின், அநாதியாஞ் சீவரெல்

லாம் (எ-து)—அநாதியாயுள்ள சீவபேத மனைத்தும், பொதுவான சுழுத்திபோலப் பொருந்துமவ் வியத்தந்தன்னில் (எ-து)—மறைவே வடிவாயுள்ள அவ்வியத்தமென்னு மூலப்பிரகிருதியின்கண் சாதாரண மான சுழுத்தியவத்தையில் தினமும் தங்குமாறுபோன்று நிலையாகத் தங்கும், இதுகால தத்துவப்பேர் (எ-து)—இந்த அவ்வியத்தமே காலதத்துவ மென்னும் பெயரையுடையது, ஈசனுட்பார்வையாலே (எ-து)—ஈஸ்வரனது அந்தர்முக திருஷ்டியினால், முதுமூல சுபாவம் விட்டு முக்குணம் வியத்தமாம் (எ-து)—அநாதியாயுள்ள மூலப்-பிரகிருதியான சுபாவத்தினின்று நீங்கிச் சாத்வித இராசத தாமத மென்னு முக்குணங்களும் வெளிப்பட்டன. எ-று.

வியத்தம் வெளிப்படல்; அவ்வியத்தம் வெளிப்படாமை சித்ருபமே சீவராதலின் அநாதியாஞ் சீவரெல்லாம் எனவும், சுழுத்தி யகன்றார் இல்லையாதலின் பொதுவான சுழுத்தி எனவும், அவ்வியத் தத்தையன்றிக் காலதத்துவ மின்மையின் இது காலதத்துவப்பேர் எனவும், உயிர்கள் தாமே மறைவினின்று நீங்காஎன்பதுதோன்ற ஈசனுட் பார்வையால்எனவும், தெளிவிக்கின் மயக்க நீங்குமென்பது தோன்றப் பார்வையாலே முக்குணவியத்தமாம் எனவுங் கூறினார். முக்குணம் வியத்தமாதல் சிருஷ்டிவந்தவகை. இந்தச் சிருஷ்டி வந்த-வகையைக் கூறல் பிறவி மயக்கம் தெளிவித்தற்கு. தெரிவிக்கின் மீண்டும் திரும்பாதென்னுங் கருத்துகொண்டு ஈசனுட்பார்வைகொண் டாரெனக் கொள்க இங்கே ஈசனென்பது சுத்தசைதன்யத்தை.

(க-து.) உயிர்களனைத்தும் தம்மைத் தாம் கற்பித சைதன்னிய மென்று உணர்ந்துய்யுமாறு முக்குணவியத்தம் கூறியதென்பது தமது நிசவடிவம் உணர்வொளி நிறைவாய்நிற்றல். பரிசோதனையால் அன்றித் தமதுண்மை நிலைசற்றும் விளங்காது; விளங்கவேண்டியிங்கே சிருட்டி கூறலாயினர். (29)

## 30 கவி. (அ-கை)

[முற்கூறிய முக்குணங்களினிலை இனையவென இக்கவியிற் கூறுகின்றார்.]

உத்தமம் வெளுப்பு நீல் முபயமாஞ் சிவப்பு மாகுஞ்
சுத்தசத் துவந்த மத்தோ டசுத்தத துவப்பேர் சொல்லுஞ்
சத்துவ மழுக்கி ருட்டாச் சாற்றுமுக் குணமு மூன்று
யொத்துள் வெனினுந் தம்மு ளொருகுண மதிக மாமே.

(இ-ள்.) உத்தமம் வெளுப்பு நீல் முபயமாஞ் சிவப்பு மாகும் (எ-து)—சாத்துவிதம் இராசதம் தாமதம் என குணமூன்றும். அவற்றுள்

சாத்துவிதம் உத்தமம், ராசதப்மத்திமம், தாமதம்அதமம். இவை மூன்றும் யோக்கியதை. சாத்துவிதம் வெண்மை, ராசதம் செம்மை, தாமதம் கருமை. இவை மூன்றும் நிறம். சுத்த சத்துவந் தமத்தோடசுத்ததத் துவப்பேர் சொல்லும் (எ-து)—சாத்துவிதம் சுத்தம், தாமதம் அசுத்தம், இராசதம் சுத்தாசுத்தம், இவைமூன்றுந் தருமம் என்னும் பெயர்களைச் சுருதிகள் சொல்லும். சத்துவ மழுக்கிருட்டாச் சாற்றும் (எ-து)—சாத்துவிதம் அழுக்கின்மை, இராசதம் அழுக்கு, தாமதம் இருட்டு. இவை மூன்றுந் தோற்றம் எனச் சுருதிகள் முறைவிடும். முக்குணமு மூன்று யொத்துள வெனினும் (எ-து)—இந்த மூன்று குணங்களு மூன்றாகி நின்று தம்மு ளொத்து நின்றாலும், தம்முளொரு குண மதிகமாம் (எ-து)—தமக்குள்ளே யாதானு மோர்குண மிஞ்சி நிற்கும். எ-று

''ஒருமொழியொழிதன்னினங்கொளற் குரித்தே'' என்னும் விதியால் உத்தமமென்றதனால் மத்திம அதமங்கள் வருவித்தாம். உபயமாஞ் சிவப்பென்றதனால் மூன்றாவது நீலமென்றும். தமத்தோடென ஒடுக்கொடுத்துப் பிரித்ததனால் இராசத மிசையெச்சமெனக் கொள்க கொண்டதனால் இராசதம் சுத்தாசுத்தமாயிற்று ஏனைய குணங்கள் அழுக்கிருட்டென்றதனால் சாத்துவித மழுக்கின்மையென்றும். தாமத மிருட்டென்றதனால் சாத்துவிதம் வெளிச்சமெனினு மமையும். நெரிஞ்சி முள் மூன்றால்தமக்குளொத்துள வாயினும் யாதானுமோர் முள் மேலிட்டிருக்குமாறுபோன்று இருத்தலின் முக்குணமு மூன்று யொத்துளவெனினுந் தம்மு ளொருகுண மதிகமாமே என்றார். இக்கவியை உற்றுணரா தார்க்கு இங்ஙனமாய நயம் எங்ஙனந் தோன்றும்? இக்கவியை வேறுவிதமாகப் பாடமோதியுரை கொள்வாருமுளர். அது பெரும்பாலு முரணும்.

(க-து.) சாத்துவிதமுதலிய முக்குணமும் யோக்கியதை, தர்மம், தோற்றம் என்பவைகளைக் குறிப்பான் உணர்த்தியது சுருதிசம்மதமாம். யுக்திக்கு முரணின்மையால் ஏற்றற்பாலதென்க முக்குணம் வியத்தமாமெனவே யேனையவைகளைக் கூறவேண்டுவதின்று முதற் காரண காரியமாதலின் அரசன் வெளிப்பட்டானென்புழி ஏனைய சேனை முதலியவைகளைக் கூறவேண்டுவதின்றாயவாறு போலும். (30)

## 31 கவி. (அ-கை)

[உகபத் சிருஷ்டிகூறி இனிக் கிரமசிருஷ்டி கூறப் புகுந்தார், இக்கவியில் மூலப்பிரகிருதிமுதல் குணத்ரயம் ஈறுக்கக்கிடந்த நான்கினையும் கூறுகின்றார்.]

ஒருவழி யிதுவா மித்தை யொருவழி வேருச் சொல்வார்
மருவுமவ் வியத்தந் தானே மகதத்வ மாகு மென்று
மருண்மக தத்து வந்தா னகங்கார மாகு மென்றுங்
கருவகங் கார மூன்ருய்க் காட்டிய குணமா மென்றும்.

(இ-ள்) ஒருவழி யிதுவாமித்தை யொருவழி வேருச்சொல்வார் (எ-து) — சிருஷ்டி வகையிரண்டிலிதுவொரு வகையாம் இந்தச்சிருஷ்டியையே வேறொருவகையாகச் சத்துக்கள் சொல்லுவார்கள்: மருவுமவ் வியத்தந்தானே மகதத்வ மாகுமென்றும் (எ-து) — முன்கூறக்கிடந்த அவ்வியத்தமென்னு மூலப்பிரகிருதியே மகதத்துவமெனப்படுவதா மெனவும்: — அருண்மகதத்து வந்தா னகங்கார மாகுமென்றும் (எ-து) — முன்கூறிய மகதத்துவமே யகங்காரமெனப்படுவாதமெனவும்: — கருவகங்கார மூன்ருய்க் காட்டிய குணமாமென்றும் (எ-து) — பிறவிக்குக் கருவாயுள்ள வில்வகங்காரமே முன்னர் மூன்ருகக்காட்டிய குணங்களெனப்படுவதாமெனவும். எ-று.

(க-து) மூலப்பிரகிருதியே மகதத்துவமெனவும், மகதத்துவமே யகங்கார தத்துவமெனவும், அகங்காரதத்துவமே குணத்ரயமெனவு முணரக்கூறிய தென்பது. பணிபேதங்களினுற் பொன்னேயும். படபேதங்களா னுலேயும் கடபேதங்களான் மண்ணேயும், தேகபேதங்களாலேம்பூதாம்ச சையோகத்தையும், முற்றுமறந்தார்க்கிப்பேதங்களேத் தத்த முதற்காரணத்தினின்று வந்தவகையைத் தெரிவிக்கி லந்தந்த முதற்காரணத்தை யன்றி யததற்குரிய விகாரங்களில்லேயென் றுண்மை யாகவுணர்ந்து, அவ்வவ்வாதார மறவாதிருப்பர். இவரிங்ஙன மிருப்பதா லாதேயமாகிய விகாரங்களில்லாமற் போயினவோ? அவ்வாதார நாட்டமாகவே விகாரங்களேநோக்கிலனேத்து மவ்வாதாரமாமவே விளங்கும்; இஃதுண்மையை நினேப்பூட்ட லாயிற்று இந்த நினேப்பு மறப்பு ஒர்புருடனது புடைபெயர்ச்சியாதலானும், இப்புடைபெயர்ச்சி யெழுச்சி தவிர்தலால் ஒன்றிலொன்று தத்தமக்குளில்லாம லன்னியோன்னியாபாவம் உறுகின்றது; இவ்விரண்டுகாலத்தும் புருடனிருந்தவண்ண மிருந்து, இவற்றைச் சாட்சியா யறிந்திருப் பதினுலும், இப்புருடன் விகாரியு மல்லன், நிர்விகாரியுமல்ல னென்பதை யுணர்த்தச் சிருஷ்டிவகை கூறவந்ததேயன்றி வேறுக்காகவன்று; இதுபோலத் தாஷ்டாந்தமுமென வூகித்துணர்க; இதனே யுணர்வோர் பரிபாகிகளல்லரே லனர்த்தமாம். இஃதன்றியு மிக்கவியின் கருத்தைக் கொஞ்சம் வெளிப்படையாகத் தெரிவிக்குதும், அதாவது: — அகண்ட

பரிபூரண சச்சிதானந்த சொரூபமாகவிளங்குஞ்சைதன்னியத்தில் விஸ்மரணையாக வெழுந்த ஞெப்தியை மூலப்பிரகிருதியெனவும், அங்ஙனமெழுந்தஞெப்தியே நிலத்துளூன்றிய விதை யுப்புமாறுபோல் திரிபதார்த்தங்களும் வெளியாகாதுள்ளடக்கி நிற்குமவசரத்தை மக தத்துவமெனவும், அங்ஙனம் வெளியாக்கா துள்ளடக்கிக் காட்டு மவசர நிலையான ஞெப்தியே வெளியரும்பிய முளைபோல் சகசீவபர பேதங் காட்டாது பொதுவாக வெளியெழுதலின், அவ்வெழுச்சியை அகங்காரதத்துவமெனவும், அவ்வெழுச்சி வடிவாகநின்ற ஞெப்தியே அம்முளை மூன்றாகவெடிக்கு மாறுபோன்று, இனிச் சகசீவபரமாதற்கு மூன்றாகவெளிப்படுதலின் அவ்வவசரத்தை முக்குணமாமெனவுங் கூறியது (31)

## 32 - கவி (அ—கை.)

[முன்னர் கூறியவற்றுளீராகவுதித்த முக்குணங்களிற் பிரதி பலித்ததினையதெனவும், அம்மூன்றில் சாத்துவிதகுண மிவ்வவ சரத்திலின்னபெயரை யேற்குமெனவும், அதிலுதித்த சிற்சாயைக் குப்பெயரினையதெனவும், குணரகிதமான சித்துக்குப் பெயரி னைய தெனவுமிக்கவியிற் கூறுகின்றார்.]

இக்குணங்களிலே முண்போன் றிருக்குஞ்சிற் சாயை தோன்று
மூக்குணங் களினுந் தூய்தா முதற்குண மாயை யாகு
மக்குணப் பிரமச் சாயை யந்தரி யாமி மாயை
யெக்குணங் களும்பற் றாதோ னிமித்தகர ரணனு மீசன்.

(இ-ள்.) இக்குணங் களிலே விண்போன் றிருக்குஞ்சிற் சாயை தோன்றும் (எ-து)—இம்முக்குணங்களிலு மாகாயம்போன்றிருக்குஞ் சைமன்யத்தி னதுசாயாவடிவம் பிரதிபலிக்கும்:—முக்குணங்களினுந் தூய்தா முதற்குண மாயையாகும் (எ-து)—இந்தமூன்று குணங்களி லும் பரிசுத்தமாயுள்ள முதற்குணமான சாத்துவிதமானது மாயை யெனப்படுவதாம்:—அக்குணப் பிரமச்சாயை யந்தரியாமி (எ-து)— அந்தக்குணத்திற் பிரதிபயித்த பிரமத்தினது சாயாவடிவமானது அந்தரியாமியெனப் பெயர்பெறுதாம்:— மாயையெக் குணங்களும் பற்றாதோ னிமித்தகாரணனுமீசன் (எ-து)— மாயாமயமான எவ்வகைப் பட்ட குணங்களுந் தன்னைப்பற்றாது நின்றிள்ளோ னிமித்த காரண னாகிய வீசனும். எ-று.

விண்போன்று பரிபூரணமாயிருக்கை சித்துக்கன்றிச் சாயைக் கன்றாமையின் சித்தைப் பிரித்து எழுவாயாக்காது சித்தினது சாயை

யெனப் பொருள்கொண்டாம் :—சைதன்யம்போற்காண்டலைச் சிற்சாயையெனவும், சகசீவபரமாதற்கெனக் குறிக்கச் சிற்சாயை தோன்று மெனவும், "பேதமுறு புந்தியேமாயை" ஆதலா லப்புந்தியை முதற் குணமெனவும், மாயாசகித வீசனென்பதுதோன்ற அக்குணப் பிரமச் சாயை யந்திரியாமியெனவுங் கூறினர். இங்கே யந்தரியாமியென்பது ஈசன்து காரணசரீரவபிமானநாமத்தை. நமித்தகாரணனுமீசன் மாயார கிதனென்பது தோன்ற மாயை யெக்குணங்களும் பற்றுதோனெனப் பட்டது:—சிற்சாயை பிரமச்சாயையென்னு மிவ்விருமொழிகளும் ஆறும் வேற்றுமைத்தற்கிழமைப்பொருள். சித்தைச் சகசீவபரமென்னுது சாயையெனக்கூறியது, கற்பிதசைதன்யமெனற்கு. இதனையுடன் படற்கு மாறுளதேல்சோதனையி லல்லவில்லையெனற் கியையாது நிற்கக காட்டலாம். காட்டவலியின்றேல் காட்டவலியுளோர்க் கடிமைபூண் டொழுகை யெளிதிலுணர்தற்கியைந்த குறி.

(க-து.) முக்குணப் பிரதிபலனசித்து கற்பித மெனவும், முதற் குண மாயையெனவும், அம்முதற்குணப்பிரதிபலனசித்தை யந்தரியாமி யெனவும், மாயாரகிதவீச னினையனெனவுங் கூறியதென்பது. முக்குண மாக வெளிப்பட்டது ஞெப்தியென்றதனாலந்தஞெப்தி சுயம்பெனற் குறுதி யென்னே? இன்றுதலாலதனையே யிங்கே சிற்சாயையெனக் கொண்டார். சிற்சாயை தோன்றற்கிடம் முக்குணமாதலி ஞ்தார மெனப்படும்; படவே சிற்சாயை யாதேயமெனப்படும்; படவே யிவ் விரண்டுமாநின்ற தந்தஞெப்தியே; இதிலையமுளதேல் தினமு நம்மாற் பிரத்தியட்சமாகக் காணநின்ற மூன்றவஸ்தைகளிலெந்தெந்தவவஸ் தை யெங்கெங்குளதோ, அந்தந்தவவஸ்தையில் தோற்றற்குரிய தூலாதி மூன்று காட்சிகளிலொவ்வொன்றுளதாக வாங்காங்குக் காணும். ஆங்காங்குக் காணுந் தூலாதி காட்சிக்கிடம் மூன்றவஸ்தை; இம்மூன்றவஸ்தையு மாதாரமாகவே காட்சிகளாதேயமாயிற்று. இவ் விரண்டுமாக நிற்பது ஓர்ஸ்மரனையே. இதுநிகழா வுயிரில்லையாதலா லேற்றற்பாலதே, ஆதலினையமொழிக. இதனால் மாயையென்பதும், ஈசனென்பதும், அந்தரியாமியென்னுங் காரணதேக வபிமானிநாம மென்பதும், முற்கூறிய ஞெப்தியன்றி யில்லையென்பது பெற்றும். இங்ஙனமுணராதார் ஞானிய ரல்லர். ஏனெனிற் கல்க்கமகலாமை பற்றி. பேதமுறுபுந்தி மாயையென்வே பேத மறுபுந்தி யுளதாகக் குறிப்பிக்கின்றது; அப்புந்தி மாயாரகிதமென்றாயிற்று. இவ்விருதன் மையாநிற்பது மந்தஞெப்தியே. இங்ஙனமாயதையறியவேண்டில் ஞெப்தியரல்லாத ஞானியஞ்ஞானியருளரோ? இல்லையாதலினேற்றற் பாலதே. இன்னுஞ்சிருஷ்டித்தொடர்புளதாதலிற் பின்னர் இதனொரு மையைக் கூறுதும். இதுநிற்க. (32)

33 - கவி. (அ - கை)

[முன்கவியில் சாத்துவித குணத்தை மாயையெனவும், ஈசனபி மானத்ரயத்தில் அந்தரியாமியெனவுங்கூறி, இக்கவியிலுமதையே சுழுத்தியவத்தையெனவும், காரணசரீரமெனவும், ஆநந்தமய கோசமெனவுங்கூறி, யினிச் சீவனுக்கு இராசதகுணமவிததை யெனவும், அக்குணப் பிரதிபலனஞ் சீவனெனவும், அபிமானத் திரயத்தி லிவனுக்குப் பிராக்ஞனெனவுங் கூறிகின்றார்.]

ஈசனுக் கிதுசு ழுத்தி யிதுவேகா ரணச ரீரங்
கோசமா னந்த மாகுங் குணமிரா சதம வித்தை
தேசறு மவித்தை தோறுஞ் சிற்சாயை சீவ கோடி
நாசமா முயிர்க்கப் போது நாமமும் பிராக்ஞ னுமே.

(இ-ள்) ஈசனுக்கிதுசுழுத்தி யிதுவே காரணசரீரங் கோசமா னந்தமாகும் (எ-து) - இந்தச் சாத்விதகுணமே யீசனுக்குச் சுழுத்திய வத்தையாகவும், காரணசரீரமாகவும், ஆனந்தமயகோசமாகவு மிருக்-கும்: - குணமிராசதம் (எ-து)—இனி யிராசதகுணமோவெனில்: — அவித்தைத்தேசறுமவித்தைதோறுஞ் சிற்சாயை சீவகோடி (எ—து) அவித்தையெனவும், மலினரூபமானவிந்த வவித்தைகளிலெல்லாம் பிரதிபலித்த சிற்சாயைக ளனைத்துஞ் சீவ கோடிகளெனவும்: — நாசமா முயிர்க்கப்போது நாமும் பிராக்ஞனுமே (எ-து) — நாசமுறத்தக்க விவ் வுயிர்களுக் கவ்வவசரத்தினியைந்தநாமம் பிராக்ஞனெனவுமாம் எ-று.

தேசறுமவித்தையென்றதனுல் தேசுள துமாயையெனக்கொள நின்றது. சாத்துவிதகுணம் மாயை யென்றார், அம்மாயைதோறு மென்னுது அவித்தைதோறும் மென்றது; இதனைப் பலவென்னிற் பிரத்தி யட்சத்திற்கியைந்தது, அதனைப் பலவென்னி லப்பிரத்தியட்சமாதலி னெவரு முடன்படார். ஆயினும் இந்துவேதாகமங்கள், முக்குணங்க ளில் முதற்குணத்தைச் சாத்துவிதத்திற், சாத்துவிதம் இராசதம் தாம தம் எனப்பிரித்தாற்போல, ஏனையகுணங்களையும்பிரித் தொன்பதுபாக மாக்கி, முதற்பாகங்களைத் திரிமூர்த்திகளாக்கி, யொவ்வொருமூர்த்தி களு மளவிலதாகக்கூருநிற்கும்; இதனை யறியவேண்டிற் கட்டளைகளி லும் பிரபுலிங்கலீலையிலும், ஏனையநூல்களிலும் காணலாம் இவை யெல்லாம் வாஸ்தவமென்பதைப் பிருதிவு தத்துவமுதல் நாத தத்துவ மீருக வொன்றிலொன்ருெடுக்கிக் காட்டப்புகும் அபவாதயுத்தியாற் காணலாம். சுருதி யுத்தி யனுபவமுகத்தா லொடுக்கிக்காட்டத் தெரி யாமை குற்றத்தை நூல்மேலேற்றத் திரியுஞானிய ரெங்குமெளியர். வித்தைஞானம், அவித்தை அஞ்ஞானம் இராசதகுணமவித்தையென

வே சாத்துவித குணம் வித்தையாயிற்று; இதை யவித்தையாக்க அகங்காரம் வித்தையாயிற்று; இதை யவித்தையாக்க மகதத்துவம் வித்தையாயிற்று; இதையவித்தையாக்க மூலப்பிரகிருதி வித்தையாயிற்று; இதை யவித்தையாக்கப் பிரம்மம் வித்தையாயிற்று; இங்ஙனமாக இதற்கப்பாற்சேறல்சொல்லால் அநவத்தாதோட நேரிடும். எனவே இலட்சியார்த்தத்தால் நேரிடாதென்பதருத்தாபத்தி. பகுதி முதல் விகுதியீருக் கிடந்த தத்துவ வடுக்குகள்ளனைத்துமறிவறியாமை யடுக்குகளாயின. என்னை? "அறிவறியாமை யநேகவடுக்கே-மேலும் கீழுமென்மனார்புல்வர்" என்பதனாற்காண்க. (33)

## 34 - கவி. (அகை.)

[அந்த வவித்தையே யானந்தமயகோசமெனவும், சுழுத்தியவஸ்தையெனவுங், காரணசரீர மெனவுங்கூறி. இனிச் சூக்குமசரீர வாரோபம் வருமா திக்கவியிற் கூறுகின்றார்.]

அழுக்கொடு பற்றுஞ் சீவர்க் கதுவேயா னந்த கோசஞ்
சுழுத்திகா ரணச ரீரஞ் சொன்னவிம் மட்டு மோக
முழுக்குணத் திரண்டால் வந்த மூலவா ரோபஞ் சொன்னோம்
வழுத்துசூக் குமவா ரோப வழியுநீ மொழியக் கேளாய்.

(இ-ள்.) அழுக்கொடு பற்றுஞ் சீவர்க் கதுவேயா னந்த கோசம் (எ-து) — அழுக்காகிய வவித்தியாமயமாயுள்ள சீவர்களுக் கவ்வவித்தையே யானந்தமயகோசமாம்: — சுழுத்தி காரணசரீரம் (எ-து) — சுழுத்தியவத்தையும் காரணசரீரமுமாம்: — சொன்னவிம்மட்டு மோகமுழுக்குணத்திரண்டால் வந்த மூலவா ரோபஞ் சொன்னோம் (எ-து) — கூறிய விதுகாறும் மோகமயமான முழுக்குண மென்னப்பட்ட சாத்துவித ராசதத்தால் விளைந்த காரண சரீர வத்தியாசத்தைச் சொல்லினம்: — வழுத்துசூக்குமவாரோப வழியுநீ மொழியக்கேளாய் (எ-து) — யாவருஞ் சொல்லப்பட்டசூக்குமசரீர வத்தியாச மார்க்கத்தையும் யாம்கூற நீ கேளுதி. எ-று.

மூலப்பிரகிருதி, மகதத்துவம், அகங்காரதத்துவம், முக்குணம், மாயை, அவித்தை, ஈசன், சீவன் இவ்விருவர் காரணசரீரம், சுழுத்தியவத்தை, இவ்வவத்தைக்குரிய வபிமான நாமம், கோசம், என்பவைகளைக் கூறும்போதெல்லாம் மறவாதிருத்தற்கு அடிக்கடி ஆங்காங்குக் கற்பிதத்தாலிவை சனித்த வென்று நினைப்பூட்டியவாறுபோன்று இங்கும் மறவாதிருத்தற்குச் சூக்கும வாரோபவழியு நீ மொழியக் கேளாய் என்றார். மறக்கிலிந்நூற்பயன் சற்றும் வாய்க்காதென்ப

தருத்தாபத்தி. உத்தமம் வெளுப்பு நீலமென்னும் கவியில் இராசத மழுக்கெனக் கூறியவாறே யிக்கவியிலு மழுக்கொடு பற்றுஞ் சீவர்க் கென்றார். (34)

## 35 - கவி (அ - கை)

[சாத்துவிதம் இராசத மென்னும் குணங்களின் கற்பிதத்தைக் கூறியவாறுபோன்று, தாமதத்தையுமிரண்டு சக்திகளாக்கி யவற்றிற் குரிய பெயரினையவென விக்கவியிற் கூறுகின்றார்.]

ஏமமா யாவி நோத வீசனு ரருளி னாலே
பூமலி யுயிர்கட் கெல்லாம் போகசா தன முண் டாகத்
தாமத குணமி ரண்டு சக்தியாய்ப் பிரிந்து தோன்றும்
வீமமா மூடலென்றும் விலிதமாந் தோற்ற மென்றும்.

(இ-ள்.) ஏமமா யாவிநோத வீசனுரருளினாலே (எ-து) – திரைச் சிலை போன்ற மாயையை விளையாட்டாகவுடைய பரமசிவத்தின் கிருபையினால் :– பூமலியுயிர்கட்கெல்லாம் போகசாதனமுண்டாக (எ-து) - உலகில்மிக்குள்ள வுயிர்கட்கெல்லாமனு போகத்திற்கியைந்த சாதனக்கருவிகளுண்டாகும்படி:-தாமதகுணமிரண்டு சத்தியாய்ப்பிரிந்து தோன்றும் (எ-து) – முக்குணங்களிற் கடைக்குணமாகிய தாமதகுண மானது இரண்டு சக்திகளாகப் பிரிந்து தோற்றும்: வீமமா மூட லென்றும் விவிதமாந் தோற்றமென்றும் (எ-து) – பயகம்பனுதிக் கிடமாயுள்ள வாவரண சத்தி யென்றும், நாநாவித காட்சிகளுக் கிடமாயுள்ள விக்ஷேபசத்தியென்றும். எ-று.

தாமதகுணம், ஆவரணம் விக்ஷேபமென் றிரண்டு சக்திகளாகப் பிளவு பட்டுநிற்குமென்றாயிற்று. இங்ஙனமாதற்குத் தாமதகுணத்திற்கு வலியின் மையின், ஈசனு ரருளினாலே யெனவும்; பூமிமுதலியவை பின்னருண்டாவ தாயினும், இப்போது காணப்பட்டுள்ள வுயிர்கட் கிடம் பூமியாதலாற் பூமலியுயிர்கட்கெல்லாமெனவும், அபின்னமென் பதுதோன்ற விரண்டுசத்தியாய்ப் பிரிந்து தோன்றுமெனவுங் கூறினார். அறியாமையை மூடலென்றும், அறிவைத் தோற்றமென்றுங் கொள்க. (35)

## 36 - கவி (அ-கை.)

[காரணதேகத்தையுமதற்குரிய வவஸ்தையாதி கற்பிதங்களையும் கூறினதுபோன்று, இனிச் சூக்குமதேகத்தையுந் தூலதேகத் தையுங் கூறவேண்டுவதால், முந்திச் சூக்குமதேக வுற்பத்தி கூறப் புகுந்தா ரிக்கவியில் விக்ஷேபசத்தியிலெழுஞ் சூக்குமபூதவுற்பத்தி [வரலாறு கூறுகின்றார்.]

தோற்றமாஞ் சத்தி தன்னிற் சொல்லிய விண்ணும் விண்ணிற்
காற்றதாங் காற்றிற் றீயாங் கனலினீர் நீரின் மண்ணும்
போற்றுமிவ் வைந்து நொய்ய பூதங்க ளொன்று பேராஞ்
சாற்றுமற் றிவற்றிற் போக சாதன தனுவுண் டாகும்.

(இ-ள்) தோற்றமாஞ் சத்திதன்னிற் சொல்லிய விண்ணும் (எ-து) – விக்ஷேபசத்தியில் ஞானவான்களால் வழங்கப்பட்டுவருகின்ற தன்மாத்திரை யென்னு மாகாயமுதித்தது – விண்ணிற் காற்றதாங் காற்றிற் றீயாங் கனலினீர் நீரின் மண்ணும் (எ-து)—அவ்வாகாயத் திற் காற்றும், அக்காற்றி லக்கினியும், அவ்வக்கினியிற்சலமும், அச்சலத்தில்மண்ணு முதித்தன:—போற்று மிவ்வைந்து நொய்ய பூதங்க ளென்றுபேராம் (எ-து) – மேலாகச் சொல்லப்பட்ட விந்தத் தன்மாத்திரைகளைந்தும் சூக்குமபூதமெனப் பெயர்பெறும்: – சாற்று மற்றிவற்றிற் போகசாதனதனுவுண்டாகும் (எ-து) -- இங்ஙனம் பெயர்பெறக்கிடந்த வந்தச்சூக்குமபூதத்தில் போகமு மதற்கியைந்த சாதனமாயுள்ள சூக்குமசரீரமு முண்டாகும். எ-று.

பஞ்சீகரிக்கப்படாததால் அபஞ்சீகிருத பஞ்சமகாபூத மெனவு மாம். தூலதேகந் தூலபூத்தா லாயதென் றேற்பார், மனது தூல தேகமாகுமா? ஆகாதவிடத்தஃதோர் தேகமன்றே? அஃதெந்தப்பூ தசையோகத்தா லாயவுடலென் றெண்ணுதென்னை? வாதமாதிமூன்று நோய்க்கு மாதாரந் தூலமென்றாற்போல, காமம், வெகுளி, மயக்க மென்னு முக்குற்றநோய்க்குமாதாரம் மானதமென்றேலாததென்னை? அம்மூன்றால் வதைவது தூலதேகம், இம்மூன்றால் வதைவது மனது; அஃதிஃதாமா? இஃதஃதாமா? இஃதென்ன விவேகம்? இச்சாஞானப் புடைபெயர்ச்சிக்கு வினைமுதல் மானதம், கிரியையென்னும் புடை பெயர்ச்சிக்கு வினைமுதல் தூலதேகம்; எங்ஙனமென்னில் வந்தான், போனான் என்பவைகளுக்கு வினைமுதல் தூலதேகம்; கேட்டேன், பார்த்தேன் என்பவைகளுக்கு வினைமுதல் ஞானேந்திரியம்; நினைத் தேன், மறந்தேன் என்பவைகளுக்கு வினைமுதல் மனது; அறிந்தேன், அறியேன் என்பவைகளுக்கு வினைமூதல் சீவன். இங்ஙனமிருக்க மிசிரிம்பிப்பானேன்? ''சினைவினை சினையொடு முதலொடுஞ்செறியும்'' என்னுஞ்சூத்திரத்திலுள்ள வும்மை சினையொடு செறிதல்போல முத லொடுசெறித லவ்வள்வு சிறப்பன்றென்பதை யுணர்த்தநிற்றலி னிழிவு சிறப்பு. இங்கே விண்ணுதியென்றது அறிகருவியாகியஞானேந்திரி யங்கட்கும், அந்தக்கரணங்கட்கும் முதற்காரணமாயிற்று ஆகவே, தூலதேகத்திற்கு முதற்காரணந் தூலபூதமெனப்பிரத்தியட்சமாயிற்று.

இதையுமறுத்தல் குதர்க்கம். "நயம்படவுரை" என்பதை அறியார் போலும். மன முலவுதற்கிடஞ் சூக்குமபூதம்; தூல முலவுதற்கிடந் தூலபூதம். இவ்வனுபவ மில்லாரில்லை யெங்கணும். இது திண்ணம். இரண்டும்மை வருவித்தது, 40-ம்கவியில் தூலதனுவும் போகமுண்டாக வென்றதனுல். (36)

### 37 - கவி. (அ – கை)

[முக்குண மென்றவைகளை மும்மூன்ருென்பதுபாகமாக்கி முதற் குண மூன்றையுந் திரிமூர்த்திகளாகவும், இரண்டாங்குண மூன் றையுஞ் சீவாத்மா, அந்தராத்மா, பரமாத்மாக்களாகவும் பிரித்து மூன்ருங்குண மூன்றையும் கரணேந்திரியம், பிராணுதி கன்மேந் திரியம், தனுவாதிதூலபூதங்களாகக் கூறப்புகுந்தார், இக்கவியில் முதற்குண கற்பிதங்களைக் கூறுகின்ருர் ]

ஆதிமுக் குணமிப் பூத மடங்கலுந் தொடர்ந்து திற்குங்
கோதில் வெண் குணத்தி லைந்து கூறுணர் கருவி யாகும்
ஓதிய பின்னை யைந்து முளம்புந்தியிரண்டா ஞான
சாதன மாமிவ் வேழுஞ் சற்குணப் பிரிவி ஞலே.

(இ-ள்) ஆகிமுக் குணமிப்பூத மடங்கலுந்தொடர்ந்து நிற்கும் (எ-து) – தாமதமாகநின்ற சாத்துவிதமுதலிய மூன்றுகுணங்களிலு மிந் தச்சூக்கும பூதங்களனைத்தும் கூடியிருக்கும்: – கோதில்வெண்குணத்தி லைந்து கூறுணர் கருவியாகும் (எ-து) – புனிதமான சாத்துவிதகுணத் தில் ஐந்துவிதமானபாக முணரப்பட்ட ஞானேந்திரியங்களாம்: - ஓதிய பின்னை யைந்துமுளம் புந்தியிரண்டாம் (எ-து) – முன்னர்கூறிய மற்றப் பாகமாகிய அகக்கரணமைந்தும் மனம்புத்தி யெனவிரண்டாகத்தேறும்: – ஞானசாதனமாமிவ்வேழுஞ் சற்குணப்பிரிவிஞலே (எ-து) – சாத்து விதகுண சமஷ்டி வியஷ்டிப்பிரிவிஞலிந்த ஏழு மறிகருவியாம். எ-று.

கோதில்வெண்குணத்திலெனவும், இராசதகுணத்திலெனவுமிடப் பொருளாக்கியதால், ஆதிமுக்குணமென்பதை யிடப்பொருளாக்கிஞம். கோதில் வெண்குணமென்றதனுல் சாத்துவிதமென்ரும். ஓதியபின்னை யைந்தென்றதனுல் முன்னை யைந்தென்று வருவித்துப் பின்னையவைந் தைச் சமஷ்டியெனவும் முன்னையவைந்தைவியஷ்டியெனவும் பொருள் கொண்டாம். இங்கே யைந்து ஐந்தென்றது தன்மாத்திரைகளை இவை யனைத்துங் கட்டளைகளில் விரிவாகவிளங்கக் கூறியிருப்பதால் தாங் கொண்டகருத்தை விரித்துத் தெளிவிக்கச் சுருக்கியுரைத்தனர். இது நிற்க; அந்தக்கரணங்களை யைந்தெனவும், நான்கெனவும், மூன்றென

வும், இரண்டெனவுந் தத்தமக்கியைந்தவாறு கூறுநிற்பார்போல் இவரும் இரண்டெனச் சுருக்கம்பற்றிக் கூறினர். கன்மசாதனமென்றிருப்பதுபற்றி ஞானசாதனமாமென்றூர். இவையேழுந் தாமதத்திற் சாத்துவிதப்பிரிவென்பது குறிப்பு. (37)

## 38 கவி (அ - கை)

[இரண்டாம் குணகற்பிதங்களைக்கூறி யிங்ஙனமாய நிலையே சூக்குமதேகப்பிரபஞ்சமென விக்கவியிற் கூறுகின்றூர்.]

இராசத குணத்தில் வேறிட்டெடுத்தகூறைந்து மைந்தும்
பிராணவா யுக்க ளென்றும் பெருந்தொழிற் கன்ம மென்றும்
பராவிய பெயரா மிந்தப் பதினேழு மிலிங்க தேகஞ்
சுராசுரர் நரர்வி லங்காத் தோன்றிய வுயிர்கட் கெல்லாம்

(இ-ள்) இராசத குணத்தில் வேறிட் டெடுத்தகூ றைந்து மைந்தும் (எ-து) - இராசதகுணத்தில் வெவ்வேருகப் பிரித்தெடுத்த கூறைந்தைந்தாவது: — பிராணவாயுக்களென்றும் பெருந்தொழிற்கன்ம மென்றும் பராவியபெயராம் (எ-து) - பிராணுதிவாயுக்களெனவும், பாரித்த தொழிற்கியைந்தகன்மேந்திரியங்களெனவும், எவருமேற்கப் பரவியபெயர்களையுடையதாம்: — இந்தப்பதினேழு மிலிங்கதேகம்(எ-து) — இந்தப்பதினேழுதத்துவமுஞ்சூக்கும தேகமாம்: — (யாவர்க்கெனின்) சுராசுரர் நரர்விலங்காத்தோன்றியவுயிர்கட்கெல்லாம் (எ-து) — தேவர், இராக்கதர், மனிதர், மிருகமாதியாகத் தோற்றிய வுயிர்களனைத்திற்கும். எ-று.

ஐந்துமைந்துமென்றது நிரனிறை. பிராணுதிவாயுக்கள் சமஷ்டியெனவும் கன்மேந்திரியங்கள் வியஷ்டியெனவுமாம். சூக்குமதேகத்தைச் சிலரிருபத்தைந்து தத்துவமெனவும், சிலரிருபத்துநான்கெனவுங்கூறுநிற்பர். சத்தபரிசாதிவிடயமைந்து, சித்தமகங்காரமிரண்டு ஆகவேழையுஞ்சுருக்கிப் பதினேழென்றூ ரிந்நூலாசிரியர். (38)

## 39 கவி. (அ — கை)

[இந்தச்சூக்குமதேகத்திறூற் சீவேஸ்வரர்களுக்கமையும் கற்பனுநாமங்களை யிக்கவியிற் கூறுகின்றூர்.]

இவ்வுடன் மருவுஞ் சீவற் கிலங்குதை சதனென் றுகு
மிவ்வுடல் மருவு மீசற் கிரணிய கருப்ப னுகு
மிவ்வுடலிரண்டு பேர்க்கு மிலிங்கசூக் குமச ரீர
மிவ்வுடல் கோச மூன்று மிதுகனு வவத்தை யாமே.

(இ-ள்) இவ்வுடல் மருவுஞ் சீவற்கிலங்கு தைசதனென்ருகும் (எ-து) - இந்தச் சூக்குமவுடலை யானென்றபிமானிக்க மவசரத்திற் சீவனுக்கு விளங்காநின்ற தைசதனென்னும் பெயர்வரும்: — இவ்வுடல் மருவுமீசற் கிரணிய கருப்பனுகும் (எ-து) - இந்தச்சூக்கும சரீரத்தை யானென் றபிமானிக்கு மவசரத்தி லீசனுக் கிரணிய கருப்ப னென்னும் பெயர்வரும்: - இவவுடலிரண்டுபேர்க்குமிலிங்க சூக்குமசரீரம் (எ-து) - இந்தச் சரீர மிவ்விரண்டு பேர்க்குஞ் சூக்கும சரீரமாம்: - இவ்வுடல் கோசமூன்ரு மிதுகனுவவத்தையாமே (எ-து) – இவ்வுடலுக்குப் பிராணமயம், மனோமயம், விஞ்ஞானமயமென்னும் கோசமூன்ருதம்; இந்தவுடலே சொப்பனுவத்தையாம். (எ-று.)

ஈசனுக்குச் சமட்டியுஞ், சீவனுக்கு வியட்டியும் என்பது தோன்ற, இவ்வுடலிரண்டுபேர்க்கு மிலிங்கசூக்கும சரீரமென்வும், இவ்வுடலுக்கே மூன்று கோசமும், சொப்பனுவத்தையுமென்பதுதோன்ற, இவ்வுடல் கோசமூன்ருமிதுகனுவவத்தையாமே யெனவுங்கூறினுர்.

(க-து.) இருவர்க்கு மபிமானிநாமம், இன்னசரீரம், இன்னின்ன கோசம், இன்ன வவத்தையெனத் தெரிவித்தா ரென்பது. இவை யெல்லாம் வந்ததற் கவசரம் விரிக்கிற்பெருகும். (39)

40 கவி. (அ—கை.)

[உயிர்களுக்குப் போக நுகர்தற்குச் சூக்குமதனுமாந்திரந் தூலதனு வன்றி யமையாமையின் தூலப்பிரபஞ்சமும் வேண்டு மென்பதை யிக்கவியிற் கூறுகின்ருர்.]

சூக்கும சகமிம் மட்டுஞ் சொல்லினே மிப்பாற் றூல
மாக்குமா ரோபந் தானு மடைவினின் மொழியக் கேளாய்
தாக்குமிவ் வுயிர்க்குத் தூல தனுவும்போ கமுமுண் டாகக்
காக்குமிவ் வீசன் பஞ்சீ கரணங்கள் செய்தான் ருனே.

(இ-ள்) சூக்கும சகமிம் மட்டுஞ் சொல்லினேம் (எ-து) – இதுகாறுஞ்சூக்குமப் பிரபஞ்சத்தைப்பற்றிச் சொன்னேம்: — இப்பாற் றூல மாக்குமாரோபந்தானு மடைவினின் மொழியக்கேளாய் (எ-து) – இனித் தூலப்பிரபஞ்சத்தையுண்டாக்கிய வத்தியாசத்தையும் கிரமமாக யாம் கூறக்கேளுதி: — தாக்குமிவ்வுயிர்க்குத் தூலதனுவும் போகமுமுண்டாக (எ-து) — இன்பத் துன்பங்களிற் ருக்குறுகின்ற விவ்வுயிர்களுக்குத் தூலசரீரமும் போகமுமுண்டாகும்படி: — காக்குமிவ் வீசன்பஞ்சீ கரணங்கள் செய்தான்ருனே (எ-து) - எவ்வுயிர்களையும் காத்தலையே யியல் பாக்வுடைய் விந்தச்சிவன் அபஞ்சீகிருதத்தைப் பஞ்சீகரித்தனன். எ-று

சூக்குமசகமென்றதனல் தூலமாக்குமென்பதனைத் தூலப்பிரபஞ்சத்தையென்றும். உண்டாகவென்னுஞ் செயவெனெச்சம் "பிறவு மேற்கும்பிற" வென்பதினுற் செய்தானென்னும் வினைமுற்றையவாவியது. தாக்குதலுயிர்க்குங் காக்குத லீசனுக்கு மியற்கையாதலிற் பிறவற்றோ டொட்டாதொழிக. அபஞ்சீகிருத பஞ்சபூதத்தின் விகாரம் பஞ்சீகிருத பஞ்சமகா பூதமென்பது தோன்றப், பஞ்சீகரணங்கள் செய்தான்ருனே யென்ரூர். சூக்கும பூதத்திற் கித்தூலபூத மபேத காரியமாதலிற் சோதனையி லிப்பூத மித்தையாகின்றது; யாதினுலென் றுற்றுணர்வாரில்லை; இல்லாததினு லததற்கு முதற்காரண மில்லாமற் போயிற்ருே; இஃதெல்லா மனனஞ் சற்றுமில்லாத குற்றம். என்னை, "தம்பிரானருளிச் செய்த சவண மாத்திரத்தின்மட்டே, யிம்பரா ருலகந் தன்னில் யாவரு மறிவதன்றி, யம்பொனே மனனந்தானு மறிபவ ரில்லையாறுற். செம்பொனே சுவானுபூதி செப்பவேண்டுவது முண்டோ" என்ரூர் தத்துவராயர். முன்னர் சூக்குமவாரோபமென்ருற் போல விங்கே தூலமாக்குமாரோபமென்றது, மித்தையெனலை மறவாதிருக்க. மறத்த லியல்பென்னில் முயல்வாலன்ருேமறத்தலும்; இது சொல்வாதம். நினைத்தலு மறத்தலுந் தன்னுலாதலி னியல்பன்று இரண்டுகாலத்துந் தானிருத்தலினுனும், இவ்விரு புடைபெயர்ச்சிக்குந் தான் வினைமுதலாதலானும், தன்னையன்றி யிவ்விரு புடைபெயர்ச்சியு மின்ருதலானும், தானி வையன்ருதலினுனும், இயற்கை செயற்கையைப்பற்றித் தனியேவாதித்தல் மூடம். தானுகிய எழுவாய்விடாமை விவேகம். (40)

## 41 - கவி. (அ – கை.)

[முன்னர் பஞ்சீகரணங்கள் செய்தானென்றுகூறி யிக்கவியிற் செய்தவகையை விளங்கக்கூறுகின்ரூர்.]

ஐந்துபூ தமும்பத் தாக்கி யவைபாதி நந்நான் காக்கி
நந்துதம் பாதி விட்டு நாலொடு நாலுங் கூட்ட
வந்தன தூல பூத மகாபூத மிவற்றி னின்றுந்
தந்தன நான்காந் தூல தனுவண்ட புவன போகம்.

(இ-ள்) ஐந்து பூதமும் பத்தாக்கி யவைபாதி நந்நான்காக்கி (எ-து)...அபஞ்சீகிருத பஞ்சபூததன்மாத்திரைகளைப் பத்துப்பங்காக்கி முதற்கூறைந்தைவிட்டுப்பிற்கூறைந்தையுநந்நான்காக்கி: – நந்துதம் பாதிவிட்டு நாலொடு நாலுங்கூட்ட (எ-து)–மித்தையான தத்தஞ் சுயாம்ச பாதியைவிட்டு ஏனைய நான்கு சுயாம்சத்தோடு பிற்பாதி

நான்கையுங்கூட்ட: — வந்தன தூல பூதம் (எ-து) - தூலபூதங்களுண் டாயின: — மகாபூத மிவற்றினின்றுந் தந்தன நான்காந் தூலதனு வண்டபுவனபோகம் (எ-து) — இந்தத் தூலமகா பூதங்களினின்றுந் தூலசரீரங்களும், சகலவண்டங்களும், அவற்றுளொன்றாகிய பூமியும், போகங்களுமாகிய நான்கு முண்டாயின. எ று.

சுயாம்சமே கற்பிதாம்சமாகத் தோற்றலின் ஐந்துபூதமும் பத்தாக்கி யெனவும், அந்தக் கற்பிதாம்சமைந்துந் தத்தஞ் சுயாம் சத்தோடு கூடும்போது பிருதிவிற் பிருதிவு பிருதிவி லப்பு பிருதிவிற் றேயு, பிருதிவில் வாயு, பிருதிவி லாகாயம் (எ-ம்) — அப்புவிற் பிருதிவு, அப்புவி லப்பு, அப்புவிற் றேயு, அப்புவில் வாயு, அப்புவி லாகாயம் (எ-ம்) - இவ்வாறே மற்ற மூன்றையு மாக்க ஐயைந் திருபத்தைந் தாம்; ஒவ்வொரு பூதத்தி லைந்தையு மிப்போதே யாராய்ச்சியிற் பிரத்தியட்சத்திற் காணலாம் பொய்யன்று. தத்தஞ் சுயாம்ச மிருப் பதா லதைத்தள்ள ஒவ்வொன்றும் நந்நான்காம். ஆதலி னவைபாதி நந்நான்காக்கி எனவும்; ஒவ்வொரு பூதமைந்தனு ளொவ்வொன்றுந் தத்தஞ் சுயாம்சத்தை யியல்பாகவே யகலாது, ஆதலி னதைக்கொள்ள வேண்டுவ தின்றென்பார், நந்துதம்பாதிவிட் டெனவும்; ஏனைய நான்கினையும், மற்றச் சுயாம்ச நான்கோடு கலக்கத் தூலபூத முதிக்குமாதலால், நாலொடு நாலுங்கூட்ட வந்தன தூலபூதமென வும் கூறினர். இதையுந் தத்துவக்கட்டளை பழுதறவிளக்கும். (41)

## 42 - கவி. (அ - கை)

[இந்தத் தூலதேகத்திறற் சீவேசுவரர்களுக்கமையும் கற்பனை நாமங்களை யிக்கவியிற் கூறுகின்றார்.]

தூலமே மருவுஞ் சீவன் சொல்லிய விசுவ னாகுந்
தூலமே மருவு மீசன் சூழ்விராட் புருடனாகுந்
தூலஞ்சாக் கிரவ வத்தை சொன்னதோ ரன்ன கோசந்
தூலகற் பனையீ தென்று தொகுத்தது மனத்திற் கொள்வாய்.

(இ-ள்) தூலமே மருவுஞ்சீவன் சொல்லிய விசுவனாகும் (எ-து) — வியட்டியில் தூலதேகத்தைத்தானாகமருவிய சீவனுக்கு அபிமான நாமமாகச்சொல்லப்படுவது விசுவனென்னும் பெயராம்: — தூலமேமருவு மீசன் சூழ்விராட் புருடனாகும் (எ-து) சமட்டியில் தூலதேகத்தைத் தானாகமருவியவீசனுக்கு அபிமானநாமம் எங்கு நிறைவான விராட் புருடனென்னும் பெயராம்: — தூலஞ் சாக்கிரவவத்தை (எ-து) — தூல தேகந் தானாகத் தோற்று மவசரஞ் சாக்கிராவஸ்தையாம்;- சொன்ன

தோரன்னகோசம் (எ-து) – ஐந்துகோசங்களிலித்தூலதேக மோரன்ன மயகோசமாம்: – தூலகற்பனை யீதென்று தொகுத்தது மனத்திற் கொள்வாய் (எ-து) – காரணகற்பிதமும், சொப்பன கற்பிதமும்போல விதுவுந் தூலகற்பிதமென்று தொகுத்துக் கூறியதை மனதில் வைக்குதி. எ-று.

இருவருந் தூலதேகமா நின்ற வவசரத்தி லபிமானி நாமமு மவஸ்தா நாமமும், இன்னவிதகோசநாமமுமாம். மீண்டும் நினைப் பூட்டக் கற்பனை யீதென்று தொகுத்தது மனத்திற்கொள்வா யென்றார். சிருஷ்டியைத் தொகை, வகை, விரியென்பவற்றுள் வகை விரியையே லாது தொகுத்தது; தானெடுத்துக்கொண்ட தத்துவவிளக்கம், சந்தேகந் தெளிதலென்னு மிவற்றை வகை விரி யாக்கற்க. உகபத்சிருஷ்டியையும், கிரம சிருஷ்டியையும் கூறினது, மெய்யென்பவர்களை மறுத்தற்கு. சகசீவர் களைப்போலப் பரத்தையு மித்தையெனக்கூறியது; "அல்லையல்லையீதென வருமறைகளு மன்மைச்சொல்லினற் றுதித்திளைக்கு மிச் சுந்தரநாடற்கு" எ-ம்—ஆணல்லன் பெண்ணல்ல னல்லாவலியுமல்லன், கானலுமாகானுளனல்லனில்லனல்லன், பேணுங்காற்பேணு முருவாகு, மல்லனுமாம்" எ-ம்; கூறுவதென்னை? ஆதலிற் றகுமெனவறிக. இலனென்னி லுளனென வரும்; உளனென்னி லிலனெனவரும்; இந்தத்தீராவழக்கைத் தவிர்ப்ப தெவர்க்கு மரிது. இதையெங்கணும் காணலாம். வேதாந்திபோல வழக்கறற் குடன்படாரேனையர். 42

43 - கவி (அ - கை)

[இருவர்க்கு முபாதியுண்டாயிற் பேதந்தெரிவ தெங்ஙன மென்றற்கு விடை யிக்கவியிற் கூறுகின்றார்.]

சீரிய வீச னார்க்குஞ் சீவற்கு முபாதி யொன்றே
லாரிய குருவே பேத மறிவதெப் படியென் றக்காற்
காரிய வுபாதி சீவன் காரண வுபாதி யீசன்
வீரிய மிகுச மட்டி வியட்டியாற் பேத மாமே.

(இ-ள்.) சீரியவீசனார்க்குஞ் சீவற்குமுபாதியொன்றேலாரிய குருவே பேத மறிவதெப்படியென்றக்கால் (எ-து) – மேலான்வீசனுக்குஞ் சீவனுக்கு முபாதியொன்றானாற் பேதந்தெரிவ தெங்ஙனமாஞ் சிறந்த குருமூர்த்தியே யெனவினவில்:-காரியவுபாதிசீவன் காரணவுபாதியீசன் (எ-து) – காரியவுபாதியா நிற்பவன் சீவனென்னவும், காரணவுபாதியா நிற்பவனீசனென்னவுமாம்: – (இஃதன்றியும்) வீரியமிகுசமட்டி வியட்டியாற் பேதமாமே (எ-து) – இம்மிகுந்த சமட்டி வியட்டியாலும் பேதமாம். எ-று.

காரணசரீரத்தில் மாயைகாரணம், அவித்தை காரியம். சூக்கும சரீரத்தில் அபஞ்சீகிருத பஞ்சபூதம் காரணம், மனம் காரியம். ஸ்தூலசரீரத்தில் பஞ்சீகிருத பஞ்சபூதம் காரணம். தூலதேகம் காரியம்; ஒன்றுக்கொன்று உபாதானவுபாதேயமாயிருத்தலின் மறுத்தற்கிடமின்று; இஃதெவருமேற்றற்பாலதே. (43)

44 - கவி (அ – கை)

[முன்னர் சமட்டிவியட்டியென்றார், அதனை யிக்கவியில் திஷ்டாந்த தாஷ்டாந்த முகத்தால் விளக்குகின்றார்.]

மரங்கள்போல் வியட்டி பேதம் வனமெனல் சமட்டி பேதஞ்
சரங்கடா பரங்கள் பேதந் தனியுடல் வியட்டி யென்பார்
பரம்பிய வெல்லாங் கூட்டிப் பார்ப்பது சமட்டி யென்பா
ரிரங்கிய பலசீ வர்க்கு மீசற்கும் பேத மீதே.

(இ-ள்) மரங்கள்போல் வியட்டிபேதம் வனமெனல் சமட்டி பேதம் (எ-து) - தனித்தனி மரங்களைப்போல வியஷ்டிபேதமும், தோப்பென்பது போற் சமஷ்டிபேதமுமாம்: —(இதுபோல), சரங்கடாபரங்கள் பேதந் தனியுடல்வியட்டியென்பார் (எ-து) சரமசரமென்னும் முயிர்களின் பேதத்தை விளக்கநிற்பது தனித்தனியுடல்களாம், அவ்வுடல்களை யறிவுடையோர் வியஷ்டியெனக்கூறுவர்: பரம்பியவெல்லாம் கூட்டிப்பார்ப்பது சமஷ்டியென்பார் (எ-து)—இங்ஙனந் தனித்தனியெங்கணும்பரவிய சமஸ்தபௌதிகங்களை யெல்லா மேகமாக்கிப் பார்ப்பது சமஷ்டியென் றறிவுடையோர் கூறுவர்:—இரங்கிய பலசீவர்க்கு மீசற்கும் பேதமீதே (எ-து)—இரக்கமுறத்தக்க சமஸ்தசீவர்களுக்கும், ஈஸ்வரனுக்கும் வந்த வுபாதிபேத மிதுவாம். எ-று.

எல்லாத் தூலதேகங்களு மவனுக்கோர்தூலதேகமும், எல்லாச் சூக்குமதேகங்களு மவனுக்கோர் சூக்குமதேகமும், எல்லாக்காரண தேகமு மவனுக்கோர் காரணதேகமுமாம். இது சமஷ்டிவியஷ்டி பேதத்தின் தன்மை, காரணகாரியத்தானும், சமஷ்டிவியஷ்டியானும் விளங்குதல், பேதமேயாதலினிருவரு மேகமாகாரெனத் தாபிக்கப்புகுந்தது பின்னேக்மாக்கற்கு.

(க-து.) இவ்வேதுக்களா லிருவரு மேகமாகாரென்பது இருவரும் கற்பித சகிதராதலினென்க.

45 - கவி. (அ - கை.)

[இதுகாறும் கற்பிதம் வந்தவகையைத்தெரிவித்து இனியபவாதஞ் சொல்லப்புகுதுமென விக்கவியிற் கூறுகின்றார் ]

கற்பனை வந்த வாறு காட்டினேங் காண்ப வெல்லாஞ்
சொற்பனம் போல வெண்ணித் துணிந்தவன் ஞானி யாவான்
செற்புதை மழைக்கா லம்போய்த் தெளிந்தவா காயம் போல
வற்புத முத்தி சேரு மபவாத வழியுங் கேளாய்.

(இ ள்) கற்பனைவந்தவாறு காட்டினேம்காண்பவெல்லாஞ் சொற்பனம் போலவெண்ணித் துணிந்தவன்ஞானியாவான் (எ-து) — வெறும்பொய்யாகிய சகசீவபரந் தோற்றன்மாத்திரமாக வந்த வகையைக்காட்டத் தகுந்தவாறு காட்டினேம், ஆதலி னகம்புறத்திற் காணப்படுவனவாகிய சமஸ்த திருசியங்களையு மிவ்வேதுக்களை மற வாது சொப்பனம்போலப் பொய்யெனச் சிந்தித்துத்தெளிந்தவன் யாவனோவவனே ஐயமின்றி ஞானியாவான்: - (இங்ஙனமிருக்க), செற் புதை மழைக்காலம்போய்த் தெளிந்தவாகாயம்போல (எ-து) — மேகங் கள் நெருங்கத்தக்க மழைகாலநீங்க யாதொரு மாசுமின்றித் தெளிந்த வாகாயத்தைப்போல: - அற்புதமுத்திசேரு மபவாத வழியும்கேளாய் (எ-து) - அற்புதமான ஐக்யமுத்தியை யடையத்தக்க அபவாதமென முன்னர் கூறிய யுத்தியின் வகையையும் யாம் கூறக்கேளுதி. எ-று.

பகுதிவிகுதி யிடைநிலையனைத்துந் தோற்றன்மாத்திரமென ஆங் காங்கு நினைப்பூட்டி வந்தோமென்பார், கற்பனைவந்தவாறு காட்டினே மெனவும், ப்ராதிபாலிகாதிசத்து முன்றையும் பகுதிவிகுதியிடைநிலை யென்றும். யாங்காட்டியவாறு கேட்டல், சிந்தித்தல், தெளிதலால், அஞ்ஞானம் சந்தேகம் விபரீதமற்றவன் சீவன்முத்தனுவா னென்பார், காண்பவெல்லாஞ் சொற்பனம்போல வெண்ணித் துணிந்தவன் ஞானி யாவானெனவும்; இங்ஙனமாய விசாரத் தெளிவைக்காட்டச் செற்புதை மழைக்காலம்போய்த் தெளிந்தவாகாயம்போல வெனவும்; தானே தானுகுமுத்திபோல்வ தொன்றின்றுமையின், அற்புதமுத்தியெனவும் கூறினார். ஏனையவை, பதவிமுத்தி, போகவென்பதைப் போயென்றது, காலமயக்கம். மொழியுங்கேளாயென்ற வும்மை, அத்தியாரோபத்தைச் சொன்னதுமன்றி யெனப்பொருடரலா லிறந்தது தழீ இயவெச்சவும் மை. இங்கே கற்பனை, ஒன்றையொன்ருய் புத்திவிகற்பத்தாற்கோடலே.

(45)

46 - கவி (அ கை.)

[மேலபவாதமென்று ரக்ஷித்தகையெதென விக்கவியிற் பழுதறக் கூறிகின்றார்]

அரவன்று கயிறென் றுற்போ லாளன்று தறியென் றுற்போற்
குரவன்ற னுபதே சத்தாற் கூறுநூல் வெளிச்சங் கொண்டு
புரமன்று புவன மன்று பூதங்க ளன்று ஞானத்
திரமென்றும் பிரம மென்றுந் தெளிவதே யபவா தங்காண்.

(இ-ள்.) அரவன்று கயிறென்றுற்போ லாளன்றுதறியென்றுற் போல் (எ-து) – இது பாம்பல்ல கயிறென்றுகாட்டினு லெத்தகைத்தோ வதுபோலவும், இவன்கள்ளனல்லன் கட்டையென்று காட்டினு லெத்தகைத்தோ வது போலவும்:–குரவன்றனுபதேசத்தாற்கூற நூல் வெளிச்சங்கொண்டு (எ-து)–ஞானாசிரியரனுக்கிரகித்த ஞானக்கண்ணினுலும் மகான்களாற் சொல்லப்பட்டவனுபூதிநூலென்னும் விளக்கத்தினுலும்:–புரமன்றுபுவனமன்று பூதங்களன்று (எ-து) - யானெனப்படுவது அஸ்தியாதியிருபத்தைந்து தத்துவமாகக் காணப்பட்ட தூல தேகமுமல்ல, இந்தத்தூலதேகத்துக் காதாரமாயுள்ள பூமியுமல்ல, இந்தப் பூமிக்கு மாதாரமாயுள்ள ஸ்தூலபூதமு மதற்காதாரமாயுள்ள சூக்கும பூதமு மதற்குமாதாரமா வடுக்கடுக்கா தின்றுள்ளகுணத்ரயமும், அகங்காரமும், மகத்துவமும், மூலப்பிரகிருதியுமல்ல: – ஞானத்திரமென்றும் பிரமமென்றுந் தெளிவதே யபவாதங்காண் (எ-து) – பரஞானம், அபரஞானம், ஸ்திரஞானமென்பவற்றுள் ஸ்திரஞானமெனவும் அந்தஸ்திர ஞானமே நிரதிசயானந்த மாதலி னதுவே பிரமமெனவும், ஐயந்திரிபின்றித் தெளிவுறுவதே யபவாதமென்னு முத்தியெனக் காணுதி. எ-று.

பழுதையைப் பாம்பென்பதும், கட்டையைக் கள்ளனென்பதும் மூடம்; இதனை யத்தியாசமென்னுர், இதையுடையாரத்துவிதிகளல்லாதார். எங்ஙனமெனில், நானெனற்குச் சுயம்புவடிவம், மெய்யுணர்வு. இதைமறந்தவறிவு, மூலப்பிரகிருதி; இதைமறந்த வறிவு, மகதத்துவம்; இதை மறந்தவறிவு, அகங்காரதத்துவம்; இதைமறந்தவறிவு, குணத்ரயம்; இதை மறந்தவறிவு, ஈசன்; இதைமறந்தவறிவு, சீவன்; இதைமறந்தவறிவு, சூக்குமபூதம், இதைமறந்தவறிவு, சூக்குமபௌதிகமான மனது; இதைமறந்தவறிவு, ஸ்தூலபூதம், இதைமறந்தவறிவு, ஸ்தூலபூத; பௌதிகமான ஸ்தூலதேகம்; இதைமறந்தவறிவு, எழுவகைத் தோற்றத்தி லோர்தோற்றம் இதைமறந்தவறிவு, வாலமதியூகமதியுளொன்று; இதை மறந்தவறிவு; வருணுசிரமங்களி லொன்று;

இதைமறந்தவறிவு, ஆண் பெண் பேடியுளொன்று; இதை மறந்த வறிவு, தாய் தந்தை, அண்ணன், தம்பி, தமக்கை, இளையான், பேரன், பாட்டன் முதலிய பாத்தியவகையுளொன்று; இதைமறந்தவறிவு, விருப்புவெறுப்பை யியல்பாகக்கோடல்; இன்னு மிதனினும் கீழாக்கிடந்த வுணர்வுபேதங்களுள். இப்பேதவுணர்வுகளி னின்றுஞ் சற்றுமகலா ராதலினாலும், அல்லவில்லையெனற்கே யியைந்த திரிபதார்த்தங்களையு மாராய்ச்சிக்குச் சற்று முடன்படாது மிருகாதிகளைப்போ லெங்ஙனம் மெங்ஙனம் யாதுயாதுகாணப்படு கின்றதோ அங்ஙன மங்ஙன மதை யதைச் சத்தியமெனக்கண் டுழல் வதினாலுமெனவுணர்க. எனவே, கீழாகச்சென்றழியு முணர்வின் கடையை யாரோபமெனவும், மேலாகச்சென்றேறு முணர்வின்முடி வை யபவாதமெனவும்கூறுவதைக்காண்க. நானல்லாதவிப்பேத வுணர்களை நானென்றுணர்தல் தவிர்ந்து, மெய்யுணர்வை நானெனப் பழுதறவுணர்ந் தது நானாகவிளங்கல் அபவாதமென்றார். தத்துவக் குழாத்தையே யானெனக்கொண்ட திடத்தைத்தவிர்க்கப் புரமன்று புவனமன்று பூதங்களன்று. எ-ம்; தனது சொரூபமிஃதன்றிஃதன்றென விசாரித்துக் கையிழந்துழி நீயறிவென விளக்கலினானும்; அவ்விளக்க மே வீட்டா லபரஞானமும் பரஞானமும் கழன்றுதான் ஸ்திரஞான மாக நிற்றலினானும், ஞானஸ்திரம், எ-ம்; அறிவேயானந்த மாதலின் பிரமமெனவும், ஞானோதயத்திலானந்தோதயமும், ஆனந்தோதயத் தில் ஞானோதயமும், இவ்விருபேதமிறந்து விளங்கலைத் தெளிவதே யபவாதமெனவும் கூறினார்.

(க-து.) தன்னை யுபாதித்ரயத்து ளொன்றாகக்காண்டல் ஆரோ பம். தன்னை ஞானப்பிரகாசமாக விளங்கக்காண்டல் அபவாதமென்பது. இவ்விருமுயற்சியுந்தனதாதலில் தானே ஞானஞ்ஞானமெனவும், இவைமாறினுந்தான்மாறாததால் தானிவையன்றெனவும் கண்டாம். இரட்டுறமொழித லென்னுமுத்தியால், இல்லாதது பாம்பும் கள்ளனு மெனவே, இருப்பது செத்தையும் கட்டையு மென்றாயிற்று. அது போல இல்லாதது சகசீவபரமெனவே, இருப்பது ஞெப்திப்பிரிய மென்றாயிற்று. இதன்றியும் பழுதையே பாம்பாகத்தோன்று, மாறு போன்று, பிரக்ஞையே சகமாதியாகத்தோற்றலின் அபேதகாரண காரியமாயிற்று. இது சோதனைக் கியைந்த தாதலின், கன்மம்பத்தி போற் கதையன்று, உண்மைநூல். விருத்திஞானமும், சான்றோரனு பவமுன்றி யொன்றான் மாத்திரம் ஐயமகலாதாதலின் இரண்டும் வேண்டும். அபவாதம் மயங்காமை. (48)

47 கவி. (அ—கை)

[முன்கவியி லபாதமாவது; அபேதகாரணகாரியமெனக் குறிப் பித்தா ரதனை யேகமென்றுணர்த்த இக்கவியிலு மபவாதத்தையே கூறுகின்ருர்.]

படமுநூ லும்போற் செய்த பணியும்பொன் னும்போற் பார்க்கிற்
கடமுமண் ணும்போ லொன்ருங் காரிய கார ணங்க
ளுடன்முதற் சுபாவ மீரு யொன்றிலொன் றுதித்த வாறே
யடைவினி லொடுக்கிக் காண்ப தபவாத வுபாய மாமே.

(இ-ள்) படமுநூலும் போற்செய்த பணியும் பொன்னும்போற் பார்க்கிற், கடமுமண்ணும்போலொன்ரும் காரியகாரணங்கள் (எ-து) —வஸ்திரமும் நூலும்போலவும், செய்தவாபரணமும் பொன்னும் போலவும், மட்பாத்திரமும் மண்ணும்போலவும், திருக்குதிருசியத் தைச் சிந்தித்துப்பார்க்குமிடத்தி லபேதகாரண காரியமாயிருத்தலி லேகமேயாம்: – உடன்முதற் சுபாவமீரு யொன்றிலொன்றுதித்தவாறே (எ-து) – விகுதிதூலதேகமுதல் பகுதிசுபாவ மீருகத் தத்துவங்களைத் தத்தமக்குள் முன்ன ரொன்றிலொன் றுதித்தவாறெங்ஙனமோ வங்ஙனமே – அடைவினிலொடுக்கிக் காண்ப தபவாதவுபாயமாமே- (எ-து) –கிரமமாக ஒன்றிலொன்ருெடுக்கி யுண்மையைக் காண்பதப வாதமென்னுந் தந்திரமாம். எ-று.

பார்க்கிலென்றதனுல், திருக்குத் திருசியம்வருவித்தாம். இம் மூன்றுபமானங்களு மபேதகாரண காரியமெனத் தெரிவிக்கப் புகுந் தது, திருக்கு திருசிய நிலைமைநோக்கி; எங்ஙனமெனில்; நூல், பொன், மண் இவைகளையன்றிப் படம், பணி, கடம், எங்ஙனமின் ரே அங்ஙனம் ஸ்மரணையையன்றி யவஸ்தாத்ரயம், காட்சுசித்ரயம், அபிமானித்ரயம், சமஷ்டி வியஷ்டிகளாக விருக்கவேண்டும்; அங்ஙன மின்றே! ஆதலி னையமின்றிப் பொருந்தும். எங்கெங்கே ஸ்மரணை யுண்டோ வங்கங்கே சமஸ்தமுமுண்டு, இன்றேலின்ரும். தோற்றமு மொடுக்கமும் ஸ்மரணைக்கன்றிச் சகத்துக்கெனின் நன்றே, சகத்தைத் தனித்து விசாரிப்புழி யாராய்தலுக்கு முன்னர் நாமரூபமாகவும், பின் னர்பாழாகவுந்தோற்றலென்னை? அஃதிங்ஙனமாறியதின்றேல், ஸ்ம ரணையின் பிறழ்தலாகவேண்டும்; ஸ்மரணையின் பிறழ்த லெங்ஙன மெங் ஙனமோ வங்ஙனமங்ஙனந் தோற்றல் சகத்தினதியல்பாகவேண்டும்;

அன்றேல் முரணின்றிக்கூறுக. வலியின்றேற் சொன்னவாறு கேளுதி; இதனாற் சகமாதி மூன்றும் ஸ்மரணைக் குபாதேயமாயிற்று. சித்துசடபேத முளதெனின். அறிவையன்றி யறியாமை யிருக்கவேண்டும்; உண்டெனி னாராய்தலின்கண்ணல்லவில்லையென்றகன் றறிவுமாத்திர மிஞ்சிநிற்பா னேன்? நிற்றலினறிவே சமஸ்தத்திற்கு முதற்காரணமாயிற்று ஆகவே, அறிவு திருக்கும், அறிாமை திருசியமுமாயிற்று. அறிவறியாமை யிரண்டாதலா லிவை காரண காரியமாமே யெனின், பொருளல்லவற் றைப் பொருளென்றறித லெந்தவறிவோ, அந்தவறிவே பொருளைப் பொருளென் றறிவதன்றே; வேறெனின் எந்தறிவு பழுதையைப்பாம் பென்றதோ; அந்தவறிவே பழுதையைப் பழுதையென்றதும், வேறன் றாதலால் அறிவேயறியாமையாயிற்று. அறியாமை பற்றி யறிவு காரணமாயிற்று: அறிவுக் கன்னியமன்றாமையி னறியாமை காரியமாகாது, அதனாலறிவு காரணமாகாது. இதனாலறிவே காரணகாரியமாம் எனப்பெற்றாம். பெறவே காரணகாரியங்க ளொன்றெனற் கையமென்னை? இன்றாதலி னென்றாம் காரியகாரணங்களென்றார். இதனை யபவாத வுபாயமெனற் கிழுக்கென்னை? ஒன்றிலொன்று தித்தது சுபாவமுத லுடலீறுய தெங்ஙனமோ; அங்ஙனமே யுடன்முதற் சுபாவமீறு யடைவினிலொடுக்கிக் காண்ப தபவாதவுபாயமாமென முடிக்க. இம்முறை சற்று மறியாதார் இந்நூலையாளல் குங்குமஞ் சுமந்ததுபோலும், ஆயுதபாணி பேடிபோலுமாம்: தாமே யுத்தரவாதி யாக விக்கவிக்கு வழக்கறுத்து உரைகூறும் வேதாந்திகளெங்ஙனுமரி யர்; இருக்கி லவர்மொழி புலப்படலரிது; எங்ஙனமெனில், உள்ளதை யில்லதாகவும், இல்லதை யுள்ளதாகவும், ஆமெனலையல்லதாகவும், அல்லதை யாமென்பதாகவும் ஆக்கும் சுவானுபவவலியினராதலின் இங்ஙனமாய மேலாய நிலையைச் சைவத்திலும், வைணவத்திலும் காணலாம். இவ்விரு மத அபிமானங் கழலாதார்க்கு இஃதோர் கதைபோலும்.

(க-து.) அபவாதவுபாயம் துவிதமாக்காது ஏகமாக்குமென்பது. இது சுவானுபவமின்றேல் முரணும். (47)

48 - கவி (அ - கை.)

[விக்ஷேபம், ஆவரணமெனத் தேவரீர் கூறிய சத்தியிரண்டினுள் விக்ஷேபசத்தியை விளக்கியவாறுபோல, ஆவரணசத்தியி னிலையையு மினையதெனத் தெரிவிக்கவேண்டுமென்று மாணாக்கன் வினாவினதை யிக்கவியிற்கூறுகின்றார்.]

தூடண தமத்தில் வந்த தோற்றமாஞ் சத்தி செய்யு
மீடணை விகாரஞ் சொன்னீ ரிரண்டுசத் திகளென் றீரே
மூடலாஞ் சத்தி செய்யு மோகமுஞ் சொல்லு மையா
கேடறு குருவே யென்னக் கிருபையோ டருள்செய் வாரே.

(இ-ள்.) தூடணதமத்தில்வந்த தோற்றமாஞ் சத்திசெய்யு மீடணைவிகாரஞ்சொன்னீ ரிரண்டுசத்திகளென்றீரே (எ-து) — முக்குணங் களிலுமிழிவாயுள்ள தமோதகுணத்தினின் றுதித்தன விரண்டுசத்திக ளென்றீரே, யவற்றுள் ஒன்றாகிய விசேக்ஷபசத்திசெய்யு மீடணைத்திர யத்திற் கிடமாயுள்ள விகாரரூபமான தேகாதிப்பிரபஞ்சம் வந்த வகையைச் சொன்னீர் - மூடலாஞ் சத்தி செய்யு மோகமுஞ்சொல்லு மையா கேடறுகுருவேயென்ன (எ-து) — மற்றொன்றாகிய ஆவரணசத்தி செய்யும் பிராந்திரூபமான விபரீதத்தையு மினைய தென் றையனே, களங்கரகிதமான குருமூர்த்தியே யடியேனுக்குத் தெரிவிக்க வேண்டு மென் றிரந்துகேட்க: — கிருபையோடருள்செய்வாரே (எ-து) — மகா கருணையோடு தெரிவிக்கப்புகுந்தனர். எ-று.

அனர்த்தரூபமாதலின் தூடணதமமெனவும், தூலசூக்குமந் தோற்றன் மாத்திர மாதலின் தோற்றமாஞ்சத்தியெனவும். இத்தோற் றத்தை மெய்யெனக்கோடலால் விளையும்பய னிஃதென்பார் ஈடணை விகாரமெனவும், திரை போல்வதின் மூடலாஞ்சத்தியெனவும், ஒன்றை யொன்று யுணர்தற்கியைதற் பாலதின் மோகமெனவும் கூறியவாறு காண்க.

(க-து.) விக்ஷேபசத்தியைப்போல ஆவ்ரணசத்தியையும் விளக்க வேண்டுமென்பது. (48)

## 49 கவி. (அ-கை.)

[ஆவரணமென்பது மறைப்பாதலால் இச்சத்தி செல்லிவிடஞ் செல்லாவிட மினையவென விக்கவியிற் கூறுகின்றார்.]

தானிகர் தனக்கா மீசன் றனையுந்தங் களைத்தாங் கண்ட
ஞானிக டமையு மன்றி நாஸ்திந பாதி யென்னு
மூனிறை யுயிர்க ளுள்ளி லுணர்விழிக் குருடாம் வண்ணம்
வானிலந் திசைகண் மூடு மழைநிசி யிருள்போன் மூடும்.

(இ-ள்.) தானிகர் தனக்காமீசன் றனையுந்தங்களைத்தாங்கண்ட ஞானி கடமையுமன்றி(எ-து) — தனக்குத்தானே நிகராயுள்ள மாயார கீதவீசனையும், தங்களைத்தா முள்ளவாறு கண்டுள்ள மகான்களையு மறைக்காதன்றி: — நாஸ்தி நபாதியென்னு மூனிறையுயிர்களுள்ளி

னுணர்விழிக் குருடாம்வண்ணம் (எ-து) — இல்லவே யில்லையென்பது நாஸ்தியும், இருந்தாற் காணுமென்பது நபாதியுமாதலி னிவற்றை யே யுண்மையென்னும் மாம்சதேகத்தினிறைந்த மூடவுயிர்களி னுள ளத்திற் சதோதயமாக விளங்கு ஞானக்கண் குருடாகும் வண்ண மெவ்வண்ணமோ வவ்வண்ணம்: — வானிலந்திசைகண் மூடு மழைநிசி யிருள் போன்மூடும் (எ-து) — இஃநாகாயம், பூமி, திக்குகள், என்று தெரியவொட்டாமல் மூடிக்கொள்ளுநின்ற மழைகாலத்தமாவாசை யிராக் காலத்துக் கருக்கலைப்போல ஆவரணசத்தி மூடியிருக்கும். எ-று.

(க-து.) இந்தவாவரணசத்தி, மாயாரகிதவீசனையும், சீவன்முத் தர்களையு மூடாமல்; ஆஸ்திகர்களாக மெய்போனடித் தகத்தில் தேக மேயான்மா போகமே முத்தியென் றுறுதிகொண்டு, ராகாதிகளைக் கை விடுவது போற் காட்டிக் காவிலாளுநின்றவர்களையே மூடுமென்பது. மாயாசகிதனன்றெனக் காட்டத் தானிகர்தனக்காமீசனெனவும்; அவித் யாசகித ரன்றெனக்காட்டத் தங்களைத்தாங்கண்ட ஞானிகளெனவும்; மூடுமென்னும்குறிப்பேற்றோர் சகிதரெனவும்; மூடாமலென்பா ரன்றி யென்வும்; நாஸ்தி, நபாதியென்பவற்றைத் திரிகரணசாட்சியாகவேற் பவர் நாஸ்திகர், வாக்குக்காயநீங்கலாக மனச்சாட்சி மாத்திரமாக வேற்பவர் போலியாஸ்திகர் என்பது குறிப்பிற்றோன்ற, நாஸ்திநபாதி யென்னு மூனிறையுயிர்களெனவுங் கூறினர். ஊனைத் தேகமென்னல், காரணவாகுபெயர். ஒருணர்வுமுத லையுணர்விறுதியாயுள்ள வுணர் கருவிக ளுமிருக்கென்க. சத்தமுதலிய பஞ்சவிடயங்களுக்கு மிவை யுணர்கருவியானு லிவற்றிற் குணர்கருவி மனமாகவேண்டும்; இம் மனதிற் குணர்கருவி யுயிராகவேண்டும்; இவ்வுயிருணர்வாயினு மூட லைத்தானென்றிருத்தலா லறியாமையாகவேண்டும்; இவ்வறியாமைக்கு உணர்கருவியோர் சுயம்பறிவிருக்கவேண்டும், அதனினுமேலாய கண் ணின்மையினதனையுருவகப்படுத்தி, அதுகுருடாம்வண்ண மிருள்போல் மூடுமென்றார் இஃதெவர்க்கு மனுபவமாதலிற் றடையென்னை? அவ் வுணர்வு; தன்னையுந் தனக்காதாரத் தலைவனையுங்காணாததற்கே தென்னை? இவ்வாவரணத்தாலன்றோ, அன்றேற் கூறுக. இவ்வாவரண மாவது, பஞ்சகோசம்; ஆவரணமெனினும்கோசமெனினு மொக்கும். இஃதெவ்வுயிர்பாலின்று, உளதாதலிற் பொதுப்பட வுயிர்களென்றார். இதனைத் தன்பாலிருக்கக்காணத்தெரியாதார் மதத்தராதலினிதனை மறுப்பர். வேதாந்திமாத்திரஞ்சோதனையகலானுதலின் மறுக்கான்.

கண்டதேகாட்சி, கொண்டதே கோலமென்னும் கொள்கையையகன்று ரொருவருமில்லை; இவர்களைவிட மதத்தரென்பவர்கிடையார். இவர்களி வ்வாவரண சத்தியை யேற்பதெவன். இவ்வாறே போலிஞானியரும், அடாஞானியரு மிதனையேலார். ஏலாமைக்கு ஏது இம்மறைப்பாலெனவுணர்க. (49)

50.-கவி (அ—கை)

[கூடஸ்தபிரமமாகிய அதிஷ்டானத்திற்கும் சீவேஸ்வரரென்னு மாரோபத்திற்குமுள்ள பேதந்தெரிய வொட்டாது மறைப்பது மிவ்வாவரணசத்தியேயென விக்கவியிற் கூறுகின்றார்.]

பூன்றமாம் பிரமத் திற்கும் புறத்துள விகாரங் கட்கு
மான்றகூ டத்த னுக்கு மகத்துள விகாரங் கட்குந்
தோன்றிய பேதஞ் சற்றுந் தோன்றுமன் மறைத்து மூடு
மூன்றிய பவவி யாதி யுண்டாக்கு முபாதி யீதே.

(இ-ள்) பூன்றமாம் பிரமத்திற்கும் புறத்துள விகாரங்கட்கும் (எ-து)—பரிபூரணமாயுள்ள பிரமத்திற்கும், அதற்குப் புறம்பாயுள்ள ஈசனும், அவனதுபாதிகுணந் தொழில்களுமாகிய இவைகட்கும்:— ஆன்றகூடத்தனுக்கு மகத்துளவிகாரங்கட்கும் (எ-து)— எவற்றினுஞ் சிறந்த பிரத்தியேகாத்மாவுக்கும், அதற்குவெதிருத்தமாக அகத்திலுள்ளசீவனும், அவனதுபாதிகுணந் தொழில்களுமாகிய விவைகட்கும்:— தோன்றியபேதஞ்சற்றுந்தோன்றுமன் மறைத்துமூடும் (எ-து) —உண்டானவதிஷ்டான வாரோபபேதஞ் சிறிதுந் தோன்றவொட்டாம லதனையறியவெழுந்த வுணர்வைமறைத்துச் சத்தென்றுணரும்படி யசத்தாயுள்ளவைகளை மூடிக்காட்டும்:— ஊன்றியபவவியாதி யுண்டாக்குமுபாதியீதே (எ-து)—நிலையாயுள்ள பிறவிநோயைவிடாது விளைவிக்கத்தக்க வுபாதியாவது இவ்வாவரணசத்தியே வேறன்று. எ-று.

இவனெதற்கு முபாதியாயிருக்கிறானென்னுமிடத்தில் உபாதி தடையெனப்பொருடரலால் இங்கேதடையெனப்பொருள்கொண்டாம். தன்னைத் தானுணர்தற்குத்தக்க முயல்வெங்குளதோ வங்கே தடையாயிராது ஏனைய விடத்துத்தடையாயுறுமென்றதனால், இது பத்திகாண்டி, கன்மகாண்டியைக் குறிப்பிக்கநின்றது. இவ்விருவருள் பத்திகாண்டியுந் தன்னை யடிமையாக்கியதேயன்றித் தன்னைத்தான் விசாரித்துத் தெளியவில்லை, இதனால் பொருளல்லவற்றை ஆண்டானடிமையென்றான்; தன்னையடிமையாக்கிய விம்முயற்சி சித்தசுத்திக் கியைந்ததன்றியாவரணசத்தியை யகற்றற்கன்று. எங்ஙனமெனில் பஞ்சகோசவிசாரத்

தெளிவின்மையினும், ஆசாரின்றித் தனனைத்தானுராய்வுழி யெட்டாமையி னுஸ்தியெனவும்; இச்சாஞானக் கிரியையென்னும் புடைபெயர்ச்சியிருத்தலினிவை வினைமுதலின்றிநிகழா, வினைமுதலிருக்கவேண்டுமெனி னிருந்தாற் காணப்படானுவென்பது நபாதியெனவும் கொள்ளுங்கொள்கை யகலாமையினுமென்க, சொரூபசமாதி, சகசசமாதி யெனக்குறிக்க, அகம்புறமென்றது. சொரூபசமாதி, யகத்தினிகழ்வது, சகசசமாதி புறத்தினிகழ்வது. சொரூபசமாதியிலதிஷ்டானம், கூடஸ்தன்; இதற்காரோபமான விகாரங்கள சிதாபாசன், வியஷ்டிமன முதலிய கரணக்குழாங்கள், இதற்குவிடயம் சத்த, பரிச, ரூப, ரச, கந்தமென்னுந் தன்மாத்திரைகள், சுரோத்திரம், தொக்கு முதலிய வையுணர்வுகள், இதற்குவிடயம் சத்த, பரிச, ரூப, ரச, கந்தமென்னும் ஸ்தூலபூதாம் சங்கள், வாக்கு, பாணி, பாதம், பாயுரு, உபஸ்தம், என்னும் கன்மேந்திரி யக்குழாங்கள், இவற்றிற்குவிடயம் வசன, தான, கமன, விசர்க்க, ஆனந்தமென்னும் குழாங்கள், பிராண, அபானமுதலிய தசவாயுக்கள், இவற்றின் சேட்டைப்பிரிவுகள், மெய், வாய், முதலியவவயங்கள், இவற்றிற்கவயவி, தூலதேகம் முதலியவைகள், இன்னு மித்தூலதேகத்திற்கு விகாரங்கள் குழவிமுதலிய பருவபேதங்கள், சராசரபேதங்கள், எழுவகைத்தோற்றபேதங்கள், வருணாசிரமபேதங்கள், அண்ணன், தம்பி, தாய், தந்தை, முதலியபாத்தியவகைகள், இவைபோல்வன பிறவுமாம். இதனையிங்ஙனம் விளக்க, ஆன்றகூடத்தனுக்கு மகத்துள விகாரங்கட்குமெனவும்; இங்ஙன மாயசொருபசமாதி நிறை வேறினன்றிச் சகசசமாதி கைகூடாது. இம்மரபு நோக்கிப் புறமெனவும்; சொரூபசமாதியாவது; அகத்தில் தேக முதலான்மா விறுதியாக நின்ற தத்துவங்களை நியதிகளைந்துசேறல், இது வஸ்துவை யணுவுக்கணுவாகத் தரிசித்தல்; இதனைச் சொருப சமாதியெனவும், அகச்சமாதி யெனவும்கூறுவர். இதுநிற்க, சகசசமாதியாவது; தேகத்துக்குப்புறம்பி லுடலாதிப்பிரமமிறுதியாகநின்ற வியாபக வியாப்பியங்களை நியதிகளைந்துசேறல்; இதுவஸ்துவை மகத்துக்குமகத்தாகத்தரிசித்தல்; இதனைச் சகசசமாதியெனவும், புறச்சமாதியெனவும் கூறுவர். சகசசமாதியிலதிஷ்டானம், பிரமம்; இதற்காரோபமான விகாரங்கள், ஈசன், சமஷ்டிகரணங்கள், அதற்கியைந்தவிடயங்கள், ஞானப்பொறிகள், அதற்கியைந்தவிடயங்கள், கன்மப்பொறிகள் அதற்கியைந்தவிடயங்கள், வாயுக்கள், தேகங்கள், புவனங்கள், தூலபூதம், சூக்குமபூதம், குணத்ரயம், அகங்காரதத்துவம், மகதத்துவம், மூலப்பிரகிருதி, இவை போல்வன பிறவுமாம். இதனை இங்ஙனம்விளக்

கப் பூன்றமாம்பிரமத்திற்கும் புறத்துளவிகாரங்கட்குமெனவும் கூறினர். கற்பனுசகிதத்தைக் கற்பனுரகிதமெனச் சீவேஸ்வரரைக்கோடல், ஆவரணத்தாலாதலின் மறைத்துமூடுமென்றுர் இம்மறைப்பையேலாரகன் றவராகவேண்டும். அங்ஙனமின்றே, பொருளல்லவற்றைப் பொருளென்றுணர்வராதலின் தன்னைத்தா னெங்ஙனமுணர்வர், அங்ஙனமுணராக்காறும் அயலை நானென்னும்பிராந்தி யெங்ஙனமகலும், அகலாக்காறும் வினையுடல்கள் வந்துவந்துநீங்கும், ஆதலின் பவவியாதியுண்டாக்கு முபாதி யீதேயென்றது சத்தியம்சத்தியம். ஞாயமுஞ், சோதனையும், அனுபவமுமிருத்தலி னிதனைமறுத்தல்மூடம்.

(க-து) மெய்க்கும்பொய்க்கும் பேதந்தெரியவொட்டாமல் மெய்யே பொய்யாகவும், பொய்யேமெய்யாகவும் காணச்செய்யுமென்பது. (50)

51 - கவி (அ - கை.)

[முன்னர் பொய்யை மெய்யாகக்கோடல்போன்று சீவேஸ்வரர்களைக் கூடஸ்தபிரமமாகக்கோடலிற்பொய்மெய்க்குள்ள பேதந் தெரியவொட்டாமல் மறைக்கத்தக்கது ஆவரண சத்தியென்றுசிரியர்கூற, மாணுக்கனையனே! பொய்க்கும்மெய்க்கு மிடையினின்றென்றிலற்றைமறைக்க, இதனுல் மெய்மறைபடினும், மறைபடாவிடினும், பொய்யங்ஙனமாகாது ஒருபடித்தாநின்று தோற்றற்கு ஏதென்னையோவென வினவ, அதற்குத்தர மிக்கவியில் ஆசிரியர் கூறுகின்றுர்.]

ஆதார மறைந்து போனு லாரோப மெங்கே தோன்று
மாதார மறையா தாயி னுரோப மில்லை யென்று
லாதாரஞ் சமம் விசேட மாமென விரண்டு கூறு
மாதாரஞ் சமமா மெங்கு மாரோபம் விசேடமாமே.

(இ-ள்.) ஆதாரமறைந்துபோனு லாரோபமெங்கேதோன்றும் (எ-து) — ஆதாரமாகிய கூடஸ்தபிரமம், ஆவரணசத்திமறைக்க வதனுல் மறைபடுமாயின், அவ்வதிஷ்டானத்திற் காரோபமாயுள்ள சகமாதிதிரிபதார்த்தங்களு மெங்ஙனம்காணப்படும், காணுமற்போகவேண்டியதே, அதுஞாயம், காணப்படுகின்றதே: — ஆதாரமறையாதாயி னுரோபமில்லையேயென்றுல் (எ-து) — ஒன்று மறைக்க வதனுலாதார மறையமாட்டாதென்பீராகி லப்போதாரோப மறைபடவேண்டுமே, மறைபடாததென்னை? என்று கேட்பையாகில்: — ஆதாரஞ் சமம்விசேடமாமென விரண்டுகூறும் (எ-து) - அதற்காசிரியர் ஆதாரமென்பது; சமமெனவும்,

விசேடமெனவு மிரண்டுகூருநிற்கும்: – ஆதாரஞ் சமமாமெங்கு மாரோபம்விசேடமாமே (எ-து) – ஆதாரமேசமமாதலினச்சமமென்ப தெங்கணும் பரிபூரணமா நிறைந்துள்ள வதிஷ்டானமாம், விசேடமென்ப தேகதேசமாயுள்ள கற்பிதமாம். எ-று.

ஆதாரங்காணுதபோதாதேயங்காணவேண்டுவதின்றே, காண்பானேன்? ஆதாரந்தோன்றும்போதாதேயந்தோன்றவேண்டுவதின்றே, தோன்றுவதென்னை? என்னுங் கேள்வியினபிப்பிராயம்; மெய்ஞ்ஞானம் விளங்காதார்க்குச் சகந்தோற்றுவதும், விளங்கினூர்க்குந் தோற்றுவதுமென்னையென்பது. எனவே, ஆதாரமுண்டாயி னூரோபமுண்மையும், ஆதாரமின்றுயி னூரோபம் காண்கையுமிருத்தலி னுதாரவாதேயமென்னுஞ் சொல்லுக்குப் பொருத்தமெங்கேயென்பதைக் குறிப்பிக்க, இங்ஙனம் வினுவினதாகப் பெற்ரும். அதற்குவிடை கூறப் புகுந்தார்; சூரியனே, கானல், சலமென விரண்டானுற் போல, ஆதாரஞ், சமம், விசேடமாயென விரண்டுகூருமெனவும்; கானலென்னுமுண்மைக்குச் சலம் கற்பிதமாயதெங்ஙனமோ, அங்ஙனமாயதெனக்காட்ட, ஆதாரஞ்சமமாமெங்கு மாரோபம்விசேடமாமேயெனவும் கூறினுர். சமமாதாரமாமெங்கும், விசேடமாரோபமாமெனமுடிக்க. ஆதாரத்தைத் தவிரச் சமம்விசேடமின்றெனக்காட்ட விங்ஙனம் கூற வந்ததன்றி வேறன்றென்க. மெய்ம்மையென்றுலகைக்கருதிக் கடாவல் தவிர்தியெனச்சொல்லாதுசொல்ல விவ்விடைதந்தனர், இவையாவும் கற்பிதமெனவிடாது ஆங்காங்கு காட்டிவந்தனராதலினென்க. தனக்கெனச் சொரூபமொன்றிலாத சகசீவபரங்களைச் சத்தெனக்கோடலைத் தவிர்தற் கத்தியாரோபமபவாதம் கூறவந்ததன்றி யிருந்து கூறவந்ததன்று. சுவானுபவமுறையே முற்றியவிடத்தன்றி இவ்வுளவெங்ஙனந் தெரியும்? தூமந்தோற்றியவிடத்துந் தோற்ருவிடத்து அக்கினியிருக்குமாறுபோன்று, ஆரோபந்தோற்றியவிடத்துந் தோற்ருவிடத்தும் ஆதாரமிருக்குமெனவறிக. இதனைத் தினவனுபவத்தில் நம்மிடத்தில் நாமே காணலாம். எங்ஙனமெனில், சகந்தோற்றியபோதுந் தோற்ருதபோதும் ஸ்மரணையிருக்கின்றது, இருப்பதா லேனையவீரவத்தைகளினு நிகழ்வதை யுணருகின்றது. (51)

## 52-கவி (அ – கை)

[முன்னர் சமம் விசேடமென்றதைத் திட்டாந்த தாட்டாந்தங்களினு லிக்கவியில் விளங்கக்கூறுகின்ருர்.]

சகமதி லிதுவென் சுட்டாச் சமானக்கண் மறைந்தி டாது
மிகவுரை கயிறும் பாம்பும் விசேடக்கண் மறைந்து போகும்,

அகமெனுஞ் சமானந் தன்னை யஞ்ஞான மறைத்தி டாது
பகர்வதோர் விசேடஞ் சீவன் பரனெனு மவரை மூடும்.

(இ-ள்.) சகமதி லிதுவென் சுட்டாச் சமானக்கண் மறைந்தி டாது (எ-து)-உலகமெவற்றிலும் யாவராலு மிஃதெனச் சுட்டியறிய-வொண்ணாத சமமாகிறகண், ஒன்றுமறைக்க, அதனால்மறைந்திடாது:- மிகவுரை கயிறுப்பாம்பும் விசேடக்கண் மறைந்துபோகும் (எ-து)— பெரும்பாலு முலகத்தா ரால்வழங்கத்தக்க பழுதையும்பாம்புமாகிற விசேடக்கண், ஒன்று மறைக்க அதனால் மறைந்துபோகும்:-(அதுபோல்) அகமெனுஞ்சமானந்தன்னை யஞ்ஞாமறைத்திடாது (எ-து) — சம-மெனப்படுவதாகிய தானெனும்பொருளை, அஞ்ஞானமென்னு மாவரண மானது மறைக்கமாட்டாது:— பகர்வதோர் விசேடஞ்சீவன் பரனெனும-வரைமூடும் (எ-து) — சொல்லத்தக்கமற்றொன்று விசேடமெனப்படுவ-தாம், அங்ஙனம்விசேடமெனப்படுவதாகிய சீவேஸ்வரர்களை மறைக்-கும். எ-று.

திருஷ்டாந்தத்தில் சமமாக நின்றதூஉம், விசேடமாக நின்றதூ உம்கண்ணே; எங்ஙனமெனில், பழுதைபாம்பாகவும் மீண்டுமது பழுதை யாகவுமாறவில்லை; இதுபார்வையின் பிரதிபலனமேயன்றிவேறன்று. பார்வைபழுதையை யாராய்வதன் முன்னர் பாம்பாகவும், பின்னரன்-றாகவுந் தோன்றியுதியாது? பழுதையன்றே. அஃதிருந்தவண்ணமிருக் கின்றதே, பாம்புண்மையன்றே, பிராந்தியன்றோ; அந்தப்பிராந்தி யறிதலின்கண்ணதோ, சடத்தின்கண்ணதோ, அவ்வெழுச்சி சடத்தின் றர்மமெனில். உணர்தலின்றிய விடத் துண்டாகட்டும், அங்ஙன-மின்றே, யறிதலின்றர்மமே. அன்றெனின் ஞாயம்வேண்டும், இன் றெனின் வாய்பொத்திக்கிடக்கை யுத்தமர்க்கழகு. பாம்பாகப்பிரதி-பலித்ததும், அதனை மெய்யெனக்கண்டதும், கண்டுபயகம்பனுதி-குறிகளா நின்றதும், பின்னர் தெளிந்ததும், அக்குறிகளன்றிநின்றதும், இவ்விருவியப்பு முணர்த்த நின்றதும், பழுதையா, அது சடமன்றோ, ஆதலின்கண்ணேயாம். கண்ணிங்ஙனமாறிற்றோ, இன்றெனின், கண்ணையன்றி யிக்குறிகளுண்டாகட்டும், இன்றெனின், கண்ணுக்-கிரண்டு தர்மமிருக்கின்றன. இத்தனை விகாரமாநின்றதுந்தானே, அஃறுய்ச்சாட்சியாநின்றதுந்தானே, இஃதன்றியும், பொருளல்லதைப் பொருளென்றுணர்ந்ததும், அங்ஙனமுணர்ந்ததாற் பொருளல்லது பொருளாகத் தோற்றுவதும், பின்னர் பொருளைப் பொருளென்றுணர் வதும், அங்ஙன முணர்ந்ததாற் பொருள்பொருளாக விளங்குவதும், உணர்தல்தர்மமாகிய கண்ணையன்றியின்றுமையின் தானே ஞானுஞ்

ஞான மாகநிற்பதும், நிற்கவே யிங்கேதிருக்குதிருசியம் வேறன்று யிற்று; ஆகவே, தானே விகாரமும் நிர்விகாரமுமெனப் பொருடருகின்றது; தரவே, கற்பிதமுஞ் சுயம்புந் தானே யெனப்-பெற்றும்; பெறவே, சமமும், விசேடமும் வேறன்றெனத் தானே-யருத்தாபத்தியாற் குறிக்கநின்றது. தானே பழுதையாகவும் பாம்-பாகவு மாறியக்கண்ணுந் தானங்ஙனமாகாது சாட்சியாநின்றது கண்ணுதலால், அதுபோலப் பொருளல்லவற்றைப் பொருளென் றுணர்தலும், பொருளைப் பொருளென்றுணர்தலும், அறிவாதலா லிந்தவறிவுக்குக் கற்பிதமென்றும், யதார்த்தமென்றும் பெயர்வரலாமே, ஆதலாற் கற்பிதவறிவுக்குச் சீவேஸ்வரரெனவும், எதார்த்தவறிவுக்குக் கூடஸ்தபிரமமெனவும் பெயர்வரத்தகும். திருஷ்டாந்த தாஷ்டாந்தங்-கட்குப் பழுதின்மையை யிவ்வேதுக்களாலுணர்க. கண்ணென்ப துலகத்தையறிதல்பற்றி யறிதற்கருவியுளொன்றென வுலகத்தா ரறிவ-ரேயன்றி, அததுவாதலையும், அங்ஙனமாதலே திரிபுடியாதலையும், இது தானென வறியாதயலெனக்காணலையும், அங்ஙனம் கண்டு விருப்பு வெறுப்புற்றழிதலையும், இன்னுமிவைபோன்ற புடைபெயர்ச்சிகளையும், இவையே பந்தத்துக்கியைந்த தென்பதையும், இது பகிர்முகதிரு ஷ்டியா லாயதென்பதையும், இத்தனையனர்த்தமுமாயது கண்ணு லாதலாலிவையாவுமழிவதும் கண்ணாலேயேயெனச் சகசசமாதியென் றோரருந்தவ மிருக்கின்றதென்பதையும், அஃதகமுக திருஷ்டியாலாவ தென்பதையும், இதனாலாயபயன் துக்காபாவம், கிருதகிர்த்தியம், சர்வகாமாப்திகம், ப்ராப்திப்ராப்யம் என்பவற்றையும் கேட்டுமறியார் பார்த்துமறியார் இவர்களிங்ஙனமாய நிலையதெனக் கண்ணை யெங்-ஙனம் கணிப்பரென்பதுதோன்றச் சகமதிலிதுவென் சுட்டாக் கண்-ணெனவும்; பந்தமுத்திக்கியைந்த புடைபெயர்ச்சி தன்பாலிருப்பினுந் தானங்ஙனமங்ஙனமாவதுபோற் காண்டலேயன்றி மாறுதென்றுமொரு படித்தாயிருத்தலின், சமம், விசேடம் என்பவற்றுள் கண்ணைச்சம மெனவும், அதிஷ்டானமாதலின் மறைந்திடாதெனவும், மாறுந்தகை யதாதலின் கண்ணைவிசேடமெனவும், ஆரோபமாதலின் மறைந்து போகுமெனவும், அதிஷ்டானமு மாரோபமுந் தானேயாதலின் சமானக்கண் விசேடக்கண்ணெனவும், அதுபோலத் தானன்னியமா-காது விளங்குதலின், ப்ரக்ஞையைக் கூடஸ்த பிரமமென்பார், அக-மெனுஞ் சமானமெனவும்; அவித்தியாமாயா ரகிதமாதலின், அஞ்ஞான மறைத்திடாதெனவும், தானன்னியமாகவிளங்கலின், ப்ரக்ஞையைச் சீவேசரென்பார், விசேடஞ் சீவன்பரனெனவும்; அவித்தியாமாயா சகிதமாதலின், அவரையஞ்ஞான மூடுமெனவும் கூறினர். இவ்

வுரையை யுத்தமர்மறுக்கார், சோதனைஞாயத்தாற் புகட்டலினென்க. இங்கேயஞ்ஞானமென்றது ஆவரணத்தை. இக்கவியில் திருஷ்டாந்தஞ் சமம்விசேடமெனவும், தாஷ்டாந்தஞ் சமம் விசேடமெனவு மிருகூறதா நிற்கும். முன்கவியில், விசேடமாரோபமென்றதனால் சமம்·அதிஷ்டான மென்றாயிற்று. அறிவே யதிஷ்டானம் ஆரோபமெனக்காட்டக் கண்ணே யதிஷ்டானம் ஆரோபமெனக் குறிப்பித்தார். (52)

## 53-கவி. (அ - கை)

[உண்மைவிளங்கவொட்டாமல் மறைப்பது விக்ஷேபசத்தியா யிருக்க, ஆவரணசத்தியின்மே லிப்பழியையேற்றியது யாது பற்றியோவென, மாணாக்கன் வினவுவதை யிக்கவியிற் கூறுகின்றார்]

கேவல நிலைதோன் றாமற் கெடுத்தது பஞ்ச கோசஞ்
சீவனுஞ் சகத்து மாகச் செனித்தவி க்ஷேப மன்றோ
ஆவர ணந்தா னேபா முநர்த்தமென் றுரைத்த தேதோ
மேவருங் குருவே யென்று வினாவிய மகனே கேளாய்.

(இ·ள்) கேவல நிலைதோன்றாமற் கெடுத்தது (எ·து) — நிரதிசயானந்த வாழ்வு, விளங்கவொட்டாமல் மறைத்துக்கெடுத்தது:— பஞ்சகோசஞ் சீவனுஞ் சகத்துமாகச் செனித்தவிக்ஷேபமன்றோ (எ-து) —பஞ்சகோசமாகவும், சீவனாகவும், செகத்தகாவுமுண்டான விக்ஷேப சத்தியல்லவா, இங்ஙனமிருக்க: — ஆவரணந்தானேபா முநர்த்தமென் றுரைத்ததேதோ (எ-து) — ஆவரணசத்தியேபாழென்றும் அனர்த்தரூப மென்றும் கூறியது யாதுபற்றியோ:—மேவருங் குருவேயென்று வினாவிய மகனே கேளாய் (எ-து) — கிடைத்தற்கரியகுருநாதனே யிதனை விளக்கவேண்டுமென் றிரந்துவினாவினவனை நோக்கி ஞானபுத்திரா யான்கூறக் கேளுதி. எ-று.

தானேதானாக விளங்குவதைக் கேவலநிலையென்றார். கெடுத்த தென்பதை மறைப்பர்ற்கெடுத்ததாகலின் மறைப்புவருவித்தாம். விக்ஷேபசத்தியின் சேட்டை, கேவலநிலை தோன்றாமற்கெடுப்பதும், அதனதுநிலை; பஞ்சகோசஞ் சீவனுஞ் சகத்துமாகச் செனிப்பது. அனர்த்தம், தனக்கென்ச்சொரூப மொன்றில்லாதது. நமதுண்மை வடிவை விளங்கவொட்டாமலு மதையுன்னவொட்டாமலு மறைக்க நின்றது. கோசமுஞ் சீவனுஞ் செகத்தும் பிரத்தியட்சமாதலினானும், இவைமயமாநின்றது, விக்ஷேபமாதலினானும் விக்ஷேபத்தின்மேல் வைத்துப் பழிகூறினான். ஆனந்தமயகோசத்தைப் பற்றி மற்ற நான்குகோசமு மிருத்தலினானும், இனம்பற்றி யிருத்தலினானு மிங்கே

கோசமைந்தெனவும், விக்ஷேபசத்தியன்றேனும் பஞ்சகோச ஆதர வினிற்றலி னிதுபற்றிச் சீவனெனவுங் கூறினர். இது வழுவன்று. (53)

54 - கவி (அ — கை)

[செனனத்துக் கனுகூலமாயினு முத்திக்கு மனுகூலமாயிருப்ப தன்றேவிக்ஷேபசத்தி: ஆவரணசத்தி யங்ஙனமன்றே, செனனத்துக்கே யிடமாயதென விக்கவியிற் கூறுகின்றார் ]

தோற்றமாஞ் சத்தி தானே துன்பமாம் பவமா னாலு
மாற்றலான் முத்தி சேர்வார்க் கனுகூல சகாய மாகு
மூற்றமாம் பகற்கா லம்போ லுபகார நிசியி லுண்டோ
மாற்றமென் னுரைப்பேன் மைந்தா மறைப்பது மிகப்பொல் லாதே.

(இ-ள்) தோற்றமாஞ் சத்திதானே துன்பமாம் பவமானாலும் (எ-து) — விக்ஷேபசத்தியே துக்கரூபமாகிய செனனத்துக்கியைந்தகருவி யாயினும் :— ஆற்றலான் முத்தி சேர்வார்க் கனுகூலசகாயமாகும் (எ-து) — நிட்காமியவலி யாலெக்கியமுத்தியடைபவர்க் கியைந்தசகாய மாகவு மிருக்கும்: — ஊற்றமாம் பகற்காலம்போ லுபகாரநிசியினுண் டோ (எ-து) — தெளிவுக்கிடமாகிய பகற்காலத்தைப்போல வுபகார மிராக்காலத்திலுண்டா :— மாற்றமென்னுரைப் பேன்மைந்தா மறைப் பது மிகப்பொல்லாதே (எ-து) அந்தப்பகைமையைக் குறித் தென்ன சொல்லுவன் ஞானபுத்திரா, அறிவை மறைப்பதே யியல்பாகவுடைய ஆவரணசத்தியானது யாதினு மிகக்கொடியது எ-று.

விக்ஷேபசத்தியைவிடப் பவம்வேறன்றெனத்தோன்றத் தேற்றே காரந்தந்தனர். பவத்துக்கியல்பு துன்பமெனலைத் துன்பமாம்பவ மென்றார். அறிவென்பதேவிக்ஷேபம் அறியாமையென்பதே ஆவரண மெனக்குறிக்க, பகற்காலமெனவும் நிசியெனவு முவமானித்தார். ஒன்றையொன்றாவுணர்தல் விக்ஷேபம், அதனை லொன்றுமற்றென்றாகத் தோற்றல் ஆவரணம், உணருந்தகையதாதலி னெய்ப்பூழிப் பொருளைப் பொருளென வுணரினுமுணரும், உணர்வதாற் றக்கநிவிர்த்தியுந் தடையற்ற வானநதமுந்தரும், அங்ஙனந்தரலே முத்தியாதலால் விக்ஷேபசத்தி முத்தியடைவார்க் கனுகூலசகாய மாகுமென்று ரஃதுண்மை. ஆவரண மங்ஙனமாகாதென்பதற்குமாறென்னே? இவை யெல்லாந்தன்னையுமுலகையும் விசாரிக்கத்தக்கவாறு விசாரிப்பார்க்கே தெரியுமன்றி யேனையோ ரெத்திறத்தராயினு மவர்க் கெங்ஙனம் விளங்கும், விளங்குமெனச் செருக்குறினு மிழுக்குறுவர். உலகம் மெய்மைபோற்றோற்றலி னாவரணமாம் இவ்வுலகம் மெய்மையென மயக்காததெவரை? இன்றாதலி னெங்ஙன முண்மையை விளக்கும்; விளக்கற்பால தன்றாமையின், உயிர்களெங்ஙன

முய்யும், உய்தற்கிடமின்மையின் மறைப்பதுமிகப்பொல்லாதேயென்ருர். ஒன்றுமற்ருென்ருத்தோற்றல், ஸ்மரணைசெகத்தாகத்தோற்றலை. இதனையறியார், மதஸ்தராதலின் அனுதிநித்தியமென்பர், படைப்பென்பர். சுபாவமென்பர், தமக்குப் போகசாதன வஸ்துவென்பர், இன்னு மிவைபோல்வனவாகக் குழறிவழிந்துவழக்கிடுவர். இங்ஙனமாகாது ஸ்மரணையாக வுலகைக்கண்டு களித்திருப்பவன் வேதாந்தியொருவனே, அவனேஞானி. ஏனையர் தத்தமையே ஞானியரெனக் கொள்ளினும் அஞ்ஞானியரே. (54)

55 - கவி (அ கை)

[ஆவரணமென்னல் தேகமும் பிரபஞ்சமுமென்ருல் பிராரத்த முடிவிலும் சலப்பிரளயாந்தத்திலும் அழியுமன்ருே; அழியின் அதுமுத்தியன்ருே? முத்தியாயின் விக்ஷேபசத்தியால்யாது பயனென ஆசங்கித்ததுபோலத் தானே யாசங்கித்து அதற்கு விடையிக்கவியில் தானே கூறுகின்ருர்].

சுழுத்தியிற் பிரள யத்திற் ருேற்றமாஞ் சகங்கண் மாண்டு
மழுத்திய பவம்போய் முத்தி யடைந்தபே ரொருவ ருண்டோ
முழுத்தவி க்ஷேப மெல்லா முத்தியிற் கூட்டு கிற்குங்
கொழுத்தவா வரண முத்தி கூடாமற் கெடுத்த கேடே.

(இ-ள்) சுழுத்தியிற் பிரளயத்திற் ருேற்றமாஞ்சகங்கண்மாண்டும் (எ-து) தினசுழுத்தியிலும், சலப்பிரளயத்திலும் தோற்றன்மாத்திரமாவுள்ள தேகமுதலிய சமஸ்தபிரபஞ்சங்களும் மாண்டவிடத்தும்:—அழுத்தியபவம் போய்முத்தி யடைந்தபேரொருவருண்டோ (எ—து)—அவித்தையிற் பதித்திருக்கின்ற. சென்னசஞ்சிதங்கள்நசித்து முத்தியடைந்தவர்கள் யாவராயினு மொருவருளரோ விலரே:—முழுத்த விக்ஷேபமெல்லா முத்தியிற்கூட்டுகிற்கும் (எ-து)—தாமதமென்னு முழுக்குணத்ததாகிய விக்ஷேபத்தி பாகமனைத்தும் முத்தியிற்கூடும்படி செய்யும்:—கொழுத்தவாவரணமுத்தி கூடாமற்கெடுத்தகேடே (எ-து) —மூடத்தன்மையில்மதர்த்த ஆவரணசத்தியானது முத்தியிற்கூடாமற் கெடுத்தகேடிதுவாம். எ-று.

தேகத்துக்குப் பிராரத்தமுடிவுகாலஞ் சேய்மையாதலின் அணிமை பற்றிச் சுழுத்தியெனவும், செகத்துக்குப் பிரளயம் பலவற்ருலாதலின் பொதுப் படப்பிரளயமெனவும், சுயம்பாகவொன்றிலாமையிற் ருேற்றமாஞ்சகங்களெனவும், கணமேனுங் காணுமற்போதலால் மாண்டெனவும், இழிவுசிறப்பும்மையென்பதுதோன்ற மாண்டுமெனவும், எதிர்மறையெனக்காட்டவுண்டோவெனவும், கரணமைந்தும், பொறியைந்

தும், இன்னுமிவைபோல்வன பிறவுமாதலின் விக்ஷேபமெல்லாமெனவும், இவற்றாற் சற்கருமந்திரிகரண மொத்துப்புரிபவ ரெங்குமுளராதலினாலும், இம்முயற்சி விக்ஷேபசத்தியின் புடைபெயர்ச்சியாதலினாலும் முத்திமிற் கூட்டுகிற்குமெனவும், முன்னரே ஆவரணசத்தியினையதென்றும், அதனாலுற்றுணரு மிடத்தில் முத்திதருதற்கியைந்ததன்றாமையின், முத்திகூடாமற்கெடுத்தகேடே யெனவுங்கூறினர். பிரளயமுண்டென்பதற் கடையாளம், பூமியைத் தோண்டிக்கொண்டுபுகுந் தோறும் வெங்காயப்புரைக ளுரிக்கவுரிக்க அடுக்கடுக்காயிருக்குமாறுபோன்றிருத்தலானும், ஆங்காங்குபற்பல விநோதங்களிருத்தலினாலும், சர்வமத சாஸ்திரிகளும் மறுத்தற்கிடமின்மையினாலும், சலப்பிரளய மாங்காங்குவரக் கண்டுகொண்டிருப்பமாதலினாலும் ஏற்றற்கையமின்றெனவுணர்க. தேகாதிப்பிரபஞ்சநாசமே முத்தியென்பாரை மறுத்தது (55)

56 - கவி (அ · கை)

[ஆவரணம்போலன்றி முத்திக்குமியைந்தது விக்ஷேபசத்தியென்றீர், இதுவு முன்னர்மித்தையென்றீர், இதுகாரணமாவருமுத்தியு மித்தையாமன்றோவெனத் தானேயாசங்கித்து விடை தானேயிக்கவியிற் கூறுகின்றார் ]

சுத்தியில் வெள்ளி போலத் தோன்றிய தோற்ற மான
சத்தியும் பொய்யே யென்றாற் சத்திசா தனமா வந்த
முத்தியும் பொய்யா மென்னின் மோகநித் திரைவி லங்கா
னித்திரை தெளியு மாபோ னிருவாண நிலைமெய் யாமே.

(இ-ள்) சுத்தியில்வெள்ளிபோலத் தோன்றிய தோற்றமான சத்தியும் பொய்யேயென்றால் (எ-து) – கிளிஞ்சலில் தோற்றிய வெள்ளிப்பிராந்தி யெங்ஙனம்பொய்யோ அதுபோலச் சைதன்னியத்தில் மித்தையாகத்தோற்றிய விக்ஷேபத்தியும், பொய்யாகுமேயானால் :—சத்திசாதனமாவந்த முத்தியும்பொய்யாமென்னின் (எ-து) – அந்த விசேக்ஷபசத்திகாரணமாவந்த மோக்ஷமும் பொய்யாகுமல்லவாவெனக் கேட்பையாயின்:– மோகநித்திரை விலங்கா னித்திரை தெளியுமாபோ னிருவாணநிலை மெய்யாமே (எ-து) – மயக்கமான சொப்பனசிங்கங்காண அச்சிங்கத்தினா லக்கணமே யந்நித்ரைநீங்கித் தெளியுமாறுபோன்று, அச்சத்தியாலுண்டாய முத்தியுஞ்சத்தியமாம். எ-று.

அதற்குக் கூறியவுடை சொப்பனம் பொய்யாயினு மதிலெழுந்த சிங்கமும்பொய்யே யதுவிழிக்கச்செய்ததுபோல விக்ஷேபசத்தியுஞ் சிரவணமனனாதிகளா னிறைத்துச் சாட்சாத்காரம் விளங்கச்செய்ய,

அவ்விளக்கமே தீர்க்கசொப்பனசகந் தெளியச்செய்தலி னிங்ஙனங் கூறியதே தகுமெனவுணர்க. மானதம் விக்ஷேபசத்தியாதலானும், அந்தமானதம் விஸ்மரணையாதலானும், அந்தவிஸ்மரணை யன்னி தாக்கர்த் தத்துவமாதலானும், விடயமே பயனாகநுகர்தலானும், இதற்குக்காலவரையறை யின்றுதலானும், பிறப்பிறப்பு, துன்பவின்பம், மாருக்கவலை, ஒழியாச்சஞ்சலம், தணியாவவா, முதலியவிவற்றையே விநோதமாகக்கொள்ள வியற்கையாக வரையின்றியவூழ் நிகழ்வ-தானும், இவையாவு மதோமுகத்ததலானும், இதனுக்கியைந்தது காமியத்தவமாதலானும், இவற்றிற்சலிப்புறுவ தரிதாதலினானும், தேவகதியா லோர்போதிதுநேரிடினு மந்தர்முக திருஷ்டி யினைய தென்றறியா ததினு னீடூழிநில்லாதுமாறும், இங்ஙனநேரிடுவது மீண்டுமாறுவதுங் கணக்கின்றிநிகழும், நிகழ்வுழி யிஃதென்னைகொலோ? இங்ஙனம் பலதரமாயினுமேயெனச் சற்றெண்ணம்வரும், அந்த வெண்ணமும் விடயப்பாக்கான் மாறும், மாருமலிருத்தற் குபரதி பூணவரும், அதுவும் பிறவிமாறமாறும், மாரினும் பூர்வசென்ம சமஸ்காரமாதலால் சற்றேநினைவுவரும், வரினத்தவக்குறையினின் றெடுத்தாளவரும், அதுமேலிட்டால், வைராக்கியம வரும், அதுவும் பிறப்பு மாறுவதால் மாறி மாறி முடிவு னிலையுறும், இது மேலிட்டால் ஞானத்திற் சற்றே விசாரமுறும், அதுவும பிறப்பு மாறமாற நழுவி நழுவி யெத்தனையோ சென்மாந்தத்தில் நிலையுறும். அதுவும் சிரவணம் மனனம், நிதித்தியாசனம், சமாதி, சாட்சாத்காரம், என வைந்து பாகமாம். இவற்று ளொவ்வொன்று மனந்தபிறவிகளி னிலைத்தலரிது, இவ்வைந்தும் வாய்க்கினும், சகசசமாதி கைகூடலரிது, இது கை கூடல்வரையு மெத்தனையோ சென்மங்கள் வந்து வந்து போகும், கைகூடினும் சொருப சமாதியுஞ் சகசசமாதியு மேகமாதலரிது, அதுவு மெத்தனையோ பிறவிகளில் கைகூடலரிது, அங்ஙனங் கைகூடலன்றே முத்தி; இம்முறையாக வரற்பால தாதலினானும் விக்ஷேபமாகிய மானதம் முத்தியிற் கூட்டுகிற்குமென முன்கவியிற் கூறினர்; அதனை நிலையுறுத்த விக்கவியினு மிங்ஙனங் கூறினுரென்பதி லையுமென்னை? பொய்யே மெய்யை விளக்குவிக்கு மென்றதற் கெடுத்துக்காட்டிய வுவமானத்திற் பழுதென்னை? ஞாயுஞ், சோதனை, பொருத்தம், இனைய வெனக் கேட்டறியாத ஏட்டுஞானிகளாற் பழுதுறினது பழுதன்று. இதனைச் சிந்தித்துத் தெளிக மயங்கற்கவென்பார் நிருவாண நிலை மெய்யுரமேயென்றுர். இங்கே சிங்கமென்றது, விருத்திஞானத்தை. நிர்வாண நிலையென்றது, ஞானஞ்ஞானரகித நிலையை. என்னை? "வாலமதி யூகமதி போன்ஞான வஞ்ஞானக் காலமுநாங்கண்டு கழித்

தோமே'' என்றார் சொருபஞானதேசிகர். கந்தரனுபூதியில், ''குறியைக் குறியாதுகுறித் தறியு'' மென்னுங் கவியில் ''அறிவற் றறியாமையுமற் றதுவே'' யென்றா ரருணகிரிநாதர்.

(க-து.) பொய்மையைப் பொய்யாற் கெடுக்கலாமென்பது (56)

57 கவி (அ-கை)

[பொய்மையைப் பொய்யாற் கெடுக்கலாமென்றதை வலியுறுத்த இன்னுந் திருஷ்டாந்த தாஷ்டாந்தங்களை யிக்கவியிற் கூறுகிறார்.]

இப்பரி னஞ்சை நஞ்சா லிரும்பினை யிரும்பா லெய்யு
மம்பினை யம்பாற் பற்று மழுக்கினை யழுக்கான் மாய்ப்பர்
வம்பியன் மாயை தன்னை மாயையான் மாய்ப்பர் பின்னைத்
தம்பமா மதுவுங் கூடச் சவஞ்சுடு தடிபோற் போமே.

(இ-ள்) இம்பரினஞ்சை நஞ்சா லிருந்பினை யிரும்பா லெய்யும், அம்பினை யம்பாற் பற்று மழுக்கினை யழுக்கான் மாய்ப்பர் (எ-து)—இவ்வுலகத்தில் விஷத்தை விஷத்தினாலும், இரும்பை யிரும்பினாலும், பிரயோகிக்கின்ற அம்பை யம்பினாலும், படிந்த வழுக்கை யழுக்காலு மாய்த்துவிடுவர். (அதுபோல):—வம்பியன் மாயை தன்னை மாயையான் மாய்ப்பர் (எ-து) - நிலையின்மையையே யியல்பாகவுடைய மாயையென்பதை நிலைமையையேயியல்பாக வுடைய மாயை யென்பதினாற் கெடுப்பர்:—பின்னைத் தம்பமா மதுவுங் கூடச் சவஞ்சுடு தடிபோற் போமே (எ-து)— அங்ஙன மாய்த்த பின்னர் நிலையான வந்த மாயையும் நிலையற்ற மாயையோ டொக்கப் பிரேதத்தைத் தகிக்கச் செய்கின்ற தடியு முடிவி லப்பிரேதத்தோ டொக்க நீருவதெங்ஙனமோ வங்ஙன நாசமாம். எ-று.

விஷத்தை விஷத்தாற் கொல்லல், இரும்பை யிரும்பா லறுத்தல், அம்பை யம்பாற் றடுத்தல், அழுக்கை யழுக்காற் கெடுத்தல், என்னும் அததற்குரிய சிறப்புவினைகளை மாய்த்தலென்னும்பொதுவினையான் முடித்தது, விதிபற்றி யென்க. என்னை, ''வேறுவினைப் பல்பொரு டழுவிய பொதுச்சொலும், வேறவற் றெண்ணுமோர் பொதுவினை வேண்டும்''. என்றார் பவணந்தி. வம்பென்பதற்கு ஒழுங்கின்மை யெனப்பொருடந்து கூறினுமமையும். ஒழுங்கின்மையாவது; பொருளல்லவற்றைப் பொருளாகக்கோடல். இதனாலசுத்தமாயையென்வும், ஒழுங்கின்மையென்றதனா லொழுங்குண்மையெனக் கொள்ளக்கிடந்தது. அஃதாவது; பொருளைப் பொருளாகக்கோடல். இதனாற் சுத்தமாயை

யெனவும் பொருடர நின்றது நிற்கவே, விக்ஷேபமானதமென்ருயிற்று; ஆகவே, மானதம் மாயாகாரியமாயினு மிங்கே காரியத்தைக் காரண மாக வுபசரித்துச் சுத்த மசுத்தமென விரண்டாக்கிக் கூறியதாகப் பெற்ரும் மாயையென்பது; புத்திவிகற்பமே மாயையாதலி னசுத்த மெனவும், நிர்விகற்பமே யஃதல்லாமையிற் சுத்தமெனவும் காணக் கூறினுர். ஒன்றை யொன்ருக்கொள்வது, மனதாதலா லந்தமனதே யுள்ளதை யுள்ளதாகக் கொள்ளுமன்ரே; இதனுல் மனதுக்குப் பகிர்முக திருஷ்டி யந்தர்முகதிருஷ்டி யெனப்பெற்ரும்; பெறவே, பகிர்முக திருஷ்டியை யந்தர்முக திருஷ்டியாற் கெடுத்தது மனமாதலாலும், மனதையன்றி இக்கிரியை யில்லாமையாலும், இக்கிரியையை வினை முதலாக்கி "மனத்தை யடக்க மனந்துணையாகு" மென்ருர் சான்ரேர் பலரும். அதுபோலவே யிந்நூலாசிரியரு மதற்கியைந்த உபமானங் களாலே அக்கருத்தையே கூறினதாகக் கண்டாம். தனது புடை பெயர்ச்சி பேதத்தாற் ருனிரண்டெனப் பட்டதேயன்றி வேருேர் காரணத்தா லன்ருமையின் மனதொன்றேயாம். எங்ஙனமெனில்; ஒருவனுக்கே, துஷ்டனென்றும் பின்னர் யோக்கியனென்றும் வந்தது, அவனது சேட்டையாலன்றி அவனிரண்டல்லன். அக்கிரியையால், துஷ்டன் யோக்கியனென் றிவனுக் கெங்ஙனமாயிற்ருே; அதுபோல மனதுக்கும் வந்ததென வுணர்க. இங்ஙன முறைகாணுதா ரெங்ஙனந் தெளிவர். இது ஒருவன் தன்னைத்தானே யோக்கியனுகத் திருத்திக் கொண்டாற்போலும். ஆதலின் மாயை தன்னை மாயையால் மாய்ப்ப ரெனவும், பொருளல்லவற்றைப் பொருளெனவுணர்தல், மயக்கம். பொருளைப் பொருளென்வுணர்தல், தெளிவு. மயக்கத்தைக் கெடுக்க வெழுந்தது தெளிவாதலா லதுமாய்ந்தபின்னர் தானு மொக்க மாயு மன்ரே; அதுபற்றித் தம்பமா மதுவுங்கூடச் சவஞ்சுடு தடிபோற் போமே யெனவுங் கூறினுர். மருளுந் தெருளுந் தானல்ல, தன்னைத் தவிரவு மில்லை. தெருணசித்தவிடத்துந் தானசியாததா லதனைச் சூனியமென் றெண்ணற்க. இந்நிலை தானேதானுக்கற்கென வுணர்க. அஞ்ஞானமே தானேன் றிருந்தாற்போல, ஞானமே தானென்றிருந் தால் தானுகுமா, இரண்டுந் தானல்லவெனக் குறிக்க விங்ஙனங் கூறினுர். இது மனனத்தாலன்றித் தெளிவுபெறச் செய்யாது. இதைப் பதவுரையாக வாசிச் தென்பயன்? சொல் வெள்ளை, விடயம் வெள்ளை யோ ஆழமாதலி னெனவுணர்க. (57)

## 58-கவி (அ—கை)

[இவ்விரு மாயையுஞ் சீவர்களிடத் திருப்பதைக் காட்டச் சத்தாவத்தைகளைத் தொகையாக இக்கவியிற்

கூறுகின்றார்.]

இந்தமா யையினாற் சீவர்க் கேழவத் தைகளுண் டாகு
மந்தவே ழவத்தை தம்மை யடைவினின் மொழியக் கேளாய்
முந்தவஞ் ஞான மூடன் முளைத்தல்கா ணாத ஞானஞ்
சந்ததங் கண்ட ஞானந் தழல்கெடல் குளிர்மை யாதல்.

(இ-ள்) இந்த மாயையினாற் சீவாக் கேழவத்தைகளுண்டாகும் (எ-து)-சுத்த மசுத்தமெனக்கூறிய விவ்விருமாயையினால், சீவர்களுக் கேழவத்தைகளுண்டாகும்:— அந்தவேழவத்தை தம்மை யடைவினின் மொழியக்கேளாய் (எ-து)—அந்த வேழவத்தைகளேயுங் கிரமமாக யாங் கூறக்கேளுதி:—(அவை) முந்தவஞ் ஞான மூடன் முளைத்தல் காணாத ஞானஞ் சந்ததங் கண்ட ஞானந் தழல்கெடல் குளிர்மையாதல் (எ-து)—முதலிலுள்ள அஞ்ஞானமும், ஆவரணமும், விக்ஷேபமும், பரோட்சமும், அபரோட்சமும், துக்கநிவிர்த்தியும், தடையற்ற வானந்தமுமாம். எ-று.

அஞ்ஞானம், ஆவரணம், விக்ஷேப மிவைமூன்று மசுத்தமாயை. பரோட்சம், அபரோட்சம், துக்கநிவிர்த்தி, தடையற்றவானந்தம் இவை நான்குஞ் சுத்தமாயை. அவைமூன்று மசுத்தத்துக்கியல்பு. இவை நான்குஞ் சுத்தத்துக் கியல்பு. அசுத்தம், பந்தம், சுத்தம், முத்தி. எனவே, இவ்விரு தகையாயதும் மாயையென லேற்கப் பெற்றும். வரம்புடையது, வேதாந்தம் ஏனைய, பிற.

59 கவி (அ - கை.)

[அவ்வவத்தைகளே, வகையாகக் கூறப்புகுந்தார் இக்கவியில் அஞ்ஞானமுதல் பரோட்ச மீறுயுள்ள நான்கினேயும் கூறுகின்றார்.]

பிரமமாந் தனைம றந்த பேதமை யேயஞ் ஞானம்
பரநிலை காணே னென்று புகர்தலா வரண மூட
னாரொரு கருத்தாற் சீவ னானென முளைத்த ரேற்றங்
குரவன்வாக் கியத்தாற் றன்னைக் குறிக்கொளல் பரோட்ச ஞானம்.

(இ-ள்) பிரமமாந் தனை மறந்தபேதமையே யஞ்ஞானம் (எ-து) —பிரம ஸ்வரூபமாகிய தன்னை மறந்த மறதியே யஞ்ஞானமெனப் படுவதாம்:—பரநிலை காணே னென்று புகர்தலா வரண மூடல் (எ-து) —பிரமசொருபத்தினிலை யெங்ஙனமாயதோ வதனைக் கண்டிலமே யிருந்தாற் காணாதானெனக் கூறுதல் ஆவரணமெனப்படுவதாம்:—

நரனொரு கருத்தாற் சீவ னெனமுளைத்த ரேற்றம் (எ-து)—புருடனோர்வித நினைவாற் சீவனே நானெனக்கோடல் விக்ஷேபசத்தியெனப் படுவதாம்:—குரவன்வாக்கியத்தாற் றன்னைக் குறிக்கொளல் பரோட்ச ஞானம் (எ-து)-ஞானாசிரியரதுபதேசமொழியால் தனதுண்மை வடிவ மினைய தெனக்குறியாது குறித்துக் கோடல் பரோட்ச ஞான மெனப்படுவதாம். எ-று.

சைதன்யத்தை யன்றித் தனக்கோர் சொரூபமின்மையின் பிரமமாந்தனையெனவும், நாஸ்தி நபாதி யென்பது தோன்றப் பரநிலை காணோ மென்று பகர்தலெனவும், இங்கே நரனென்பது புருடன் புருடனென்பது; உடல்தோறு நின்றுணர்வான். அவன் தேகமன்று தேகி. அவனுக் கெவ்வுடலுஞ் சுதந்தரமன்று, ஆதலிற் பிரத்தி யேகாத்மா. இவ்வாத்மா, உணர்தல் தகையதாதலி னறிவு. இவ்வறிவே புருடசத்தத்துக் கியைந்ததன்றி வேறுபொருளன்மையி னிதுமறுக்கற்பாற்றன்று காரணத்தானென்னு மாகுபெயர் போல்வதின் மனிதனெனக் கோடற்கவென்பார், நரனெனவும், இந்த வறிவாகிய புருடன் தன்னை மறந்துழிச் சார்பினையதெனத் தெரியாது தத்தளிக் குங்கா லிது நானெனற்குத் தூலதேகம் நேரிட்டதா லிதனைக் கோடல் சீவனெனவும், இஃதோ ரவசரமாதலி னொருகருத்தாலெனவும், நிய திகளைந்த விடத்தி லாசிரியர் நீயறிவென் றுணர்த்த லுபதேசமாயினு மின்னும் விளங்காமையிற் பரோட்சமெனவுங் கூறினார்.

(க-து.) தன்னை மறந்தபேதமை யஞ்ஞானம். அப்பேதமையை மறந்தபேதமை, ஆவரணம். அப்பேதமைகளைக் கெடுத்தற் கொருவாறு தனக்கு ளெழுந்த மூடஸ்புரிப்பு, விக்ஷேபம். இதனை விளக்கக் குருவா லெழுந்த விசாரஸ்புரிப்பு, பரோட்சம். எ-று. (59)

60 கவி. (அ—கை.)

[ஏனைய வபரோட்சம் துக்கநிவிர்த்தி தடையற்ற
வானந்தமென்னு மூன்றையு மிக்கவியிற்
கூறுகின்றார்.]

தத்துவ விசாரஞ் செய்து சகலசந் தேக மும்போ
யத்துவி தந்தா னாத லபரோக்ஷ ஞான மாகுங்
கர்த்தனுஞ் சீவ பேதங் கழிவதே துக்கம் போதன்
முத்தனா யெல்லாஞ் செய்து முடிந்ததா னந்த மாமே.

(இ-ள்.) தத்துவ விசாரஞ் செய்து சகலசந்தேகமும்போய் அத்துவிதந்தானாத லபரோக்ஷ ஞான மாகும் (எ-து)—தத்தெனல் யாது, துவமெனல்யாதெனச் சிரவண மனனாதிகளாற் றக்கோர்பால்

விசாரணைசெய்து அவ்வவற்றிலுள்ள சகலசந்தேகமு நீங்கி அசியென்னும் பதத்தினுலத்துவிதமாகிய ஐக்கியநிலை தானுகவிளக்கல் அபரோக்ஷஞான மெனப்படுவதாம்:—கர்த்தனுஞ் சீவபேதங்கழிவதே துக்கம் போதல் (எ-து)—தானலதைத் தானெனற்குக் கர்த்தத்துவமுநின்றுள்ள சீவ னனந்தபேத சராசரமாக்காண்டலின் அந்தச்சீவபேதங்க ளொக்க நசித்தலே துக்கநிவிர்த்தி யெனப்படுவதாம்:—முத்தனு யெல்லாஞ் செய்து முடிந்ததா னந்த மாமே (எ-து)—சீவன் முத்தனுய் ஞானுஞ் ஞான சாதனக்கிரியைக ளனைத்தையுஞ் செய்து முழிந்ததே தடையற்றவானந்த மெனப்படுவதாம், எ-று.

நிருபாதிகமாக, தத்—அது; துவம்—நீ; யெனப்பிரித்து, அசி—ஆனுய் எனக்கொண்டு அவ்விருபதங்கட்குமிடையில் தோற்றேகாரம் வருவித்து, அது-பரம்; நீ-சீவன் என்றாக்கி, பரமே சீவன்; சீவனே பரம் என்றைக்கியங்கோடற்கு ஆனுயென்பதனை யிவற்றேடு சேர்த்து, அதுவே நீயானுய், நீயே அதுவானுயெனத் தெளிந்து தான் துவிதமற விளங்கலே, அபரோக்ஷஞான மெனவும், அவ்விளக்க மேலிட மேலிடப் பழய வாசனுத்துவிதங்களணு வணுவாக் கழியும். கழியவே. சமஸ்தமுஞ் சின்மாத்திரமாக விளங்கும் விளங்கவே, அன்னியமென்ப திறந்துபோம், இறக்கவே, திணைபாலிடமெனற்கிட மின்றாம் இன்றாகவே, காமாதிகளின்றாம். இன்றாகவே மானத மென்பதின்றாம், இன்றாகவே, யாதொரு துக்கமு மெங்ஙனமெழும் எழுதற் கிடமின்மையைத் துக்கம்போதலெனவும், அந்தத்துக்கநிவிர்த்தி மேலிட மேலிட அஷ்டவிதானந்தத்துள் ஒவ்வொன்று அனுபவத்துக்கியைந்த அவசரவாறு தோன்றித் தோன்றி யடங்கும். அடங்கவே, இத்தடைகளிறந்த வானந்தமதாம். ஆகவே, தானே சச்சிதானந்தமாம். இங்ஙனமாதலே யானந்தமாமெனவுங் கூறினர். இரட்டுறமொழிதலென்னுமுத்தியால் தத்துவம், உண்மை. ஞானத்தைத்தவிர வுண்மை யெங்கணு மின்றாதலால், தத்துவமெனற்கு ஞானமெனப் பொருள் கொண் டிக்கவிக் குரைசெயின் முரணுதமையும். ஈசனென்பதற்குச் சீவன் வேறாதலின், சீவன், ஈசனெனப் பேதங் கற்பித்தற்குச்சீவபேதமென்றா ரெனினுமையும் எல்லாஞ்செய்து முடிந்ததெனக்கவியிருத்தலி னதனை யானந்தமென்பற்கு விசேடணமாக்கி, முத்தனென்பதற்குக் கிருதகிர்த்தியனெனப பொருளிருப்பினு மங்ஙனங்கூறுதல் கூறியது கூறலென்னுங் குற்றமாம் அங்ஙனம் வராமைக்குச் சீவன் முத்தனெனப் பொருடந்தாம்.

(க-து.) அங்ஙன்மெழுந்த விசர்ரஸ்புரிப்பே சொப்பிரகாசமிக் விளங்கல், அபரோக்ஷம். அங்ஙனமெழுந்த விளக்கமேலீட்டால் பசுபதி பாசஞ்சின்மாத்திரமாக விளங்கும். விளங்கவே, மனோவிர்த்திக் கிடமின்றும் இன்றுதலே, துக்கநிவிர்த்தி. இந்தத் துக்கநிவிர்த்தியே யளவிலின்பமாதலி னிது வே தடையற்றவானந்தம் என்பது. வியட்டியுபாதி யளவாத் தன்னைக்காண்டல், சீவபேத மெனினு மமையும் என்னை? ''பொன்று முடம்பள வாகியிருப்பாரும் பூசுரராவார்களோ, என்று முளவறி வானவ ரன்றே விருபிறப்பாளராவார்'' என்றார் தத்துவராயர். சீவபேதத்தா லீசுரபேதம், சாட்சித்துவிதபேதம், ஏகவாதம் உண்டாக லாயிற்று. சுசாதிமுதலிய மூன்று மின்மையே யபரோக்ஷமென்பது. (60)

## 61 - கவி (அ—கை)

[இவ்வேழவத்தையையு மையமின்றி யேற்கத் திருஷ்டாந்தமாகத் தசபுமான் கதையை யிக்கவியிற் கூறுகின்றார்]

இதுநினக் கறியும் வண்ண மிப்படி யொருதிட் டாந்தம்
புதுமையாங் கதைகேள் பத்துப் புருடரோ ராற்றை நீந்தி
யுதகதீ ரத்தி லேறி யொருவனென் பதுபே ரெண்ணி
யதனொடு தான்பத் தானென் றறியாமன் மயங்கி நின்றான்.

(இ-ள்) இதுநினக் கறியும் வண்ண மிப்படி யொருதிட்டாந்தம் புதுமையாங் கதைகேள் (எ-து) – இந்த வேழவத்தையினிலே யின்னு முனக்குவிளங்கும்படி யிதேபிரகாரமாகத் தெரிவிக்கத்தக்க புதுமையான தசபுமான்கதை யொன்றுண்டு, அதனைத் திருட்டாந்தமாகக் கூறுகின்றேன் கேளுதி:— (அதாவது) பத்துப் புருடரோ ராற்றை நீந்தி யுதகதீரத்தி லேறி (எ-து)—பத்துப்பேர் ஒருங்கே ஓர் நாள் ஆழமுள்ள ஓர் ஆற்றை நீந்தி யந்தநீர்க் கரையிலேறி:— ஒருவனென் பதுபே ரெண்ணி (எ-து) — அப்பதின் மருளொருவனென்பது பேரையெண்ணி:-அதனொடு தான் பத்தானென் றறியாமன்மயங்கி நின்றான் (எ-து)—அந்த வெண்ணிக்கையோடே, தான் பத்தாவது புருடனென் றெண்ண வகையறியாமல் திகைத்து நின்றனன். எ-று.

நீந்தியென்பதனால், ஆழமுங் காலமும் வருவித்தாம். (61)

## 62 - கவி (அ—கை)

[இக்கதையைப்போல வவ்வேழத்தைகளையுந் தனித்தனிக் காட்டப்புகுந்தா ரிக்கவியில் அஞ்ஞானமுதல் புரோக்ஷமீறாகநான்கினையுங் கூறுகின்றார்.]

அறியாத மயலஞ் ஞான மவனிலை காணே மென்னல்
பிறியாவா வரண மாகும் பீடைகொண் டழல்வி க்ஷேபம்
நெறியாளன் றசம னுண்டு நிற்கின்ற னென்ற சொல்லைக்
குறியாக வெண்ணி நோக்கிக் கொள்வது பரோக்ஷ ஞானம்.

(இ-ள்.) அறியாத மயலஞ் ஞானம் (எ-து)- அங்ஙனந் தசமனைக் காணாத மயக்கம்போல்வது அஞ்ஞானமாம்:— அவனிலை காணே மென்னல் பிறியாவா வரண மாகும் (எ-து) — அவனில்லவேயில்லை யிருந்தாற்காணு அதனு லவனைக் காணேமென்பது போல்வது அகலாத வாவரணமாம்:— பீடைகொண்டழல்விக்ஷேபம் (எ-து)— விசனமுற்றழுதல் போல்வதுவிக்ஷபமாம்:—நெறியாளன் றசம னுண்டு நிற்கின்றனென்ற சொல்லை (எ-து) - அவ்வழிச் செல்வோனெருவ னிம்மடமையைக் கண்டிதென்ன வதிசயம் பத்தாவதுபுருட னிருக்-கின்றன் அவனீயாக நிற்கின்றனென்று சொல்ல அச்சொல்லை :— குறியாக வெண்ணி நோக்கிக் கொள்வது பரோக்ஷ ஞானம் (எ-து) ஓர் குறியாகநினைத்து அவனிருக்கின்றனெனமதிப்புறுவதுபோல்வது பரோக்ஷ ஞானமாம் எ-று.

உண்டென்பதே சாலும், நிற்கின்றனென மிகைபடக் கூறிய தனல் நீயாக நிற்கின்றனென வுரைகொண்டாம். இக்கவியும் பின் கவியுமெடுத்துக் காட்டுவமை. (62)

## 63 கவி (அ—கை)

[இக்கவியி லேனைய மூன்றினையுங் கூறுகின்றர்.]

புண்ணிய பதிகன் பின்னும் புருடரோன் பதின்மர் தம்மை
யெண்ணிய நீபத் தாவா னென்னவே தன்னைக் காணல்
கண்ணினிற் கண்ட ஞானங் கரைதல் போவது நோய் போத
றிண்ணிய மனதி லையந் தெளிதலா னந்த மாமே.

(இ-ள்) புண்ணிய பதிகன் பின்னும் புருடரோன் பதின்மர் தம்மை யெண்ணிய நீபத் தாவா னென்னவே (எ-து) — புண்ணியமான விரக்ககுண முள்ள வந்நெறிச்சொல்வோன் மீண்டு மவ்வொன்பது பேரையு மவனைக்கொண்டேயெண்ணச்செய்து, இங்ஙன மெண்ணிய நீ பத்தாவதுபுருடனன்றோ வுன்னையேனெண்ணது விட்டுவிட்டனையென் றதட்டிவினவ, வினவவே:—தன்னைக் காணல் கண்ணினிற் கண்ட ஞானம் (எ-து)—தன்னைத்தானெண்ணிப் பிரத்தியட்சமாகக் காணல் போல்வது அபரோட்சஞானமாம்:— கரைதல்போவது நோய் போதல் (எ-து) —காணேமென்ற துக்க நீங்கல்போல்வது துக்கநிவிர்த்தியாம் :-

திண்ணிய மனதிலையந் தெளிதலானந்தமாமே, (எ-து) - தன்னைத் தான் கண்டதினால் திடமுற்ற மனதின்கண் சந்தேக நீங்கித் தெளிதல் போல்வது தடையற்றவானந்தமாம் எ-று.

விடயகதப் பிரத்தியட்சம் ஞானகதப் பிரத்தியக்ஷ மெனக் கோடற்கியைந்த பிரத்தியக்ஷப்பிரமாணம் அஷ்டவிதப்பிரமாணத்து ளொன்று. இங்ஙனமிருக்கப் பரோக்ஷ ஞானத்தை யபரோக்ஷ ஞான மென வெண்ணிச் செருக்குறுவோரை மறுக்கக் கண்ணினிற் கண்ட ஞானமென்றார். சந்தோஷ வெழுச்சி ஐயந்தெளிதலேயெனக் குறிப் பிக்கச் சுருக்கினார். பழுதெனப் கண்ணாற் காணுக்காறும் பாம்பென் னுந்திகி லெங்ஙனமகலும்; அகலாக்காறும் பயகம்பனுநிக ளெங்ஙன மகலா, அதுபோலத் தானறிவெனக் கண்ணாற் காணுக்காறும் பாசமென்னுஞ் சோகமெங்ஙன நீங்கும். நீங்காக்காறு மல்ல லெங்ஙன நீங்கும். ஆதலின் ஞானகதப் பிரத்தியட்சமின்றி யமையாது, நெருப் பென வாயாற்கூறிற் சமைக்கவொண்ணாது. தீபமெனக்கூறி விரு ணீங்காது. இதுபற்றியே வேதமுஞ் சான்றோரு மியைந்தனர். கண்ணினிற் கண்டஞான மபரோக்ஷமெனவே, யேனையவை ஞானம ன்றாயிற்று. ஞானமெனின்திரிபுடி யகன்றாருண்டோ? உண்டெனின் சுசாதி விசாதி சுகதபேத மகலாததற் கேதென்னை? முரணும். விளங்கினேனும் நவநவவினோதவழியாக வதிற் பராக்காகச் சென்றனர். செல்லா தவ்விளக்கத்தையே கைப்பற்றி யவ்வினோதங்களை யெல்லாம் ஞான கற்பிதமென்றுணர்ந் தவ்வழி மருளா தவற்றை யெரிப்பவ னத்துவிதியொருவனே யென்பதுதோன்ற, அபரோக்ஷத்தைக் கண்ணி னிற் கண்டஞான மென்றார். பெருகுமாதலிற் சுருக்கியுரைத்தாம். தாஷ்டாந்தத்திற் பதிகன், ஆசான், தசமன், ஆன்மா. ஒன்பதுபேர்; விசுவன், தைசதன், பிராக்ஞன், வைசுவாநரன், சூத்திரான்மா, அந்தரியாமி, சிற்சொலிதை, பொற்புவிசாந்தன், பிரசாபத்தியன் என்பன. (63)

64 கவி (அ கை.)

[தசபுமான் தன்னைத்தான் கண்டதுபோல யானுமென்னை யான் காணத் தெரித்தருள வேண்டுமென்ற மாணக்கனுக்குச் சாமவேத மகாவாக்கியங் காரணமாக இக்கவியில் அனுக்கிர கிக்கப் புகுகின்றார்.]

தெசபுமான் றனைக்கண் டாற்போற் றேசிக மூர்த்தி யேயென்
னிசவடி வினையான் காண நீர்காட்டல் வேண்டு மென்றான்
சுசிபெறு மிலக்கி யார்த்தந் தொழ்புதந் தற்ப தங்க
ளசிபத மயிக்கியஞ் செய்யு மதிசய வுண்மை கேளாய்.

(இ-ள்) தெசபுமான் றனைக்கண்டாற்போல் தேசிக மூர்த்தி யேயென்னிசவடி வினையான் காண நீர்காட்டல் வேண்டு மென்றான் (எ-து) – பத்தாவான் தன்னைத்தான் கண்டதுபோலச் சற்குருநாதனே யெனதெதார்த்த வடிவத்தை யான்காண நீர் காட்டவேண்டுமென்றான்: – சுசிபெறு மிலக்கியார்த்தந் தொம்பதந் தற்பதங்கள் அசிபத மைக் கியஞ் செய்யும் அதிசயவுண்மை கேளாய் (எ-து) – உனதெதார்த்த வடிவைவிளக்கத்தக்கது வாச்சியார்த்தம், லட்சியார்த்த மென்பவற்றுள், லட்சியார்த்தம். இந்தப் பரிசுத்தமான லட்சியார்த்தத்தைப் பற்றித் தத்வமசி யென்னு மூன்றுவது மகாவாக்கியத்தைத் தொம்பதந் தற்பத மசிபதமென மூன்றுக்க, அதனாலாய முப்பதங்களுஞ் சீவேச ரேகமென வைக்கியஞ் சாதிக்கும். அங்ஙனஞ் சாதிக்கும் அற்புதமான உண்மை நிலையை யாங்கூறக்கேளுதி. எ-று.

என்னிச வடிவென யான்கொண்டவைகளையெல்லா மன்றென மறுத்தமையினிங்ஙனம் வினாவியதென்க. இலியன்றோ மறுக்கப் போவது, மறுத்ததாக விறந்தகாலத்தாற் கூறிய தென்னையெனின், முன்னர், "தேகமல்லாமல் வேறே தேகியார் கானே னென்றாய்" என்னுங் கவியிலும், "நனவுகண்டதுநான் கண்ட நனவுள நினைவு நீங்கி" என்னுங் கவியிலும், பொதுப்பட நியதிகளைந்து காட்டியதா லிங்ஙனந் தானனைத்துமாமெனக் கருதிக் கேட்டதென்க. யானறிய வெனின் பாவனையாமெனக் கருதி யான்காண வென்றான் காண வென்னுந் தன்வினைக்குக் காட்டல் பிறவினை. இந்தப்பிறவினையை யவர்பால் வைத்தது சொல், குணம், குறிகளா லன்றெனற்கு. இவை எல்லாஞ் சைக்ஞை இந்தச் சைக்ஞைரூபமே யாசிரியராதலின் காட்ட வென்றுங் கூறினான் சுசிபெறு மிலக்கி யார்த்த மென்றது, வாச்சி யார்த்த மசுசியெனற்கு. இலக்கியார்த்த மென்றதனாலும், ஐக்கிய மென்றதனாலுமிங்கே தற்பத தொம்பதார்த்தமென்றது; கூடஸ்த பிரமத்தை. காணுமற்காணல், காட்டாமற்காட்டலென்னுமனுபூதியிருத் தலினிஃது மறுக்கற்பாற்றன்று. இவன் கல்விஞானத்தில் மிக்கோ னென்பது இவன் வினாவாலறிக. சுருதி யுத்தி யனுபவமென்னு மூன்றனுள், சுருதிபூர்வமா வுணர்த்தப் புகுதலைக் காட்டத், தத்வமசி யென்றார். இஃதுபதேசத்துக் கியைந்த வாக்கியம். தொம்பதத்தை முன்னர் கூறியது, முந்தித் தன்னை விளக்கற்கு. (67)

68 கவி. (அ - கை.)

[இந்தமகாவாக்கியம் முப்பதத்தா லுணர்த்துவதைத் திருஷ் டாந்தபூர்வமாகக் கூறப்புகுந்தா ரிக்கவியில், ஆகாயத்தைப்

போலச் சைதன்யம் நான்காயிருப்பதைக் கூறுகின்றார்]

விண்ணொன்றே மகாவிண் ணொன்று மேகவிண் ணொன்றும் பாரின்
மண்ணென்ற கடவிண் ணொன்று மருவிய சலவிண் ணொன்று
மெண்ணுங்கற் பனைபோ லொன்றே யெங்குமாம் பிரம மீச
னண்ணுங்கூ டஸ்தன் சீவ னான்குசை தன்ய மாமே.

(இ-ள்.) விண்ணொன்றே மகாவிண் ணொன்று மேகவிண் ணொன்றும் (எ-து) — ஆகாயமொன்றே மகாகாயமென்றும், மேகசலப் பிரதிபிம் பாகாய மென்றும்: — பாரின் மண்ணென்ற கடவிண் ணொன்று மருவிய சலவிண்ணொன்று மெண்ணுங்கற் பனைபோல் (எ-து) — உலகத்தில் மண்மயமெனற்குரிய கடத்திலிருப்பதைக் கடாகாயமென்றும், அக்கட சலத்திற்றோற்று வதைக் கடசலப் பிரதிபிம்பாகாயமென்றும், நினைக்கத் தக்க விபரீதமா யிருப்பது போல: — ஒன்றே யெங்குமாம் பிரம மீச னண்ணுங்கூ டஸ்தன் சீவனான்கு சைதன்யமாமே (எ-து) — ஏகசைன் தயமே, பரிபூரணப்பிரமனெனவும், ஈசனெனவும், நிரந்தரமாயுள்ள கூடஸ்தனெனவும், சீவனெனவுங் கற்பிதமாக நான்கு சைதன்யமா யிருக்கின்றது. எ-று.

கடசலவிண்ணென்றதனால், மேகசல விண்ணெனக்கொள்க. ஏகாகாயத்துக்கு நான்காய மெங்ஙனமோ, அங்ஙனமே ஏகசை தன்யத்துக்கு நான்கு சைதன்ய மிருத்தலின் இவ்வுவமை பொருந்தும். நான்கு சைதன்யமா மென்றதனால், ஒன்றேயென்பதை யேகசை தன்யமென்றும். அறிவையன்றி யொருநானெனற்குப்பொருள் வேறில்லை இல்லையாகவேசமஸ்தமும் நானெனலெல்லா மறிவையன்றி வேறாகுமோ; ஆகுமெனிற், சோதனையிற் புகுதும் புகுதற்கு வலி யின்றேல் வாய்பொத்திக் கிடக்கை நன்று. உபாதிகுண பேதமா யினுஞ் சலபேதமுண்டோ; அதுபோல வுபாதி குண பேதமாயினு மறிவு பேதமுண்டோ. உண்டெனி னெந்தநானுக் கெப்பிறவி சுதந்தரம் இன்றே லெந்தத் திணை பா லிடஞ் சுதந்தரம். சுதந்தரம் போற் காண்டலே யன்றியாது முடன்பாடன்று. இங்ஙன மெல்லா வறிவுமானா லொன்றோ பலவோ; ஒன்றெனிற் பலவாகாதிருக்க வேண்டும். பலவெனிலுபாதி குணந் தானாக வேண்டும். இருமையு மன்றெனில், சாயாதிருக்கவேண்டும், அதுகாறும் பலவாகத் தோற் றலின், ஒன்றே நான்கு சைதன்யமாமெ யென்றார்.

(க-து) இந்த வேகசைதன்யம் சமஷ்டி வியஷ்டி சகிதத்தாற் சீவேசரெனவும், ரகிதத்தாற் கூடஸ்த பிரமமெனவுங் காணு மாதலி

ஞான்கு சைதன்னியமெனல் கூடுமென்பது. சோதனை ஞாயந் தெரியாதா ரிதனை மறுத்தென்? (76)

## 66 - கவி (அ—கை)

[அந்தமுப்பதங் காரணமாக நான்கு சைதன்யத்திற்கும் வாச்சியார்த்த லட்சியார்த்த மினையவென விக்கவியிற் கூறுகின்றார்.]

பூச்சிய வீசன் சீவன் புகல்பத மிரண்டி னுக்கும்
வாச்சிய மிலக்கி யந்தான் மலமிலாப் பிரம மான்மா
காய்ச்சிய பாலி னெய்போற் கலந்தொன்றுங் கடைந்தெ டுக்கு
மாச்சிய மென்ன வுன்னை யறிந்துநீ பிரிந்து கொள்ளே.

(இ-ள்) பூச்சிய வீசன் சீவன் புகல்பத மிரண்டினுக்கும் வாச்சியம் (எ-து) — வெறும் பெயர்மாத்திர வடிவாயுள்ள சீவேசர்கள் முன்னர்க் கூறிய தத்துவமென்னு மிருபதங்கட்கும் வாச்சியார்த்தமாம்: — இலக்கி யந்தான் மலமிலாப் பிரம மான்மா (எ-து) — மலரகிதமான கூடஸ்தன் பிரம மிரண்டு மிலக்கியார்த்தமாம்: காய்ச்சிய பாலி னெய்போற் கலந்தொன்றும் (எ-து) — காய்ச்சிய பாலின்கண் வெண்ணெ யெங்ஙனம் வேற்றுமையின்றி யபேதமாக்கலந்தொன்றாயிருக்குமோ, அது போல, வாச்சியார்த்தத்தி லிலக்கியார்த்தம் வேற்றுமையின்றி யபேதமாகக் கலந்தொன்றாயிருக்கும்: — கடைந்தெடுக்கு மாச்சிய மென்ன வுன்னை யறிந்து நீ பிரிந்து கொள்ளே (எ-து) — அங்ஙன மிசிரிம்பித்த வெண்ணெயை மாத்திரங் கடைந்தெடுக்குமாறு போன்று வாச்சியார்த்தத்தில் மிசிரிம்பித்திருக்கின்ற வுனதெதார்த்த சொரூபத்தை மாத்திரஞ்சிரவண மனனாதிகளாலையந்திரிபறச் சிந்தித் துணர்ந்து அக்கற்பனைகளினின்று பிரத்தியேகமாக நிற்றி. எ-று.

அவன் காரியம் பூச்சியாமாயிற்றென்னும் உலகவழக்கத்தில், பூச்சியம் வெறுமையைத் தரநின்றது. பொன்னையன்றிப் பணிகளெங்ஙனமோ அங்ஙனஞ் சாட்சியையன்றிச் சீவேசர் தோற்றன் மாத்திரமா யிருத்தலின் பூச்சிய வீசன் சீவனெனவும், இவ்விருவருமுபாதி குணசகித கற்பிதராதலின் வாச்சியார்த்தமெனவும், பொன் போன்று பாரமார்த்திகமா யிருத்தலின் மலமிலாப் பிரம மான்மா வெனவும், இவ்விருசாட்சியு முபாதிரகித் வதிஷ்டானமாதலி னிலக்கியார்த்தமெனவும் காய்ச்சிய பாலினெய்யென்றதனாற் காய்ச்சாத பாலி னெய்சிறந்ததன்றெனக் குறிப்பிக்கின்றது. அதுபோல, ஐயந் திரிபற்ற

வுணர்வு நிரதிசயானந் தோதயத்துக்கிடமாம். அருதவுணர்வு அவ் வுதையத்துக் கிடமன்ரும். கடைந்தெடாவிடத்தும் பாலாயினும் வெண் ணெய் மிசிரிபித்திருக்குமாறுபோன்று ஆயாதவிடத்துந் அறிவாயினும் நிரதிசயானந்த மிசிரிம்பித்திருத்தலின் பாலினெய்போற் கலந்தொன்ரு மெனவும், கடைந்தவிடத்தன்றி வெண்ணெயெழாததுபோல, ஐயந் திரிபருவிடத்து ஆனந்தமெழாது; ஆதலின், கடைந்தெடுக்கும் ஆச்சிய மென்ன வுன்னை யறிந்து நீ பிரிந்து கொள்ளே யெனவுங் கூறினர்.

(க-து) வாச்சியார்த்தத்தை விட்டு லட்சியார்த்தைப் பற்றுக வென்பது இதைப்பற்றலே யசிபதார்த்தங் கைகூடல். தத் - ஈசன். துவம்-சீவன். அசி-பிரமம் இது வாச்சியார்த்தம். தத்-பிரமம். துவம்-கூடஸ்தன். அசி ஐக்கியம். இது லட்சியார்த்தம் (66)

### 67 - கவி (அ கை)

[ பிறிந்துகொள்ளும்வகை தெரிகிலனே யென்ற மாணுக்கனுக்காசிரியர் தூலதேகமும் பிராணுதி வாயுக்களு நீயல்லை யென்பதை இக்கவியிற் கூறுகின்ருர்.]

பிறிவதெப் படியென் றக்காற் பிணமாகு முடனுனென்னு
மறிவினைக் கொல்லல் வேண்டு மைம்பூத விகார மன்றே
வெறியதோர் துருத்தி மூச்சு விடுவது போல மூக்கா
லெறிபிரா ணனுநீ யல்லை யிராசத குணவி காரம்.

(இ-ள்.) பிறிவதெப் படியென் றக்காற் பிணமாகு முடனு னென்னு மறிவினைக் கொல்லல் வேண்டு மைம்பூத விகாரமன்றே (எ-து)—பிறிந்து கொள்ளும்வகை யெங்ஙனமெனக் கேட்பையாயின் சொல்லுதுங் கேளுதி; இனிப் பிணமாதற் கியைந்த தூலதேகத்தை நானென்னு மகங்காரமாகிய அறிவைக் கொல்லல் வேண்டும்; யாதினுலெனில், ஸ்தூல பஞ்சபூதாம்ச சையோக விகாரப்பொருளன் றிச் சுயம்பெனற்குப் பொருள் யாதானும் வேறுளதோ, ஆதலினது நீயல்லை. ஆயிற் பிராணவாயு யானுகல்வேண்டுமேயெனில்:—வெறி யதோர் துருத்தி மூச்சு விடுவது போல (எ-து)—உணர்விழந்ததாகிய வோர் துருத்தியானது காற்றை வாங்கி விடுவதெங்ஙனமோ அது போல:—மூக்கா லெறிபிரா ணனுநீ யல்லை யிராசத குணவி காரம் (எ-து) மூக்கினுற்காற்றை வாங்கி விடுகின்ற தசவாயுக்களிற் சிறந்த பிராண வாயுவும் நீயல்லை; யாதினுலெனி லிராசதகுணத்தின் விகாரத் தா லாயதன்றே; சுயம்பன்ருதலிற் கூடாது. எ-று.

இருக்கும்போது நடைப்பிணமென்றும், இறந்தபோது கிடைப் பிணமென்றும் வழங்கலிற் பிணமென்றார். தனித்தனி சொல்லப்புகினு மில்லை யல்லை யெனற்கே யுரியவாமாதலின் முக்கியத்தைப் பிராணனு மென விறந்தது தழீஇய வெச்சவுமமை கொடுத்துக் கூறியதென்க. தன்னையு மறியாது மற்றொன்றையு மறியாதென்னு மிழிவுதோன்றப் பிராணவாயுக் குவமை கூறவந்தவர் துருத்தி யென்னாது வெறிய தோர் துருத்தியென அடைகொடுத்துக் கூறியதைக் காண்க. தாமத குணத்தில் இராசதகுண விகாரம் பிராணாதி வாயுக்களும், கன்மேந் தியங்களு மாதலின், இராசதகுண விகாரமென்றார்.

(க-து) தூலதேகமும் பிராணாதி வாயுக்களு நீயல்லையென்பது. பின்கவியி லவஸ்தை, தனு, கோசம், அபிமானி, காட்சி, நீயல்லை யெனக்கூறப் புகுதலா லிக்கவியில் தூலம் பிராணனோடன்றிச் சாக் கிராவஸ்தையும், அன்னமயகோசமும், பிராணமயகோசமும், விசு வனும், தூலக்காட்சியும் நீ யல்லையெனக் கூட்டுக. முன்பின்னோக் கலா லிது சிங்கநோக்கு. (67)

68 - கவி (அ—கை)

[ஏனைய தத்துவங்களு நீயல்லையென விக்கவியிற் கூறுகின்றார்]

கரணமா மனது புந்தி கருத்தாவா மிவையான் மாவோ
தரமுள விரண்டு கோசஞ் சத்துவ குணவி காரம்
வரமறு கனவா னந்த மயனையு நானென் றோதே
விரவிய தவமஞ் ஞான விருத்தியின் விகார மாமே.

(இ-ள்) கரணமா மனது புந்தி கருத்தாவா மிவையான்மா வோ (எ-து)—அந்தக்கரணமெனப்படுவதாகிய மனதும் புத்தியுமாகிய விவைக ளகர்த்தா வாதலின் கர்த்தாவாகிய வான்மாவாகுமா? ஆகவே; ஆதலி னீயல்லை:—தரமுள விரண்டு கோசஞ் சத்துவகுண விகாரம் (எ-து)—முதல்தரமிரண்டாந்தரங் கூறியதால் ஏனைய மூன்றாந் தரம் நான்காந்தரமாயுள்ள மனோ மயகோசமும், விஞ்ஞானமய கோசமுமோ வென்னில், தாமதத்தில் சாத்துவித குணவிகார மாதலி னிவை நீயல்லை:—வரமறு கனவா னந்த மயனையு நானென்றோதே (எ-து)— சிறப்பற்ற கனவையும், ஆனந்த மயகோசத்தையும், நானெனக்கொள்ளற்க. யாதினாலெனில்:—விரவிய தமவஞ்ஞான விருத்தியின் விகாரமாமே (எ-து)—சுயம் பல்லாத தாமதமும் அவித் தையுமாகிய விவ்விரண்டு விருத்தியின் விகாரமாகும்; ஆதலின் கூடாது. எ-று.

சித்தத்தை மனதிலும், அகங்காரத்தைப் புத்தியிலு மடக்கிக் கூறியது சுருங்கச்சொல்லலென்னு மழகுபற்றி. கரணமெனப் பொதுப்படக் கூறியதனாற் புறக்கரணத்தையுங் கொள்க. ஆன்மாவைக் கர்த்தாவென்பதனாற் கரணத்தையகர்த்தாவென்றும் கரணம், சூக்குமதனு காட்சி, சூக்குமப்பிரபஞ்சம். அபிமானி, தைசதன். ஆனந்தமயகோசத்தையும் அபிமானியையுஞ் சொன்னதினால் அவஸ்தை, சுழுத்தியும், காட்சி, பாழுமெனக்கொண்டாம். தனு, அவித்தை. எனவே, இஃதொன்றின முடித்தலென்னு முத்தியாயிற்று. ஆகவே "சொற்றவற்றியலான்மற்றைய பிறவுந்தெற்றெனவுணர்தல் தெள்ளியோர் கடனே" யென்னும் விதியால் இவ்வவசரத்திற் கூருததத்துவங்களை யெல்லாங் கூட்டி நியதிகளாக வென்பது பெற்றும்.

(க-து) இதுகாறுந் தத்துவங்களை நியதிகளாந்ததென்பது.

## 69 - கவி (அ கை)

[நீயாவ திணையதென விக்கவியிற் கூறுகின்றார்.]

சத்தொடு சித்தா னந்தஞ் சமந்திரஞ் சாக்ஷி யேக
நித்தியம் வியாபி யான்மா நீயது வாவ றிந்து
பொத்தொடு சடந்துக் காதி பொருந்துபே தங்க ளான
குத்திரப் பஞ்ச கோசக் குகைவிட்டு வெளியிலாவாய்.

(இ-ள்) சத்தொடு சித்தா னந்தஞ் சமந்திரஞ் சாக்ஷி யேகம், நித்தியம் வியாபி யான்மா நீயது வாவறிந்து (எ-து) — சத்து, சித்து, ஆனந்தம், சமம், திரம், சாக்ஷி, ஏகம், நித்தியம், வியாபி யெனப் படுவன ஆன்மாவாதலின், நீ யந்தவான்மாவென வுன்னை நீ யறிந்து:—பொத்தொடு சடந்துக்காதி பொருந்துபே தங்களான (எ-து) — அசத்து, சடம், துக்கமுதலியவைகளைத் தமக்கியல்பாக வுடைய பேதப்பொருள்களா நின்றுள்ள:—குத்திரப் பஞ்ச கோசக் குகைவிட்டு வெளியிலாவாய் (எ-து)—பஞ்சகோசமென்னும் வஞ்சகக் குகைகளினின்று வெளிப்படுதி. எ-று.

சத்து - உள்ளது; சித்து - இங்கே தன்னையறிவது; ஆனந்தம்-மாருச் சுகம்; சமம், என்று மெங்கு மொருபடித்தா நிற்றல்; திரம், இங்ஙன நிற்றற்கு மாறின்மை. சாட்சி, அதுவது வாகியு மாகாத வற்றை விலக்ஷணமாக நின்றுணர்தல்; ஏகம், பலவாகியுமாகாது தனியாநிற்றல்; நித்தியம், இங்ஙனநிற்றல் ஒருபோதன்றெனல். வியாபி, வியாபகத்துக்கெல்லாம் வியாபகமா நிற்றல்; ஆன்மா, இக்குணங்களுக் கெல்லாங் குணியாக நிற்குமறிவு. இக்குணிதா

னீயெனப்படுவது. எனவே, நீவேருகாதுநில்லென்பதாயிற்று அறிவுக் கயல்; பஞ்சகோசங்களுக் கயலன்மையின் அசத்தாதிகளைப் பஞ்ச கோசங்களுக் கடையாக்கினர். அசத்தாதிகட் கருத்தம் விளங்கச் சத்தாதிகளைக் கூறினும். ஆதியென்றதனுற், சமம், திரம், சாக்ஷி, ஏகம், நித்தியம், வியாபி, பூரணம் என்பவைகளுக்கு மாருய மொழி களுளவே லவையுங் கொள்க. ஜென்மங்கட் கியைந்தது தேகம், அறிவன்மையின் அறிவே சத்து. தன்னை யறிதற்பாலது வேறன்ரு மையி னறிவே சித்து. சத்தே சித்து சித்தேசத்து எனற் கியைதற் பாலது வேறன்ருமையி னறிவேயானந்தம். யாவு மறிவா நிற்றலி னறிவே சமம். அதனை எவ்வித வாதத்தானு மாற்றக்கூடாமையி னறிவே திரம். தானே சமஸ்தமாயினுமன்ருகநின்றிவற்றைச் சாக்ஷி யாக வறிதலி னறிவே சாக்ஷி. சராசரபேத மறிவுக்கன்மையி னறிவே யேகம். முதலிடை கடை யின்மையி னறிவே நித்தியம். சமஸ்த வியாபகந்மு தன்னிடத் திருத்தலி னறிவே வியாபி இங்ஙனமாய குணங்களுக் கெல்லாங் குணியாக வழக்கிறந்து நிற்றற்பாலது வேறன்மையி னறிவே யான்மா. ஆன்மாவையன்றி நானீ யென்பவை களில்லை யாதலின் ஆன்மாவே யறிவு; அறிவையன்றி யான்மா வென்ப தில்லையாதலி னறிவே நீ அறிவை யன்றி நீ யென்பதற்குப் பொருள் வேறின்மையி னீயது வாவறிந்தெனவும், பஞ்சகோசமு மறியாமை யாதலி னதனைவிட்டு வெளியிலாவாய் எனவுங் கூறினர். (க-து) இங்ஙனம் ஆராய்ந்து களைவதாற் றேறிய அறிவே ஆன்மா என்பது. இதனை மறுப்பார் அர்த்தவாதியரல்லர். அர்த்தவாதிய ரரியர். சொல்வாதிய ரெளியர். அதனை யாராய்தி (69)

## 70 - கவி (அ - கை)

[அங்ஙனந் தெரிவித்தவாறு நின்ற மாணுக்கனது ஐயந்தெளிய இக்கவியிற் சொல்லப் புகுகின்ருர்.]

பஞ்சகோ சமும்விட்டப்பாற் பார்க்கின்ற போதுபாழே
விஞ்சிய ததுவல் லாமல் வேறொன்றுந் தெரியக் காணே
னஞ்சன விருளையோநா னகமென வனுப விப்பேன்
வஞ்சமில் குருவே யென்ற மகன்மதி தெளியச் சொல்வார்.

(இ-ள்.) பஞ்சகோசமும் விட்டப்பாற் பார்க்கின்றபோது பாழே விஞ்சியது (எ-து) — தேவரீர் நியதிகளைந்தவாறு பஞ்சகோசமுந் தாண்டி யப்பா னிட்டையிற் பார்க்கும்போது மிஞ்சிநின்று காண்பது பாழே: — அதுவல்லாமல் வேறொன்றுந் தெரியக் காணேன் (எ-து) —

அந்தப்பாழ் காணப்படுகின்றதேயன்றி, வேறொன்றுங் காணக்கண்டி லன்:—அஞ்சன விருளேயா நானக மென வனுபவிப்பேன் (எ-து)- கருமையான விருளேயா நானென்றனுபவிப்பன்: - வஞ்சமில் குருவே யென்ற மகன்மதி தெளியச் சொல்வார் (எ-து) - உண்மையாகத் தெளிவிக்க வெழுந்தருளிய குருநாதனே யென் றிரந்து கேட்ட மாணாக் கனது மதிதெளியும்வண்ணந் தக்கவிடைதருகின்றார், எ று.

பஞ்சகோசத்தை விடுதலாவது; அவை தானாகநின்ற அழுத்- தத்தை. அதாவது, பஞ்சகோசமும் விகாரரூபமன்றிச் சுயம்பன் றெனக் காட்டியதனாலும், காட்டியவண்ணந் தானுந் தோடங் காணத் தானே யவ்வழுத்தஞ் சிறிது சிறிதுதளருமாதலினானும், தளரத்தளர அவ்வவற்றிலுள்ள பாசமணு வணுவாக நழுவுமாத லானும், நழுவினும், அவ்வவ்வாசனை விரைவிலகலாது, சிறிது சிறிதகல அவ்வவ்வவற்றினிலக்கும் விடும், இங்ஙனம் விடுதலெயென அறிக. இங்கே பாழாவது; பஞ்சகோசமுங் காணாமை முன்னர் பஞ்ச கோசமாநின்ற தறிவாதலா லிப்போ தன்றுநிற்பது மறிவே. முன் னரறிவு விளங்கி லிப்போது மறிவுவிளங்கலாம். முன்னர் நாமரூபமா விளங்கியவாறு போன் றிப்போது பாழா விளங்குகின்றது என்னும் விவேக மிவனுக்கின்றேனும் பாழிற் பயனின்மைபற்றிப் பஞ்சகோச மும்விட் டப்பாற் பார்க்கின்றபோது பாழே விஞ்சியததுவல்லாமல் வேறொன்றுந் தெரியக்காணேனெனவும், நாமரூபமும், பாழு மறி வினது கற்பிதத்தோற்றம், அவையோர் முதலன்று. இவ்விருமைக்கு முதலாயிருப்ப தறிவு இவ்வறிவே யிவனாயினும் விளங்காமைபற்றி அஞ்சன விருளேயோநா னகமெனவனுபவிப்பனெனவுங் கூறினான். பஞ்சகோசமும் பாழு மறிவையன்றி யில்லையென்னுமுளவு அவ் வனுபவிக்குத் தெரியுமன்றி யேனையோர்க் கெங்ஙனந்தெரியும். இவ ரனுபவியாதலிற் றெளியச் சொல்வாரெனப்பட்டது. உலகில் ஞானானு பவிக ளொழிய வேனைய குருக்களனைவரும் இது பஞ்சகோசத்தி லொன்றுமேயெனத் தெரியாததனை மெய்த்தேவபாவமெனக்கொண்டுப தேசித்துக்களித்துத் திரிகின்றனர். இங்ஙனமாயபாவமெல்லா மனோ சங்கற்பமன்றோ; இது மனோசங்கற்பமெனவறிந் திவற்றைவேண்டாது மெய்ப்பொருளையுணர்த்தத் தக்கவனைக் குருவாக விவன் விழைந்து பல்லூழிகால மெய்த்தவம் புரிந்ததனா லன்றோ வித்தகையான குரு விவனுக்கு வாய்த்தனர். யாவரு முணர்ந் துய்யும்படி யிங்ஙனமாய மரபு தெரிவிக்கப்பட்டது. (70)

71-கவி (அ—கை.)

[தசமன்பாழாகி னீயும் பாழாகலாமென்பதை
இக்கவியிற் கூறுகின்றார் ]

முன்புகல் தசமன் புத்தி மோகத்தா லெண்ணி யெண்ணி
யொன்பது பேரைக் கண்ட வொருவனுந் தனைக்கா ணாது
பின்பவ னிடையிற் கண்ட பெரியபா ழவனே பாரா
யன்புள மகனே காண்ப தடங்கலுங் காண்பா னீயே.

(இ-ள்.) முன்புகல் தசமன் புத்தி மோகத்தாலெண்ணியெண்ணி (எ-து)—முன்னர்க்கூறிய பத்தாவான் தனது புத்திவிகற்பத்தாற் பலகாலெண்ணி யெண்ணி:—ஒன்பது பேரைக் கண்ட வொருவனுந் தனைக் காணாதுபின்பவனிடையிற் கண்டபெரியபாழவனே பாராய் (எ-து)—ஒன்பதுபேரைக்கண்ட வொருவனாகிய தன்னை யெண்ணிக்காணாது, பின்ன ரவன் தன்னிடத்திற் கண்டபெரிய பாழ்தானு; தசமனெனப் படுவோ னிதனை நன்கு சிந்தித்துக் காணுதி: அன்புள மகனே காண்ப தடங்கலுங் காண்பானீயே (எ-து)—எனது பிரியமுள்ள ஞான புத்திரா; அகம்புறத்திற் காணப்படுவனவா நின்றுள்ள திருசியமனைத் துங் காண்பவ னீயேயாகும். எ-று.

புத்திமோகம், கலக்கபுத்தி அவன் பாழல்லனென மறுக்க வெதிர்மறைப் பொருடா நின்றது ஓகாரமென வறிக. இங்கே பாழாவ தொன்றுந் தோன்றாமை நாமரூபமுதல் பாழாய வனைத்தையுங் காண்ப தடங்கலுமெனவும், அடங்கலுங் காண்பதறிவு, அவ்வறிவு நீயேயெனக் குறிப்பிக்க, அடங்கலுங் காண்பானீயே யெனவுங் கூறினார்.

(க-து) பகுதி விகுதி யிடைநிலைக் கற்பிதங்க ளியல்லை யிவற்றிற்குச்சாக்ஷி நீயென்பது. (71)

72 கவி - (அ—கை.)

[முன்னர்ச் சாக்ஷி நீயேயென்பதை வற்புறுத்தக் கூறிய வாணை யை இக்கவியில் மீண்டுங் கூறுகின்றார்.]

தூலசூக் குமவஞ் ஞானந் தோன்றுமுன் றவத்தை தாமுங்
காலமோர் மூன்றுஞ் சன்மக் கடலெழுங் கல்லோ லங்கள்
போலவே வந்து வந்து போனதெத் தனையென் பேனு
னுலமர் கடவு ளாணை யவைக்கெலாஞ் சாக்ஷி நீயே.

(இ-ள்.) தூலசூக் குமவஞ் ஞானந் தோன்றுமுன் றவத்தை தாமுங் காலமோர் மூன்றும் (எ-து) — தூலம். சூக்குமம், காரணம் என்னு மிம்மூன்று தனுக்களும், இவை காணப்படுதற் கிடமாயுள்ள சாக்கிரம் சொப்பனம் சுழுத்தி யென்னு மூன்றவஸ்தைகளும், இவற் றிற்குக் காலவரையறையா நின்றுள்ள இறப்பு. நிகழ்வு, எதிர்வு என்னு முக்காலங்களுமாகியவிவைகள்: — சன்மக் கடலெழும் கல்லோ லங்கள்போலவே வந்துவந்து போனதெத்தனை யென்பேனுன் (எ-து) — பிறவிசாகரத்தில் தானே யெழுந்தடங்குதலே யியல்பாகவுடைய பேரலைகளைப்போலவே தோன்றித் தோன்றி யழிந்ததாகிய தொகை யெத்தனையென்க்கணக்கிடுவன் யான்: — ஆலமர்கடவுளாணையவைக் கெலாஞ்சாக்ஷி நீயே (எ-து) முன்னர்ச் சனகாதிகட்கனுக்கிரகிக்கக் கல்லால விருக்ஷத்தின்கீழ்க் குருமூர்த்தமாக வெழுந்தருளிய பரமசிவத் தின் மேலாணைப்படி யந்தத் திருசியங்களனைத்திற்குஞ் சாக்ஷியாநின் றுள்ள நீயே வேறில்லை நீ யிதனை யனுபவித்துக் காணுதி. எ-று.

போனதென்பது, தொகையொருமை கடலுக்கு அலைக ளியல் பாமாறு போன்று, பிறவிக்குத் தூலமுதலிய இவ்வொன்பதும் இயல் பாமென்றதாயிற்று. இதற்குத் தடையுளதேல் கூறுதும், நம்பிக்கை யின்று. கேளுதி ஞாயமுகத்தால். எங்ஙனமெனின், இப்போதுயாம் நின்றுளது பிறவியோ, அன்றோ; பிறவியெனின், இந்தப்பிறவியில் தூலமுதலிய இவ்வொன்பதுந் தோன்றித்தோன்றி மறைகின்றனவோ, இன்றோ; மறைகின்றனவெனின், இப்பிறவி நமுவுமளவு மிங்ஙனமாய தொகையொருமை யெத்தனை. கணக்கில்லை யெனின், பிறவிதோறு மிங்ஙனமாவதுளதோ, இலதோ; இல்லையெனின், இப்பிறவிக்கிவையில தாகவேண்டும். உளதாதலிற் பிறவிதோறு முளதாக வேற்கவேண்டும், இதனை மறுத்தற்கிடமின்று. இனிப் பிறவிகளுபாதிக்கோ, அறிவுக்கோ; உபாதிக்கெனின், உபாதி சடமாதலி னறிவாகுமா? ஆகுமெனின், உபாதி தன்னுல்தா னறியப்படுகின்றதோ அன்னியத்தாலோ; தன்னு லெனின், சொப்பனசுழுத்திகளிலறிந்துகொள்ள வேண்டுமே அங்ஙன மின்றுமைக்கேதென்னே? அறியாதேனும் யோனிவழித்தாவுடலாதலினு பாதிக்கேயாம். யோனியென்பது, நால்வகையை. இதுநிற்க இனி உபாதிக் கறிவோ, அறிவுக் குயாதியோ; உபாதிக்கெனின், உபாதிக் கறிவு யாதுக்கு? சுகசாதனத்துக்கெனின், அறிவு சுகசாதனமாயின் சுகத்தை யனுபவித்தல் யாது? உபாதியெனின், தன்னையேனு மன்னியத்தையேனு முணரத்தக்கதாகவேண்டுமே, அப்போது தூல மன்று. சூக்குமமெனின், சுழுத்தியிற் கேவலசுகத்தை யனுபவித்தற் கிசைந்த வுணர்வினதாகவேண்டுமே இல்லாததால் சூக்குமமன்று.

காரணமெனின், அவித்தையாகவேண்டும், தன்னைத்தா னறிதற்பால தன்றாமையின் தன்னைத்தான் சுகிக்குமா றெங்ஙனங்கூடும்? கூடாத தால் உபாதிக் கறிவன்று. அறிவுக் குபாதியெனின், ஒருவாற்றாற் பொருந்தும். அவஸ்தாத்ரயம், காட்சித்ரயம், உபாதித்ரயம், அபி மானித்ரயமா நிற்ப திவ்வறிவேனும். சாக்கிரத்தில் தூலத்தைத் தனுவாகப்பெற் றுலகபோகத்தை நுகர்வதும், சொப்பனத்தில் சூக்கு மத்தைத் தனுவாகப்பெற் றங்குள சுகத்தை நுகர்வதும், சுழுத்தியில் காரணத்தைத் தனுவாகப்பெற் றங்குள கேவலசுகத்தை யனுபவிப்பது மறிவெனினும், அஃதிங்ஙன நிற்றலே யறிவா ரெங்கணு மின்றாதலா னதனைக் கணிப்ப தெளிதன்று. இதுநிற்க; அறிவுக் குபாதியெனல், இது தன்னைத்தாறியுமட்டுள்ள தந்திரம். எங்ஙனமெனில், இம்மூன்று தனுவு மஞ்ஞான தனுவாகும்போது ஞானதனு விருக்கவேண்டுமே, அதுவு மறிவுக்குச் சுத்த வுபாதியாகவேண்டுமே, சுத்தவுபாதியி லசுத்தவுபாதியும், அசுத்தவுபாதியில் சுத்தவுபாதியு மின்றாயினும், அறிவிருத்தலாற் சாக்ஷியாகவேண்டும். அறிவேநீயாதலால் நீயே சாக்ஷியென்றார். இதற்குமே லுண்மை யின்றாதலாற் கடவுளாணை யெனப்பட்டது. வந்து வந்து போன தெத்தனை யென்பேன்யானென வே, இனிவரப்போவ தெத்தனையோ வெனக் குறிக்கின்றது. உபாதிக் கே பிறவி, அறிவுக்கன்று; அறிவு நீயாதலி னீயே சாக்ஷியென்பது பொருந்தும்.

(க-து) இதனிலும் ஐயங்கொள்ளாது இருப்பதற்கு இங்ஙனங் கூறியதென்பது. (72)

## 73 - கவி. (அ - கை.)

[ஒவ்வொன்று மற்றொன்றா லறியப்படுமாறுபோன்று யானும் யாதா லறியப்படுவனென்ற மாணாக்கன் வினாவுக்கு இக்கவியில் விடை கூறுகின்றார்.]

எல்லாங்கண் டறியு மென்னை யேதுகொண்டறிவே னென்று
சொல்லாதே சுயமாஞ் சோதி சுடருக்குச் சுடர்வே றுண்டோ
பல்லார்முன் றசமன் றன்னைப் பார்த்ததுந் தனைக்கொண் டேதா
னல்லாது பதினொன் றாறு மவனிடத் துண்டோ பாராய்.

(இ-ள்.) எல்லாங்கண்டறியு மென்னை யேதுகொண்டறிவே னென்று சொல்லாதே. (எ-து) — சமஸ்தத்தையும் பார்த்தறியப்பட்ட வென்னையெதைக்கொண்டறிவே னென்று பிறர்சொல்வதுபோலச் சொல்லாதே: — சுயமாஞ் சோதி சுடருக்குச் சுடர்வே றுண்டோ (எ-து)

—சுயம்பாயுள்ள பிரகாசரூபமான சூரியனைக் காண்டற்கு வேறோர் சூரியன் வேண்டுமோ, அல்லது வேறுண்டோ:—பல்லார்முன் றசமன் றன்னைப் பார்த்ததுந் தனைக் கொண்டேதா னல்லாது (எ-து)—தானல்லாத மற்றொன்பதுபேர்முன் பத்தாவான் தன்னைக் கண்டு கொண்டதுந் தன்னைக்கொண்டே யல்லாமல்:—பதினென்றனு மவனிடத் துண்டோ பாராய் (எ-து)—தன்னைத்தான் காணுந் தொழிலிற் பதினொன்றுவது புருடனு மவனிடத் துளனோ நீயே காணுதி. எ-று.

சுடருக்குச் சுடர்வே றுண்டோவென்னு முவமையால், ஆன்மா பிரகாசவடிமெனவும், சுயமாஞ்சோதியென்னு முவமையால், சொப் பிரகாசமெனவும் பெற்றும். மற்றொன்றுலன்றி யான்மா தன்னைத்தானறி யாதென்னும் போலி ஞானிகள்போல் கூறற்கவென்பார், எல்லாங்கண் டறியுமென்னை யேதுகொண்டறிவே னென்று சொல்லாதே யெனவும், தன்னைத்தான் விகற்பித்துப்பார்க்குந்தொழில் தன்னிடத்தல்லது வேறி டத்தின்மை போலத் தன்னைத்தா னிர்விகாரமாக்கிப் பாக்குந்தொழில் தன்னிடத்திலல்லது வேறிடத்தின்மையின் பதினொன்றனு மவனிடத் துண்டோ பாராயெனவுங் கூறினர் ஒன்பது பேரெனக் குறிக்கப் பல்லாரென்றார். என்னை? "ஒன்றல் லனபல தமிழ்நடை வடநூ-லிரண் டல் லனபல வென்றிசினோரே." என்றார் பிறரும். நினைவினுங் கனவினுஞ் சுழுத்தியினுந் திரிபுடியை விளக்குவிப்பது சோமசூரியாக் கினி யவ்விடத்தின்றே யாதுவிளக்குவிப்பது, ஆன்மப்பிரகாச மென்றற் கையஞ் சிறிதுமில்லை. இஃதோருயிர் பாலன்று, எவவுயிரினு மாதலின் தடுத்தற்பால தன்று.

(க-து.) தானாகிய வறிவு சொப்பிரகாசமென வுணர்த்தினரென் பது இதனை நம்பற்க வென்னுது பாராயென்றார். ஐயந்திரிபகன்றார்க் கே யிது விளங்கும். (73)

74 - கவி. (அ—கை)

[நீ சகத்துமல்லை பாழு மல்லை அறிவேயென்பதை இக்கவியிற் கூறிகின்றார்.]

அறிவுக்கு மறிவு செய்யு மறிவுவே றுண்டென் றெண்ணு
மறிவற்ற குதர்க்க மூடர்க் கனவத்தை பலமாத் தீரு
மறிபடு பொருணீ யல்லை யறிபடாப் பொருணீயல்லை
யறிபொரு ளர்கு முன்னை யனுபவித் தறிவாய் நீயே.

(இ-ள்.) அறிவுக்கு மறிவு செய்யு மறிவுமே றுண்டென் றெண்ணும் (எ-து) - ஞானத்துக்கும் ஞான முணர்த்தத்தக்க ஞானம் வேறுள தென் றெண்ணுகின்ற:- அறிவற்ற குதர்க்கமூடர்க் கனவத்தை பல மாத் தீரும் (எ-து) மெய்யுணர்விழந்த குதர்க்கவாதிகளாகிய மூட ஞானிகளுக்கு அனவஸ்தா தோஷமே பிரயோசனமாக முடியும். (ஆதலி னந்நெறிச் செல்லற்க):- அறிபடு பொருணீ யல்லை யறி படாப் பொருணீயல்லை (எ-து)—அறிபடு பொருளாகிய பதி பசு பாசமு நீயல்லை, அறியப்படாததாகிய பாழெனும்பொருளு நீயல்லை. ஆயின் யானவ் தியாதெனின்) :- அறிபொருளாகு முன்னையனு) பவித்தறிவாய் நீயே (எ-து) - தன்னைத்தானுணரற்பால பாலதாகிய பொருள்மெய்யுணர்வாதல ரலதுவே நீ, அங்ஙனமாய வுன்னை நீயே யனுபவித்தறிதி. எ-று

கைவெண்ணெயை நெய்யென்றறியாது அலைவார்போன்று தானாகிய அறிவினுண்மைநிலை யிஃதென்றாய்ந்தனுபவிக்க வகையறியாது, அறிவுக்கறிவென்பர், (அதாவது) சீவவறிவு, பரவறிவு, என விரண்டு. பரவறி வுணர்த்தாது சீவவறிவு தன்னைத்தா னுணராதெனல் மெய்யே; சீவவுணர்வுணர்த்தல் பரவுணர்வு; பரவுணர்வுணர்த்தல், வேறுணர்வுண்டாகவேண்டும். அதனை யுணர்த்த வேறுணர் வுண்டாக வேண்டும். அத்னை உணர்த்த வேறுணர் வுண்டாகவேண்டும் இங்ஙனஞ் செல்லில் முடிவெங்குளது, இன்றாதலி னித்னை யனவத்தா தோடமென்பர் கலைவல்லோர். இங்ஙன மாகுமென வறியாது, அறிவுக் கறிவெனக் கூறற்குப்பயன் அனவத்தாதோடம். இதனை யறியாததா லறிவற்ற குதர்க்கமூடரென்றார். இதில் தோடமென்னை? இவரை ஞானியென்பா ரிவரினும் விவேகியர்போலும் இது ஞான மாகுமா, இவர் ஞானமென்பதைக் கேட்டுமறியார்போலும், அந்த வூரிலு மிருந்தறியார்போலும். இங்கே குதர்க்கமூடரென்பதில், குதர்க்கமாவது; ஒழுங்கின்றிவாதித்தல். அதாவது, ஸ்மரணையை யன்றிச் சகசீவபரத்துள் சகமெனல்யாதெனில், இதோ தோற்றுகின்ற தே யது தானெனல். அததற்குரிய பெயருளதயிருக்கச் செகமெனும் பெயரேற்றற்பால தெதுவெனில், முன்போல மீண்டும் விடைதரல். இது தோற்றமன்றோ, உளதேல் காய்த்தாற சுட்டிக் காட்டெனில், விரலானீது தானென்னச் சுட்டிக்காட்டல். இவ்விரலுடலன்றியில்லை. இவ் வுடல் உலகன்றி யில்லை, நீ யுடலன்றாதலால், நீ வேறாயிருந்துலகைக் காட்டுகவெனின், இதற்கு நேராக வுத்தரவின்றிக் கண்டபடி சொல்

வர்த்துஞ்செயல். காய்த்தாற் சுட்டிக்காட்டவொண்ணுதேனும், வாக்காலேனுங் காட்டுதியெனின், சொல்லா லிதுவெனக்கூறல். சொல், சத்தத்தையன்றி யில்லை, சத்தம், ஆகாயத்தையன்றி யில்லை, நீ யாகாயமன்றுதலால், நீ வேருயிருந் துலகைக் காட்டுதியெனின் இதற்கும் முன்போலச் சொல் வாதஞ்செயல். காயத்தாலும் வாக்காலுஞ் சுட்டிக்காட்ட வகையின்றேனும், மனத்தாலேனுஞ் சுட்டியறிதியெனின், எங்ஙனமெனவரும். மனம் உலகாய்நில்லாது வேருயிருந்துன்ன வேண்டுமெனின், வேருயிருந்துதா னுன்னினே னென வரும். வேறிடம் பாழன்றே. அங்கே மனமெங்கே, உன்னுதலெங்கே, காணப்படு முலகெங்கேயெனில், முன்போலச் சொல்வாதம் வரும். இங்ஙனஞ் செய்தலே குதர்க்கமென வுணர்க. இங்ஙனமாய வழக்கில் மூழ்கியெழாதார்க்கு வேதாந்தபட்சமிது, சித்தாந்தபட்சமிதுவென் றெங்ஙனம் தெளிதற்கிடந்தரும். ஆதலி னவர்வழிச்செல்லா திதனைக் கேளுதி. நீயுன்னலறிபடு பொருளாமெனினுலகமாம், உலகஞ், சடமாதலி னீயல்லை. நீயுன்னு லறிபடாப் பொருளாமெனின் சூனியமாம், சூனியஞ் சடமாதலினீயல்லை. இவ்விரண்டையு மறிவ தறிவாதலினது நீயாமென்பார். அறிபடு பொருணீ யல்லை யறிபடாப் பொருணீ யல்லை யறிபொரு ளாகுமெனவும், சொல்லளவாகவும், நினைவளவாகவும் போகாதே யென்பார், அனுபவித் தறிவாய் நீயே யெனவுங் கூறினுர். நீயே யென்பதில், ஏகாரந்தேற்றப் பொருள். இவ்வுரை காணிலன்றிக் குதர்க்க மடங்காது. (74)

### 75 - கவி (அ — கை)

[அறிவாகிய நினதம்ஸத்தை யன்றித் துவிதத்திற்குப் பிசை இன்றென உவமானத்தால் இக்கவியிற் கூறுகின்ருர்]

மதுரமாங் கட்டி சுட்ட மாப்பணி யார மெல்லா
மதுரமாக்கியவ தற்கு மதுரந்தான் சுபாவ மன்றே
யதுவிது வென்னுஞ் சடங்களறிவாக வறிவைத் தந்தே
யதுவிது விரண்டு மாகா வகம்பொரு ளறிவாய் நீயே.

(இ-ள்.) மதுரமாங் கட்டி சுட்ட மாப்பணி யார மெல்லாம் (எ-து) — தித்திப்பாகிய வெல்லக்கட்டி சேர்த்துச் சுட்ட மாப்பலகாரங் களையெல்லாம்: — மதுரமாக்கியவதற்கு மதுரந்தான் சுபாவ மன்றே (எ-து) — தித்திப்பாக்கிய அவ்வெல்லக்கட்டிக்குத் தித்திப்பு சுபாவ மல்லவா. (அதுபோல): — அது விது வென்னுஞ் சடங்க ளறிவாக

வறிவைத் தந்து (எ-து) - அதுவென்னும் பிரமமும், இதுவென்னுங் கூடஸ்தனும் ஏகசைதன்யத்துக்குச் சடங்களாதலா லந்தச் சடங்கள் ஏகசைதன்ய மாகும்படி யுன்னுடைய ஞான திருஷ்டியைக் கொடுத்து:- அதுவிது விரண்டு மாகா தகம்பொரு ளறிவாய் நீயே (எ-து) — அது விதுவென்னுங் கூடஸ்த பிரமத் துவிதமாகாது அகம் பொருளாகிய தானென்னும் ஏக சைதன்னியத்தை அதுவாகத் தரிசனஞ் செய்தி. எ-று

வெல்லமானது தன்மதுரத்தால் மாவைத் தன்மயமாக்குவ தெங்ஙனமோ? அங்ஙனமே உனது ஞானதிருஷ்டியானது தனது சொப்பிரகாசத்தால் சாட்சித்துவிதத்தைத் தன்மயமாக்குமெனப் பொருள்படநின்றது. தன்மயமாக்கல், ஏகமாக்கல். இங்ஙன மாக்கலால் வெல்லப்பலகாரங்கள் மதுரமாத்திரமா நின்றாற்போலச், சாட்சித்துவிதங்கள், ஞெப்திமாத்திரமாய் நிற்குமென வறிக, இதுதா னத்துவிதமெனப்படுதல். இதனையே யகம் பொருளெனவும், இது மெய் பொய்யென்பதை யறியவேண்டின் நிட்டை கூடுதி யப்போது நீயே யறிவாயென்பார், அறிவாய் நீயே யெனவுங் கூறினர். சாட்சித்துவிதத்திற்குச் சீவேசர் சடமானாற்போல, ஏகசைதன்யத்திற்குச் சாட்சித்துவிதஞ் சடமாக வேண்டுமே, அதனா லது விது வெனுஞ் சடங்களெனப்பட்டது, ஐக்கியமாக்கற் கியைந்தது சாட்சித்துவிதமன்றிச் சீவேசரெனல் பொருந்தாது. அது நேரேயியையும், இது வலிந்து இயையும். வலிந்தியையினுந் தூரத்ததாம்.

(க-து) சாட்சிகள் துவிதமாக்காணில், உனதனுபவ ஸ்புரிப்பைக் கொடுக்கி லஃதேகமாக விளங்கும். அங்ஙனம் விளங்கலே வியாபக விளக்கம், அவ்வியாபகவிளக்கமாக நில்லுதி யென்பது. (75)

**76 - கவி. (அ--கை.)**

[உபதேசிக்க வெடுத்துக்கொண்டதத்தொமசி யென்னு மகாவாக்கியத்தில், தத்தொமென்பதை வாச்சியார்த்தம் இலட்சியார்த்தமென விரண்டாக்கி, வாச்சியார்த்தத்துக்கு ஐக்யங் கூடாதென விக்கவியிற் கூறுகின்றார்.]

**இந்தநீ தொம்ப தத்தி னிலக்கியப் பொருளா மென்றும்**
**பந்தமில் பிரம மேதற் பதந்தனி னிலக்கி யார்த்த**
**மந்தமாஞ் சீவ னீச னவர்களே வாச்சி யார்த்தம்**
**சந்ததம் பேத மாவார் தமக்கயிக் கியங்கூடாதே.**

(இ-ள்.) இந்த நீ தொம்பதத்தி னிலக்கியப் பொருளாம் (எ-து) - இந்தநிலையாயுள்ள நீ யென்னுங் கூடஸ்தனே தொம்பதத்தி னது இலட்சியார்த்தமாம்: - என்றும் பந்தமில் பிரம மேதற் பதந்தனி னிலக்கி யார்த்தம் (எ-து) - எப்போதும் பந்தரகிதமாயுள்ள அதுவென் னும் பிரமமே தற்பதத்தின் இலட்சியார்த்தமாம்: — அந்தமாஞ் சீவ னீச னவர்களே வாச்சி யார்த்தம் (எ-து) — முதலீறுள்ள சீவேச ரெனப்படுபவர்களே, நீ யென்னுந் தொம்பதத்திற்கும், அதுவென்னுந் தற்பதத்திற்கும் வாச்சியார்த்தமாம்: — சந்ததம் பேத மாவார் தமக்கயிக் கியங்கூடாதே (எ-து) — ஐக்கியமாக்கினும் எப்போதும் பேத முறுவரா தலி னிவர்களுக் கைக்கியமென்பதே கூடாது. எ-று

நீ தொம்பத மென்றதனால் அது தற்பதமெனவும், பிரமந் தற்பத மென்றதனால், கூடஸ்தன் தொம்பதமெனவும், அந்தமாமென்ற தனால் ஆதியெனவும், சீவ னீச னவர்களே வாச்சியார்த்த மென்றத னால் தொம்பதந் தற்பதம் நீ அது வெனவும், உரைகொண்டாம். பேதமாவாரெனப் பொதுப்படக்கூறினும் சமஷ்டி வியுஷ்டிபேதஞ் சாக்ஷிக்கின்மையின் சீவேசரைக் குறிக்கப்பெற்றும். பெறுவே கற்பித சைதன்னியரென்ருயிற்று. இது சுருதிபூர்வமாக வுபதேசிக்கப் புகுமர்த் தம்.

(க-து.) ஐக்கிய மினையுதற்கெனவும், கூடாமை யினையுதற் கெனவுங் கூறியதென்பது. அந்தத்தா லாதிவருவித்தாம்.

77 - கவி. (அ — கை.)

[ஐக்கியங் கூடாமைக்கேது இக்கவியிற் கூறுகின்ருர்.

பேதமா னதுவுங் கேளாய் பேராலு மிடங்க ளாலு
மோதரு முபாதி யாலு முடலாலு முணர்வி னாலும்
பாதலம் விசும்பு போலப் பலதூர மகன்று நிற்பா
ராதலா லிவர்க்கெந் நாளு மயிக்கியமென் பதுகூடாதே.

(இ-ள்.) பேதமா னதுவுங் கேளாய் (எ-து) — முன்னர்ப் பேத மென்றேமே யதுவு மின்னதெனக் கூறக்கேளுதி: — பேராலு மிடங் களாலு மோதரு முபாதியாலு முடலாலு முணர்வினாலும் (எ-து) — சீவேசரென்னும் பெயர்களாலும் பூமிமுதலிய விடங்களாலும், கைலாய முதலிய விடங்களாலும், சொல்லுதற்கரிய சமஷ்டி வியஷ்டி யெனனு முபாதிபேதங்களாலும் காரணசரீரம் காரியசரீரமென்னுந் தேகபேதங் களினாலும், பேரறிவு சிற்றறிவென்னு முணர்வுபேதங்களினாலும்: — பாதலம் விசும்பு போலப் பலதூர மகன்று நிற்பார் (எ-து) — பாதாள

முஞ் சுவர்க்கமு மெங்ஙன மதி தூரமோ வதுபோ லவ்வள தூரம் நீங்கிநிற்பார்கள்:—ஆதலா லிவர்க்கெந் நாளு மைக்கியமென்பது கூடாதே (எ-து)—ஆகையா லிவ்விருவர்க்கு மைக்கியமென்ப தெற் நாளுங் கூடாது. எ-று

பெயர், இடம், உபாதி, உடல், உணர்வு என்னுமிவைகளால் தனித் தனி பேதமுடையோர் சீவேசர். எனவே, இங்ஙனம் பேத முற்ற சித்தம் என்று மல்லலரு தென்பதைக் குறிக்கப்பெற்றும். அவர் பேதமுறுவதாலாயபய னெமக்கென்னையென்னுங் கடாவரி னிதுவிடை யெனக்கொள்க. நானென்னுதாருலகி லொருவருமில்லை. அதனை யாரா யப் புகுவாரு மில்லை. உளரெனில் ஆராய்ந்தாராய்ந்து சென்று சென் றெட்டாமையி னங்கே பொருளல்லதைக் கொண்டனர், கொண்டத னாற் றுவிதபேத மறுதற்கிடமில்லை. இல்லாததாற் சிற்றறிவு சிற்றின்ப, பேறறிவு பேரின்பமென்னும் பேத மெங்ஙன மகலும், அகலாததால், சுகம் தனக்கயலென்ப தெங்ஙன நீங்கும்; நீங்காதாகவே, தேகமே நானென முன்போல் வரும். வரவே, ஆண் பெண்பேதந் தானேவரும், வரவே, மோகாதிகட் கிடமாம், இடமாகவே, பந்தம்பலப்படும், படவே, ஆலம்விழுதுபோற் கெட்டியாம். இவையெல்லாம் நானலதை நானுகக்கொண்ட விபரீதத்தாலன்றோ; இங்ஙனமாய வவசரத்தில் உடனழிவில் உடலையன்றி நானெனற்குப் பொருளறியார் எதை நானென அறிவர். உடலோடொழிந்ததெனில், உடனுகவேண்டும். ஆகுமெனின், அன்னியத்தா லறியப்படாமலும் அபிமானிக்கப்படா மலும் உபசரிக்கப்படாமலும் தானே கர்த்தத்துவமாய் நின்று ஆலிங்கன முதலிய வற்றாலாய சுகப்பேற்றை யனுபவிக்கவேண்டும்: அங்ஙனமின்றே. ஆதலின் அகர்த்தா. இதனைத் துணைக்கருவியாகக் கொண் டனுபவிப்போன் கர்த்தா. அவன் ஆன்மா. அவனுடலன்று. அவன் சித்து. உடல் சடம், ஆதலின் எங்ஙனம் ஒன்றும். போக தாகமுடையோன் ஆன்மா. அவனுக்கிவ்வுடல் நீங்குவதாற் போக தாகமொழிந்ததோ? இல்லையே. ஒழியாதளவு மிதுபோன்றவுடல் யாதேனும் வேண்டும். வேண்டவே, எங்ஙனஞ் செனனமகல்வர். அகலாதளவும், அல்லலுறுது. ஆதலால், நானென்பதை யறிந்தே தீர வேண்டும். இதனை மறுத்தற்கிடமின்று. நானென்பதை யுள்ளவா றறிந்தால் அப்போது பேதமெங்கே? அறியாதளவு முண்டெனக் குறிப்பிக்கப் பேதங் காட்டப் புகுந்தனரன்றி வேறன்று. அறிவை யன்றிச் சீவேச ரின்றுதலால் அந்தநாட்டத்தி லேகம். இது இலட்சி யார்த்தம். தன்னை யறிவேவடிவெனக் கேட்டுங் காணுதானுக்கு

அயனெனக் காணுமாதலால் அவனுக் குபாதியன்றிச் சீவேச ரெனற்குப் பொருள் வேறென் றெங்ஙனம்படும். படாது, ஆதலினந் நாட்டத்திற் சீவேசர் பெயர் இடம் உபாதி உடல் உணர்வு முதலிய வற்றாற் பேதமாகக் காணப்படுவரன்றே; ஆதலிற்பேதம். இது வாச்சியார்த்தம்.

(க-து.) இலட்சியார்த்தம் ஏகத்தையும், வாச்சியார்த்தம் பேதத் தையும் விளக்கநின்றதென்பது, இனி யேகமாக்கற்குப் பேதங் காட்டிய தெனவறிக. (77)

78 - கவி (அ - கை)

[வாச்சியார்த்தமென்னும் பேதவாதத்தை மறுத்தற்கு இலட்சி யார்த்தமென்ற பேதவாதமாய் நின்றுள்ள மூன்றிலக்கணை வாக்கியத்தின் பெயரை இக்கவியிற் கூறுகின்றார்.]

வடநூல்வல் லவர்கள் சொல்லும் வாசகப் பொருள்சே ராம
லிடராகிற் பொருளாம் வண்ண மிலக்கணை யுரையாற் கொள்வர்
திடமான வதுவு மூன்றாச் செப்புவார் விட்ட தென்றும்
விடலிலா தென்றும் விட்டு விடாததென் றும்பே ராமே.

(இ-ள்) வடநூல் வல்லவர்கள் சொல்லும் வாசகப் பொருள் சேராமலிடராகில் (எ-து)—சமஸ்கிருதப் பூரணபண்டிதர் வாச்சி யார்த்தத்திற் பிரதிவாதிக்கும் வாசகார்த்தம் பொருத்தமாகாமற் பேதிக்குமாயின்: - பொருளாம் வண்ண மிலக்கணை யுரையாற் கொள் வர் (எ-து) - பேதநீங்கி யனர்த்த மர்த்தரூபமாக விளங்க இலட்சணை வாக்கியத்தால் திருத்திப் பொருள் கொள்வரர்கள்: — திடமாக வதுவு மூன்றாச்செப்புவார் (எ-து) — அந்த இலட்சணைவாக்கியமு மூன்றுவிதமா யிருப்பதாகத் திடமாகக் கலைவல்லோரே சொல்வார்கள்: - விட்ட தென்றும் விடலிலா தென்றும் விட்டு விடாத தென்றும் பேராமே (எ-து) — அவை, விட்டலக்ஷணையென்றும், விடாதலக்ஷணையென்றும், விட்டுவிடாதலக்ஷணையென்றும், பெயர்பெறுவனவாம். எ-று.

வாசகப்பொருள் சேராமலிடராதல் என்பது; அவர்கள் வாச்சி யார்த்த முழுது முணர்ந்தவிடத்து ஐயந்தோன்றுமாறு; நாமுஞ் சீவ ராதலி னிப்பேத மென்றகலுதுமோ வெனவரும், வரின், யாமாரென வரும். அடிமைத்திறத்துக் கனர்த்தமாமெனின், இதன்பலன் யாதென வரும். நல்வினைதீவினைக் கியைந்த சுகதுக்கமெனின், ஒன்றிலொன் றில்லாமற்போத லப்பயனுக் கியல்பு, நமக்கியல்பு இவற்றோடு

மொத்துண்டிருத்தலோ வெனவரும். இருவினையொப்பு, மலபரிபாக முதலிய பயன் வேறுள, இவற்றிற் கியைந்த தவம்புரியி னிவையும் வாய்க்கும் அப்போ திவ்விடர், நீங்குமெனின், இப்போதில்லாத வப்பய னெப்போது மிருக்குமாவெனவரும். அது கேள்வியல்ல வெனின், யானே யையமயமாயிருக்கின்றேன், விடையுமையமயமாயி னென்செய்வேனெனவரும். அதற்குறுதிமொழி யில்லாமற்போதலே யிடராதலெனவறிக. பொருளாம்வண்ணமென்றது; எதைச் சீவ னெனல். எதையீசனெனல். உபாதிகுணமெனின், ஓர்முதலன்றே யிவையோர் முதலுக்குத் துணைக்கருவியாமே யெனவரும். எதுவாறு லறிகின்றதோ வதுவெனின், புாடபெயர்ச்சியா? அதுவும் வினைமுத லன்றே யெனவரும். விகுதிமுதல் பகுதியிறுதியாகக்கிடந்த தத்துவங் கூட்டங்களெனின், தத்துவசோதனையில் அல்லவல்லவென்று வரலா மாவெனவரும். அறிவெனின், சின்னவறிவு, பெரியவறிவென்று வரலாமாவெனவரும். உபாதியாதியாலெனின், முன்னமே யறிவன் றென முடிந்ததே யெனவரும். இங்கே விடைதரற்கு மொழியின் மையினிது இலக்ஷணவாக்கியமின்றியமையாதென்பதுபற்றியென்க. கொள்வரென்னும் வினைக்குக் கர்த்தா வடநூல் வல்லவர்களெனவே, சொல்லும் என்னும் வினைக்குக் கர்த்தா சுருதியெனக்கொள்க.

(க-நு.) லக்ஷணார்த்தமின்றித் துவிதபேத மருதென்பது. லக்ஷணார்த்தமெனினும், லக்ஷியார்த்தமெனினு மொக்கும்

வினு: — மீமாம்சத்திலுள்ள கர்மம். பத்தி, ஞானம், என்பவற்றுள் கலைவல்லோரும் ஞானத்தை யேலாததற் கேதென்னை?

விடை: — அஃதெட்டாமைபற்றி.

வினு: — அதனுற் கல்விஞானத்துக்குச் சிறப்பென்னை?

விடை: — தம்மை யொழுக்கவழி நடாத்துதலே யென்க.

வினு: — இவரேனுமுணராவிடத்திவர்செய்த பாஷியத்திலென் சிறப்பு?

விடை: — இவர்போன்றனர் மதிக்குமதிப்பே யெனவுணர்க.

வினு: - துவிதபூரவ முடலிலோ? உணர்விலோ? உடலிலெனின், உணருமா? உணர்விலெனின், அவ்வுணர்வு தன்னை யறிதற்பாலதா? அயலை யறிதற்பாலதா? தன்னை யறிதற்பாலதெனின், அயலென லுண்டா? அஃதிரண்டாகுமா? இவையெல்லாஞ் சொல்வாதமெனின்,

விடை: — இதற்குமேற் ரேன்ருமையின். குதர்க்கமென வோராது தர்க்கமென்வெண்ணி முன் பின்பொருத்தமின்றி வாதிப்பர் இது வேயன்றி வேருேர் பசையு மின்றென வுணர்க. (78)

79 - கவி (அ கை)

[மூன்று லக்ஷணார்த்தத்தையு முதாரணமுகத்தா லிக்கவியிற் கூறுகின்றார்.]

கங்கையிற் கோஷ மென்றுங் கறுப்புச்சேப் போடு தென்றுந்
தங்கிய சோயந் தேவ தத்தனென் றுஞ்சொல் வார்க
ளிங்குதா ரணங்க ளாக்கி யிந்தமூன் றுரைக ளாலே
துங்கநூல் விரோத மான சொல்லெலாம் பொருளாந் தானே.

(இ-ள்.) கங்கையிற்கோஷமென்றுங் கறுப்புச்சேப் போடு தென்றும் (எ-து) - விட்டலக்ஷணை யென்பது; கங்கைக்கண்ணுள்ளது இடைச்சேரி என்றும், விடாதலக்ஷணை யென்பது; கறுப்புஞ்சிவப்பு மோடுகின்றனவென்றும்: — தங்கிய சோயந் தேவ தத்தனென்றுஞ் சொல்வார்க ளிங்குதாரணங்களாக்கி (எ-து) – விட்டுவிடாத லக்ஷணை யென்பது; அவனெனவு மிவனெனவு நின்றுளான் தேவதத்தனென்று மிவற்றை யிங்கே யுதாரணங்களாக்கிச்சத்துக்கள் சொல்லுவார்கள்:-இந்த மூன்றுரைகளாலே துங்க நூல்விரோத மானசொல்லெலாம் பொருளாந்தானே (எ-து) – இந்தமூன்று லக்ஷணார்த்தத்தினுற் பிரபல சுருதிக்கு முரணாய அற்பசுருதி வாக்கியங்களனைத்தும் பொருளாக முடியும். எ-று

கங்கைக்கு இக்கரையினின்றோன் செவியிலக்கரையில் தயிர் விற்போள் சத்தங்கேட்டவளவி லிச்சத்தங் கங்கையின் கண்ணுள்ள தாகக்கருதிநீரிலிருக்குமா விடைச்சேரி, கரையிலிருக்கும். நீரிலிரா தென்புழிக் கங்கைவிட்டது. அதுபோல, உணருந்தர்ம முபாதிதோறு மிருத்தலி னஃதுபாதியின தர்மமா? வேறொன்றின் தர்மமா? சட மாதலி னுபாதியின் தர்ம மன்றென்புழியுபாதி விட்டது. (இது விட்ட லக்ஷணை.) இங்கே யுபாதியென்றது, தூல முதலிய மூன்றுதனுவை. ஒருவன் தனது கறுப்புப்பசுவையும், சிவப்புக் குதிரையையும் பற்றச் சொல்லும்போது, அவைகள் விரைவாகவோட விவனலுத்துநின்று அம்மார்க்கமா யெதிரில் வருவோனைக்கண்டு, கறுப்புஞ் சிவப்புங் கண்டையாவெனக் கேட்க, அதற்கவ னிரண்டு மோடுகின்றனவெனக் கூற, இதனுல் கருமையுஞ் செம்மையுங் குணமாயிற்றே யஃதோடுமா? ஓடுதலாகிய புடைபெயர்ச்சிக்கு வினைமுத லுடலாயிற்றே. அந்த அந்தவுடலே குணியென்னப்பட்டது, படவே அவன் குணத்தைக்

கேட்க, குணத்தைவிடாது குணியைக்கண்டு விடைதந்தானென்று யிற்று, ஆகவே குணம் விடாதது. அதுபோல, முன்ன ருபாதியன் றென நின்றது யாதெனின், அது மனோவாக்குக்காயங்களா லின்ன தென வறிதற்கரிதாதலின், குணங்காரணமாக வறிய வேண்டுமென, நித்தியம், பூரணம், ஏகம், பரமார்த்தம், சத்து, சித்து, ஆனந்தம், இவைபோன்ற பரவஸ்துவுக் கியைந்த எண்ணிறந்த குணங்களமைக் கப்பட்டன. இவைகளில் யாதேனு மோர்குணங்காரணமாக வறிய நின்றது, பரம். எனவே, குணம்விடாதது. (இது விடாதலக்ஷணை.) இங்கேகுணமென்றது; சகுணங்களை. தேவதத்தனென்னும் பெயருடை யோ னொருவன் காசியிற் சிலகால மரசனுயிருந்தான். அஃதூழ்வழியா வந்ததுபோனீங்க, அதனுல் விரத்திவந்து தென்றிசையில் கடுந்துறவி யானுன் என்னுமிடத்து, அவ்வரசவேடமும், அக்காலமும், அவ்விட மும்; இந்தச் சந்நியாசவேடமும், இக்காலமும், இவ்விடமும், தேவ தத்தனை யன்றி யில்லாமையின், அரசனே சந்நியாசி, சந்தியாசியே அரசன், என்றுகவேண்டுமன்றே; ஆயினும், குடும்பத்திற் சந்நியாச மும், சந்தியாசத்திற் குடும்பமும், ஒன்றிலொன்றில்லை, இல்லையேனும், இவ்விரண்டினுந் தேவதத்தனிலனே, உளனெனின். இவ்விரண்டுந் தேவதத்தனு அலனெனின், இவனையன்றி யவையுளவோ? இல்லை யெனின், தேவதத்தன் மாத்திர முண்மை, ஏனைய வேடமுதலிய வனைத்துங் கற்பனை. இவனவையல்லனுதலின் விட்டும், இவனையன்றி யவை யில்லையாதலின் விடாததும் இருப்பதுபற்றி இது விட்டுவிடா தது. இதுபோல அறிவல்லாத நானென்பதெங்கணுமில்லை, உளதே லறியட்டும். இலதே லறிவாகட்டும். எனவே, அறிவையன்றி நானெனவில்லை, நானென்னு மகம்பாவ மில்லாத வுயிர்களில்லை யென்ருயிற்று. ஆகவே, திணைபாலிடமல்லாத வுயிர்களுளவோ? இலவோ? இலவெனின் எந்தத் திணைபாலிடங்கட் கென்று முரியன? யாதுக்கு முரியதன்றெனின், இந்தவுயிராகிய வறிவு; எந்தக் கால மிடங்கட்கும் பெயர்கட்கு முரியது? யாதுக்கு முரியதன் றெனின், அப்போதறிவு யாவு மல்லவாகவேண்டும். அல்லவெனின், இத்திணை பாலிடங்க ளன்னியமாகவேண்டும். ஆகாதெனின், யாவு மறிவல்வ வெனவும், அறிவன்றி யில்லையெனவும் பெற்ரும். அறிவு உண்மை. அயல் கற்பிதம். அயலல்ல வறிவென்புழிவிட்டது. அறிவன்றியய வில்லையென்புழி விடாதது. (இது விட்டுவிடாத லக்ஷணை.) இங்ஙன முணர்ந் தனுபவித்தல் இலட்சியார்த்தம். இங்ஙனமுணராது பாவித் தல், வாச்சியார்த்தம். இது நிஜானுபூதி வாக்கியமென்பதை யறிய

வேண்டின் தினந்தோறும், சகலத்தில் யாவுமாயும் கேவலத்தி லில்லாததாயும், நீயாகிற வறிவு நிற்பதைக்காணலாம். ஐயந்திரிபுக் கிடமின்று இங்ஙனமுணர்ந்தார்க்கே யிம்மையில் தானே முத்தி யென்பது கூடும் என்னே, "ஐயத்தி னீங்கித் தெளிந்தார்க்கு வையத்தின் வான நணிய துடைத்து" என்றார் திருவள்ளுவநாயனார். ஞான காண்டமாகிற விம்மூன்றிலக்ஷணவாக்கியத்தால், கர்மம், பத்தி யென்னு மிவ்விரண்டுகாண்டமாகிற வாச்சியார்த்தமனைத்தும் பொருளாதற் கிடமுண்மையின் இந்த மூன்றுரைகளாலே துங்கநூல் விரோதமான சொல்லெலாம் பொருளாந்தானே யென்றார். துங்கநூல், உயர்வுநூல். அது, பிரபலசுருதி. அது, ஞானகாண்டம். விரோதம், எதிர்மறை துங்கநூலுக்கெதிர்மறை. பத்தி, கர்மம், இவை யற்ப சுருதி. ஆதலின் துங்கநூலென்பது, பண்புத்தொகை. ஞானகாண்ட மின்றேல் யாவுமுரணும். மதத்தரே சான்று. (76)

## 80 - கவி (அ—கை)

[இந்த விலக்கண வாக்கியத்தைமாத்திரம் விடாது சிந்திக்கின் துவிதபாவ மிறக்குமென்பதை யிக்கவியிற் கூறுகின்றார்]

பன்னிய சோய மென்னும் பதங்களின் வாச்சி யார்த்த
மன்னிய தேயங் கால மவனிவ னென்ப வெல்லாஞ்
சொன்னவிவ் விரோதம் விட்டுத் தொகையிலக்கியம்விடாம
லுன்னிடிற் றேவ தத்த னொருவனே வெளியாக் காட்டும்.

(இ-ள்.) பன்னிய சோயமென்னும் பதங்களின் வாச்சி யார்த்தம் (எ-து)—முன்னர்க் கூறியசோ, அயம் என்னப்பட்ட பதங்களின் வாச்சியார்த்தமாவது: —அன்னிய தேயங் காலமவனிவ னென்பவெல்லாம் (எ-து)—வெவ்வேறான இடமும் காலமும், அவனும், இவனும், எனச்சொல்லப்பட்ட அனைத்துமாம்: —சொன்னவிவ் விரோதம்விட்டுத் தொகையிலக்கியம் விடாமலுன்னிடின் (எ-து) — இங்ஙனமாகக்கூறிய விவ்விரோதக் கற்பிதநிலைகளை விட்டு முடிவாயுள்ள இலக்கியார்த்தத்தை விடாது சிந்திப்பையாயின்: —தேவதத்தனொருவனே வெளியாக் காட்டும் (எ-து)—தேவதத்தன் கற்பிதங்களல்லனுதலி னவனேமாத்திர மவ்விலக்கியார்த்தம் பிரத்தியக்ஷமாகக் காட்டிவிடும். எ-று.

சோ, அயம், வாச்சியார்த்தமெனவே, தேவதத்த னிலக்கியார்த்தமென்றாயிற்று. ஆகவே, சோ, அயம், என்பவை, சுத்தம், அசுத்தமென நிற்கும். சுத்தம், கூடஸ்தபிரமம். அசுத்தம் சீவனீசன், கூடஸ்தபிரமத்திற்கைக்கிய முரணின்றித் தானேயமையும். சீவேசருக்

குபாதி குணங்கள் சமஷ்டி வியஷ்டியாயும், பேதகாரண காரியமாயு மிருத்தலின், ஐக்கியம்முழுது முரணும் முரணுவவசரம் இலட்சியார்த் தம். முரணுமவசரம், வாச்சியார்த்தம். ஆதலின் தொகையிலக்கியம விடர்மலெனவும், சொன்னவிவ்விரோதம் விட்டெனவும், இங்ஙனமா கிய நிலையாலன்றி யேகசைதன்னியம் விளங்காதாதலின் உன்னிடிற் றேவதத்த் னெருவனை வெளியாக் காட்டு மெனவுங் கூறினர்.

(க-து.) உண்மைவிளங்கற்பாலது விட்டுவிடாத இலட்சணை யென்பது. விளங்கல், தன்னைத்தான் காண்டலை. தன்னைத்தான் காணுமாறிங்ஙனமென அறியாதார், ஏங்ஙனமாய நிலை சொல்லினுங் கேளார். சுரப்புநீர் போல்வதன்றி யானந்தம் மோழைபோல்வதன்று. இனிக்கூறுநிலையானு முணர்கச:—அயம், ॰சோயம். இது குணசந்தி. (80)

## 81 - கவி. (அ்—கை)

[தற்பதம் தொம்பதமென்னு மிருபதங்களும் அவற்றினி லக்கி யார்த்தங்களும் ஐக்கியத்தை யுணர்த்தற்பாலவென வசிபதங் காட்டுநிலையை யிக்கவியிற் கூறுகின்ருர்.]

தத்துவப் பதங்க டாமுஞ் சாட்சியாய்ப் பிரம மான
வத்துவை விடாமற் பேத வாச்சியார்த் தத்தை விட்டு
நித்தமு மதுநீ யாகு நீயது வாகு மென்னு
மர்த்தமு மகண்ட மென்றே யசிபத மைக்கியங் காட்டும்.

(இ-ள்) தத்துவப் பதங்கடாமும் (எ-து)—பேதம் அபேதமென் பவற்றுள் அபேதநிலையை யேற்றறக்கியைந்த வவசரத்துத் தற்பதந் தொம்பதமென்னு மிவ்விருபதங்களும்:—சாட்சியாய்ப் பிரமமான வத் துவைவிடாமல் (எ-து)—சாட்சியாய் நின்றுள்ள கூடஸ்த பிரமமாக விளங்கிய சுயஞ்சைதன்யத்தை இலட்சியிக்கும் இலட்சியம் விடாமல்:— பேதவாச்சியார்த்தத்தை விட்டு (எ-து)—சீவேஸ்வர பேதமாயுள்ள வாச்சியார்த்தத்தைக் கையறவிட்டு:—நித்தமு மதுநீ யாகு நீயது வாகுமென்னு மர்த்தமும் (எ-து)—எப்போதும் பிரமமே கூடஸ்தனும், கூடஸ்தனே பிரமமாம் என்னு மர்த்தமும்:—அகண்ட மென்றே யசி பத மயிக்கியங் காட்டும் (எ-து)—ஏகமென்றே யசிபதமானது துவித நாசத்தை விளக்கும். எ-று.

சாட்சியாய்ப் பிரமமான வத்துவென்றதனுல், இலட்சியார்த்த மாயிற்று. பேதவாச்சியார்த்த மெனவே, அபேதலட்சியார்த்தமென வுரைகொண்டாம். தத்துவப்பதங்கடாமும் அர்த்தமும் ஏகமென்றே

அசிபதமானது ஐக்கியங் காட்டுமெனக் கூட்டிப்பொருள்கொள்க. அசி பதமானது; வாச்சியார்த்தத்தை விட்டு வத்துவைவிடாமல் ஐக்கியங் காட்டுமென முடிக்க. அது நீயாகும் நீயது வாகுமென்பது ஏகாரந் தொக்குநின்றனவெனக் குறிக்கின்றது. இலட்சியார்த்தங் கூடஸ்த பிரமமென்றதனால், வாச்சியார்த்தஞ் சீவேசரென்றுமிற்று. அசியென் னும் பதமானது ஐக்கியதனையே காட்டநிற்கும்பதம்.

(கு-து) அசியென்னும் பதம், வாச்சியார்த்தத்திற் பிரமமெனப் பொருடந்து, இலட்சியார்த்தத்தில் ஐககியப்பொருளைத்தரும். இவ் வைக்கியத்தை மறுப்பார் இதனை யேற்றற்கோர் உத்திசொல்லுதும். அதாவது; உடல் தோறு நிற்கு மறிவு வுடலன்று, அப்போது பிரத் தியேகவஸ்து. அதனையறியவேண்டிநேன் குறியி லுடல்தட்டுமா? தட் டாவிடத் தவனுக் கறிவு பலவா? ஏகமா? பலவெனின், உபாதிதட்ட வேண்டும். இன்றெனின், ஏகமாகவேண்டும். இங்ஙனமாவதாலும், அனுபவம் இருத்தலாலும், மறுத்தற்கு ஒண்ணாது. (81)

## 82 - கவி (அ—கை)

ஐக்கியத்திற் கியைவ தினையதெனவும், இயையாத தினையதென வும், உபமான பூர்வமாக இக்கவியிற் கூறுகின்றார்.]

கடநீரின் மேக நீரிற் கண்டவா னிரண்டும் பொய்யே
குடவானும் பெரிய வானுங் கூடியொன் றுமெய் போது
மிடமான பிரமஞ் சாட்சி யிரண்டுமெய் போது மேகந்
திடமாகச் சுவானு பூதி சிவோகமென் றிருந்தி டாயே.

(இ-ள்) கடநீரின் மேக நீரிற் கண்டவா னிரண்டும் பொய்யே (எ-து) — கடசலப் பிரதிபிம்பாகாயமும், மேகசலப் பிரதிபிம்பாகாயமு மித்தையே: - குடவானும் பெரிய வானுங் கூடியொன் றுமெய் போது (எ-து) - கடாகாயமும் மேகாகாயமு மெய்போதுங் கலந் தேகமாதற் பாலன: — (அதுபோல) இடமான பிரமஞ் சாட்சி யிரண்டுமெய் போது மேகம் (எ-து) — எவற்றிற்கு மிடமாயுள்ள பிரமமும், கூடஸ்தனுமாகிய விரண்டு மெய்போது மேகமேயாம்: —(ஆதலின்) திடமாகச் சுவானு பூதி சிவோகமென் றிருந்தி டாயே (எ-து) — யாதோர் ஐயமுமின்றித் திடமாகச் சுவானுபூதியாகிய சிவோகம் என்றிருந்திடுதி. எ-று.

வாச்சியார்த்தமாகிய சீவேசர் மித்தையாதலா லவர்கட் கெங் ஙனமைக்கியங் கூறத்தகுமென்பரர், உபமானத்தாற் கடநீரின் மேக நீரிற் கண்டவானிரண்டும் பொய்யே எனவும், மேகநீரில் வானென்ற

தனுல், குடவானென்றற்போல மேகவானென்றும். இதனுல் கடாகாயமும் மேகாகாயமும் உண்மையாதலி னிரண்டுங்கூடி யேகாகாயமாகத் தகுமென்பார், குடவானும் பெரியவானுங் கூடியொன் றமெப்போது மெனவும், அதுபோலக் கூடஸ்தனும் பிரமமும் உண்மையாதலின் இரண்டுங்கூடி யேகசைதன்னியமாகத் தகுமென்பார், இடமான பிரமஞ் சாட்சி யிரண்டுமெப் போதுமேகமெனவும், இதுவே ஸ்திரமான வனுபூதியென்பார், திடமாகச் சுவானுபூதியெனவும், இதுதானகம்பிரமமென்பார், சிவோகமெனவும். இதனினு மேலாய நிலை எவ்விதத்தினு மில்லையாதலின் இருந்திடாயே எனவுங் கூறினர். சிவ — அகம், என்பது, சிவோகமென்றாயிற்று. எவ்வுயிருமாகிய வறிவும் தேகோகம், பிராணோகம், இந்திரியோகம், மனோகம், புத்தோகம், முத்தோகம், பூரணனந்தோகம், சத்தோகம், சித்தோகம், சாந்தோகம் முதலிய இவைபோல்வன பிறவுமாகத் தானுகற்பாலதின் முடிவாகச் சிவோகமெனல் சுருதியுத்தி அனுபவ சம்மதமெனவறிக.

(க-து)ஐக்கியநிலை சிவோகமென முடித்துச் சும்மாவிருந்தனரா சிரியரென்பது. இஃதுபதேச முடிபு. (82)

83 - கவி (அ—கை)

[அவ்வுபதேசத்தா லிவன் தரிசித்த தினையதென
விக்கவியிற் கூறுகின்றார்.]

தஞ்சமாங் குருவுஞ் சொன்ன தத்துவ வழிதப் பாமற்
பஞ்சகோ சமுங்க டந்து பாழையுந் தள்ளி யுள்ளிற்
கொஞ்சமா மிருப்பும் விட்டுக் கூடஸ்த பிரம மென்னு
நெஞ்சமு நழுவி யொன்றாய் நின்றபூ ரணத்தைக் கண்டான்.

(இ-ள்.) தஞ்சமாங் குருவுஞ் சொன்ன தத்துவ வழிதப் பாமல் (எ-து)—துக்கநிவிர்த்திக்குத் தஞ்சமாய் நின்றுள்ள குருநாத னனுக்கிரகித்த தத்துவ சோதனைவழித்தாய்ச் சென்று சிறிதுந் தவறுமல்:— பஞ்சகோசமுங்கடந்து பாழையுந் தள்ளி (எ-து) - பஞ்சகோசங்களையும் ஒவ்வொன்றாகக் கடந்து அப்பாற் ருேற்றும் பாழையு மொழித்து:— உள்ளிற் கொஞ்சமா மிருப்பும் விட்டுக் கூடஸ்த பிரம மென்னும் நெஞ்சமு நழுவி (எ-து)—உள்ளத்தின்கண் ணெழிந்தபற்றுக்களன்றி மிச்சமாகவொதுங்கி மறைந்துநின்ற அற்பவாசனு விருப்பையும் விட்டுக் கூடஸ்த பிரமமென்னு நினைவும் மெல்லநழுவி:—ஒன்றாய் நின்ற பூரணத்தைக் கண்டான் (எ-து)—ஏகமாகப் பிரகாசித்துநின்ற பரிபூரண சைதன்னியத்தை யகக்கண்ணுல் தரிசித்தனன். எ-று.

தத்துவவழி-தத்வமசி யென்னும் வாக்கியவழியைத் தப்பாமல் கடந்து, தள்ளி, விட்டு, நழுவி, கண்டான் எனமுடிக்க. கொஞ்சமா மிருப்பென்பது போனதொழிய மீந்த வாசனை. நழுவுதல் சுத்தசங் கற்பமுஞ் சிறிது சிறிதகலல். ஒன்ருய் நின்ற பூரணத்தைக் கண்டா னென்பது திரிபுடியிழப்பைக் காட்டநின்றது மெய்யே, கண்டானென் புழிக் காணுதல் ஞானம், காணப்படுதல்ஞேயம், காண்பான் ஞாதுரு; இங்ஙன மிருக்கத் திரிபுடி யிழப்பெனல் எங்ஙனங்கூடும்? இது சொப் பிரகாசத்தின் மகிமை. என்னை, "அத்துவித வத்துவைச் சொப் பிரகா சத்தனியை" என்ருர் தாயுமானவர். உள்ளத்திலென்பது உள்ளிலென விடைக்குறையாய் நின்றது.

(க-து) குருநெறிச்சேறலா லாய பயனைக் கண்டனனென்பது. இதுதான் ஞானகதப்பிரத்தியட்சமெனப்படுதல். இதனையறியாதா ரென்சொலினு மென்னை? இதனைத் தானேதாளுகவிளங்கலென்பர் சத்துக்கள். (83)

84 - கவி (அ - கை.)

[முன்னர் விளங்கிய பிரத்தியட்ச ஞானத்தின் பின்னர் விளைந்த அனுபூதிநிலைகள் இனையவென இக்கவியிற் கூறுகின்ருர் ]

அனுபவா னந்த வெள்ளத் தழுந்தியே யகண்ட மாகித்
தனுகர ணங்க ளாதி சகலமு மிறந்து சித்தாய்
மனதுபூ ரணமாய்த் தேக மானசற் குருவுங் காண
நனவினிற் சுழுத்தி யாகி நன்மகன் சுபாவ மானுன்

(இ-ள்) அனுபவானந்த வெள்ளத் தழுந்தியே யகண்டமாகி (எ-து)—சொப்பிரகாச வெழுச்சிக் கனுபவமாயுள்ள தடையற்ற வானந்தப் பிரவாகத்தில் மூழ்கி, மூழ்கவே யகண்டபரிபூரணமே தானுகி:—தனுகர ணங்களாதி சகலமு மிறந்து (எ-து)—தனு கரண புவன போகங்கள் முதலிய சகல கற்பிதமு நசித்து:- சித்தாய் மனது பூரணமாய் (எ-து)—தெரிவேவடிவாகியும் சின்மாத்திரமானதால் மனது பரிபூரணமாகியும்:—தேகமான சற்குருவுங்காண (எ-து) 'பூரணமே மானிடத் திருமேனிகொண் டெழுந்தருளிய சற்குருநாதனுங் காணும் படி:—நனவினிற் சுழுத்தியாகி நன்மகன் சுபாவமானுன் (எ-து)—தூங்காமல் தூங்குதலாகிய நனவிற்சுழுத்தி நிலையதாகியுஞ் சற்புத்திரன் இன்று தனது சுபாவமாகிய நிரதிசயானந்த வடிவமாயினன் எ—று.

பிறவியந்தக னொருவ னோர்நாள் தேவகதியால் தனக்கு விழி வர அதனுல் பூததினகரனைக் கண்டாங்கு இவன் ஞானதினகரனைக் கண்டான், அவனுக்குப் பயகம்பனுதிக ளெங்ஙன மின்ருே? அங்ஙன

மிவனுக்கு மின்றும். இன்றாகவே யிங்ஙனமாய வனுபவானந்த மவனுக்குச் சற்றே, அதுபோலிவனுக்குச் சற்றே அன்றாதலின் அனுபவானந்த வெள்ளத் தழுந்தியே யகண்டமாகி யெனவும், அவனுக்குச் சூரியப்பிரகாச மேலீடும் ஆனந்தமே லீடு முண்டாகுமன்றே? அம் மேலீட்டால் தனுகரணாதி நான்குமிருக்க அவனுக்குக் காணுமா இவனுக்குக்காண, காணாதாதலின் தனுகர ணங்களாதி சகலமுமிறந் தெனவும், அவனறிவு சூரியப்பிரகாசமாய்நின்றுபூரணமாகுமே, அது போல இவனறிவும், ஞானசூரியப்பிரகாசமாய்ப் பூரணமாகலாமே; ஆதலின் சித்தாய் மனதுபூரணமா யெனவுங் கூறினர். ஊன விழித் திறப்புக்கே இவ்வளவு வியப்பாயின் ஞான விழித்திறப்புக் கெவ் வளவுகோடி வியப்பாகலாம். இதனைத்தெரிவிக்க விவ்வுவமை கூறி னும். இங்ஙனமாய ஞானனுபவ மில்லாரெங்ஙன மிதனை யேற்பர். என்னை, "முக்கனியும் பாற்சோறு முன்பிருக்க நாயருந்திக், கக்கிய சோற்றைக் கருதுவார் – எக்கலைக்கும், எல்லாப் பொருட்கு மிரும் பொருள்யா மென்னுது, வல்லார்க் கடிமைபுகுவார்" என்றார் சொரு பானந்தர், தானகிற வறிவைக் காணதார் அறிவுக் கறிவெனக் குழறி ஞானவரம்பைக் காணது வாளாபோயினர். இவரை ஞானி யென்றேற்பா ரிவர்போல்வார் இவர். "மோனமென்பது ஞானவரம்பு" என்னும் பிரபலசுருதி முடிவை யெங்ஙன மெட்டுவர். ஆயி னிவர் கூறு மோனமோ இதனுக்குக் கீழாய மோனவகையுளொன்று. இவருந் தானந்தமென்பர், இஃதயலையோ? தன்னையோ? தன்னை யெனின் தானே சச்சிதானந்த மென்னர்களா? அயலையெனின் தானகிற வறிவை யளவைகளா லளந்து தனக்கயல்காட்ட வலி யுண்டாகவேண்டும். வலியின்றேல் சும்மாவிருக்கவேண்டும். தானறிவு, அய லானந்தமெனின், தனக்கானந்த மன்னியமாகவேண்டும். அன்னி யமாயின் தானனந்தமென்று திருக்கவேண்டும். நல்லது; தனக்கயல் சிவம்; அது சச்சிதானந்த மெனின் தானென்னவாகவேண்டும், சத் துஞ்சித்தெனின், அந்தச்சித்து தன்னையறிதற்பாலதோ? அன்னியத் தையோ? அன்னியத்தையெனின், அப்போது சடமாகவேண்டும். சடமெனின் சத்தென்பதசத்தாகவேண்டும். ஏனெனின், தன்னல் தானறியப்படுவது சத்து, அன்னியத்தா லறியப்படுவ தசத்து. அசத்து சடத்தையா சத்துசித்தென்னல். இப்படித்தானிருக்கு மயலைச் சச்சிதானந்தமெனலும் போலும். இது நிற்க. பின்வரும் அப்போது விளக்குதும். (84)

(க-து) நனவிற் சுழுத்திநிலையோடு சுபாவநிலையு மெய்திற் றென்பது.

85 - கவி (அ—கை)

[இவ்வாருய நிட்டைதெளிந் தாசிரியரை வணங்கி நின்று ஒருவாறுசொல்வானுயினு னென்பதை யிக்கவியிற் கூறுகின்ருர்.]

அளிமக னெடும்போ திவ்வா ருனபின் மனது மெல்ல
வெளியில்வந் திடவு ணர்ந்து விமலதே சிகனைக் கண்டு
துளிவிழி சொரியப் பாதந் தொழுதுவீழ்ந் தெழுந்து சூழ்ந்து
குளிர்முகச் சுவாமி கேட்கக் கும்பிட்டு நின்று சொல்வான்.

(இ-ள்) அளிமக னெடும்போ திவ்வா ருனபின் மனது மெல்ல வெளியில் வந்திட வுணர்ந்து விமலதே சிகனைக் கண்டு (எ-து) — அன்புள்ள புத்திரனுகிய மாணக்கன் வெகுநேர மிங்ஙனமாய நிட்டை புரிந்தபின்னர் மெல்லத் தனது மனம் துரியாதீதத்தினின்று துரியத்தில்வர அதினின்று சாமானியமாக விஸ்மரணையில்வர அதினின்றும் விசேடமாகச் செகத்தாகஸ்புரிக்க அதினின்றும் பௌதிகமாக ஸ்புரிக்க இங்ஙனம் ஸ்புரித்ததனு லுலகை நன்குணர, இங்ஙன முணர்ந்ததனுல் களங்கரகிதமாக விளங்கிய குருநாதனைக் கண்டு: — துளிவிழி சொரியப்பாதந் தொழுதுவீழ்ந் தெழுந்து சூழ்ந்து (எ-து) — கண்களினின்றும் ஆனந்தபாஷ்பஞ் சொரியத் திருவடிகளை அஞ்சலியோடு வணங்கி மீண்டெழுந்து வலம்புரி யிடம்புரியாகப் பிரதட்சணம்வந்து: — குளிர்முகச் சுவாமி கேட்கக் கும்பிட்டு நின்று சொல்வான் (எ-து) — உபசாந்த வதனத்தையுடைய குருநாதன் கேட்கும்படி அஞ்சலிகரத்தனுக நின்று கொண்டிதனைச்சொல்லுவான். எ-று.

உணர்ந்து, கண்டு, தொழுது, வீழ்ந்து, எழுந்து, சூழ்ந்து, கும்பிட்டு நின்று சொல்வான் எனமுடித்தல் சிறப்பேயன்றித் தனித்) தனி வினைமுற்ருக்குதலிற் சிறப்பில்லையாதலின் ஒரு வினைமுற்ருக்கி முடித்தாம், (85)

86 - கவி (அ—கை)

இங்ஙனமாய வுதவிக்குக் கைம்மா றறியேனெனத் துதித்தலை இக்கவியிற் கூறுகின்ருர்.]

ஐயனே யெனது ளேநின் றனந்தசென் மங்க ளாண்ட
மெய்யனே யுபதே சிக்க வெளிவந்த குருவே போற்றி
யுய்யவே முத்தி நல்கு முதவிக்கோ ருதவி நாயேன்
செய்யவே ரென்றுங் காணேன் றிருவடி போற்றி போற்றி

(இ-ள்.) ஐயனே எனது ளேநின் றனந்தசென் மங்க ளாண்ட மெய்யனே (எ-து) — கர்த்தனே அடியே னுளத்தகலாது நின்றனந்த

சென்மங்கடோறு மாண்டுவந்த மெய்யனே: - உபதேசிக்க வெளிவந்த குருவே போற்றி (எ-து) - என்னை விளக்குவிக்க எளிதி லெழுந்தருளிய குருநாதனே நமஸ்காரம்: - உய்யவே முத்தி நல்கு முதலிக்கோ ருதவி (எ-து) - பிறவியினின்றுய்யும்படி நிரதிசயானந்த மாக்குவித்த வுதவிக்குப் பதிலுதவியை: - நாயேன் செய்யவேறென் றுங்காணேன் றிருவடி போற்றி போற்றி (எ-து) — நாய்போல் பவனுகியயான் செய்யும்படியான மார்க்கம் வேறொன்றுங் கண்டிலன் ஆதலின் தேவரீர் திருவடிகளுக்கு நமஸ்காரம், நமஸ்காரம். எ-று.

பிறவிகடோறு மெனதுளேநின் ருண்டதென்பது ஏற்றற்பாலதோ? தள்ளற்பாலதோ? தள்ளற்பாலதெனின், யாவரு மிங்ஙனமாய சுவானுபூதி யெளிதிற் பெறலாமே; யானெளிதி லிம்மையிற் பெற்றது, பிறவிகடோறு மெனதறிவைத் திருத்தி வந்தமையால் ஏற்றற் பாலதேயென வறிக. இதனுலன்றோ வுபதேசிக்க வெளிவந்த குருவே யென்றார். இதற்குக் கைம்மாறிவ னறிவாயவிடத்து வேறின்மையின், உய்யவே முத்தி நல்கு முதவிக்கோ ருதவி நாயேன் செய்யவேறென் றுங் காணேனெனப்பட்டது. இதனினு மேலாய வுதவி யின்றென்பதைச் சுருதி யுத்தி யனுபவத்தாற் காணலாம். இவ்வனுபவமத் துவிதத்தி லொழியவேனையவிடத்தின் றென்பதைஞாயஞ் சோதனையாற் காணலாம். (86)

## 87 - கவி (அ — கை.)

[அதற்காசான் சொரூப நிட்டனுகை மாருதிருப்ப தெனினும் வேறு கைம்மா றில்லையெனவிக்கவியிற் கூறுகின்றார்.]

சிட்டனிவ் வாறு சொல்லத் தேசிகர் மகிழ்ந்து நோக்கிக்
கிட்டவா வெனவி ருத்திக் கிருபையோ டருளிச் செய்வார்
துட்டமாந் தடைகண் மூன்றுந் தொடராமற் சொரூப ஞான
நிட்டனு யிருப்பா யாகி னீசெயு முதவி யசமே.

(இ-ள்.) சிட்டனிவ் வாறு சொல்லத் தேசிகர் மகிழ்ந்து நோக்கி (எ-து) — மாணுக்க னிங்ஙனங்கூற வதற்காசிரியர் மகிழ்ந்தவனைப்பார்த்து: — கிட்டவா வென விருத்திக் கிருபையோ டருளிச் செய்வார் (எ-து) — கிட்டவாவென் றவனை யருகிலிருத்தி மிக்க கிருபையோ டின்னு முறுதிமொழி கூறலாயினர்: - (அதாவது) துட்டமாந் தடைகண் மூன்றுந் தொடராமல் (எ-து) — மிகக் கொடியனவாகிய தடைகள் மூன்றுள, அவை மூன்றும்நின்னைத்தொடராமல்: — சொரூப ஞான நிட்டனு யிருப்பாயாகி னீசெயு முதவியாமே (எ-து) — சொரூப

ஞான நிட்டையில் மாருதிருப்பையாயின் அதுதான் நீ செய்வதாகிய உதவியாகும் எ-று.

சொரூப ஞானநிட்டையாவது: – அறிவே வடிவாய்விளங்கல். உண்மைஞானிகள் வேண்டுங் கைம்மா றிதனையேயன்றி வேறன் றெனக்குறிக்க நின்றது, இவர் கூறிய கைம்மாறு. எனவே, பொருள் புகழ் அடிமை முதலியவை வேண்டியன்று. இவை வேண்டினோர் அநாசிரியரெனப்படுவோர். இவரே யுலகிற் பெரும்பான்மையோர். அவரரியர். ஆதலின் இந்நிலை வழுவற்கவென்றுயிற்று. வழுவற்க வென்றது, நீ வழுவின் அந்நிலை வழுவும், வழுவின் முன்போற் சகந்தோன்றும், தோன்றின் அகமமதை யுண்டாம், உண்டாயின் பந்தவினைவுக் கிடமாம், இடமாயின் தளையாம், தளையாயின் பிறவிக் கிடமாம், இடமாயின் ஒழிவின்ரும், இன்ருயின் அமைதியின்ரும், இன்ருயின் நித்தியதிருத்தியின்ரும். இன்ருயின் அல்லலேயொழிவின் றிய பயனும் முடியு மாதலைப் பற்றியென்க.

(க-து.) நீ வழுவாதிருப்பினுந் தடைக ளிருப்பதால் வழுவச் செய்யும். செய்யினும் முன்ன ரவைகளால் நீ பட்ட வருத்தத்தை யுன்னுக, உன்னிடில் சொரூபநிட்டனுயிருப்பை, இருத்தலே கைம்மா றென்பது. (87)

88 - கவி (அு – கை.)

[இங்ஙனந் தெளிந்த ஞானமு நழுவுமோவென் றையுற்ற மாணக்கனை நோக்கித் தடைகள்வரின் அனுபவ நழுவுமென மீண்டுங் கூறுதலை இக்கவியிற் கூறுகின்ருர்.]

நீ நானென் றிரண்டி லாம னிறைந்தபூ ரணமா யெங்கு
நானகத் தெரிந்த ஞான நழுவுமோ குருவே யென்ருன்
ருனகும் பிரம ரூபஞ் சற்குரு நூலாற் ருேன்று
மானலுந் தடைகளுண்டே லனுபவ முறைத்திடாதே.

(இ-ள்.) நீ நானென் றிரண்டி லாம னிறைந்தபூ ரணமா யெங்கும் (எ-து) – நீயென்றும் நானென்றுங் கூறப்படும் பேதம் இரண்டின்றி யெங்கணும் பரிபூரணமாக வியாபித்து நிற்பது: – நான கத் தெரிந்த ஞான நழுவுமோ குருவே யென்ருன் (எ-து) – எனது சொரூபமாகத் தெரிந்து கொண்டஞானமானது நழுவிப்போகவுங் கூடுமா? எனது குருமூர்த்தமே யென்று மாணக்கன் கேட்டான்: – தானகும் பிரம ரூபஞ் சற்குரு நூலாற்ருேன்றும் (எ-து) – தானே தானக விளங்கிய பிரமஸ்வரூபமானது சற்குருவினலும், பிரபல

சுருதியினாலுங் காணப்படும்: — ஆனாலும் தடைகளுண்டே லனுபவ முறைத்திடாதே (எ-து) — அங்ஙனம் காணப்படுவதாயினும் அதனை மறுக்குந் தடைகளுள, உளவாகவாய்க்கி னனுபவ முறுதிப் படுமா? உறுதிப்படாதே. எ-று.

தத்துவங்கள் அனைத்தையும் ஆராய்ந்து தெளியத்தகுவது ஞான மன்றி வேறன்று. அந்த ஞானத்தையன்றி நானென்பது வேறன்று, அந்தநான் பகிர்முகத்தில் நானீயென விரண்டாதற் கியைந்த கண்டங்களாயும், அந்தர்முகத்தில் நா னீயென விரண்டாதற் கியையாது அகண்டமாயும் நிற்பதால் இங்கே முத்திநிசைக் கியைந்தவாறு நீ நானென் றிரண்டிலாம னிறைந்தபூரணமா யெங்கு நானாகத் தெரிந்த ஞானமெனவும், அஞ்ஞான திசையினும், ஞானதிசையினு முள்ள நானெனல் அவ்வவ்வாறு விளங்கும் விளங்கினும் அவை தானன்று தன்னையன்றி யவையில்லை, ஆதலி னெழுவும். இந்நிலை பேதங்களனைத்தும் விளக்கத்தக்கது ஞானானுஷ்டானம். இவ்விளக்கத் தில்தான் ஞானஞ்ஞான ரகிதமாயிருக்கவேண்டும். இங்ஙனமாக வேண்டுநிலை ஞானநுஷ்டான மின்றியக்கண் ணுறுதிப்படாது, அது பற்றித் தடைகளுண்டே லனுபவ முறைத்திடாதே யெனவுங் கூறினார்.

(க-து) தடைகள்வயத் தாகாவிடி னனுபவ நிலைக்குமென்பது. நூலால் மாத்திரமெனின் அனுபவம்வராது, சற்குருவால் மாத்திர மெனின் சான்றோரனுபவமும் இதுதானோ என்னு மையந்தீராது. ஆதலினிரண்டு மின்றி அமையாது. இது தெள்ளியொர் கடமை. (88)

## 89 - கவி (அ - கை)

[தடையென வினையதெனவும், அதனைக்கெடுத்த வினையதெனவும் இக்கவியிற் கூறுகின்றார்.]

தடைகளே தெனிலஞ் ஞானஞ் சந்தேக விபரீ தங்கள்
படர்செயு மந்த மூன்றும் பலசன்மப் பழக்கத் தாலே
யுடனுடன் வரும்வந் தக்கா லுயர்ஞானங் கெடுமி வற்றைத்
திடமுடன் கெடுப்பாய் கேட்டல் சிந்தித்த றெளித லாலே.

(இ ள்) தடைகளே தெனிலஞ் ஞானஞ் சந்தேக விபரீதங்கள் எ-து) — தடைகள்யாதெனின்; அஞ்ஞானம் சந்தேகம் விபரீதமென் பன: — படர்செயு மந்த மூன்றும் பலசென்மப் பழக்கத் தாலே யுடனு டன் வரும் (எ-து) — துன்பத்தையே விளைவிக்கு மந்த மூன்றுவிதமும் அனந்தசென்மப் பழக்கத்தினா லடிக்கடிவரும்: — வந்தக்கா லுயர் ஞானங் கெடும் (எ-து) — வந்தால் மேலாய ஞானப்பிரகாசங் கெடும்:-

(ஆதலின்) இவற்றைத் திடமுடன் கெடுப்பாய் கேட்டல் சிந்தித்தல் தெளிதலாலே (எ-து) இம்மூன்றையு முறுதியாக நின்று கெடுத்தல் செய்தி கேட்டல் சிந்தித்தல் தெளிதல் என்னுமிம்மூன்றேதுக்களானும்.

அஞ்ஞானம்; பொதுவாகப் பழுதையைப் பாம்பெனவும், கட்டையைக் கள்ளனென்னவுங் கோடல். சந்தேகம்; பழுதையோ பாம்போவென்னவும், கட்டையோ கள்ளனோவெனவுங் கோடல். விபரீதம்; ஸ்திரமாகப் பழுதையின்று பாம்பெனவும், கட்டையன்று கள்ளனென்னவுங்கோடல், கேட்டல்; சிரவணமாகிய சட்லிதலிங்க தாற்பரியம். சிந்தித்தல்; மனனமாகியயுத்தி, தர்க்கம், அநுமானமென்பன. தெளிதல்; நிதித்தியாசனம், சமாதி, சாட்சாத்காரமென்பன. நிதித்தியாசனம்; மந்திரயோகம் பரிசயோகம் பாவயோகம் அபாவயோகம் மகாயோகமென்பன. சமாதி; சவிகற்பசமாதி நிர்விகற்ப சமாதியென்பன. சாட்சாத்காரம்; சீவன் முத்தி விதேகமுத்தியென்பன.

(க-ரு) தடைமார்க்கமும் அதனைக் கெடுக்குமார்க்கமு மினைய வெனத் தெரிவித்தாரென்பது. கணமும் விடாது பழகுக வென்றார் சான்றோர். (89)

## 90 - கவி (அ - கை)

[இங்ஙனஞ் செய்யாவிடிற் பந்த நசியாதென்பதற் குவமை இக்கவியிற் கூறுகின்றார்.]

அக்கினி கட்டுப் பட்டா லற்பமுஞ் சுடமாட்டாது
மக்கின ஞானத் தீயால் வந்தபந் தமும்வே வாது
சிக்கெனப் பழகிக் கேட்டல் சிந்தித்த றெளித லாலே
விக்கின மடஞ்சந் தேகம் விபரீதம் போக்கு வாயே.

(இ-ள்) அக்கினி கட்டுப் பட்டா லற்பமுஞ் சுடமாட்டாது (எ-து) — மந்திரத்தி லக்கினி கட்டுப்படுமாயின் சிறுதுரும்பையு மெரிக்க மாட்டாது — (அதுபோல) மக்கின ஞானத்தீயால் வந்தபந் தமும்வேவாது (எ-து) — ஞானாக்கினி மந்தப்படுமாயி னக்கணத் தெழுந்த பந்தந் தினைத்துணையாயினு மதனை லெங்ஙன மெரிக்கும், அதனாலஃதெங்ஙன மெரிபடும்? — (ஆதலின்) சிக்கெனப் பழகிக்கேட்டல் சிந்தித்தல் தெளிதலாலே (எ-து) — உடனே சான்றோர்பா லிடைவிடாது பழகிச் சந்தேகங்களைக் கேட்டலும் விடையைச் சிந்தித்தலும் சிந்தித்தவாறு தெளிதலுமாகிய விவ்வேதுக்களால்: — விக்கின மடஞ் சந்தேகம் விபரீதம் போக்கு வாயே (எ-து) அநுபூதிக்குத் தடையாயுள்ள அஞ்ஞானம் சந்தேகம் விபரீதமென்பவற்றைப் போக்குதல் செய்தி. எ-று.

ஞானம் அக்கினியாகாவிடின் பந்தம் நீறுபடுதெங்ஙனம், நீறுகாவிடின் சின்மாத்திரமாகச்சகலமும் விளங்கலெங்ஙனம், விளங்காவிடின் அல்லலற்று மன மமைதிபெற லெங்ஙனம், இன்றேல் ஞானசாதனத்தா லென்பயன், ஆதலின் சான்றோர் பலரும் ஞானத்தழலென்றார். இதனை மறுப்பா ரனுபவித்தறியார். பிரமமெனினும் ஞானமெனினு மொக்கும். என்னை "பிரமமானோர் பிரம நெருப்பிடை, பிரமமாகிய மந்திரந் தன்னினால், பிரம மாய சருவுடன் பெய்துபின், பிரம மேயடை வாருளர் பின்னுங்கேள்" எ-ம். "அறிவதாகிய வங்கியி லேகொள, அறிவை யேசில ராகுதி பண்ணுவார், செறிவ தாஞ்சமத் தீயிடை யேசில, ரெறிவ தாய புலன்களை யீவர்கள்" எ-ம் கூறினார் கண்ணபிரான். மக்கின ஞானத்தீயால் எனப்பாடமோதி யுரை கூறினும். வந்தபந்தமும் வேவாது என்றதனால் இனிவரும் பந்தமும் வேவாதெனப் பொருடாலலால் எதிரதுதழீஇய வெச்சவும்மையாயிற்று. (91)

## 91 கவி. (அ—கை)

[அத்தடைகளி னிலக்கண மினையவெனத் தனித்தனி இக்கவியிற் கூறுகின்றார்.]

பிரமபா வனையை மூடிப் பேதங்காட்டுவதஞ் ஞானங்
குரவன் வாக் கியநம் பாமற் குழம்பின மனஞ்சந் தேகந்
திரமறு சகமெய் யென்றுந் தேகநா னென்று முள்ளே
விரவிய மோகந் தானே விபரீத மென்பர் மேலோர்.

(இ-ள்.) பிரமபா வனையை மூடிப் பேதங்காட்டுவதஞ் ஞானம் (எ-து)—சைதன்னியத்தைக் கண்டுகண் டிதுநா னிதுநானெனக் கொள்ளுந் திட பாவனையை மறைத்துத் திணைபாலிட பேதங்களைக் காட்டுவது, அஞ்ஞான மெனப்படுவது:—குரவன்வாக் கியநம் பாமற் குழம்பின மனஞ்சந்தேகம் (எ-து)—ஞானாசிரிய ருபதேசமொழியை நம்பாமல் கலங்கின மனதே சந்தேகமெனப்படுவது:—திரமறு சகமெய் யென்றுந் தேகநா னென்றும் (எ-து)—நான்குகாலத்து நிலையில்லாத செகத்தை மெய்யெனவும், ஸ்தூல தேகத்தை நானெனவும்:—உள்ளே விரவிய மோகந் தானே விபரீத மென்பர் மேலோர் (எ-து)—அகத்திற் கலங்கிய அந்தமயக்கமே விபரீதமெனப்படுவதெனக் கூறுவர் சான்றோர்.) எ-று.

பேதம், அபேதமென விருவகை அவற்றுள்; உபாதான,முபாதேயமெனத் தோன்றுமை பேதமும், தோன்றுதல் அபேதமுமாம்.

அதாவது; கடபேதங்களை மண்ணெனவும், பணிபேதங்களைப் பொன்னெனவும் உணராமை, தோன்றாமை, உணர்தல், தோன்றுதல் சைதன்யவிளக்கமே பரமென்பதோ, ஆனந்தப்பெருக்கே பரமென்பதோ எனக்கலங்கல் சந்தேகம். இவற்றுளொன்றும் நிலையுறாமை விபரீதம் இம்மூன்று முறுதா ரெங்கணுமிலர், இதனைக்காட்ட இங்கே விளக்கியதென்க. (91)

92 - கவி. (அ கை.)

[அத்தடைகளைக் கெடுக்கத்தக்க கேட்டல் முதலியவற்றின் இலக்கண மினையவென இக்கவியிற் கூறுகின்றார்.]

தத்துவ வனுபோ கந்தான் சாதித்தல் கேட்ட லென்பா
ரொத்துள பொருளு கத்தா லுசாவல்சிந் தித்த லென்பார்
சித்தமே காந்த மான தரிசனந் தெளித லென்பார்
நித்தமிப் படிசெய் தக்கா னிர்வாணம் பெறுவாய் நீயே.

(இ-ள்) தத்துவ வனுபோ கந்தான் சாதித்தல் கேட்ட லென்பார் (எ-து)—தத்துவமசியென்னு மகாவாக்கியானுபவம் விளங்க, விடாது நிட்டை கூடலைக் கேட்டலெனவும்:—ஒத்துள பொருளு கத்தா லுசாவல்சிந் தித்த லென்பார் (எ-து)—பேதமாகாதொத்துநின்றுள்ள அசிபதார்த்தமாகிற வைக்கியப்பொருளி லையமுறி லதற்கியைந்த யுத்திகொ டாசான்பால் விசாரித்தலைச் சிந்தித்தலெனவும்:—சித்தமே காந்த மான தரிசனந் தெளித லென்பார் (எ-து)—அங்ஙனம் விசாரித்துச் சிந்திக்கச் சிந்திக்க வையந் தங்கற் கிடமின்றாக வக்கணமே விபரீத மகலுமாதலின் மனமானது சர்வகற்பிதமு மிறந்தவிடத்துச் சதோதயமாக விளங்கு மேகாந்த தரிசனத்தைத் தெளிதலெனவுங் கூறுவர் சத்துக்கள்:—நித்தமிப்படி செய்தக்கானிர்வாணம் பெறுவாய் நீயே (எ-து)—இங்ஙனமனுதினமுஞ் செய்துவருவையாயின் நீநிருவாணம்பெறுவாய். எ-று.

ஆசான்பாற் கேட்டவாறு நிட்டை கூடலைக் கேட்டலெனவும், ஐக்கியங் கூடுமா றெங்ஙனமெனச் சிந்திக்க வுசாவலைச் சிந்தித்தலெனவும், அங்ஙனஞ் சிந்தித்தலாலாய பயன் சித்தமயக்கந்தீர்ந்து சுயம்பாய்விளங்கலைத் தெளிதலெனவுங் கூறினர். இங்கே அஞ்ஞானம், சந்தேகம், விபரீதம், என்பன மூன்றும் பந்தம் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் என்பன மூன்றும் முத்தி. இந்தப் பந்தமுத்தி யெய்துவது செயற்கையாலோ இயற்கையாலோ? இயற்கையாலெனின், விதி

நிடேதம் வேண்டுவதின்றே செயற்கையாலெனின், இந்தச்செய்கைக்கு வினைமுதல் சீவனோ? ஈசனோ? ஈசனெனின், பிறந்திறந்தானென் றிருக்கவேண்டும், சீவனெனின், பந்தத்துக்கா? முத்திக்கா? பந்தத்துக்கெனின், முத்திக்கோ? ஈசனெனின். இவன் விளைவிப்பானேன்? அவனதை யழிப்பானேன்? சுபாவமெனின், முடிவுதானின்றே? இன்றெனின், உபசாந்தமின்றாமே: இன்றாயின் அல்லலற்றிருப்பதற்கிடமின்றே; ஆதலின், இங்ஙனம் வாசித்துத் தெளிவதினு மூடனாயிருக்கை மிகவுநன்று, இங்ஙனமன்று. நானல்லாதவுடலை நானென்றபிமானித் தழுந்திய தெந்தவுணர்வோ அந்தவுணர்வா லப்பந்தத்தைக் கெடுக்கவேண்டுமன்றி வேறொன்றாலென்பது மூடம். எங்ஙனமெனின், அவனவன்பந்த மவனவனால் விளைந்ததன்றேல் அவனவன் பந்த மவனவனாற் களைதலொண்ணாது, தேகோகபாவத்தோற்றம் உடலாலோ? உணர்வாலோ? உடலாலெனின், சடம். உணர்வாலெனின், தகும். அந்தவுணர்வுதானே யுயிர். அந்தவுயிர் தேகநீக்கத்தில் தேகோகபாவவிழ்ப்பு,தன்னாலோ? வேறொன்றாலோ? வேறொன்றாலெனினனுபவ மிருக்க வேண்டும். தேகோகபாவந் தன்னாலாயத்தால் தன்னாலழிப்பாகவேண்டும். அந்தவிழப்பே மரணவாதனைக்குறி. சிலருக்கிவ்வாதனை யில்லாமையுமுண்டு. தமரகவாய்னாவிலேனும் மூச்சுஸ்தம்பித்தலாலேனும், ஞானநாட்டத்து உறுதியாலேனும் எனவுணர்க பெண்டு பிள்ளை பண்டங்களி லவனவன் வைத்தபாசம் ஆனிவந்துழியவனவனை வதைக்கக் காண்கின்றோம். தன்னால்வந்த பந்தந் தன்னாலழிவுறுமன்றி வேறொன்றாலாகாது. தன்னாலனுபவித்தேனும் ஞானுக்கினிகொண்டெரித்தேனுமென வுணர்க. என்னை, "தன்னால் விளையுஞ் சகசீ வபரந், தன்னா லழியுந் தனதாம் விழியால், என்னாலெலேயென் னிலெனக் கருளும், மன்னே யடியே னபய மபயம்." என்றார் தத்துவராயர். தன்னால் விளைந்தது அஞ்ஞானம் சந்தேகம் விபரீதமாதலி னவை தன்னா லழியவேண்டுமென்பதுபற்றிக் கேட்டல் சிந்தித்தல் தெளிவ்செய்தி. இங்ஙன மனுதினமுஞ் செய்வையாயின் நிர்வாணம் பெறுவாயென்றார். ஏனையோ ரன்றெனவிலக்கற்கு நீயேயெனப் பிரித்தலின் பிரிநிலையேகாரம். இந்த ஏகாரத்தா லவனவன் பந்த மவனவ னறுக்கவேண்டுமென்பதாயிற்று. இதனை யறிந்து செம்தி. (92)

93 - கவி (அ - கை)

[நித்தமு மிங்ஙன முயலவேண்டுமென்றீர், முடிவின்றோவென்ற மாணாக்கனைநோக்கிக் காலவரையறை யிக்கவியிற் கூறுகின்றார்.]

எத்தனை நாண்ஞா தாவு ஞானமு மிருக்குமென்பை
யத்தனை நாளும் வேண்டு மப்பாலோர் செயலும் வேண்டா
நித்தமும் வெளிபோற் பற்ரு ஞேயமாத் திரமாய்ச் சீவன்
முத்தரா னவர்வி தேக முத்திபெற் றிருப்ப ரென்றும்.

(இ ள்) எத்தனை நாண்ஞா தாவு ஞானமு மிருக்கு மென்பை (எ-து) — எவ்வளவுகாலங் காண்பானுங் காட்சியு மென்னை விட்டகலவில்லை யென்பையோ:— அத்தனை நாளும்வேண்டுமப்பாலோர் செயலும் வேண்டாம் (எ-து)* அவ்வளவுகாலமு மிவ்விடைவிடாமுயற்சி வேண்டுமேயன்றித் திரிபுடியறி லப்பாலோர் முயற்சியும் வேண்டுவதின்று: — நித்தமும் வெளிபோற் பற்ரு ஞேயமாத் திரமாய்ச் சீவன் முத்தரானவர் (எ-து) எப்போதுந் தன்னை யொன்று பற்றினுந் தானென்றையும் பற்ருத பூதாகாயம்போலச் சகலகற்பிதங்களுந்தன்னைப் பற்றினுந் தானென்றையும்பற்ருத சிதாகாய மாத்திரமாகச் சீவகற்பிதங் கடந்தசீவன்முத்தர்கள்: — விதேகமுத்தி பெற்றிருப்பரென்றும் (எ-து) — விதேகமுத்திபெற்றுக் காலவரையறையின்றித் தானேதானுக விளங்கிநிற்பர். எ-று.

விடயம்பயனுகப்பெறின் ஞாதுருஞானம்வேண்டும், அறிவு, தன்னைத் தானேபயனுகப்பெறின் ஞாதுருஞானம்யாதுக்கு? எனவே, தானேஞாதுரு ஞானஞேயமெனப்பெற்ரும். விடயந்தனதுகற்பிதமாதலின் திரிபுடிவேண்டும். ஞானந்தனததிட்டானமாதலின் திரிபுடி வேண்டுவதின்று. திரிபுடியைத் தனது விருத்திஞானத்தைக் கொடுத்துக்காணின் அனைத்துஞ்சொப்பிரகாசமாக விளங்கும். அங்ஙனங்காணுவிடில் திரிபுடிமயமாய் நிற்கும். இதனைத்தினவனுபவத்திற் காணலாம். புராணம்போ னம்பிக்கையன்று. பிரத்தியட்சம். நீ முன்னர்க் கற்பிதமாயவிடத்துத் திரிபுடியுங் கற்பிதமாயிற்று. நீ யிப்போது சொப்பிரகாசமாகப் பழகில் திரிபுடியுஞ் சொப்பிரகாசமாக விளங்கும். அங்ஙனமாயதும் நினது முயற்சிகாரணமாகவன்ரே? இங்ஙனமாவதும் நினது முயற்சிகாரணமாக வெனக்கூறவேண்டுமோ? அப்போது விடயமயமானதுபோல, இப்போது சின்மயமாவையென்பது றுதியாதலால், சின்மாத்திரமயமாகச்சின்ஞள்பழகில் திரிபுடியுமங்ஙனமாம், ஆதலின் அப்பாலோர்செயலும் வேண்டாமென்ருர். பகிர்முகத்தில் ஞேயம் விடயத்தையும், அந்தர்முகத்தில் ஞேயம் ஞானத்தையுங் குறிக்க நின்றது. ஆதலிற் சிதாகாயமென்ரும்.

(க-து) பொன்னைப் பற்பல பணிபேதங்களாக்கற்குப் பன்னுள் வேண்டும், அவையனைத்தையும் பொன்னுயுருக்கற்கு நிமிடமாகிற

சின்னாள்வேண்டும். அதுபோலத், தன்னைக்கற்பிதமாகிய சகசீவபர மாக்கற்குப் புன்னாள் வேண்டும். அவற்றைத்தாணுக்கற்குத் தவமுடிந் தோனுக்குச் சின்னாள்வேண்டும். ஆதலினீபழகுகவென்பது. இங்ஙன மாயமுயற்சிவிடாதோரே சீவன் முத்தராகிப் பின்னர் விதேகமுத்த ராஞர், இதனையு முணர்தி யென்பார், ஞேயமாத்திரமாய்ச் சீவன் முத்தரானவர் விதேகமுத்தி பெற்றிருப்பாரென்ருர். இதுகாறுமுரைத் தது உபதேசமார்க்கமென வுணர்க (93)

## 94 - கவி (அ—கை)

[இனிஞானத்தின்மகிமைதோன்ற, அதனைத்தாணுகப்பெற்ற சீவன்முத்தர் நால்வரின் பெயரினையவெனவிக்கவியிற் கூறுகின்ருர்.]

ஞானமார் சீவன் முத்தர் நால்வகை யாவர் கேளாய்
வானிகர் பிரம வித்து வரன்வரி யான்வ ரிட்ட
ஞனவர் நாம மீதா மவர்களிற் பிரம வித்தின்
ருனமு மற்றை மூவர் தாரதம் மியமுஞ் சொல்வேன்.

(இ-ள்) ஞானமார்சீவன் முத்தர் நால்வகையாவர்கேளாய் (எ-து) — அறிவேவடிவாகப்பரிபூரணமாநிறைந்துள்ள சீவன் முத்த ரென்போர் நான்கு வகையாயிருப்பார், அதனையாங்கூறக்கேளுதி: — வானிகர்பிரம்வித்து வரன் வரியான்வரிட்டன் ஆனவர்நாமமீதாம் (எ-து) — ஆகாயம்போன்ற பிரமவித்தென்வும், வரனெனவும், வரியா னெனவும், வரிட்டனெனவுமாயிஞேர் நாமமிதுவாகும்:—அவர்களிற் பிரமவித்தின்ருனமு மற்றைமூவர் தாரதம் மியமுஞ்சொல்வேன் (எ-து) — அந்நால்வருள் பிரமவித்தினிலையையும் ஏனைய மூவரின் தாரதம்மிய நிலைகளையும் இனிச் சொல்லப் புகுவன் எ-று.

இந்நான்கு வகையான சீவன்முத்தருஞ் சிதாகாயமே தாஞென னத் தெளிந்தவராதலின் வானிகரென வுவமைகூறினர். பிரமவித்தை யும்மைகொடுத்துப்பிரித்தது, விதிவிலக்குவ்ழுவாது பலவிவகாரங்கள் செய்ய அதனுல் வருமின்பதுன்பங்கள் நுகர்தல்பற்றி. நுகரினுஞ்சிதா காயமாக்குவன். இதனைப் பின்வருங் கவிகளாலுணர்க. (94)

## 95 - கவி (அ—கை)

[இந்நால்வருள் பிரமவித்துக்கள் தமதொழுக்க நடைகளில் வருஞ்சிரமங்களை, வழுவின்றி நடத்திக்காட்டலை இக்கவியிற் கூறுகின்ருர்.]

தீரராய்ப் பிரம வித்தாய்த் தெளிந்தவர் தெளியு முன்னர்

வாரமா யிருந்த தங்கள் வருணமாச் சிரமஞ் சொன்ன
பாரகா ரியமா ளுலும் பலர்க்குப காார மாக
நேரதாச் செய்வார் தீர்ந்த நிலைவிடாச் சீவன் முத்தர்.

(இ-ள்) தீரராய்ப் பிரமவித்தாய்த் தெளிந்தவர் (எ-து)—(பிரம வித்தெனப்படுவோர்) யாதோரபாயங்கட்கும் கலங்காத தீரமுடைய ராயும், பிரமவித்தென்னும் பெயருடையோராயு நின்று ஐயந்திரி பின்றித்தன்னைத் தெளிந்தவர்:— தெளியுமுன்னர் வாரமாயிருந்த தங்கள் வருண மாச்சிரமம் (எ-து)—இங்ஙனந் தெளிதற்குமுன்னரே தமக்குரிமையாய்நின்றுள்ள வருணுசிரமதருமம்: —சொன்னபாரகாரிய மாளுலும் பலர்க்குபகாரமாக நேரதாச் செய்வார் (எ-து)—கன்மி களுக்காகச் சொன்னபாரமான காரியமாயினுமவற்றைப் பலருக்கும் முன்னடையாகக்காண விதிவிலக்கொழுங்கொக்கச்செய்து காட்டு புவர்:-தீர்ந்தநிலைவிடாச் சீவன்முத்தர் (எ-து) - வழக்கனைத்துந்தீர்ந்த நிலையாதோ? அந்நிலையினின்று நீங்காத சீவன்முத்தி திசையுடைய வர். எ-று.

சர்வமுஞ் சின்மாத்திரமாய் விளங்கலின் பயகம்பளுதிகளுக் கிடமின்று, ஆதலின் தீரராயெனவும், தாம்பிரமஞானமாய்நிற்றலின் பிரமவித்தெனவும், தாம்முன்னர் வருணுசிரம வொழுக்கவழித்தாய்ச் சேறலி னிவ்வுண்மைநிலை வாய்த்தது, இவ்வாறனைவர்க்கும் வாய்க்க வேண்டு மென்னுங் கருணைபற்றி முன்னடந்து காட்டலேயன்றித் தமக்காக வன்றென்பார், பலர்க்குபகாரமாக நேரதாச்செய்வரெனக் கூறினர் (95)

## 96 - கவி (அ—கை)

[இதுமுதன் மூன்றுக்கவியானு மந்தப்பிரமவித்துக்களினரிய வியப்புநடைகளை விளங்கக்கூறுகின்ருர்.]

காமமா திகள்வந் தாலுங் கணத்திற்போ மனத்திற் பற்ருர்
தாமரை யிலைத்தண் ணீர்போற் சகத்தொடுங் கூடி வாழ்வார்
யாமரா ரெனக்காண் பிய்யார் புண்டிதத் திறமை காட்டா
ரூமரு மரவுா ருள்ளத் துவகையாஞ் சீவன் முத்தர்.

(இ-ள்) காமமா திகள்வந்தாலுங் கணத்திற்போ மனத்திற் பற்ருர் (எ-து).—காமக்குரோதாதிகள் யாதோர் ஏதுவினல் நேரிடினும் அக்கணமேயவற்றை அறிவாய்க்கரைத்தலின், எங்ஙன நிலையுறும், நிலையுருவாதலின் கணத்தினசிக்குமன்றே நசித்தலின் எங்ஙனம்மனம்,

பற்றவிடப்பெறுவர், பெறுர்: - தாமரையிலைத்தண்ணீர்போற் சகத்தொடுங்கூடிவாழ்வார் (எ-து) – தாமரையிலை தண்ணீரிலிருந்து மெங்ஙனம் பற்றற்றுநிற்குமோ, அங்ஙனம் சகத்தோடுகூடி நின்றும் பற்றின்றி வாழாநிற்பர்: — பாமரரெனக் காண்பிப்பார் பண்டிதத்திறமைகாட்டார் (எ-து) - மூடரைப்போலத் தம்மைக்காட்டிக் கொண்டு திரிவர் பண்டிதராயினு மத்திறமை தம்மிடத்தி வில்லாததாகக் காட்டிக்கொண்டிருப்பர்: – ஊமருமாவருள்ளத் துவகையாஞ் சீவன் முத்தர் (எ-து) – ஊமைகள் போலவுமிருப்பர், உள்ளத்தின்கண் மாருதஞானக்களிப்புடைய பிரமவித்தாகிய சீவன்முத்தி திசையுடையோர். எ-று.

மனஞ்சொப் பிரகாசமாக விளங்களின், மனத்திற் பற்றுரென வும்; சொப்பிர்காசப் பிரதிபலனஞ் செகத்தெனக்காண்பரன்றியஃதோர் முதலெனவெங்ஙனஞ்சித்தத்தில்வைப்பரென்பார், தாமரையிலைத் தண்ணீர்போற்சகத்தொடுங் கூடிவாழ்வாரெனவும்; தோற்றினுஞ் செகத்தைச்சின்மாத்திரமாகக் கரைப்பதே தொழிலாகவுடையவர் இவரெங்ஙனம்பண்டிதத் திறமை காட்டநேரமுடையவரென்பது தோன்றப்பாமரரெனக்காண்பிப்பார் பண்டிதத்திறமைகாட்டாரெனவும்; யாதோர் கற்பிதமுமின்றிச் சொற்பிரகாசமாத்திரம்விளங்கிக்கொண்டிருக்க வேறென்னசொல்ல விடமுண்டென்பார், ஊமருமாவா ரெனவும்; சொப்பிரகாசமாக அவருள்ளந் தேர்தலினுலும், அன்னியக்களிப்புக் கெங்ஙனமிடமாம், தற்பிரிதிக்கே யிடமாதலினுலும், உள்ளத்துவகையாஞ் சீவன் முத்தரெனவுங்கூறியவாறு காண்க. வந்தாலும் சகத்தொடும், ஊமரும் ஆகிய மூன்றும் இழிவுசிறப்பும்மை ஊழாலன்றித் தமக்குச் சற்றும் பிரியமில்லையென்பது தோன்றச் சகத்தொடுங்கூடிவாழ்வாரெனப்பட்டது. (96)

### 97 - கவி. (அ—கை.)

### [இ — து]

பேதகன் மத்தால் வந்த பிராரத்வ நாநா வாகு
மாதலால் விவகா ரங்க ளவரவர்க் கான வாகு
மாதவஞ் செயினுஞ் செய்வர் வாணிபஞ் செயினுஞ் செய்வர்
பூதலம் புரப்ப ரையம் புகுந்துண்பர் சீவன் முத்தர்.

(இ-ள்) பேதகன் மத்தால்வந்த பிராரத்வநாநாவாகும் (எ-து) — பேதகன்மம், அபேதகன்மமெனக் கன்மமிரண்டாம், அவற்றுள், பேதகன்மம் உலகம் வேருகக் கண்டுபுரியுங்கன்மம். அபேதகன்மம், தாஞகக்

கண்டுபுரியுங்கன்மம். இங்ஙனமிருக்கப் பேதகன்மத்தால் வந்தவூழ் நானுவிதமாம்:— ஆதலால் விவகாரங்களவரவர்க்கானவாகும் (எ-து) — ஆதலின் விருத்திகளெவ்வெவர்க்கெதெதுவோ அவரவர்க்கததுவாம்:- (எங்ஙனமெனின்) மாதவஞ் செயினுஞ்செய்வர் வாணிபஞ்செயினுஞ் செய்வர் (எ-து) — மகாதவத்தைச் செய்யவிருப்புற்றுச்செய்யினுஞ் செய்வர், வியாபாரஞ்செய்ய விருப்புற்று செய்யினுஞ் செய்வர்:— பூதலம்புரப்பரையம் புகுந்துண்பர் சீவன்முத்தர் (எ-து) — பூமியையாளவேண்டினுமாளுவர், பிச்சைபுகுந்திரந்துண்பினுமுண்பர் (இவர்களாரெனின்) பிரமவித்தென்னுஞ் சீவன்முத்தர்கள். எ-று.

ஊழென்றது, பூர்வஞ்செய்தவினையை. அபேதகன்மமாதலின் நிலையொத்தனர் பேதகன்முமாதலின், கீர்த்தியும்பேதித்தனர். என்னே, "ஊழிற் பெருவலியாவுளமற்றொன்று சூழினுந்தான்முந்துறும்" என்றார் திருவள்ளுவர். ஞானமாத்திரம். அபேதகன்மம். ஏனையவிரண்டும் பேதகன்மம். பேதகன்மம், உடலுக்கியைந்தது. அபேதகன்மம், உணர்வுக்கியைந்தது. அபேதகன்மமிருப்பது பற்றிப்பேதகன்மமென்றார். புரப்பினுமென்றதெஞ்சியது. ஐயம்புகுந்துண்பினுமென்றது மற்றே. அந்தவும்மைகள் இட்டத்தைக் காட்டநின்றன. (97)

98 - கவி. (அ—கை.)

[இ — து]

சென்றது கருதார் நாளைச் சேர்வது நினையார் கண்முன்
னின்றது புசிப்பார் வெய்யி னிலவாய் விண் விழுது வீழ்ந்தும்
பொன்றின சவம் வாழ்ந் தாலும் புதுமையா வொன்றும் பாரார்
நன்றுதீ தென்னார் சாட்சி நடுவான சீவன் முத்தர்

(இ-ள்.) சென்றதுகருதார்நாளைச் சேர்வதுநினையார்கண்முன்னின்றதுபுசிப்பார் (எ-து) — போனதைப்பற்றிநினையார், இனிவருவதைப்பற்றிநினையார், இப்போதியாதுகிடைப்பதோ அதனைமாத்திரம் புசிப்பார்:— வெய்யிலனிவாய்விண் விழுது வீழ்ந்தும் (எ-து) — உட்டணகிரணமானது சீதளகிரணமாயாகாயத்தினின்றூலம் விழுதுபோற் பலவும் வியக்கவிறங்கினும்:— பொன்றின சவம்வாழ்ந்தாலும் புதுமையாவொன்றும்பாரார் (எ-து) — செத்த பிணமீண்டுமுயிரோடுகூடிவாழினும், ஒன்றையு மதிசயமாகப் பாரார்கள்:— நன்றுதீதென்னார்சாட்சி நடுவானசீவன்முத்தர் (எ-து)— இதுநன்று, இதுதீதென்றுஞ்சொல்லார்கள், இவ்விரண்டிற்கும் நடுவாகச் சாட்சியாநின்றுள்ள பிரமவித்தாகிய சீவன்முத்தர்கள் எ-று.

வீழ்ந்தாலு மென்பது வீழ்ந்துமென வந்தது காலமயக்கம். இன்னதனுபவித்தது அனுபவிக்கின்றது, அனுபவிப்பது என்னு முக் காலபேதம், அவருக்குச்சின்மாத்திரமாய்விளங்கினும், பசிதணிதல் பற்றி வேண்டுவதாதலின் கண்முன்நின்றது புசிப்பாரெனவும், எத்தனை யற்புதமான வியப்புஞ் சிதாகாயமாய் நிற்றலி னச்சிதாகாய நாட்ட மகலார்க் கெங்ஙனந்தோன்றும், எங்ஙனவியப்பரென்பார், புதுமையா வொன்றும் பாராரெனவும், யாவுமித்தையாய்த் தானுவிளங்கலின், நன்று தீதென்னுரெனவும், ஞானஞ்ஞானங்கட்காதாரமான நிலையின ரென்பது தோன்றச், சாட்சிநடுவானசீவன்முத்தரெனவுங்கூறினர். இவையனுபவவினோதம். (98)

99 - கவி. (அ - கை)

[ஏனையமூவரினரிய வியப்புநடைகளை இக்கவியிற் கூறுகின்றார் ]

பின்னைமூ வரிலிரண்டு பேர்களுஞ் சமாதி யோகந்
தன்னையற் றிருப்பார் தேக சஞ்சார நிமித்தந் தானு
வுன்னுவோன் வரன்வேற் றோரா லுணர்பவன் வரியா னுகு
மன்னியர் தம்மாற் றன்னு லறியாதோன் வரிட்டனுமே.

(இ-ள்) பின்னைமூவரிலிரண்டு பேர்களுஞ் சமாதியோகந் தன் னையுற்றிருப்பார் (எ-து) — மற்றமூவரிலிரண்டுபேர் சமாதிஞானத்தை யகலாதிருப்பர்: — தேகசஞ்சார நிமித்தந் தானுவுன்னுவோன்வரன் (எ-து) — தேகசஞ்சாரத்துக்காக வுண்ணநினைப்போன் வரனெனப்படு வோன்: — வேற்றோராலுணர்பவன் வரியானுகும் (எ-து) — பிறர்வலிந் தூட்டலா லுணவறிவோன் வரியானெனப்படுவோன்: — அன்னியர் தம்மாற் றன்னு லறியாதோன் வரிட்டனுமே (எ-து) — அன்னியராலும், தன்னுலுமுணவு நேரிடலையறியாதோன் வரிட்டனெனப்படுவோன். எ—று.

தானேசென்றிரந் தோர்வேளையேனும் புசிப்பவன் வரன், பிறர் வலிந்தூட்டவுணவுண்போன்வரியான், உறக்கத்தில்வலிந் தூட்டிய தாயைநோக்கியெனக்கேனிராத்திரி யுணவிடவில்லையென்ற சிறுபிள்ளை யைப்போலத்தானு முணவுண்டதையறியாதான், வரிட்டன். எனவே தன்பசியைத்தன்னுலறிவோன் வரனெனவும், பிறராலறிவோன் வரி யானெனவும், தன்னுலும் பிறராலுஞ் சற்றுமறியாதோன், வரிட்டனெ னவுங் குறிக்கப்பெற்றும். தானேதன் பசிதெரிந்துண்ண லுடல்வளர்த் தற்கன்றே, வதைதவிர்த்தற்கன்றி வேறுக்கன்று, வதையால்நிட்டை யங்கமும், நிட்டைபங்கத்தால் மனக்கலக்கமும், மனக்கலக்கத்தால்

முன்போலச் சுகதுக்கத்தில் மொத்துண்டலேதலுமாம். ஆதலினென்க. இச்சை, பரவிச்சை, அநிச்சையெனப் பிராரத்வ மூன்றெனலே யிங்கே காண்க. (99)

100 - கவி. (அ - கை.)

[இந்நால்வகையாய சீவன்முத்தர்களுக்கு முத்தியிற்பேதமில்லை ஆயினும், பேதகன்மங்களாலுண்டாகுந் தாரதம்மியங்களை இக்கவியிற் கூறுகின்றார்.]

அரிதாகு மிவர்க ளிவ்வா றநேகரா னாலு முத்தி
சரியாகும் பாடு பட்டசமாதிக்குப் பலனே தென்றாற்
பெரிதான விட்டதுக்கம் பிரமவித் தனுப விப்பன்
வரியானும் வரனு மற்றை வரிட்டனுஞ் சுகமா வாழ்வார்.

(இ-ள்) அரிதாகு மிவர்களிவ்வா றனேக ரானாலு முத்தி சரியாகும் (எ-து) — கிடைத்தற்கரிதாகிய விச்சீவன் முத்தர்க ளிங்ஙன மனேகபேதமுடையராயினும், முத்திப்பேற்றில் பேதஞ்சற்றுமிலர்: — பாடுபட்ட சமாதிக்குப் பலனேதென்றால் (எ-து) — பாடுபட்ட பேதகன்மமாகியசமாதிக்குப்பலன்யாதெனின்: — பெரிதான விட்டதுக்கம்பிரமவித் தனுபவிப்பன் (எ-து) மிக்கவின்பத்துன்பங்களைப் பிரமவித்தேயனுபவிப்பன்: — வரியானும் வரனுமற்றை வரிட்டனுஞ்சுகமாவாழ்வார் (எ-து) — மற்றவரியானும், வரனும், வரிட்டனும் நிரதிசயானந்தமாகவாழ்வார்கள். எ-று.

சிதாகாயத்தையன்றியிவர்களுக்குநிலைவேறின்மையின், முத்தி சரியாகுமெனவும், பலவாறானவிவகாரங்களிற் சம்பந்தப்படுதலின் அவ்வவற்றிற்குரிய நயநஷ்டங்கள் தாமேவரும்; வரவே, அதனாலின் பத்துன்பங்கள்விளையும், விளைதலையனுபவிக்கத்தக்கோன்தானாதலால், பெரிதானவிட்டதுக்கம்பிரமவித்தனுபவிப்பனெனவும், அனுபவித்தாலு மித்தனையுஞ்சிதாகாயமாகிய தன்னையெட்டிப்பார்க்கத் தினைத்துணையு மில்லாததாகக் கண்டுகொண்டிருப்பன் ஆதலி னிவனுக்கும் முத்தி சரியாகுமெனவுங் கூறினார். கூறவே, நனவு, நினைவு, கனவு, சுழுத்தி யெனநான்காம் இவை, விஸ்மரணையாகவேனும், தஸ்மரணையாகவே னுமிருக்கும். இந்நால்வருந்தஸ்மரணையர். ஆயினும், பிரமவித்து நனவாகவும், வரன் நினைவாகவும், வரியான் கனவாகவும், வரிட்டன் சுழுத்தியாகவு மிருப்பரென்பதுபெற்றாம். நனவுவிஸ்மரணையாதல், சகத்தாகப்பரிணமித்தலை. நனவுதஸ்மரணையாதல், சிற்பிரகாசமாக விளங்கலை. நனவுவிஸ்மரணையாயினங்ஙனமாகவும், நனவுதஸ்மரணை

யாயினங்ஙனமாகவும் விரிந்தொடுங்கும். இங்ஙனமாயவிரிவொடுக்கத்தைச் சங்கோச விகாசமென்பர் இச்சகலகேவலங் கற்பிதமெனவும், எதார்த்தமெனவு மிரண்டாநிற்கும் கற்பிதங்கெடுதல், எதார்த்தத்தில். எதார்த்தங்கெடுதல், ததாகாரத்திலென்றிருத்தலினிவர்சாதனந்ததாகாரமாதற்கெனவறிக. இவர் சுழுத்தி, நனவிற் சுழுத்தியெனவும், ஏனையசுழுத்தி மக்கினசுழுத்தியெனவுமாம். மூவரும்விடா நிட்டையிலிருப்பது பற்றிச் சுகமாவாழ்வாரெனவும், விவகரித்தலைப்பற்றிவிட்டதுக்கம்பிரமவித்தனுபவிப்பனெனவுங் கூறினதேயமையுமெனின், பிரமவித்தினைப்பற்றி "உள்ளத்துவகையாஞ்சீவன்முத்தர்" எனவும், "தாமரையிலைத்தண்ணீர்போற்சகத்தொடுங்கூடிவாழ்வார்" எனவும். இன்னுமிவை போன்றவற்புதகுணமுடையரெனவுங்கூறியதெற்றுக்கு? பார்ப்பவர்களுக் கிங்ஙன்ந்தோற்றலேயன்றிவேறன்று. இதுமுடிந்தது முடித்தலென்னுமுத்தி. (100)

**101 - கவி (அ - கை)**

[அஞ்ஞானியர்போல் ஞானிகள் விவகரிப்பினும் ஆகாரெனற்கு இக்கவியிலுவமை கூறிகின்றார்.]

பிரமஞா னிகளுங் கன்மப் பேதையர் போலே வாழ்ந்தாற்
றிரமறு மஞ்ஞா னம்போய்ச் செனியாத வழியே தென்னிற்
பரவுமா காய மொன்றிற் பற்றுது மற்றை நான்கும்
விரவின் தோடு கூடும் விதமிரு வோரு மாவார்.

(இ-ள்) பிரமஞானிகளுங்கன்மப்பேதையார்போலே வாழ்ந்தால் (எ-து) — பிரமஞ்ஞானமுடையோருங் கன்மத்தையே பயனுக்வுடைய மூடர்களைப்போல் விவகரிப்பிலொத்துவாழின்: — திரமறுமஞ் ஞானம் போய்ச் செனியாதவழியேதென்னில் (எ-து) — நிலையின்றியவஞ்ஞான நசிப்பதெங்ஙனம்? நசியாவிடில் இனிச்செனியாவாறெங்ஙனம்? அமையுமெனக்கேட்பையாயின், (இதனைக்கூறக்கேளுதி): — பரவுமாகாயமொன்றிற்பற்றுது (எ-து) — எங்குமொருத்கைத்தாவியாபித்துள்ள வாகாயமான்து தன்னிற்பற்றினுந்தானொன்றினும் பற்றுது: — மற்றை நான்கும் விரவினதோடு கூடும் விதமிருவோருமாவார் (எ-து) — ஏனைய நான்குபூதமுந்தமதகம்புறத்திற் பூரணமாநிறைந்து கலந்துள்ளதாகத் தோற்று மாகாயத்திற் பற்றுமவிதமெங்ஙனமோ? அங்ஙனமிவ்விருதிறத்தோருமாவார். எ-று.

பற்றலல்லாதவாகாயத்தைப் பற்றுகநான்குபூதமும்பற்றுமாறு போன்று, யாதோர்பற்றுமல்லாதசுகத்தைப் பாசபந்தமாகக் கருதிப்

பற்றுவதஞ்ஞான மாதலி னஞ்ஞானியரெனவும், யாவுந்தன்னைப்பற் ருகப்பற்றினுந் தானங்ஙனமாகாது விலட்சணமா நின்றுள்ளவாகாயம் போன்று, எல்லாப்பற்றுக்களுஞ் சுகமாகக்காணத் தன்னைப்பற்ருகப் பற்றினுந் தானங்ஙனமாகாது அல்லவல்ல வென்றகன்று விலட்சண மாகநின்று விளங்குஞ் சுகந்தானுந்தல் ஞானமாதலின் ஞானியரென வும், உபமானமுகத்தாற்கூறியது பேதங்காட்டற்கென்க ஐயந்திரிப கன்ற ஞெப்திப்பிரியமாக விளங்குவோர்ஞானியர், ஏனையரல்லாதார்; இதுவேபேதம். மற்றைநான்கும் விரவினதோடுங்கூடும் விதமிரு வோருமாவா ரெனப்பாடமோர்தி நான்குபூதமுந்தம்மால் மிசிரிம்பித்த பவுதிகங்களோடும்பற்றும்; இவ்விதமாக ஞானி யஞ்ஞானியிருவரும் பேதமாவாரென்றுரை கூறுவாருமுளர். உபாதிகாரணமாக ஞெப்திப் பிரியமிரண்டாக நிற்போரஞ்ஞானியர்; உபாதிரகிதங்காரணமாக ஏக மாகவிளங்குவோர்ஞானியர்; ஏனெனில், ஞெப்திப்பிரியத்தைக் கற் பிதமாகக்காண்போரிவர். அன்ருகக்காண்போரவர் கற்பிதமெனின், சோதனையிலன்ருகப்போவானேன்? ஆதலினிரண்டுமேகம். ஏகமெனின், முன்னிரண்டானுலன்ருே இப்போது ஏகமென்னலாம். இரண்டாகக் காணப்படுத லுபாதிசகித நாட்டத்தாலன்றி யின்றெனின், ஒன்ருகக் காணப்படுதலு முபாதிரகித நாட்டத்தாலன்றியின் றென்பம். நாட்ட பேதத்தாலங்ஙனந்தோற்றியதன்றி ஞெப்திப்பிரியமிரண்டு மன்று, ஒன்றுமன்று இங்ஙனங்காண்போர் தீர்ந்தஞ்ஞானியர்; இதில்தடுமாற்ற முடையோர் ஞானியரேனு மஞ்ஞானியரே. இவரைத்தானஞ்ஞானிய ரென்ருரிந்நூலாசியர். ஏனையோரைச் சொல்வதிலிவ்வளவு சிறப்பின்று. வெள்ளை மொழியெனக் கண்டபடி உரைகொள்ளற்க இதுவே பரம் பரை யுரையெனலை ஞாயத்தாற்காணுதி.

(க-து) ஞெப்திப்பிரியமேகமெனற்கும், அன்றெனற்கு மியையு மென்போர் ஞானியரென்பது. இது தீர்க்கவாராய்ச்சியின்றேல் விளங் காது. உலகுளோரை அஞ்ஞானியரெனக்கொள்ளினிழிவென்னை? (101)

### 102 - கவி (அ - கை)

[சீவன்முத்தரைச் சேவித்தலாலாய்பயனையும், இவர்களினியாரும் விதேகமுத்திநிலை கூறப்புகுதலையு மிக்கவியிற் கூறுகின்ருர்.]

சீவன்முத் தரைச்சே வித்தோர் சிவனய னெடுமா லான
மூவரு மகிழ நோன்பு முழுவதுஞ் செய்து சந்ம
பாவன மாரு ரென்று பலமறை முழங்கு மிப்பான்
மேவருஞ் சீவன் முத்தர் விதேகமுத் தியுநீ கேளாய்.

(இ-ள்) சீவன்முத்தரைச் சேவித்தோர் (எ-து) யாவரிடை விடாமல் சீவன்முத்தரை முறைப்படி தரிசனஞ்செய்துவருபவரோ அவர்கள்:-சிவன் அயனெடுமாலான மூவருமகிழ நோன்புமுழுவதுஞ் செய்து (எ-து)-சிவனும் பிரமாவும் விஷ்ணுவுமாகிய மும்மூர்த்திகளு மகிழும்படி செய்யவேண்டிய தவங்களனைத்தையுங் குறைவின்றிச் செய்துமுடித்து: - சந்மபாவனமாரு ரென்று பலமுறை முழங்கும் (எ-து) — சென்மஞ்சுத்தமாயினரென்று சகல வேதங்களுமுறையிடும்:- இப்பால்மேவருஞ் சீவன்முத்தர் விதேகமுத்தியுநீகேளாய் (எ-து) — இனிக்கிடைத்தற்கரிய சீவன்முத்தர்களைப்பற்றிச் சொன்னதுமன்றியும் அவர்களடையும் விதேகமுத்திநிலையையுங் யாங்கூறக்கேளுதி. எ-று.

இவரைத்தரிசித்தலா லிவரது நோக்குப்பட்டுக்கொண்டே, வருதலன்றியும் இவர்கள் நல்லவர்களென்றுன்னவுங் கிடைக்கும், இங்ஙனமாய நலன், எந்தத்தவப்பேற்றினு மீக்குறலின் சன்மபாவன மாதற்குத் தடையென்னை? சென்மநாசனமாருரெனக் கூருமையினேற் றற்பாலதே. சென்ம சுத்தமென்றது, ஞானசாதனத்துக்கியைந்த தனுவை. பலமறைச்சுருக்கம் நான் மறையாதலின் பலமறையென்ரூர். சீவன் முத்தி யறிவேதாளுதல்; விதேகமுத்தி துரியாதீதமாதல் இதெல்லாஞ்சொல்லாலன்று, உழைப்பாலென வுணர்க. (102)

## 103 - கவி (அ - கை)

[ஞானிகளின் ஆகாமியமுதலிய மூன்றுவினைகளும் படும்பாட்டை இக்கவியிற் கூறுகின்ரூர் ]

பஞ்சினை யூழித் தீப்போற் பலசென்ம விவித வித்தாஞ்
சஞ்சிதமெல்லா ஞானத் தழல்சுட்டு வெண்ணீ ருக்குங்
கிஞ்சிதா காமியந்தான் கிட்டாமல் விட்டுப் போகும்
விஞ்சிய பிராரத் துவத்தின் வினையனு பவித்துத் தீரு.ம்

(இ-ள்) பஞ்சினையூழித்தீப்போல் (எ-து) — பஞ்சைவடவாக்கினி யெங்ஙன நீருக்குமோவதுபோல:-பலசென்மவிவிதவித்தாஞ் சஞ்சிதமெல்லா ஞானத்தழல் சுட்டுவெண்ணீருக்கும் (எ-து) — பலசென்மங்களுண்டாதற்கு நானாவித விதைபோலுமிருக்கின்ற சஞ்சிதவினைகளனைத்தையும் ஞானக்கினியெரித்து வெண்ணீருக்கிவிடும்: — கிஞ்சிதா காமியந்தான் கிட்டாமல்விட்டுப்போகும் (எ-து) — ஆகாமியந்தினைத்துணையேனுங்கிட்டாமல் விட்டோடிப்போகும்: — விஞ்சியபிராரத்தத்தின் வினையனுபவித்துத்தீரும் (எ-து)—அவை நீங்கலாகமிஞ்சிநின்ற பிராரத்துவவினையையனுபவித்தேதீர வேண்டும். எ-று.

ஆகாமியம், சஞ்சிதம், பிராரத்துவம் என வினைமூன்றும். அவற்றுள், ஆகாமியம், மதி, விதி யெனவிரண்டாம். தானிச்சித்தவண்ணம் வேண்டுமெனல், மதி. அவ்வண்ணங்கைகூடல், விதி, கூடாமை, சஞ்சிதம். சஞ்சிதம்பை. என்றால், கைகூடா அவாக்களனைத்தும் அடைக்கப்படும்பை விதி, ஊழ், பிராரத்துவமென்பன வொருபொருட்கிளவி. மதி; பந்தம், விடுதியென விருதிறத்ததாம். பந்தகன்மம்; பொருளல்லவற்றைப் பொருளென வேண்டியவாவல். விடுதிகன்மம், பொருளல்லவற்றைப் பொருளன்றெனச் சோதனை, ஞாயம், பொருத்தமென்னு மிம்மூன்றுமுகத்தால் ஐயந்திரி பின்றிக்களைந் துள்ளதை யுள்ளதாக்கோடல். விடுதிகன்மவிதி, இவ்வண்ண நேரிடல், பந்த கன்மவிதி, அவ்வண்ணநேரிடல். இப்பகுபாட்டின் முறைப்படிசெல்லில் யாதும்முரணாது. விதிமதியளவுதெரியாதார் தீர்வுகொள்ளின் அது "வரம்பின்றிவட்டாடியற்றே" யென்பதுபோலாம். பிறவிக்கேதுவாதல், பந்தகன்மம். முத்திக்கேதுவாதல் விடுதிகன்மம்.

(க-து) இந்நால்வரும் விடுதிகன்மத்தாரென்பது. ஞானக்கினியின் மிக்க அக்கினியுண்டென்பார் தற்காணர். பந்தகன்மமாநின்றது, அஞ்ஞானம். விடுதிகன்மமாநின்றது, ஞானம் இங்கே ஞானமென்றது, பரஞான மாதலின் ஞானத்தீயென்றார். இந்தஞானத்தீயே யெங்ஙனுமேலிடலின், சஞ்சிதம் பஞ்சுபோல்வதா லெங்ஙனமதன் முன்னிற்கும் இனியவாவுமாகாமிய மெங்ஙனந்தோன்றும். இங்ஙனமிருக்கப் பிராரத்துவமனுபவித்துத் தீராம லெங்ஙனமொழியும்; ஆதலின் விஞ்சிய பிராரத்துவத்தின் வினையனுபவித்துத் தீருமென்றார். இந்நெறிச்செல்லார், குதர்க்கிகள். (103)

### 104 - கவி (அ - கை)

[இவர்கள் முன்னர்ச்செய்த நல்வினை தீவினைகளகலும்வகை இங்ஙனமெனவிக்கவியிற் கூறுகின்றார்.]

பொறுமையாற் பிராரத் துவத்தைப் புசிக்குநாட் செய்த கன்ம
மறுமையிற் றொடர்ந்தி டாமன் மாண்டுபோம் வழியேதென்னிற்
சிறியவ ரிகழ்ந்து ஞானி செய்தபா வத்தைக் கொள்வ
ரறிபவ ரறிந்து பூசித் தறமெலாம் பறித்துண் பாரே.

(இ-ள்.) பொறுமையாற் பிராரத்துவத்தைப் புசிக்குநாள்செய்த கன்மம் (எ-து) — மிக்கவமைதியோடும் பிராரத்துவத்தையனுபவிக்குங் காலத்தில்தன்னையறியாமல் செய்த கன்மமானது: — மறுமையிற்

ருடர்ந்திடாமல்மாண்டு போம்வழியேதென்னில் (எ-து) — இனிவரும் பிறவியில்தொடர்ந்துவராம லழிந்துபோதற்கு வகையாதென்னில்:- சிறியவரிகழ்ந்துஞானி செய்தபாவந்தைக்கொள்வர் (எ-து) — மெய்யர் போ னடித்துக்காட்டும் புத்தியீனர் மெய்ஞ் ஞானியரைத் தமது புன்னடைவழிச் சென்றிலரெனவைது அவரறியாது செய்தபாவத்தைப் பறித்தனுபவிப்பார்: – அறிபவரறிந்துபூசித் தறமெலாம் பறித்துண் பாரே (எ-து) — இவர்சிறிய ரிவர்பெரிய ரெனவறியத்தகுந்திறத்தினரி வர் மெய்ஞ்ஞானியரென் றுணர்ந்து அர்க்கியபாத்திய முதலியவற் ருல் திரிகரண மொத்துமெய்யன்புகொடுபூசித் தவர்செய்த நல்லற மனைத்தையும் அபகரித்தனுபவிப்பார் எ-று.

பொறுமையாவது; முன்னும்பின்னும் யோசித்துநடத்தல். அதாவது: இன்பமுந்துன்பமு மாறத்தகையதாதலின் செல்வம்வந்துழிக் களிப்பதும், வறுமைவந்துழித் துக்கிப்பது மின்றிநிற்றல். செய்தகன்ம மென்றது நற்கன்மதுர்க்கன்மத்தை. நற்கன்மம், நடந்துகாட்டல் துர்க் கன்மம், பொய்சொல்லல். பொய்சொல்லலாவது, இவர்நின்றுழி விரைந்தோடும் பசுவைத் தான் காணினும், பின்னரரைநாழிகைகழித்த தனைப்பற்றவவ்வழித்தாய்க்கைவாள் கொடுவிரைந்தோடுவோனிவ ரைக்கண்டுகேட்க, இவரிவன் கைவாள் கண்டறியேனென்னல், இது போல்வன்பிறவுமாம். சிறந்ததுயிரோ, உணவோ? உணவெனின்; அன்னம், காய், கனி, கிழங்கு முதலியவை யன்றோ? அதனல்வலியின் றெனின், உன்னுடல் எறும்பு கரையான், நாய், புலிமுதலியவற்றிற் கிரையாக நீ சம்மதிப்பையா? அதுபோலென்றறி. கொலைப்பாதகன் புலிமுதலியவைக ளுயிரன்றே விவற்றைக் கொல்லலாமென்பதென்னை? இடுக்கணேரிட்டுழியென்க. தன்னுயிர்போறகாணுதுழியென் பயன்? இவையனைத்தையு மனுநூலாற்காண்க இஃதறிந்துசெய்தல். அறியாதுசெய்தலாவது; நடந்துசெல்லுழி எத்தனையோவுயிர் காலிலகப் பட்டுமாளலும், இன்னுமிவைபோல்வன பிறவுமாம். செய்தகன்மமெனப் பொதுப்படக்கூறியதனல், அறிந்து செய்தகன்மம், அறியாது செய்தகன்மமென்ரும். இஃதன்றியு மிக்கவியில் தானே இவர்செய்த பாவம், இவர்செய்த புண்ணியமென்றிருக்கின்றன, ஐயமென்னை? (104)

## 105 - கவி (அ — கை.)

[அவித்தைமுதலிய மூன்றுதனுவு நசிக்குமா றிங்ஙனமென விக்கவியிற் கூறுகின்ருர்.]

அரியமெய்ஞ் ஞானத் தீயா லவித்தையா முடனீ ருமே

பெரியதூ லமுங்கா லத்தாற் பிணமாகி விழுமந் நேர
முரியசூக் குமச ரீர முலையிரும் புண்ட நீர்போற்
றுரியமாய் விபுவாய் நின்ற சொரூபத்தி லிறந்து போமே.

(இ-ள்.) அரியமெய்ஞ்ஞானத்தீயா லவித்தையாமுடனீருமே (எ-து)—கிடைத்தற்கரிய மெய்ஞ்ஞானமென்னு மக்கினியினு லவித்தை யென்னுங் காரணசரீரம்பஸ்மமாம்:—பெரியதூலமுங்காலத்தாற்பிண மாகிவிழும் (எ-து)—பருத்ததூலதேகமும் பிராரத்தமுடிவுகாலத்திற் பிணமாகவிழுந்துவிடும்:—அந்நேரமுரிய சூக்குமசரீரமுலையிரும்புண்ட நீர்போல் (எ-து)—அக்கணமே தனக்கென்றுரிய சூக்குமசரீரமோ உலைக்களத்தி லக்கினியிற்காய்ச்சி வெளியிலெடுத்த இரும்பிற்பெய்த நீரெங்ஙனஞ் சுண்டிப்போமோ அதுபோல:—துரியமாய் விபுவாய் நின்றசொரூபத்திலிறந்துபோமே (எ-து)—துரியமாயும் வியாபகமாயும் விளங்காநின்ற பிரமசொரூபத்தில்நாசமாம். எ-று.

அவித்யாநாசம் வேறொன்றாலன்மையின் ஞானத்தீயாலெனவும், புல்பூண்டு நாசமாயினு மீண்டுமுளைப்பதுபோலாமென்னுங் குறிப்பை மறுக்க நீருமெனவும், தூலநாசம்வேறொன்றாலன்மையின் காலத்தாலெ னவும், அவித்தை நீருயவிடத்து மீண்டும் முளைக்காதென்பதுதோன் றப் பிணமாகிவிழுமெனவும், அவித்யாநாசம்வரினும் சொரூப முதியா விடத்துதிக்குமென்பது தோன்ற, அந்நேரமுரிய சூக்குமசரீரமுலை யிரும்புண்டநீர்போல் துரியமாய் விபுவாய்நின்ற சொரூபத்திலிறந்து போமே யெனவுங் கூறினர். அவித்தை, ஒன்றையொன்றுவுணர்தல். அவித்தையாகிய காரணசரீர நீங்காவளவும் மனமாகிய சூக்குமசரீரங் கணக்கின்றிவந்தழியும். அம்மனமாகிய சூக்குமசரீரம் நீங்காவளவும் தூலசரீரங் கணக்கின்றி வந்தழியும். காரணசரீரநசிப்பே சூக்குமசரீர நாசம், சூக்குமசரீரநசிப்பே தூலசரீரநாசம். இங்ஙனமாதலை விளக்க விக்கவியிற் கூறியமுறையென்க. (105)

### 106 - கவி. (அ—கை.)

[காரணசரீரநாசவாசனுவிழப்பே விதேகமுத்தியாதலா லிந்த விதேகமுத்தி நிலையைச் சீவன்முத்தர்க ளடைவரென் பதை யிக்கவியிற் கூறுகின்றார்.]

கடமெனு முபாதி போனுற் ககனமொன் றானற் போல
வுடலெனு முபாதி போன வுத்தரஞ் சீவன் முத்த
ரடிமுடி நடுவு மின்றி யகம்புற மின்றி நின்ற
படிதிகழ் விதேக முத்திப் பதமடைந் திருப்ப ரென்றும்.

(இ-ள்) கடமெனுமுபாதிபோனற் ககனமொன் ருனற்போல (எ-து) குடமெனுமுபாதி யழிந்துபோனுல் நான்காகாயமு மேகமாவ தெங்ஙனமோவதுபோல: — உடலெனுமுபாதி போனவுத்தரஞ் சீவன் முத்தர் (எ-து) காரணசரீரத்தோடேனையவிரண்டுசரீரமு மொக்க நசிக்கும், நசித்தவக்கணமே சீவன்முத்தர்கள்: — அடிமுடிநடுவுமின்றி யகம்புறமின்றி (எ-து) — ஆதிமத்தியாந்தமென்பதின்றியும் அகம்புற மென்பதின்றியும்: — நின்றபடி நிகழ்விதேகமுத்திப் பதமடைந் திருப்ப ரென்றும் (எ-து) இருந்தவண்ணமிருந்தென்று மொருதகைத்தாக விளங்குகின்ற விதேகமுத்தி நிலையை யென்றுமொருபடித்தா யடைந் திருப்பர். எ-று.

கடமெனுமுபாதிபோனற் ககனமொன்றனற்போல என்றத ஞல், மேகமென்னுமுபாதிபோனற் ககனமொன்ருனற்போல வென் பதைவருவிக்க வேண்டும். வருவித்தால் மாத்திரம் நான்காகாயமும் ஏகமாகலாம். அங்ஙனமன்றேல் கடாகாயமும் கடசலப்பிரதிபிம்பா காயமு மொன்ருனற்போல வெனப்பொருட்படும். படவே, சீவனுஞ் சீவசாட்சியுமேகமாம்; ஏகமாயின், ஈசனும்ஈஸ்வரசாட்சியுமேகமாவ தென்றே, இன்ருயின், மாயாநாசமின்ரும்; இன்ருயின் மீண்டும வித்தைதோன்றும்; தோன்றவே, முன்போலவிபரீதமயமாம். ஒன்றைச் சொல்லும்போது அதனினத்தையுங்கூட்டி முடிக்கவேண்டும். என்னை, "ஒன்றினமுடித்தறன்னினமுடித்தல்" என்பதோருத்தி, என்ருர் பவணந்தி. உடலெனுமுபாதிபோன வுத்தரமென்பதற்குப்பொருள் மாயை, அவித்தையென்னுங்காரணசரீரத்தைக்கொள்ளாவிடில், சூக் கும, தூல தனுநாசத்தான் முத்தியெய்தற்பாலதோ, அடைந்தாருள ரோ, அங்ஙனங்கூறுஞ் சுருதியாதானுமுளதோ, உளதெனிலஃதற்ப சுருதி, இஃதுநம்பிக்கை நூல்போலன்று, எதார்த்தம். எங்ஙனமெனின், உணர்தற்பாலது உடல் அன்று, உயிராகலின், உணர்வை யுயி ரெனப்பெற்ரும், இங்ஙனமாயுதை விளக்க விதேகமுத்திப் பதமடைந் திருப்பரென்ருர்.

(க-து) சீவன்முத்திமேலீடே விதேகமுத்தியென்பது. (106)

**107 - கவி (அ—கை)**

[இவ்வனுபவம்பண்டையதேயென வுதாரண முகத்தாலிக்கவியிற் கூறுகின்ருர்.]

சொல்லிய மகனே யெங்குஞ் சூழ்வெளி யிருக்க மண்ணைக்
செல்லிய பின்னர்த் தோன்றுங் கிணற்றின காயம்போல

வொல்லையாம் பிரம நூலா லுற்றது போலே தோன்று
மெல்லையி னுமெப் போது மேகமென் றிருந்தி டாயே.

(இ-ள்) சொல்லியமகனேயெங்குஞ் சூழ்வெளியிருக்க (எ-து)—எனதிட்டப்படி நிட்டைகூடிச் சொல்லியஞானபுத்திரா! பூமியைச் சூழ்ந்த வெளியானது உள்ளும்புறம்புமெங்கணும்பூரணமாயிருக்க அதனைவிட்டு:— மண்ணைக்கெல்லியபின்னர் தோன்றுங் கிணற்றினுகாயம்போல (எ-து)—மண்ணைக்கிண்டி யாழமாகத் தோண்டியபின்னர் புதிதாகத் தோன்றுங் கிணற்றிலுள்ள வாகாயத்தைப்போல:—ஒல்லையாம் பிரமநூலாலுற்றதுபோலேதோன்றும், (எ-து)—பழமைக்கெல்லாம் பழமையாகியபிரமசொரூபமானது, ஞானசாஸ்திரத்தால் இப்போது நூதனமாக வுதித்ததுபோல விளங்கும் (அங்ஙனமன்று.):—எல்லையினுமெப்போது மேகமென்றிருந்திடாயே (எ-து)—காலாதீதமானநாம் எப்போதுமேகமாக விளங்கும் பிரமசொரூபமென்றகலாதிருந்திடுக. எ-று.

கிணற்றுகாயம் புதிதாகத்தோன்றுமாறுபோன்று, ஞானசாஸ்திரவிசாரமுகத்தாற் பிரமம் நூதனமாகவுதித்ததுபோற் றோன்றினும் அங்ஙனமெண்ணற்க. நாமே பிரமசொரூபமாயிருக்க முன்னர் விளங்காததென்னை? இப்போது விசாரித்ததுபோல அப்போதும் விசாரிக்கினிதேபிரகாசமாக விளங்குதும், ஆதலின் அப்போதொருபடித்தும் இப்போதொருபடித்துமன்று நாமென்பார், எல்லையினுமெப்போது மேகமென்றிருந்திடாயே யென்றார்

(க-து) என்று மொருபடித்தா விளங்குவமாதலின் விடாது பற்றுகவென்பது. இன்னநிலையினம்மாமென்று அளவை நூலாலெல்லை கணித்தற்கு அரியமெனப்பொருள் கொள்ளினும், எல்லையினுமென்பது பொருந்தும். (107)

## 108 - கவி (அ—கை)

[இதனினு முறுதிமொழி வேறின்றென விக்கவியிற் கூறுகின்றார்.]

கானனீர் கிளிஞ்சில் வெள்ளி கந்தர்ப்ப நகர்க னூர்
வானமை கயிற்றிற் பாம்பு மலடிசேய் முயலின் கோடு
மீனமாந் தறிபு மானிற் பிரபஞ்ச மெல்லாம் பொய்யே
ஞானமெய்ம் மகனே யுன்னை நம்மாணை மறந்தி டாதே.

(இ-ள்) கானனீர்கிளிஞ்சில்வெள்ளி கந்தர்ப்பநகர் கனவூர் வானமைகயிற்றிற்பாம்பு மலடிசேய் முயலின்கோடு மீனமாந் தறிபு

மானிற் பிரபஞ்சமெல்லாம்பொய்யே (எ-து) - கானலின்கண்ணீர் போலவும். கிளிஞ்சலில் வெள்ளிபோலவும், கந்தர்வநகரப்போலவும், சொப்பனப் பிரபஞ்சபோலவும், ஆகாயத்திற் கருமைபோலவும், பழுதையிற் பாம்புபோல்வும், மலடிபுத்திரன்போலவும், முயல்கொம்பு போலவும், பருத்தகட்டையிற் கள்ளன் போலவும், சமஸ்த பிரபஞ்சமும் பொய்யே:—ஞானமெய்ம்மகனே யுன்னை நம்மானை மறந்திடாதே(எ-து)—பரஞானமொன்றுமே மெய், சற்புத்திரா நீஞானமாதலினுன்னை யென்மேலாணைப்படி மறவாம லதுவாக விளங்குதி எ-று

சமஸ்தமு மித்தையென்பதற்குத் திஷ்டாந்த மொன்பதுவகையுள், மலடிசேயென்பதொன்றுஞ் சொன்மாத்திரம். ஏனைய வெட்டும், சொன்மாத்திரமுந் தோற்றன்மாத்திரமுமாம். ஒவ்வொரு பூதமுந் தத்தங் காரியவகையால் மகத்தும், காரணவகையா லணுவுமாதல்போல, அண்டபிண்ட முதலிய பௌதிகமுமாம் இதனை வஸ்து பரிசோதனையாற்காணலாம். இஃதன்றியும், ஆகாயத்தையன்றி நான்குபூதமும், நான்குபூதத்தையன்றி யண்டபிண்ட சராசர வடிவங்களுமில்லையே; ஆகாயம், சமஸ்தத்திற்கு மாதாரமு மகம்புறமுமா நிற்பதுபோலத் தனக்கெங்கே? இன்றெனின், யாதுபொருள்? இருந்தாலன்றோ கணிக்கலாமெனின், எவற்றிற்கு மாதாரமாவானேன்? அங்ஙனந் தோற்றன்மாத்திரமன்றி வேறன்றெனின், சூனியமென்னலாமே; இதனை மறுப்பது வழு. சூனியமெனல் பொய்யன்றோவெனின், தனக்கெனச்சுயம் பொன்றின்மையின் பொய்யே. ஆகாயம் பொய்யாயின், அதன்காரியமனைத்தும் பொய்யாகவேண்டுமேயெனின், சூனியமா முடியாது சோதனையிற் காட்டவேண்டும். கூடாதெனின், மறுப்பதென்னை? ஆதலின் சமஸ்தமும் பொய்யெனவும், பொய்யென் றேற்றற்கியைந்த ஒன்பதுவகை திருஷ்டாந்தம் இனையவெனவுங் கூறினர். கூறியதாற்குற்றமென்னை, உண்டெனின், சோதனையாதியாலுணர்த்தவேண்டும். கூடாதேல் பேசாமைநன்கு. கானலாதியே நீராதியாக மாருத்தோற்றுமாறுபோன்று, ஞெப்தியே சகமாதியாக மாருத்தோற்றலின் இவ்வுவமை பொருந்தும். நீராதியாரோபம், கானலாதியதிட்டானம். அதுபோலச் சகமாதியாரோபம், ஞெப்தி, அதிஷ்டானம். சமஸ்தமும்ஞெப்தியன்றேல், சோதனையில் சமஸ்தமும் ஞெப்தியாக முடிவதென்னை. ஆதலின், பொருந்தும். இதன்றியும், ஆராய்வதன்முன்னர் உலகம் நாமரூபமாகவும், பின்னரன்ருகவுங் காண்டலியாது. நாமரூபம்பாழிலும், பாழ்நாமரூபத்திலுங் காணுததென்னை. ஒன்றிலொன் றின்ருதலின் இஃதன்னியோன்னியாபாவ

மாயிற்று. இங்ஙனமாக நிற்பதும், நின்றுணர்வதும் அறிவாதலால் இதுபாவம். பாவம், மெய், அபாவம், பொய். எனவே, அறிவையன்றி யாதுமின்றெனப்பெற்றும். பெறவே, அனைத்துந் திரிசியம், தானறிவு, என்றுயிற்று. ஆகவே, தன்னையன்றி யனைத்துமின்றெனக் கண்டாம். காணவே, மறக்கவேண்டியதனைத்தையும், மறவாமலிருப்பது தன்னையுமெனப் பொருடருகின்றது. தருதலின், ஞானமெய்மகனே யுன்னை மறந்திடாதேயெனவும், இதுபோற்சத்தியம் வேறொன்றின்மையின் நம்மாணை எனவுங் கூறினர். மதத்தரிதனை மறுக்க வலியுளரேல் தமது ஞெப்தியைத்தள்ளி யுலகிருக்கத்தெரிவிக்கட்டும். பூரணபண்டிதருமோ; யாதானுமோர் பெயர்ச் சொல்லேயேனும், வினைச்சொல்லேயேனும், வஸ்துசோதனையில், அல்லவல்ல இல்லையில்லையென்றகலாதிருக்கவு முபாதான வுபாதேயவகையால் விகாரமின்றியோர் முதலிருக்கவுந் தெரிவிக்கட்டும். கூடாதெனின், மறுத்தலும் வலியுளர்போற் கூறலும்; தம்போற்பேதையர் வியக்கவன்றே. இதுநிற்க. அனைத்துமித்தை, அறிவேசத்தியமென்று வேதமுடிவும் கீதைகளும், உபநிடதங்களுங் கூறுவது, மூடத்தாலோ, விவேகத்தாலோ? மூடத்தாலெனின் அறிவையன்றித் திணைபாலிடமிருக்கத் தெருவிக்கலாமே. கூடாதெனின் விவேகத்தாற்கூறியதென்பம். கூடாதெனின், சொல்வாதமாமுடியும், முடியவே, பயனின்றியசொல்லாற் பகைநேரிட்டழிதும். இக்கவி தத்துவவிளக்கப்படல முடிவாதலா லிங்ஙனங் கூறினரெனவறிக. நான்குகாலத்தினு மித்தையொற்றுத்தக்கவுதாரணங்கூறியது; என்றுமுலகுண்மையெனக்கொள்ளாதிருத்தற்கும், இப்போதுமித்தையல்லவெனவும், ஒரவஸ்தையில் மற்றோரவஸ்தை யில்லாததால் மித்தையெனவும், வேதம் பொய்சொல்லுமாவெனவும், இதெல்லாம்பக்குவமுமனுபவமும் வந்தால்தெரியுமெனவும், இங்ஙனம் எல்லாம்வினாவாது சொல்வதைக்கேட்பதெமது மரபெனவுங்கூறி உணர்வை வளர்க்கத் தெரியாது உணர்வு வளர்ப்பார்போற் காட்டி உடலை வளர்க்குங் கள்ளஞானியரிவரெனக்காட்டற்குமென்க. இப்போதுமித்தையல்லவெனின் அந்நியோன்னியாபாவம் யாதுக்கு, ஆதலின் வழு. ஒரவஸ்தையில் மற்றோர் அவஸ்தையில்லாததாலப்போது மித்தையெனின், அவஸ்தை ஒன்றிலொன்றில்லாதேனுமுலகமின்றே? உண்டெனின், உலகைமித்தையென்னலாமோ இவனுக்கில்லையெனின், இவனுவுலகம். அன்றெனின், வேருயிருக்க, இல்லையென்னலாமா? அதுவழு. வேதம் பொய்சொல்லுமாவெனின், உயிர்கள்செனிக்காததற்கிவ்வுலககாலவரையறையாதோ, இன்றெனின், வரையின்றிய உலகை வேதமித்தையென்னலாமோ? இதனைச்சான்றோர்களேற்பதென்னைகொலோ?

அபிமானத்தாலன்றே அன்றெனின்; எப்போதின்றேவுலகம். எப்போதுமிருக்கின்றதெனின், வேதமுஞ்சான்றோருமுலகை மித்தை எனக் கூறுவதுவழு. இவையெல்லாம் பக்குவமுமனுபவமும்வந்தால் தெரியுமெனின் இவ்விரண்டுநிலையும்வந்தநீர்மித்தையென்றுலகைக் கூறலாகாதோ? கூறுவதையுணர்தற்குவலியின்றேலென்செய்வேனெனின், சுருதி. யுக்தி, அனுபவமென்னுமூன்றனுள், அனுபவம்பின்னராகட்டும், இப்போதுமுரணின்றிச் சுருதி யுலகைமித்தையெனற்குரை கூறலாகாதோ? வாசித்தால்தெரியுமெனின், வாசிக்கத்தெரிந்தும் எவருமுரைகேட்பானேன். இன்னொருபோதாகட்டுமெனின், எங்கேனுங் கேட்டுவந்து சொல்லுதற்கோ? அன்றெனின், இப்போது சொல்லலாமே. யோசிக்கவேண்டுமெனின், யோசியாமற்றெளிந்ததெங்ஙனம். இவையெல்லாம் முழுப்புறட்டு, ஆதலின் வழு, இங்ஙனமெல்லாம் வினவாது சொல்வதைக்கேட்ப தெமது மரபெனின், அஞ்ஞானஞ் சந்தேகம், விபரீதந் தெளிவதெங்ஙனே? கேட்டுக்கொண்டுவரில் தானே தெளியும் எனின், அங்ஙனந்தெளிந்த நீர் சொல்லலாமே. சொன்னால் கேட்க வலிஉண்டோவெனின், உண்டோவில்லையோ? அதைக்குறித்து முன்னமேபேசி ஆயிற்று. முன்போல் வளர்த்துச்சொல்லல் விவர்த்தமாம். ஆதலி னிதுவும் வழு. முறையேஇவை எல்லாந் தெரியாதார், உலகுபொய், ஞானம்மெய் என்பதை வாசித்துமென்பயன். கேட்டுத் தெளிந்தாலன்றிப் பயன்படா, கேட்டுத் தெளிந்தவன் நீ ஆதலின், ஞானமாகிய உன்னை மறந்திடாதேயென, ஆணையிட்டுக் கூறினார். சத்தியஞ் சத்தியம். (108)

## தத்துவ விளக்கப் படலம்

முற்றிற்று.



திருச்சிற்றம்பலம்.

## சந்தேகந் தெளிதல் படலம்.



சந்தேகந் தெளிதலாவது; சந்தேகத்தினின்று தெளிதல். முன்னர் தத்துவ விளக்கப்படலத்தில் தானுகிற ஆன்மாவைவிளக்க விளங்கினாற்போல, செகமாதி திரிபதார்த்தங் காரணமாகவெழுமையத்தைத் தெளிவிக்கத்தெளிதல். இஃதைந்தாம்வேற்றுமைத்தொகை நீங்கற் பொருள். ஆதலின் தத்துவ விளக்கப்படலத்தின்பின் வைக்கப்பட்டது.

### 1 - கவி (அ—கை)

[முன்னர் சொரூபசமாதிக்கண் தானே தானுகத்தனித்தசித்த விருத்தியானது மீண்டுந்திரும்பாது அங்ஙனந்திரப்படவேண்டியதற்கு மாறுகவுதிக்கும் ஐயந்திரிபுகளை யகற்றித் தெளிவுபெறுநெறியை யிக்கவியிற் கூறுகின்றார்.]

நரர்குழி பறித்து மெள்ள நாட்டிய நெடிய கம்ப
முரமுறக் குத்திக் குத்தி யுரப்பிக்கு முபாயம் போலப்
பரமமாஞ் சொரூபந் தன்னிற் பற்றிய மனோவி ருத்தி
திரநிலை பெறச்சந் தேகந் தெளிதலை மொழிகின் றேனே.

(இ-ள்) நரர்குழிபறித்துமெள்ள நாட்டியநெடியகம்பம் (எ-து) மனிதர்கள் ஆழமாகக்குழிதோண்டி மெதுவாகநாட்டின பெரியகம்பமானது: — உரமுறக்குத்திக்குத்தி யுரப்பிக்குமுபாயம்போல (எ-து) — இனியாதினும் அசையாது றுதிப்படவேண்டிகல் முதலியவைகளைப் பெய்து அக்குழியைக்குத்திக்குத்திப்ப லப்படுத்துமாறெங்ஙனமோ அதுபோல: — பரமமாஞ்சொரூபந்தன்னிற்பற்றியமனோவிருத்தி (எ-து)— பிரமசொரூபத்திலழுந்தியமனோவிருத்தியானது: — திரநிலைபெறச் சந்தேகந்தெளிதலைமொழிகின்றேன் (எ-து) — அங்ஙனமேயுறுதிபெறும் வண்ணஞ் சந்தேகந்தோன்றுமாயின தனைக்களைந்துதெளிவுபெறுமாறெங்ஙனமோவங்ஙனமாயநெறியைத் தெரிவிக்கின்றேன் எ-று.

"சித்தின் முயல்வாற்சித்தாகுஞ் செடத்தின் முயல்வாற் செடமாகும்" என்று மனோவிருத்தியிருப்பதனால், மீண்டுஞ்சடமாகாவண்ணங் காக்கவேண்டும், கர்த்தற்கிடையூறென்னை? சகசமாதியின்றுதலின் உலகந்தோன்றும் தன்னெறிக்கண்ணிற்கினஃதிருக்கினுந் தோன்

ருது. அயர்ந்தால்தோன்றும், ஆதலினுலகைச் சின்மாத்திரமாகக்கரைக்கில் தோன்றினுந்தோன்ருவிடினுமிடையூறின்று. அங்ஙனங்கரைப் புழித்தடைகள்வரும். அத்தடைகளாவன; மலவிசர்ச்சனம், சலவிசர்ச்சனம்,, இவைபற்றியேனும், உணவுபற்றியேனுஞ் சொரூபசமாதி விட்டகலவேண்டும்; அகல்வுழித்தேகந்தோன்றும், தோன்றவே சராசரந்தோன்றுந், தோன்றவே, தேசம்-காலம்-வீடு-பட்டணமுதலியவை தோன்றும், தோன்றவே திரிபுடிதோன்றும், தோன்றவே இச்சர் ஞானக்கிரியையுண்டாம், உண்டாகவே, விர்த்திகள் மேலிட்டழிவது போல்வன. ஆதலின் நிட்டைகலையும்போதே சங்கற்பந்தோன்றும், அங்ஙனந்தோன்றுவதுஞெப்தியாதலால் அதனையங்ஙனே சிற்ப்ரகாசமாகவிளக்கில் அனைத்துமங்ஙனமாம் திரிபுடியுஞ்சிற்ப்ரகாசமாய் ஏகமாகவிளங்கும். இங்ஙனம்பழகல் சகஜசமாதி இதற்குத்தடை சந்தேகம், இதனைக்கெடுத்தல் தெளிதல்; ஆதலின் திரநிலைபெறச் சந்தேகந் தெளிதலைமொழிகின்றேனேயென்ருர். திரநிலை, திரஞானமெனினுமமையும்.

(க-து) பரஞானமாகவிளங்கியமனம், திரஞானமாதற்குத் தடைகளைக்களைதலென்பது. (1)

2 - கவி (அ—கை)

[தத்துவவிசாரமுதல்விதேகமுத்திபரியந்தம் ஆசிரியரைப்பிரியாதிருந்தனனென்பதை யிக்கவிற் கூறுகின்ருர்.]

நற்கருத் துடையோ னாகி ஞானவா னாகி நின்றோன்
மர்க்கட நியாயம் போல மகாபூத விகாரந் தொட்டு
நிற்குண விதேக முத்தி நிலைபரி யந்தஞ் சொன்ன
சற்குரு வினைவி டாமற் சந்தத மனுச ரித்தான்.

(இ-ள்) நற்கருத்துடையோனாகி ஞானவானாகிநின்றோன் (எ-து) —சிற்சோதிநாட்டமகலாக்கருத்துடையோனாகியும், அயல்வடிவந்தானாகாது ஞானவடிவமேதானாகியும் விளங்கிநின்றமாணாக்கன்:—மர்க்கடஞாயம்போல மகாபூதவிகாரந்தொட்டு நிர்க்குணவிதேகமுத்திநிலைபரியந்தம் (எ-து)—மர்க்கடஞாயமெங்ஙனமோ அதைப்போலத் தூலபஞ்சமகாபூதவிகாரமாகிய தூலதேகமுதல் குணரகிதமாவிளங்கும் விதேகமுத்திநிலை பரியந்தமுள்ள அனுபவரசங்களை:—சொன்னசற்குருவினைவிடாமல் சந்ததமனுசரித்தான் (எ-து)—விடாமற்சொன்னசற்குருவைவிட்டுநீங்காமல் சதாகாலமுந்தொடர்ந்திருந்தனன். எ-று.

மர்க்கடஞாயம், குரங்குபோற்பற்றுஞாயம். அதாவது, கோபுர மேறிக் கீழ்க்குதிக்கினுந் தனதுதாயைவிடாதுபற்றுமுறைமை. மர்க்கடம் — நிர்க்குணம் ஆரியமொழியாதலின் ரகரமாயிற்று. என்னே, "றனழஎஒவ்வுமுயிர் மெய்யுமுயிரள பல்லாச்சார்புந்தமிழ்பிறபொதுவே" என்றார்பவணந்தி மர்க்கடஞாயம்போலச் சற்குருவினைவிடாமல் சந்ததமனுசரித்தானென முடித்துப்பொருள்கொள்க. (2)

3 - கவி (அ - கை)

[மாணாக்கனைச்சோதிப்பான்வேண்டி மூன்றுகேள்விகேட்டலை இக்கவியிற்கூறுகின்றார்.]

சந்ததம் புருடன் றன்னைச் சாயைபோல் விடாத வன்பா
மைந்தனை நோக்கிச் சாட்சி மாத்திர மாநின் றாயோ
சிந்தையி லைய மெல்லாந் தீர்ந்தவோ தெளிவி னுள்ளே
யந்தரங் கலந்த துண்டோ வனுபவ முரைசெய் வாயே

(இ-ள்.) சந்ததம்புருடன்றன்னைச் சாயைபோல்விடாதவன் பாமைந்தனைநோக்கி (எ-து) - ஓர்புருடனது தேகசாயையானதுஎப் போதுமவனைவிட்டு நீங்காவா றெங்ஙனமோ அதுபோல ஆசிரியனை விட்டு நீங்காத அன்பேவடிவாயமைந்த சற்புத்திரனைநோக்கி: — சாட்சி மாத்திரமா நின்றாயோ (எ-து) கூடஸ்தபிரமமாக விளங்குகின்றனை யோ: — சிந்தையிலைய மெல்லாம்தீர்ந்தவோ (எ-து) — உன்மனதிற் கிடந்த சந்தேகங்களனைத்து நீங்கினவோ: — தெளிவினுள்ளேயந்தரங் கலந்ததுண்டோ வனுபவமுரைசெய்வாயே (எ-து) — பேதரகிதமான சுவானுபவத்தெளிவின்கண் யாதானும்பேதம்வந்து கலந்ததோ இஃது எனக்குத்தெரியும்படியாக உனதனுபவத்தைச்சொல்லுதி. எ-று.

விடாமலெனின், வினைகொண்டுமுடியவேண்டும். அங்ஙனமின் றே, மைந்தனென்னும் பெயர்கொண்டுமுடிவதால் விடாதவெனப் பெயரெச்சமாக்கினும் வலிந்துமாற்றிப்பொருள்கொள்வதினு மிதுநே ரானதாலென்க. சாட்சிமாத்திரமா நின்றாயோவென்னுங்கால், சீவேச ராகிய கற்பிதத்தை விட்டென்றற்றொடக்கத் தொழிந்தசொற்களைத் தருதலின்ஞெழியிசை. சகசசமாதியாலன்றி யகலாச்சந்தேகங்களின்னின் னவாதலின் அதனையுணர்த்தச் சிந்தையிலையமெல்லாந் தீர்ந்தவோ வெனவும், பேதரகிதமேதெளிவாதலின் தெளிவினுள்ளேயெனவும், விகற்பபுத்திசற்றேவருதலியல்பாதலின், அந்தரங்கலந்ததுண்டோ வெனவும், நினதனுபவமுரைத்தாலன்றியிவற்றைத் தெரிந்து அகற்றற் கொண்ணாமையின், அனுபவமுரைசெய்வாயே யெனவுங்கூறினார்.

(க-ரை.) களங்கமற்ற வனுபூதியாகிறகண்ணாடியில் அழுக்குப் படிதலியல் பாதலெனத்தெரிந்தவராதலின் இங்ஙனம்வினவினரென் பது. இதுசோதனை.

4 - கவி. (அ - கை.)

[தனதனுபவவிநோதவுல்லாசத்தைத் தானே தனக்குள்கண்டுவியப் புற்று ஆசிரியரைப்புகழ்ந்து துதிக்கின்றனென்பது மிக்கவியிற் கூறு கின்றார் ]

எனவுரைத் தருளு மாசா னிருபதம் வணங்கி யெந்தாய்
சனனவன் காட்டின் மோகத் தமத்தெழு பேதப் பேய்க
ளுன்தரு ளுதய வெற்பி லுபதேச வருக்கன் றோன்றி
மனவிழி தெரிய ஞான வான்கதிர் பரந்தா லுண்டோ.

(இ-ள்.) எனவுரைத்தருளுமாசா னிருபதம் வணங்கி (எ-து) — என்றுவினவியஞானசிரியரது உபயபாதங்களையும்வணங்கி: எந்தாய் சனனவன்காட்டின்மோகத்தமத்தெழு பேதப்பேய்கள் (எ-து) — எமது கர்த்தனே பிறவியாகிய கொடியவனத்தின்கண் மூடியமோகமென்னு மிருளிலெழுதற்குரிய பேதமாகிறபேய்க்கணங்கள்: உன்தருளுதய வெற்பிலுபதேசவருக்கன்றோன்றி (எ-து) — உனதருளாகிறவுதயகிரி யில் ஞானோபதேசமென்னுஞ்சூரியனுதயமாய்: மனவிழிதெரியஞான வான்கதிர்பரந்தாலுண்டோ (எ-து) மனமாகிறகண்ணுக்குத்தெரியும் படியாக மேலானஞானகிரணங்கள் எங்கணும்வியாபித்துக்கொண்டாற் கணமேனுந்தங்குமா எ-று.

சஞ்சிதங்கள் காடுபோலடர்ந்திருத்தலின், சனனவன்காடெனவும், காடென்னாதுவனனென்றது, எவருந்திகைத்து மீளாத்தகைய தெனற்கு; இதனைத்தத்துவஞானானுபவிகளறிவரன்றி யேனையோர் சற்றுமறியார், இது நிற்க. மோகம், மயக்கம். அதாவது: தேகமுத லிய பிரபஞ்சங்களை மெய்யெனக்காட்டல். அடர்ந்த காட்டுக்கிருள கலாமைபோன்று. அடர்ந்தசெனனங்கட்கு மோகமகலாமையின், மோகத்தமமெனவும், உடலுமுயிருமபேதம் போற்றோற்றினுஞ் சடமுஞ் சித்துமாதலி னெங்ஙனமேகமாம், இங்ஙனமாய பேதமயமேயன்றி யனைத்துமெங்ஙனமேகமாகலாம், இப்பேதபுத்தியகன்ற சமயவான்க ளெங்ஙனுமில்லவேயில்லை. பேதபுத்தியைப்பேதமென்றது, குணவாகு பெயர். பேதபுத்திதனியேநிற்பதுகூடாமைமி னிங்கேயதனையுடையோ ரையென்க. அதனையுடையோரத்துவிதி நீங்கலாகச் சமஸ்தமதஸ்த ரும் அபேதவாதத்திற்கத்துவிதியொருவனேயுத்திரவாதி. அவ்விருவ

யகலாது வாழ்தல் பேய்களாமாறுபோன்று, அம்மோகஞ்சற்றுமகலாது வாழ்தல் பேதவாதமாதலின் பேதப்பேய்களெனவும், எழுவென்றது வினைத்தொகை. பேய்களெழுந்து சஞ்சரித்தற்குரிய திராக்காலம், அது போலப் பேதவாதிகளெழுந்து வாதித்துத் திரிதற்குரியது மோககாலம். ஆதலினெழுவெனவுங் கூறினர். இதுபந்தத்துக் கியைவதுபற்றி யென்க. அருளின்றியக்கண் ணுபதேசம் எழாது, உதயகிரியின்றியக் கண் சூரியோதயமெங்ஙனமாம், ஆதலின் உனதருளுதயவெற்பென வும், பூதசூரியனுதித்துழியன்றி யூனக்கண்காணவறியாது, அதுபோல ஞானசூரியனுதித்துழியன்றியகக்கண்காணவறியாது ஆதலி னுபதேச வருக்கன் றேன்றியெனவும், கண்ணில்லாவிடத்துப் பூதசூரியோதயத் தாலென்னபயன், அதுபோலப் பரிபாகமனமில்லாவிடத்துஞானசூரி யோதயத்தாலென்னபயன், ஆதலின் மனவிழிதெரியவெனவும், இவ் விருசூரியரெழினுஞ் சோரர்முதலிய சத்துருக்கள் பதுங்கற்கிடஞ் சற் றுண்டாயினுமுண்டாகலாம், தமது கிரணங்க ளெங்கணும்பரவி னப் பேர்திடமெங்கே, இம்மின்ருகவே, யவர்களுளரோவென்பார், கதிர் பரந்தாலுண்டோவெனவுங்கூறினர். இது விடுதிக்கியைவதுபற்றி யென்க. உண்டோவென்புதெதிர்மறை, உண்டோவென்னுங்குறிப்பு வினைமுற்றுக்கெழுவாய், பேதப்பேய்கள், சனனவன்காடு, மோகத் தமம், இவை மூன்றும், இவற்றிற்கெதிர்மறையாய, அருளுதயவெற்பு, உபதேசவருக்கன், மனவிழி, ஞானவான்கதிர், இவைநான்கு முருவ கம். இக்கவியிற்கூறியது நிச்சய ஞானமன்று பிரத்தியட்சஞானத்தை. எவ்வுயிருமறிவையன்றியில்லை அறிவன்றே வீட்டுறுநரனென்பது. அந்தவறிவுதானே, தேகோகமுதல்சிவோகமிறுதியாகநின்றது. வேறெ னின் காட்டவேண்டும், கூடாதெனினெனத்துக்கொள்ளவேண்டும், இன் றேனி னறியாதிருக்கவேண்டும். ஆதலின், தேகமுதல் சிவம்வரையு மிவற்றையகமெனிலிவையகமாகுமா, இவையயலன்றே. இது ஞான மாகுமா, அறிவு தன்னையேதானெனச் சுருதியுத்தியாலோர்தல், நிச் சயஞானம். அதுசுசாதிமுதலிய கற்பனையற்றதென்த்தேர்தல், அபர ஞானம். அதனையுள்ளவாறுகாண்டல், பரஞானம். திரிபுடியனைத்துஞ் சின்மாத்திரமாவிளங்கல், திரஞானம். இங்ஙனமிருத்தலி னிதனைமறுப் பார், அறிஞரெனப்படினு மேற்பதெங்ஙனம்.

5 - கவி (அ - கை)

[இங்ஙனந் துதித்தமாணக்க ஞசிரியரைநோக்கி யின்னுமடியே னைத்திருத்தவேண்டியதுளதே லதனைத்தெரிந்தருளவேண்டுமெ ன் றிரந்துகேட்டதை இக்கவியிற் கூறுகின்றார்.]

மந்திர மூர்த்தி தன்னான் மாற்றிய பேய்போ னாலு
மெந்திர மெழுதிக் கட்டி யினிவரா வகைசெய் வார்போன்
முந்தியுன் னுபதே சத்தான் மோகம்போ னாலு மையா
புந்திநின் றுறைக்க வின்னும் புகலும்விண் ணப்ப முண்டே.

(இ-ள்) மந்திரமூர்த்தி தன்னால் மாற்றியபேய்போனாலும் (எ-து) - மந்திரக்காரனாலே புத்தியைவிகாரப்படுத்திய பேய்நீங்கினும்:- எந்திரமெழுதிக் கட்டி யினிவராவகை செய்வார்போல் (எ-து) — எந்திரஸ்தாபிதஞ் செய்து அந்தப்பேய் மீண்டுமணுகாவண்ணந் தக்கதந்திரஞ்செய்பவர்களைப்போல: — முந்தியுன்னுபதேசத்தால் மோகம்போனாலும் (எ-து) — முன்னரேதேவரீருப தேசித்ததாலுதித்த ஞானசூரியனால் மோகவிருணீங்கினும்: — ஐயா புந்திநின்றுறைக்கவின்னும்புகலும்விண ணப்பமுண்டே (எ-து) - ஐயனேயெனது புத்தியானது அப்பிரமத்திலுறைந்திருக்காவேண்டியடியேன் கேட்டுக்கொள்ளவேண்டிய விண்ணப்பஞ்சிலவுள. எ-று.

சிற்சிலதடுமாற்றந் தனக்குளே தோன்றலைப்பற்றிப் புந்திநின்றுரைக்க வின்னும் புகலும்விண்ணப்ப முண்டேயென்றார். (5)

### 6 - கவி (அ — கை)

[துரியாதீதமாகக் குருவைக்காண்டலின் இவரைச் சிவமெனக் கருதித் தேவரீர்யாதுபற்றிப் பிரமம் மனோவாக்குக்கெட்டும் எட்டாதென வேதத்திற்கூறினீர் அதனைத்தெரி விக்கவேண்டுமென்று மாணாக்கன் வினவியதை இக்கவியிற் கூறுகின்றார்.]

ஆகமப் பிரமா ணத்தா லறியென்றும் வாக்குக் கெட்டா
தேகமாம் பிரம மென்று மிதயத்தா லுணர்வா யென்றுஞ்
சோகமா மனதிற் கெட்டாச் சுயஞ்சோதி யென்றுஞ்சொன்னீர்
மோகமா மிரண்டு சங்கை முளைத்தன பறித்தி டீரே.

(இ-ள்) ஆகமப்பிரமாணத்தா லறியென்றும் வாக்குக்கெட்டா தேகமாம் பிரமமென்றும் (எ-து) — அஷ்டவிதப்பிரமாணத்து ளொன்றாகிய சத்தப்பிர மாணத்தா லறிவாயென்றும், மீண்டுமந்தச் சத்தப்பிரமாணத்தால் அந்த ஏகமாகிய பிரமமுனக்கெட்டாதென்றும்:— இதயத்தாலுணர்வாயென்றுஞ்சோகமாமனதிற்கெட்டாச் சுயஞ்சோதியென்றுஞ்சொன்னீர் (எ-து) — மனத்தாலறிவாயென்றும், மீண்டுமந்தச்சோகமாகிய மனத்தினா லந்தச்சுயஞ்சோதியாகிய பிரமமுனக் கெட்டப்படாதென்றும் பூர்வத்திலீசனாகநின்று வேதத்தைச்சொன்

னீர்:-மோகமாமிரண்டு சங்கைமுளைத்தனபறித்திடீரே (எ-து) - இப்போது அடியேனுக்கு அந்த மயக்கமான இரண்டு சங்கைகள் என தகத்திலுதித்தன அவற்றை மெல்லத் தேவரீர் களைந்தருளவேண்டும். எ-று.

பிரமசொரூபம்; வாக்குக்கெட்டு மெட்டாதென்றும், மனதுக் கெட்டுமெட்டாதென்றுமாதியி லசரீரியாகநின்றுவேதங்கூறினது நீரன்றோ? அன்றெனில், இப்போதடியேனுக் கவ்வேதத்தினரியரகசியங்களை யெல்லாம்வெளியாக விளக்கிவித்தது நீரன்றோ? ஆதலின், நீரேயென் பதைத் தோன்ற வெழுவாயாக்கினும். சொன்னீரென்பதற்கு வேறு வினை முதலின்றாதல்பற்றியென்க. அன்றுசொன்னவர், நீ ர ா த லி ன் இன்றுவிளக்கற்குநீரானீர். ஆதலின் பரமசிவமே குருமூர்த்தமென்ப தற் கையமின்று. இந்நூலில்தானே மாணுக்கன் சொன்னது; "ஈசனு மாய்ருவாயுருவாகி யெழுந்தருளுங்குருவே" யென்றார். என்னை, "மறை முடியதனில் விளங்கிடுமொளியே மனிதரைப் போல்வந்தெனது சிறைதவிர்த்தாண்ட சிவப்பிரகாசதேசிகன்." என்றார் சாந்தலிங்க சுவாமிகள் இன்னும் பலருஞ்சொல்லினர். இங்ஙனகிருப்பதுபற்றி வேதத்திற் கூறியதன்றியில்லாததைச் சொல்வதன்று. விபரமாகப் பின்னர்க் கூறுதும். (6)

7 - கவி (அ—கை)

[முன்னர் பிரமம் வாக்குக்கெட்டாதென்பதை இக்கவியிற் கூறுகின்றார்.]

மற்றைமுப் பிரமா ணத்தால் வஸ்துநிர் ணயங் கூடாதே
யுற்றதோர் விடயம் பூத முபயமன் றுத லாலே
குற்றமாங் குணவி சேடங் கூடாம லிருக்கை யாலே
யிற்றது வாக்குக் கெட்டா தென்பது மறிவாய் நீயே.

(இ-ள்) மற்றைமுப்பிரமாணத்தால் வஸ்துநிர்ணயங்கூடாதே (எ-து) - சத்தப்பிரமாணத்தா லன்றியும், ஏனைய பிரத்தியட்சம், அனுமானம், உபமானமென்னு மூன்றுனும் பிரமவஸ்து இன்னநிலைய தென யாவரானு நிச்சயிக்கவொண்ணுது:—(ஏனெனில்) உற்றதோர் விடயம்பூதமும்பயமன்றுதலாலே குற்றமாம் (எ-து)—எதிரிற்காணவுற்றது பிரத்யக்ஷமாகத்தகுவதெனின், அஃதோர்விடயமாம். அனுமானிக் கத்தகுவதெனின், தனதுகாரியத்திற்கு தானோர்காரணமாம். உப மானிக்கத் தகுவதெனின், தனக்கோருபமானம்வேண்டலி னிரண்டாம். இங்ஙனமெல்லாந் தானன்றாய் விளங்கலின், இவற்றை யதன்மேலேற்

றிக்கூறுவது குற்றமன்றே. ஐயமின்றிக் குற்றமேயாம்: - குணவிசேடங் கூடாமலிருக்கையாலே யிற்றதுவாக்குக்கெட்டாதென்பதுமறிவாய் நீயே (எ-து) - இங்ஙனமாயவப்பரவஸ்து. தன்பாற் பிரத்தியட்சமுதலிய குணவிசேடங்களைப் பிறரேற்றிக்கூறினுந் தானவற்றிற் குடன்படாதிருத்தலின் வேதமாகிய சத்தப்பிரமாணத்துக் கெட்டப்படாதென்று கூறுவனதயுநீயறிதி. எ-று

மற்றமுப்பிரமாணத்தா லென்றதனுல். சத்தப்பிரமாணத்தா லென்றியுமெனக்கொண்டாம். மற்றையென்பது கடைக்குறை நாதாதீதமாதலிற் சத்தத்தானும், திரிபுடிரகிதமாதலின் பிரத்தியட்சத்தானும், காரணகாரியரகிதமாதலின் அனுமானத்தானும்; சுசாதி, விசாதி, சுகதபேதமிறந்ததாதலின் உபமானத்தானும் எங்ஙனமெட்டப்படும். படுமெனிற் குற்றமாம், ஆதலில் குற்றமாமெனவும், பிரத்தியக்ஷம், அனுமானம், உபமானம், சத்தம் என்னுமிந்நான்கையும் பிறர் அதன் மேலேற்றிக்கூறினுந் தானன்றுதலின் உற்றதோர்விடயம்பூத முபயமன்றுதலாலேயெனவும், இம்மூன்றும் வேதத்தையன்றியில்லாததால், வாக்குக்கெட்டாதெனவுங்கூறினர். குணவிசேடமென்பது மீமிசைப்பதம். குணவிசேடமென்பது இந்நான்கையும் எனக்கொள்க.

(உ-ம்.) புனிற்றிளங்கன்று. மீமிசைஞாயிறு, தாகிளங்க்முகு, உயர்ந்தோங்குபெருவரை, என்பன மீமிசை.

வினு: - ஏனைய அருத்தாபத்தி, அபாவம், ஐதீகம், சம்பவமென்னும் இந்நான்காறு மெட்டாதெட்டலா மென்றுதென்னை?

விடை: - அருத்தாபத்தி; குறியாலுணர்தல், குறிகடந்ததாதலின்கூடாது. அபாவம்; பொய். நான்குகாலத்துஞ் சதோதயமாக விளங்கலின் கூடாது. ஐதீகம்; தொன்றுதொட்டு வழங்கல். சகசீவபரம்போலத் தொன்றுதொட்டு வழங்கலன்று தொன்று, நூதனம். என்னுங்காலங்கட்கு அதீதமாதலின் கூடாது. சம்பவம்; ஒன்றன்கூட்டம். பலவினீட்டம்; திரிபிணுக்கமெனப்படல். அதுபிண்டப்பொருளுமன்று. பிண்டித்தபொருளுமன்று, ஆதலிற்கூடாது. இதுபற்றியென்க. இங்கேபிரத்தியட்சமெனல், ஞானகதப்பிரத்தியட்சத்தை. பிரத்தியட்சம்-தரிசனம். அனுமித்தல்-அநுமானம். அருத்தத்துக்காபத்துவரல்-அருத்தாபத்தி என்றுமுண்டெனல்-சம்பவம். இன்றெனல்-அபாவம். இகம்-இயதி, ஐதீகம்.

(கு-து.) இன்னின்னஹேதுக்களால் வாக்குக்கெட்டாதென்பது: இதனைமறுத்தற்கேதென்னை? வலியுளாரேபோற்காட்டுவார், அர்த்தவாதியரல்லர். உற்றதோர்விடயம்பூத முபயம் வஸ்துவன்றுதலாலே மற்றை

முப்பிரமாணத்தால் வஸ்துநிர்ணயங் கூடாதேயென்வும், கூடாவிடத்து இன்வகுற்றமாம், இந்தக்குற்றமாங் குணவிசேடங்களைக் கூட்டினுங் கூடாமலிருக்கையாலேயென்வும், ஆதலினிற்றது வாக்குக்கெட்டா தென்வுங் கூட்டிமுடிக்க. இவற்றால் நாம் வஸ்துநிர்ணயம் பண்ணவுங் கூடாது, பண்ணினு மெட்டாது, எனப்து முக்கியத்துணிவு. என்னை, "வேதமுதலிலகலைகாட்சி முதலளவைவிரிஞ்சன்முதல் விண்ணோர்செய் யுஞ், சோதனையுளகப்படாச் சோதியுனைச்சோதிக்கத் துணிந்தேனந் தோ" என்றார் பரஞ்சோதிமுனிவர். நான்மாடக்கூடலானபடலத் தில். (7)

8 - கவி. (அ - ன்க)

[எட்டாதெனக் கூறியவேதம் எட்டுமென மீண்டுங்கூறும், ஆயினும் இவ்விரண்டுவிதமும் இன்னின்னவேதுவினாற் கூடுமென இக்கவியிற் கூறுகின்றார்.]

வாக்கியந் தனக்கெட்டாத் வஸ்துவென் றுரைத்த வேதம்
வாக்கிய விருத்தி யாலவ் வஸ்துவைக் காட்டிற் றன்றோ
வாக்கியங் களிலே மான மாவதே தென்று யாகில்
வாக்கிய மிரண்டு மெய்யே மற்றகள் பொய் யாநீ கேளாய்.

(இ-ள்.) வாக்கியந்தனக்கெட்டாதவஸ்துவென்றுரைத்தவேதம் (எ-து) — வாக்குக்கெட்டாததுபரவஸ்துவெனக்கூறியஅந்தவேதமே: — வாக்கியவிருத்தியாலவ் வஸ்துவைக்காட்டிற்றன்றோ (எ-து) — ஒருவன் கேட்டவிறுதியில்லாது அவ்வாக்கியத்தைச் சிரவணமனனாதிகளாலேயந் திரிபறவிசாரித்திசெய்வதினாலே அவ்வஸ்துவைக்காட்டினதல்லவா; — வாக்கியங்களிலேமானமாவதேதென்றுயாகில் (எ-து) -- இங்ஙனமிருவகை யாக்கூறிய வாக்கியங்களில்யாதுசிறந்ததென்க் கேட்குதியேல்: — வாக்கியமிரண்டுமெய்யே மற்றகள் பொய்யாநீகேளாய் (எ-து) — இவ் விரண்டுவாக்கியமும் உண்மையே. வேதங்கள் பொய் சொல்லுமா, சொல்லாவே, இதனையாங்கூற நீகேளுதி. எ-று.

வாக்கியவிருத்தி, வாக்கியார்த்தம் விளங்கும்படியால் அதாவது; சொல்லெலாம் பொருளாம்வண்ணஞ் சிரவணமனனாதிகளால் ஐயந் திரிபறும்படி இங்ஙனம்விடாது முயன்றால் அவ்வஸ்துவைக்காட்டு மோ, காட்டாதோ? காட்டாதெனின், தீவிரதரமெற்றிற்கு காட்டுவது திண்ணமாதலால், காட்டிற்றன்றோவென இறந்தகாலத்தாற் கூறி னார். எறும்பு முட்டைகொண்டு திட்டையேறின் என்றாற்போலும். என்னை, "சொற்றிரியினும்பொருடிரியாவினைக்குறை" என்றார் பவ

ணந்தி வாக்கியவிருத்திசெய்தநிறல் மகான்களுக்குவஸ்துவைக் காட்டிற்றெனப்பொருள்கொள்ளின், அப்போது காலவமுவமைதியன்று. வாக்கியவிருத்திசெய்யினும் வஸ்துவைக்காட்டாதது அபக்குவங்காரணமாதல்பற்றி. ஆயினும், எங்ஙனமேனுங்காட்டிவிடும். இத்திண்ண நோக்கித், ''தெய்வத்தாலாகாதெனினுமுயற்சிதன் மெய்வருந்தக் கூலி தரும்'' எனவும், இன்னும் ''ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித்தாழாதுஞற்றுபவர்'' எனவுங்கூறினர் திருவள்ளுவர். காட்டுங்காட்டாதென்றது அவரவர்முயற்சியளவும் பக்குவவளவும் பற்றி ஆதலினிரண்டுமெய்யே மறைகள் பொய்யாவென்றார் வேரு கப்பாடமோத வியையினேற்க? உபாதேயங்காண்டலா லுபாதானந் தக்கமுயல்வாற் காணுததற்கேதென்னை உபாதேயம், விடயம். உபாதானம், ஞானம். இவ்விரண்டும் அபேதம். (8)

9 - கவி (அ - கை)

[சுருதிகாட்டாமல் காட்டுமென்பதை இக்கவியிற்
கூறுகின்றார்.]

தன்பதி யல்லாப் பேர்க ளுமையல்ல னல்ல னென்று
ளன்பனைக் கேட்ட நேர மவள்வெட்கி மௌன மானு
ளென்பது போல நீக்கி யிதன்றிதன் றெனச்சே டித்த
பின்பரப் பிரமந் தன்னைப் பேசாமற் பேசும் வேதம்.

(இ ள்) தன்பதியல்லாப்பேர்க ளுமையல்லனல்லனென்றுள் (எ-து)— தனதுநாயகனல்லாதபேர்களை இவனுமிவனுநினது நாயகனெனப் பிறர்வினவுந்தோறுமிவனல்லனிவனல்லனென்று சொல்லிக் கொண்டுவந்தாள்:—அன்பனைக்கேட்டநேர மவள்வெட்கி மௌனமானுளென்பதுபோல (எ-து)—முடிவில்நாயகனைக்கேட்டவக்கணத்தே அவள் நாணமுற்றுப்பேசா திருந்தன ளென்றுலகத்தார் கூறுவதுபோல:— நீக்கியிதன்றிதன்றெனச் சேடித்தபின் பரப்பிரமந்தன்னைப் பேசாமற் பேசும்வேதம் (எ-து)—ஒவ்வொருதத்துவத்தையுந் தனித்தனி விசாரியாநிற்புழி வேதமானது இதல்லவிதல்லவென்று சென்று முடிவில் இனிக்கூறவிடமின்றி மிஞ்சிநின்ற பரப்பிரம வஸ்துவை உணர்த்தாமலுணர்த்தும். எ-று.

மணம்புரிந்தானை மருவிடவேண்டித் தன்மனைக்கண் மாமனை மைப்பித்துழி யவன்சோமுரோடுங்கூடியிருக்க, அக்கலியாணப்பெண்ணை அவளது தோழிக ளிவனுமிவனு நினது நாயகனென்னுந்தோறும் அல்லவல்லவென்னக் கூறி முடிவிலிவனுவென்னக்கேட்க விடையின்றி

மௌனமானுள். இஃது ஐதீகம். இதனைத் திருட்டாந்தமாக்கினார். வஸ்து இதுபோன்றிருத்தலின், என்னை? "ஆணல்லன் பெண்ணல்ல னல்லாவலியுமல்லன், காணலுமாகானுளனல்லனில்லனல்லன்" என்றார் சடகோபர். இன்னும், "உருவன்றருவன் றுளதன்றிலதன், றிருளன் றொளியன் றெனநின்றதுவே" என்றார்அருணகிரிநாதர். "அல்லை யல்லையீ தெனவருமறைகளு மன்மைச்சொல்லினுற் றுதித்திளைக்கு மிச்சுந்தரநாடற்கு, எல்லையாகுமோவென்மொழி" என்றார் பரஞ்சோதி முனிவர். தானறிவு அவனின்பமாதலின், அவள்வெட்கிமௌனமானு ளெங்ஙனமோ; அங்ஙனந்தத்துவகுழாங்களை நியதிகளைந்துசென்றது அறிவு, பிரமமானந்தமாதலிற் பேசாமற்பேசும் வேதமென்றார். சிற் றறிவும் சிற்றின்பமு மௌனமாக்குழிப், பேரறிவும் பேரின்பமும் மௌனமாக்கற்கு இடையூறென்னை, கேட்பானேன். எனவே, அறிவே சுகமெனக்காட்டநின்றது. ஆதலினறிவானந்தமென்றார் கண்டோர். அறிவுதன்னையயலாகக்காணுங்காறும் ஆனந்தந் தனக்கயலாகக்கா ணும். அறிவைக்கண்டார்க்கு ஆனந்தம் அயலன்று தானேயானந்தம். எங்கெங்கின்பஞ் செனிக்கின்றதோ, அங்கங்கறிவைக்காணின் மோன மாம், ஆதலின்மோனமென்பது ஞானவரம்பென்றாள் ஔவையார். அங்கங்குபாதியைக்காணின் மாளாமோகமாம் மௌனமாம் என்பார் பேசாமற்பேசும் வேதமென்றார். மௌனமாவது; அல்லவல்லவெனற் கெல்லை. இன்னும், பேசிக்கொண்டேவந்துபேசாமனிற்றல் காட்டிக் கொண்டேவந்து காட்டாமனிற்றலெனினுமமையும். இதனைக் குரு சீடவனுபவ வகையுட்காண்க.

(க-து) சுருதிகாட்டாமல்காட்டல், அல்லவல்லவெனக்கூறிக் கொண்டேவந்து அயர்ந்துநிற்றலென்பது. அங்ஙனநிற்றலனுபூதி முடிபு. இதனையறியார் பலபிதற்றியுமென்னை. (9)

## 10 - கவி (அ - கை)

[இதுகாறு முதற்சங்கைக்குத்தரங்கூறி, இனியிரண்டாஞ்சங்கைக்கு உத்தரங்கூறுவான்வேண்டி மனமினையதெனத் தெரிவிக்க அதனுற்பத்தியை இக்கவியிற் கூறுகின்றார் ]

முந்திய சங்கைதீர மொழிந்ததை யறிந்து கொள்வாய்
பிந்திய சங்கை தீரப் பேசுமுத் தரநீ கேளா
யிந்தியங் களுக்கி ராச னிதயமா மதினெண் ணங்கள்
புந்தியு மனமு மென்றே புறத்தகத் துலாவி யாடும்.

(இ-ள்) முந்தியசங்கைதீர மொழிந்தையறிந்துகொள்வாய் (எ-து)—முதற்சங்கைக்கு ஐயந்தீரவிடைதந்ததை யறிந்துகொள்ளுதி:- பிந்தியசங்கை தீரப்பேசுமுத்தர நீகேளாய் (எ-)து— பின்சங்கைக்கு ஐயந்தீரக் கூறும் உத்தரத்தை நீகேளுதி:—இந்தியங்களுக்கிராசனி தயமாம் (எ-து)—மனமுதலியவிந்திரியங்களுக்குத் தலைவனாயிருப்பது ஞானமாம்;—அதினெண்ணங்கள் புந்தியு மனமுமென்றே புறத்தகத் துலாவியாடும் (எ-து) அதினது சங்கற்பங்கள் புத்தியெனவும் மன மெனவுங் கூறப்பட்டுப் புறம்பிலுமகத்திலும் உலாவிநடமாடும். எ-று.

இந்தியங்களுக்கிராசன்மனமெனின், புந்தியுமனமுமெனச் சொல் லாது இருக்கவேண்டும். சத்தப்பிரகரண முதலிய கட்டளைகளில் ஞானம், மனம், புத்தி, சித்தம், அகங்காரம் எனக்கூறியிருக்கின்றது. ஆகாயத்திலாகாயம், ஞானம், ஆகாயத்தில்வாய்வு, மனம். ஆகாயத்தி லக்கினி, புத்தி, ஆகாயத்தி லப்பு, சித்தம் ஆகாயத் திற்பிரிதிவு, அகங்காரம். அங்ஙனங்கூறியதுமின்ன காரணம்பற்றி யென்க. எனவே, மனமுதலிய நான்கும் அறிவின்ஸ்புரிப்பென்றாயிற்று. அன்றேல், அறிதல்தர்மமில்லாதிருக்கவேண்டும். இருப்பதால் மறுக் கற்பாற்றன்று. ஞானமின்றியாதுநிகழும். யாதுண்டு. இன்றுதலி னேற்றற் பாலதே. ஆதலினிதயத்தைஞானமென்றும். அதினெண் ணங்கள் புந்தியுமனமுமெனவே, அதனது புடைபெயர்ச்சியின் அவசர நிலைகளையன்றி மனமும் புத்தியும் ஓர் முதலன்றெனக் குறிக்கக் கூறியதாகக்கண்டாம். எவ்வுயிருந்தேகோகமாநிற்றலின் தேகத்துக் குப்புறம்பகமெனவும், அகத்தில்மனமிச்சா ஞானமாக நின்றுழறலும், புறத்தில்புத்திபலகிரியைகளாநின்று நடித்தியற்றலும்பற்றி யுலாவியா டுமெனவுங்கூறினர். உலகத்தாரவனவன் புரிதொழிலைக்கண்டு வியப்ப தும் இகழ்வதும் புத்தியையன்றிமனதையன்று. விநோத வேலையைக் கண்டு இவனது புத்தியென்ன சிறந்ததெனவும், இழிதொலைக் கண்டு இவனது புத்தியென்ன மடமையெனவுந் தொன்றுதொட்டு வழங்க லின் இதுவேசான்று புந்தியுமனமுமெனக்கூறி யவற்றின்புடை பெயர்ச்சிகளாகிய உலாவியாடுமென்பவைகளை முன்பின்னாகக்கூறி னும், புறத்தகத்தென்றதனல் மாற்றிப்பொருள்கொள்ளின் வழுவன்று. மனமாவது; சமிசயநிச்சய சாஞ்சலிய அபிமானங்களில், சமிசயமாதலி னாலும், அறிவின்புடை பெயர்ச்சியாதலானுமிஃதோர்முதலன்று. அன் றேனும், முதலாகநடித்தலினிதனை வினை முதலாக்கி யெட்டுமெட்டா தெனற்குக்கூறவந்தால் இதனது நிலை யினையதெனக் காண்க.

(க-து.) மனமெனவினையதெனவறிவித்ததென்பது. புத்தியைப் புந்தியெனல்மெலித்தல்விகாரம். உறையிற்கோடலென்னுமுத்தியால், புறத்தகத்தென்பதைப் பகிர்முகம் அந்தர்முகமென்ருக்கிப் புத்தியுமனமு மிவ்விருமுகத்தில் யாதானுமொன்றிலேனு முலாவியாடுவதியல்பாத லெனக்கொண டிங்ஙனங் கூறினு ரெனினுமமையும். பகிர்முகம்; பொன்னைப்பணியெனவும், பழுதையைப் பாம்பெனவுங்கோடல். அந்தர்முகம்; பொன்னைப் பொன்னெனவும், பழுதையைப் பழுதையெனவுங்கோடல். கொள்ளவே, சுத்தபுத்தி சுத்தமனம் (எ-ம்) — அசுத்த புத்தி அசுத்தமனம் (எ-ம்) — பாகுபடுதற்கிடம்பெறல் ஆயிற்று. இதனைப் பின்வருவதாற் காண்க

11 - கவி. (அ - கை.)

[முன்னரிதயமென்றஞானம்; விருத்தியெனவும் சிதாபாசனெனவும் இருபாலதாயமுறையை இக்கவியிற் கூறுகின்றார்.]

உன்முகம் போற்கண் ணுடிக் குள்ளொரு முகங்கண் டாற்போற்
சின்மய வடிவின் சாயை சித்துப்போற் புத்தி தோன்றும்
நின்மல விருத்தி யந்த நிழல்வழி யாயு லாவுந்
தன்மநன் மகனே யித்தைத் தானன்றோ ஞான மென்பார்.

(இ-ள்.) தன்மநன்மகனே உன்முகம்போற்கண்ணுடிக் குள்ளொரு முகங்கண்டாற்போல் (எ-து) — அறம்வழுவின்றியசற்புத்திரா உனது முகம் போலொருமுகங்கண்ணுடியிற்காணப்படுமாறுபோன்று; — சின்மயவடிவின் சாயை சித்துப்போற் புத்திதோன்றும் (எ-து) — சின்மாத்திரமாக விளங்குஞ் சைதன்யமானது புத்தியிற்றனேகாணப்படுமாறு போன்று சாயாரூபமாகப் பிரதிபலித்துக்காணப்படும்: — நின்மலவிருத்தியந்த நிழல்வழியா யுலாவும் (எ-து) — மேற்கூறியசைதன்யமென்னு நின்மலவிருத்தியானது, அந்தச்சாயாரூபவழித்தாகவே யுலாவிக் கொண்டிருக்கும்: — இத்தைத்தானன்றோ ஞானமென்பார் (எ-து) — இதையல்லவா சத்துக்கள்ஞானமெனக்கூருநிற்பர். எ-று.

இங்கேசாயையென்றது, சிதாபாசனை ஆடியால் முகம்; பிம்பம் பிரதி பிம்பமெனப்பட்டாற்போலப், புத்தியால் சைதன்னியம்; விருத்தி சிதாபாசன் எனப்பட்டது ஆடியாலன்றி முகத்திற்குமாருப் பிரதிபிம்ப முகமென வருமா, அதுபோலப் புத்தியாலன்றிச் சைதன்யத்திற்கு மாருச் சிதாபாசனெனவருமா? வந்ததால், சைதன்யம்விருத்தியெனப் பெயர்பெற்றது. இங்கே புத்தியென்றது பகிர்முகநோக்கத்தை

அதில், தோற்றிய சித்தைச் சாயையென்பதிலேயமுளதேற் சோதனை யிற்காணலாம். எங்கெங்கேநானெனலுண்டோ அங்கெல்லாஞ்சிதா பாசனன்றே? சிதாபாசனெனினுஞ் சீவனெனினுமொக்கும். அறிவு நானலதைநானென்றதனு லிக்கற்பிதப்பெயர்கள் தனக்குவந்தன. இந்தவறிவு சுயஞ்சைதன்யத்தின் பிரதிபலனமாகச் சோதனையில் முடிவதா லிதனைச்சாயையெனவும், இஃததிஷ்டானமாகக் காண்டலி னிதனைச்சித்துப்போலெனவும், சாத்தனென்னுஞ்சொல் தன்பால் புடை பெயர்ச்சியின்றியக்கண் பெயரெனவும், ஆகியக்கண்ணெழுவாயெனவு மெங்ஙனமாயிற்றே வதுபோலச், சிதாகாயமானது; புத்தியில் சித்து போற்சாயையாகப் பிரதிபலித்தலாகிய புடைபெயர்ச்சியைக் தன் பாலில்லாவிடத்துச் சின்மயவடிவெனவும், உடையவிடத்து நின்மல விருத்தியெனவும், அல்லது விருத்தியெனவும் பெயர்பெறும். இங்ஙன மாதல்பற்றி இப்பெயர்தந்தனரெனவும், நீரைவிட்டகலாத கானல் எங்ஙனமோ அங்ஙனம் அக்கற்பிதவறிவினின்று நின்மலவிருத்தியக லாதுலாவலின், நின்மலவிருத்தியந்தநிழல்வழியாயுலாவு மெனவும், இங்கே நிழலென்பது சிதாபாசனை இச்சிதாபாசன் கற்பிதவறிவன் றியும், இக்கற்பிதவறிவு நின்மலவிருத்தியன்றியும், இந்தநின்மல விருத்தி சின்மயவடிவன்றியு மின்றெனச்சான்றோர்கண்டுரைப்பதால் இத்தைத்தானன்றே ஞானமென்பாரெனவுங்கூறினர். கூறவே சித்து சம்பந்த ஞானமாதலி னிதனை விருத்தியெனப் பெயரிடக்கண்டாம்.

(க-து.) இனிவிருத்தியெனவும், பலமெனவு மெடுத்தாளவேண் டுதல் பற்றி யிக்கவியில் விருத்தியினையதெனக் கூறியதென்பது (11)

12 - கவி. (அ—கை.)

[சிதாபாசனையே பலமெனக்கூறி விருத்தியைக் கண்ணாகவும், பலத்தை விளக்காகவு மிக்கவியிற் கூறுகின்றார்.]

உருக்கிய தராநீர் நாநா வுருவங்க ளானாற் போல
விருத்தியே கடப டாதி விடயமாப் பரிண மிக்கு
மருப்பல விடய மெல்லா மாபாசன் றேற்று விக்கு
மிருட்டினில் விளக்குங் கண்ணு மில்லாமற் பொருள்கா ணாதே.

(இ-ள்) உருக்கியதராநீர்நானா வுருவங்களானாற்போல (எ-து) —குகையிலிட்டுருக்கியதராநீரானது; கட்டியவச்சின் விகாரவண்ண மெங்ஙனநானா வடிவங்களாகுமோ அங்ஙனம்:—விருத்தியேகடபடாதி விடயமாப்பரிணமிக்கும் (எ-து)—சித்துசம்பந்தஞானமே சடசம்பந்தமா

நின்று கடபடமுதலிய விடயங்களாகவிகாரப்படும்: — அருப்பலவிடய மெல்லா மாபாசன்றேற்றுவிக்கும். (எ-று) — அருமையானபலரூபமாக நின் றவ்விடயங்களனைத்தையுஞ் சிதா பாசனாகிற சீவன் தெரிவிப் பன்: — இருட்டினில் விளக்குங்கண்ணு மில்லாமற் பொருள்காணாதே (எ-து) — இருட்டிலுள்ள பொருள்கள் விளக்குங்கண்ணு மின்றியவிடத் தெங்ஙனங்காணப்படுங் காணப்படாவே. எ-று

பொருள்காணாதேயென்பது தொகையொருமை. முன்கவியிலொரு மை யாகக்கூறியவிருத்தியென்பது விரைவி லிக்கவியிற் பன்மையா தற்கேதென்னைகொலோ இன்றுதலி னொருமையாக்கினும். பரிணமித் தல் அதையன்றி யில்லையெனத் திண்ணமாக்கற்குத் தேற்றேகாரங் கொடுத்தாமெனவறிக. என்னை, "சிற்சொரூபந்தானே செகசொரூப மென்றார்" சொரூபானந்த தேசிகர்: ஏற்றற்பாலதன்றெனின், பொரு ளிடங்காலமயமன்றிச் செகத்துக்குத் தனியேசொரூபமென்னை? இன்றெ னின், தெரிவையன்றியிம்மூன்றையுங்காட்டவேண்டும். கூடாதெனின், தெரிவேயாதாரமாகவேண்டும். ஆதாரமாயினும், முதற்காரணமென்ன லாமாவெனின், தெரிவாக முடியாதவற்றைச் சோதனையில் சுயம்பாக முடித்துக்காட்டலாமே? காட்டப்படாது சூனியமாக முடிகின்றதெனின், அன்னியோன்னியாபாவத்தா லொன்றிலொன்று இன்றுயழியும். அழி யினும், அறிதலறியாமையாதலால், அந்தவறிவேயிங்ஙன்நதேற்று மென்றார். மறுப்பதென்னை? அறிவுக்குச்சகத்து சத்தாக்கண்டலோ, அசத்தாக்காண்டலோ? சத்தாகவெனின், அறிவினது சத்தைத் தவி ரச் சகத்து வேறுசத்தாகக் காணலாமே? கூடாதெனின், மறுக்கற்க; எல்லாவிடயங்களையுஞ் சிதாபாசன்பலரூபமாகநின்று தெரிவித்தலின னும். அநுபவித்தலினனும் சிதாபாசனைப் பலமென்லகூடும் கூடவே, விருத்தி கண்ணும். பலம், விளக்குமென்றுமிற்று. ஆகவே, இவ் விரண்டி லொன்றில் லாவிடத்து ஓர்பொருளுங் காணாதாதலால் இரண்டும் வேண்டுமெனப் பெற்றும். இதுபகலிலன்றுதலினிருட்டினி லென்றார். அறிவுவிகாரியாது நின்றறியின் திரிபுடிகாணுமா? காணு மாயின், தனதுவிகாரம். பிம்பமெங்ஙனமோ அங்ஙனம் பிரதிபிம்ப மாதலின் மயக்கமென்னை? இன்னும், கட்டியவச்சுகளெவ்வெவ்விகார மோ அவ்வவ்விகாரமாந் தராநீரென வுவமைகூறியதும் பொருந்தும். இவையெல்லாந்தன்னைத்தான்வியாது சோதிப்பார்க்கேயன்றி யேனையோர்க் கெங்ஙனமுண்மையாம். உருக்கியதூராநீர் கற்பிதவழிச் செல்லாதுழித் திரியுமா அதுபோல, அறிவு தனது கற்பிதவழிச் செல லாதுழித் திரியுமா? என்பதற்கே இவ்வுபமானமெனவறிக. பரிண

மித்தல், பால்தயிராதல் போலும். இதனை நான்காந் திருஷ்டாந்தத்தினுள் பரிணும திருஷ்டாந்தமென்பார். இதுசத்தியம் சோதனையிற் காணலாம்.

(க-து) விருத்தி பலனெனவுருவகப்படுத்தக் கண்விளக்கென்ருரென்பது இதுமுன்மொழிந்துகோடலென்னுமுத்தி (12)

13 - கவி (அ - கை)

[கண்ணும் விளக்குமாகிய இவ்விரண்டும் வேண்டும் அவசரம் இனையதெனவும், இவற்றுளொன்று வேண்டும் அவசரம் இனையதெனவும் உபமேயத்தோடு இக்கவியிற் கூறுகின்ருர்.]

எரிகின்ற விளக்காற் கண்ணு லிருட்பொருள் காணல் வேண்டுந்
தெரிகின்ற பரிதிகாணச் சென்றிடிற் கண்ணே போதும்
விரிகின்ற சகத்தைக் காண விருத்தியும் பலமும் வேண்டும்
புரிகின்றவிருத்தி யொன்றே போதுமெய்ப் பொருள்காண்போர்க்கே

(இ-ள்) எரிகின்ற விளக்காற்கண்ணு லிருட்பொருள்காணல் வேண்டும் (எ-து) - எரிகின்ற விளக்கினுலும் கண்களாலும் இருட்டிலுள்ள பொருளைக் காணவேண்டும்; - தெரிகின்ற பரிதிகாணச் சென்றிடிற்கண்ணேபோதும் (எ-து) - பிரத்தியட்சமாகக்காணப்படுகின்ற சூரியனைப்பார்க்கச்செல்லவேண்டில், கண்ணென்றேபோதும்: - விரிகின்றசெகத்தைக்காண விருத்தியும் பலமும்வேண்டும் (எ-து) - எங்குமாவிரிந்திருக்கின்றசெகத்தைக் காணவேண்டில் விருத்தியும் பலமுமாகிய இவ்விரண்டும்வேண்டும்: - புரிகின்ற விருத்தியொன்றேபோது மெய்ப்பொருள்காண்போர்க்கே (எ-து) - அகமாகப்புரிகின்ற விருத்தியொன்றுமே மெய்ப்பொருளைக் காண்போருக்குப்போதும். எ று.

எனவே, கற்பிதரகிதவறிவைவிருத்தியெனவும், கற்பிதசகிதவறிவைப் பலமெனவுங் கூறியதாகப்பெற்ரும். பெறவே, ஒரறிவேயில்லதையுள்ள தாகநோக்கலிற்கற்பிதமெனவும், உள்ளதையுள்ளதாநோக்கலின், எதார்த்த மெனவும் படுதலாலும், ஒரறிவே ஈரறிவாக் காணப்படுதலாலும், சகத்தைக் காணவேண்டில் ஈரறிவும்வேண்டும். தன்னைத்தான்காணவேண்டில் எதார்த்த அறிவொன்றுமேபோதும். யாதினுலெனில், செகத்துகற்பிதவஸ்து அதனை அறிவது கற்பித அறிவாகவேண்டும். அவ்வறிவு எதார்த்த அறிவையன்றி வேறன்ருதலினிரண்டும்வேண்டும். தான் கற்பிதரகிதவஸ்து, தன்னைத்தான் காணவேண்டில் எதார்த்த அறிவாலன்றிக்கூடாது தான் கற்பிதரகிதமாகும் போது அறிவுங் கற்பிதரகிதமாகவேண்டும். தன்னைத்தன்னுல்

அறிவதன்றி வேறொன்றுலன்றுதலின், புரிகின்ற விருத்தியொன்றே போதுமெய்ப்பொருள் காண்போர்க்கேயென்றார். விளக்குங் கண்ணும் போலப் பலமும் விருத்தியும் எனக்கொள்க

(க-து) விளக்குங்கண்ணுமின்றியக்கண் ணிருட்பொருள் விளங் காமை போலப், பலமும் விருத்தியு மின்றியக்கண் செகத்து விளங்காது. சூரியனைக் காண்டற்கு விளக்கு வேண்டாவாறுபோன்று, தன்னைக் காண்டற்குப் பலம் வேண்டுவதின்றென்பது. மெய்ப்பொருளைக்கா ணும்விருத்தியாவது, ஐயந்திரிபகலத்தெளிந்தஞானம். இதனையறியார் அபரஞானமென்பர். (13)

## 14 - கவி (அ—கை)

[மனமாவது இத்தகையதெனத்தெரிவித்து, அது வஸ்துவை எட்டும் எட்டாதென்பதை இக்கவியிற் கூறுகின்றார்.]

விருத்தியும் பலமுங் கூடும் விகாரமே மனமென் பார்கள்
கருத்தெழும் விருத்தி வேண்டுங் கணக்கினுன் மனதிற் கெட்டும்
வருத்திய பலமா மிந்த மனதிற்கெட்டாது கண்டா
யருத்தமிப் படியென் றைய மகன்றுநீ தெளிந்தி டாயே.

(இ-ள்) விருத்தியும்பலமுங்கூடும் விகாரமேமனமென்பார்கள் (எ-து) சித்துசம்பந்தமானவிருத்தியும், சடசம்பந்தமானபலமு மிசிரிம் பித்தவிகார ரூபமே மனமெனச் சத்துக்கள்சொல்லுவார்கள்:—கருத் தெழும்விருத்திவேண்டுங் கணக்கினுன்மனதிற்கெட்டும் (எ-து) - அக முக நாட்டக்கருத்திலெழும் விசாரஞானத்தெளிவுகாரணத்தால் அந்த மனதிற்கப்பரவஸ்துவானது எட்டுமெனவும்:—வருத்திய பலமாமிந்த மனதிற்கெட் டாது கண்டாய் (எ-து)—யாவையும் வருத்துகின்ற பலமேவடிவாநின்றுள்ள இந்த மனதிற்கெட்டா தெனவுங்காணுதி:— அருத்தமிப்படியென்றைய மகன்று நீ தெளிந்திடாயே (எ-து)—மன திற்கெட்டுமெட்டாதெனற்கருத்த மிங்ஙனமாமென்று சிந்தித்து ஐயந் தவிர்ந்து நீ தெளிந்திடுக. எ-று.

சிற்சடவடிவமனமெனற்கு, விருத்தியும்பலமுங்கூடும்விகாரமே மனமென்பார்களெனவும், கருத்தாகவெழும் விருத்தியெனப்பதம் பிரித்து, இனிப்பகிர்முகமாகாதிருக்குதுமென்றக்கரையோடெழும் விரு த்தியெனப்பொருள் கொள்க, இஃதுரையிற்கோடலென்னுமுத்தி இங் கேகணக்கென்றது விபரம் அல்லது காரணம். விருத்திரூபமாயது சுத்தமனமெனவும், பலரூபமாயது அசுத்தமனமெனவும் பொருள் கொண்டெட்டுமெனவும், எட்டாதெனவுந், திண்ணம்பற்றிக்காணுதி யென்பதைக் கண்டாயெனவுங்கூறினார். இங்கேயருத்தமென்பது சாம்

பிரதாயப்பொருள். சிந்தியாதுழி ஐயமகறலுந்தெளிதலுங் கூடாமை யால் சிந்தித்தெனவருவித்தாம். எங்கணும்பரிபூரணமாநிறைந்துள்ளது சைதன்யமாதலின் "உள்ளத்திருந்துமெளித்தான்பரனெனவும்" "பொன்னுலகத்தினிற் புவியிலந்தரத், தென்னுடையுட்புறத் திலங்கு கின்றது, மன்னுசிற்சோதியே வடிவம்யாவுமாய்த், துன்னுவதென வும்" "உலகெதுயாமாரென்ன வுற்றுநின்றுணருமட்டுங் கலகமார் பிறவிமோகங் கங்குல்போல்மூடிநிற்கும் அலகிலாவுலகும்யாமு மழி வில்சிற்சோதியன்றே" வெனவுங்கூறினர் சான்றோர்பலரும் கழுத் தள்வாநின்றுள்ளோ னிதுபாற்கடலென்றெண்ணுமறந்துழித் தண்ணீ ரெங்கேயெங்கேயெனத் தாகமேலிட்டலே வான்போன்று தான்சித்தா யிருந்தும் மனந்தவித்தலினெட்டாதெனவும், அங்ஙனம் பல்லூழி காலம்லேவான் தெய்வகதியாகக் கழுத்தளவாநின்றதைக்கண்டெளி திற் பருகித்தணிப்பான்போன்று, இங்ஙனம் பல்லூழிகாலம் பற்பல கோடி சென்மமெடுத்தும் பற்பல வரியதவஞ்செய்தும் எட்டவறியாது தவித்து நின்றமனம் தெய்வகதியால் தனக்குள் பூரணமாநிறைந் துள்ள சிதாகாயத்தைக் கண்டெளிதிலுபசாந்தமெய்தலின் எட்டுமென வுங்கூறுவது, கூடுமோ கூடாதோ? கூடாதெனின், இப்போது எவர் மனமும் அல்லலகலாததாலெப்போதகலும், சுபாவமெனின், தின சுழுத்தியிற் சுபாவமெங்கே. ஆதலின் நனவிற் சுழுத்தி யென்றுரைன்று ளது, அதுவாய்க்கின் அல்லலென்றும் அகலும். கூடாதென மறுத் தல் விசாரத்தவறு.

(க-து) மனதுக்கெட்டுமெட்டாதெனல் இங்ஙனமாய நிலையா லென்பது. சோதனை ஞாயந்தெரியாதார் இதனைமறுத்தல், தன்போல் வார்களிப்புக் கங்காந்துதிரிதற்கென்க. அசுத்தம் - பகிர்முகம். சுத்தம் — அந்தர்முகம் என்றுரை கொள்க. (14)

## 15 - கவி (அ - கை)

[இதுகாறும் மனோவாக்குக்குப் பிரமமெட்டு மெட்டாதென்பதைப் பற்றி விளங்கக்கூறினீர், இனிமனம்நிவாததீபம்போ லென்றும் இருத்தற்கு உபாயங் கூறவேண்டுமென்று மாணாக்கன் வினவ அதற்குத்தரமிக்கவியிற் கூறுகின்றார். வேறு.]

வஞ்சகமில் பரமார்த்த குருவே சொன்ன வழிகளறிந் தேனினி யோர் வசனங் கேளீர், சஞ்சலமற் றகண்டபூ ரணமாய்ச் சித்தந் ததா காரமாவதன்றே சமாதி யோகம், முஞ்சலையொத் தலைவ்துதன் சுபாவமாகி யொருகணத்திற் பல்வுலகா வுதிக்குமிந்த, நெஞ்சகம்

வஸ் துவிலசையா நிவாத தீப நிலையடைவ தெப்படியோ நீர்சொல் வீரே.

(இ-ள்) வஞ்சகமில் பரமார்த்தகுருவேசொன்ன வழிகளறிந் தேனினி யோர்வசனஞ்கேளீர் (ஏ-து) - கள்ளங்கரகிதமான பரமார்த்த குருவே தேவரீரனுக்கிரகித்தமார்க்கங்களையெல்லாந் தெரிந்துகொண் டேன், இனியடியேனிரந்துகேட்டுக்கொள்ளும் விண்ணப்பமொன்று ளது அதனைக்கேட்டருளும்: — சஞ்சலமற்றகண்டபூரணமாய்ச்சித்தந் ததாகாரமாவதன்றோ சமாதியோகம் (ஏ-து) - மனமானது யாதோர் சலனமு மின்றி அகண்டபரிபூரணமாகவுந் தன்மயமாகவும் விளங் கலன்றோசமாதியோகமெனப்படுவது. (அங்ஙனமின்றி:) — உஞ் சலை யொத்தலைவது தன்சுபாவமாகி யொருகணத்திற் பலவுலகாதிக்கும் (ஏ-து) — உஞ்சலைப்போலலைவது தனதுசுபாவமாகி யொருகணத்திற் பல உலகமாகப்பரிணமிக்கும்: — இந்தநெஞ்சகம் வஸ்துவிலசையா நிவாததீப நிலையடைவதெப்படியோ நீர்சொல்வீரே (ஏ-து) இங் ஙனமாய மனமந்தப்பரவஸ்துவி லசையாமல் நிவாததீபம்போன்ற நிலையினை யடைவதெங்ஙனமோ அதனை யடியேனுக்குத் தெரித்தரு ளும். எ-று.

கரவாமல் விளக்கியதால் வஞ்சகமிலெனவும், அநாசிரியரன் றெனற்குப் பரமார்த்தகுருவேயெனவுங்கூறினர். அசையாவென்பது. அடைவதென்னும் வினைகொண்டுமுடிவதுசிறப்பு. அசையாதவெனக் கடைக்குறையாக்கிப் பெயரெச்சமாக்கினுமமையும்.

(க-து) மனஞ் சற்றுஞ்சலியாநிலையையடைய வேண்டினனென் பது, இவ்வேண்டுகோள் சகசநிட்டையில், இன்னுமிவன்பயிலாததா லென்க, உஞ்சலையொத்தலைவது மனதின்சுபாவமாகில் மாற்றினுந் தன்னியல்பாமேயெனின், பற்றுக்களையெல்லாஞ் சின்மாத்திரமாக்கு மளவுமியல்பென்பம், அப்பாலெங்ஙனமாம். சிற்சடபேதந்தவிரின் மண் மெனலேது. சிற்சடபேதங்கற்பிதமன்றிச்சைதன்யத்திலெங்கே. அறிவு உள்ளும்புறம்புமொருதகைத்தா விளங்காவரையு மிப்பேதமகலாது. இதனை இருவகைச்சமாதியுழப்பாலன்றி உணரவொண்ணாது. (15)

## 16 - கவி. (அ—கை.)

[அவ்வினாவுக்கு விடைகூறுவரன்வேண்டி மனதிற்றரிய முக்குணத்தினிலையினையும், அவற்றாலாய பயனையும் இக்கவியிற் கூறுகின்றார்.]

கருதுமனோ குணமூன்று மூன்றி லொன்று கதித்தெழுந்தான் மற்றிரண்டுங் கரந்து நிற்குந், தருமமிகு சத்துவமே லானபோது சன்மார்க்க மானதெய்வ சம்பத் துண்டா, மருவுமிரா சதமாகி லுலக தேக வாதனையாஞ் சாத்திரவா தனையு மாகு, மருமகனே தாமதமே லான போதி லசுரசம்பத் துண்டாகு மறிந்து கொள்ளே.

(இ-ள்.) கருதுமனோகுணமூன்று மூன்றிலொன்று கதித்தெழுந் தால்மற்றிரண்டுங்கரந்துநிற்கும் (எ-து) நினைத்தலையே யியல்பாகவு டையமனமானது மூன்றுகுணமாயிருக்கும், அம்மூன்றில் யாதானு மோர்குணமேலிட்டெழின் மற்றிரண்டுகுணமுமறைந்திருக்கும்: — தரும மிகுசத்துவமேலானபோது சன்மார்க்கமான தெய்வசம்பத்துண்டாம் (எ-து) — சற்கருமத்தால்மிகுந்தசாத்துவிதகுணமேலிட்டவவசரத்தில் சன்மார்க்கமேவடிவாயுள்ள தேவசம்பத்துக்கிடைக்கும்: மருவுமிராசத மாகிலுலகதேக வாதனையாஞ்சாத்திரவாதனையுமாகும (எ-து) - அடுத் தராசதகுணமேலிட்டவவசரத்தி லுலகவாசனையுந் தேகவாசனையுஞ் சாஸ்திரவாசனையுமுண்டாம்: — அருமகனேதாமதமேலானபோதிலசுர சம்பத்துண்டாகுமறிந்துகொள்ளே (எ-து) — எனதருமையான ஞான புத்திரா தாமதகுணமேலிட்டவவசரத்திலசுர சம்பத்துகிடைக்கும் இதனை அறிந்துகொள்ளுதி. எ-று.

அந்தந்தகுணமேலிடலுக்கியைந்தபயனினையதெனவே, மனது மங்ஙனமாமென்பதுபெற்றும். குணமியைந்தவாறு மனமுநிற்பதால், மனோகுணமெனப்பட்டது. ஒன்றுமேலுறிலிரண்டுகரந்து நிற்றலியல்பு. அதுபோலப் பலனுமவ்வாறியைதலியல்பு. எங்ஙனமெனில், ஐம்பூதங் கட்குந்தனித்தனி சுபாவம்வெவ்வேறு, ஒன்றோடொன்று மிசிரிம்பித்த விடத்திலுண்டாஞ் சுபாவம்வேறு, அவ்வவற்றிற்குரிய காரணங்களை யுன்னும்போது சுபாவமென்பது மாறும், இவையெல்லாம் வஸ்து சோதனையாற் காணலாம். (16)

## 17 - கவி. (அ—கை.)

[மனது சத்துவாம்சமாதலால் அந்நிலையில் மாறாதுநிற்கின் நிர்விகற்ப சமாதி எளிதிலெய்துமென்பதை இக்கவியிற் கூறுகின்றார் ]

மனதுசத் துவசொரூப மற்றிரண்டும் வந்துகலந் தனவவற் றை மாற்றி னற்போந், தனதுசன்மார்க்கம்விடா திருந்தபோது தாம தமுமிராசதமுஞ் சமிக்கும் பின்னைக், கனபரிணா மஞ்சலனம் போம் போனக்காற் களங்கமற்று நின்றவா காயம் போலு, நினதுளமப் படியாமப் பிரமத் தொன்றாய் நிருவிகற்ப சமாதியிலே நிற்குந் தானே.

(இ-ள்.) மனது சத்துவசொரூபமற்றிரண்டும் வந்துகலந்தன வவற்றைமாற்றினுற்போம் (எ-து) - மனமென்பது சத்துவாம்சவடிவ மாம், ஏனைய்ராசத தாமதகுணமோ இடையில்வந்து கலந்தன, அவற் றை ஒழிக்கில் ஒழிந்துபோம் (எங்ஙனமெனில்:) - தனது சன்மார்க் கம்விடாதிருந்தபோது தாமதமுமிராசதமுஞ்சமிக்கும் (எ-து) - சைதன் யத்தையகலாநாட்டமுறலாகிய தன்து சன்மார்க்கநடையை விடா திருந்தபோது தாமதமுமிராசதமுந்தானே நசிக்கும்: பின்னைக்கன பரிணமஞ்சலனம்போம் போனக்கால்களங்க மற்றுநின்ற ஆகாயம் போல நினதுளமப்படியாம் (எ-து) - நசித்தபின்னர் கனமாகப்பரிண மித்துக்காணப்படுந்திரிசியமும்போக்குவரத்து முதலியசகலவித கிர்த்தி யங்களுமக்கணமேநீங்கும். நீங்கினவக்கணமேகளங்கரகிதமானவாகாய மெங்ஙனமோ அதுபோல வுனதுமனமுமங்ஙனமாம்: — அப்பிரமத் தொன்ருய் நிருவிகற்ப சமாதியிலே நிற்குந்தானே (எ-து) - ஆதலா லந்தப்பிரமத்தினிடத்தில் நிர்விகற்பசமாதியில் நினதுமன மசைவின்றி நிற்கும். எ-று.

சிற்பிரகாசப்பிரதிபலனமே சாத்துவிதமாதலாலும், அந்தச்சாத்து விதமே மனமாதலாலும், மனது சத்துவசொரூபமெனவும், அக்குண நெறித்தா நின்று ஏனையதுணமிரண்டையுந் தவிர்க்கத்தவிர்ந்துவிடும், அங்ஙனந்தவிர்ந்ததெனநில்லாது விடாதொளிருந் தனது சத்துவகுணத் தை யகலாதுநிற்கில் முன்னர் தவிர்ந்தகுணமிரண்டுந் தாமேநாசமா மென்பதைவிளக்க, மற்றிரண்டும்வந்துகலந்தன வவற்றைமாற்றினுற் போம் தனதுசன்மார்க்கம் விடாதிருந்தபோது தாமதமுமிராசதமுஞ் சமிக்குமெனவும், ஏனையவிரண்டுகுணமுந் தனது சுயவடிவன்றெனக் காட்ட வந்துகலந்தனவெனவும், பரிணமம், பரிணமித்தல். அது

பால்தயிராதல்போலும். இது திரிசியத்தைக் காட்டநின்றது இந்தத் திரிசியம், மகத்துக்குமகத்தாகக்காண்டலிற் கனமெனவும், இக்குணத் தையகலாத குணி திரிசியமாதலால், பரிணமமெனவும், பரிணமித்தல் பரிணமமாதலின், தொழிலாகுபெயர். சகந்தோற்றுந்தோறுஞ் சகல விவகாரங்கட்குமிடமாதலின், சலனமெனவும், சகஞ்சின் மாத்திரமாக் கரைந்துழிச் சலனத்துக்கிடமின்மையின், பரிணமஞ்சலனம் போமென வும், வேறுநிகழாமையின் போனக்காலெனவும், மழைக்காலந்தவிர்ந் ததெனக்காட்டக் களங்கமற்றுநின்ற வாகாயம்போல வெனவும், மனஞ் சிதாகாயமாத்திரமாவிளங்கலின், நினதுளமப்படியாமெனவும், அச்சிதாகாயத்துக்கு வேறுபடாமையின், அப்பிரமத்தொன்ருயென வும், இங்ஙனநிற்குநிலைக்குப்பெயராதலின், நிருவிகற்பசமாதியென

வும், நித்தியதிருத்திக் கிதைவிட நிலையே நின்றுதலின், நிற்குமென வுங்கூறினார்.

(க-து) மனோவனைதிக்கு, நிர்விகற்பசமாதியென்க்காட்ட அதி னிலை இனையதெனக்கூறியதென்பது. உபநிடதநெறித்தாச்சென்றோர்க் கன்றி இந்நிலைசற்றுமியையாது, இயைந்ததுபோற்காணினு மிடை யினழுவும். இதனை உய்த்துணர்ந்துகொள்க இஃதுபநிடதநெறித் தாதலின் விடாதுமுயலுக முயலாவிடில, உபநிடதமேற்பழி யுன்னால் வரும், இதுசத்தியம். (17)

## 18 - கவி (அ - கை)

[பிரமம்போல் நினதுள்ளமுங் களங்கரதிதமாகாவிடத்துப் பயனின்றென்பதை இக்கவியிற்கூறுகின்றார்.]

களங்கமற்ற கண்ணாடி தன்முன் வேறோர் களங்கமற்ற கண் ணாடி காட்டும் போது, விளங்கியதன் மயமாகி யபேத மாகி விகற்ப மின்றி நிருவிகற்ப மானாற் போல, வளந்தறியப் படாவிபுவாய்ச் சத்தாய்ச் சித்தா யானந்த மாம்பிரமத் தயிக்கியமான, வுளந்தெளிந்த படியிருந்தா லுலக மெங்கே யுலைவெங்கே யென்றுசங்கை யொழித்தி டாயே.

(இ-ள்) களங்கமற்றகண்ணாடி தன்முன்வேறோர் களங்கமற்ற கண்ணாடி காட்டும்போது (எ-து) – களங்கரகிதமான கண்ணாடியானது தனக்குமுன் வேறோர்களங்கரகிதமான கண்ணாடியைக்காட்டியவிடத்து:– விளங்கியதன்மயமாகி யபேதமாகிவிகற்பமின்றி நிருவிகற்பமானாற் போல (எ-து) களிம்பின்றிவிளங்கிய தானெங்ஙனமோ அங்ஙனமாகி யாதோர்விகற்பமுமின்றிப் பேதப்படாது நிர்விகற்பமாகிநின்றாற் போல:– அளந்தறியப்படாவிபுவாய்ச் சத்தாய்ச்சித்தா யானந்தமாம் பிரமத் தைக்கியமான (எ-து) – இவ்வளவினதென்று அளவைகளாலள ளந்தறியப்படாத்தாயும், விபுவாயும், சத்தாயும், சித்தாயும், ஆனந்த மாயும்விளங்கும் பிரமத்தினிடத்தி லைக்கியமான:— உளந்தெளிந்த படியிருந்தா லுலகமெங்கே யுலைவெங்கேயென்று சங்கையொழித் திடாயே (எ-து) – மனந்தெளிந்ததெங்ஙனமோ வங்ஙனமிருந்தால் உலகமென்பதெங்கே, அதுபற்றியுண்டாஞ் சகலபிரவிர்த்தி நிவிர்த்தி களுமெங்கே, யில்லையே யாதலால் உலகையுமுலைவையு மொழித்த லெங்ஙனமென்க் கேட்குஞ்சங்கைகள் யாதுக்கு அதனையொழித்திடுதி. எ-று.

மனதைக்களங்கமற்ற கண்ணாடியாக்கியது, ஐயந்திரிபகல வேண்டுவதைப்பற்றி. இன்றேல், ஐக்கியம்போல்வதன்றி யைக்கிய மன்று. பிரமங்களங்க மற்றகண்ணாடிபோல்வதால் மனமு மங்ஙன மிருக்கவேண்டுமென்பது பற்றி இவ்வுவமைகூறியதென்க. மனந் தெளியின் தானப்போது அளந்தறியப்படா விபுவாய்ச் சத்தாய்ச் சித்தா யானந்தமாநிற்குமெனக் குறிக்கவிவற்றைப் பிரம இலக்கண மாகக்கூறியது. இஃதெடுத்துக்காட்டுவமை, மனஞ்சித்தின் முயல்வால் சித்தாகுஞ் சடத்தின்முயல்வால் சடமாகு மென்பதொக்கும். ஆதலிற் சிற்சடமெனப்பட்டது எங்கேயென்பது, உளதோவெனப்பொருடர நின்றது. இல்லையேயாதலால் உலகையுமுலையையுமொழித்த லெங் ஙன மெனவருவித்தது. இசையெச்சம். அதாவது; நால்வகைச்சொற் களுள் வேண்டுவனவெல்லாந் தந்தகலஞ் கூறவேண்டிநிற்பது. உதாரணம் "இணரெரிதோய்வன்ன வின்னுசெயினும், புணரின் வெகுளாமைநன்று." என்றார் திருவள்ளுவர். கேட்குமென்பது, ஒழியிசை.

(க-து) உள்ளந்தெளிந்தவண்ணநிற்கில் எல்லாச்சங்கையுந் தாமேயகலு மென்பது, வினவலெற்றிற்கு. (18)

19 - கவி (அ கை)

[மனமிறக்கி லின்றியமையாச்செயல்க ளெங்ஙனமாமென மாணாக்கன் வினவலை இக்கவியிற்கூறுகின்றார்]

ஏகமாய் மனமிறந்தாற் சீவன் முத்த ரிருக்குமட்டும்பிராரத்வ மெதினா லுண்பார், போகமா னதுபுசித்துத் தொலைப்ப தன்றோ புசித் தாலு மனந்தானும் போன தன்றே, சோகமா மனமிறந்தாற் போக மில்லை தோன்றுமெனின் முத்தரென்று சொலக்கூடாதே, மோகமா மிதுதெளியக் குருவே நன்றாய் மொழிந்தருள வேண்டுமென்றான் முழுது மானோன்.

(இ-ள்) ஏகமாய்மனமிறந்தாற் சீவன்முத்த ரிருக்குமட்டும் பிராரத்வ மெதினாலுண்பார் (எ-து) - பிரமத்தோடொன்றாக மனோலயமாயின் சீவன் முத்தர்கள் தாமுயிர்த்திருக்குமட்டுந் தமதுபிராரத்வத் தை யெங்ஙனம் யாதினாலனுபவிப்பர்: - போகமானது புசித்துத் தொலைப்பதன்றோ, (எ-து) - பிராரத்வபோகத்தை யனுபவித்துத் தொலைத்தாலன்றிப் போகுமோ போகாது - புசித்தாலு மனந்தானும் போனதன்றே (எ-து) - புசித்துத்தான் தொலைக்க வேண்டும், அங் ஙனம் புசித்தாலுமனமுமிறந்ததோ விறக்கவில்லையே: - சோகமாமன

மிறந்தாற் பேர்கமில்லை (எ-து) - போகத்தையே சோகமாகவுடைய மனமிறக்குமாயின், எங்ஙனம் போகநுகர்தல்: தோன்றுமெனின் முத்தரென்றுசொலக்கூடாதே (எ-து) போகநுகரவேண்டி மனமெழுமாயின், அவரைச் சீவன்முத்தரெனச் சொல்வதெங்ஙனம்: – மோகமாமிது தெளியக் குருவேநன்ருய் மொழிந்தருளவேண்டுமென்ருன் முழுதுமானேன் (எ-து) – குருநாதனே மயக்கமாயுள்ள இச்சந்தேகந்தெளிவு பெறச் செவ்விதாத்தெரித்தருள வேண்டுமென்றிரந்துகேட்டனன் சமஸ்தமுந் தானுவிளங்கியமாணுக்கன். எ-று.

(க-து) இவ்வைந்துவிதமாகத் தோற்றும் ஐயந்தொலைப்பதெங்ஙனமெனக் குருவை மாணுக்கன் வினுவினனென்பது (19)

20 - கவி. (அ - கை.)

[இவற்றிற்கு உத்தரங்கூறுவான்வேண்டி மனோநாசம் இருவகையாமென இக்கவியிற் கூறுகின்ருர் ]

மனநாசஞ் சொரூப மென்று மருபமென்றும் வகுத்துரைப்பாரிருவகையா வருமி வற்றில், வினவாத சீவன்முத்த ரிடத்திலொன்றும் விதேகமுத்த ரிடத்திலொன்று மேவு மைந்தா, தனதான சத்துவமாய் மனஞ்சே டிக்கத் தாமதம்ரா சதநசித்தல் சொரூப நாச, மனகாசத் துவந்தானு மிலிங்க தேக மடங்கும்போ தடங்குவதே யருப நாசம்.

(இ-ள்.) மனநாசஞ் சொரூபமென்று மருபமென்றும் வகுத்துரைப்பாரிருவகையா வருமிவற்றில் (எ-து) மனோநாசத்தைச் சொரூபநாசமெனவும் அரூபநாசமெனவு மிருவகையாக வகுத்துச்சொல்லுவர்பெரியவர், இங்ஙன மிருவகையாக வழங்கிவருமிவற்றினுள்: – வினவாத சீவன்முத்தரிடத்திலொன்றும் விதேகமுத்தரிடத்திலொன்று மேவு மைந்தா (எ-து) – ஞானபுத்திரா வினவுதல்வேண்டாத சீவன்முத்தரிடத்தி லொன்றும், விதேகமுத்தரிடத்திலொன்றுமிருக்கும்: – தனதான சத்துவமாய் மனஞ்சேடிக்கத் தாமதம்ராசதநசித்தல் சொரூபநாசம் (எ-து) – தனதுசுயரூபமான சாத்துவிதகுணமாக மனமேலிடில் தாமதகுணமும் ராசதகுணமுந் தாமேநாசமாம், அங்ஙன நாசமாதலே சொரூபநாசமும்: – அன்கா சத்துவந்தானு மிலிங்கதேக மடங்கும் போதடங்குவதேயருபநாசம் (எ-து) – மலரகிதமானவனே அந்தச்சாத்துவித குணமோ அதுவுஞ் சூக்குமசரீரநசிக்கும்போ தொக்கநசிக்கும், அங்ஙன மொக்க நசித்தலே அரூபநாசமுமாம். எ-று.

சங்கைதவிர்ந்தவராதலின், வினவாதசீவன்முத்தரெனவும், சேடித் தெனப்பாடமோதில் காலவழு: என்னை, "முதலினுன்குமென்னுஞ்" சூத்திரவிதியாலென்ருர் பவணந்தி. சொப்பிரகாசமேலீட்டில் சமஸ்த விகாரகுணங்களுநில்லாவாதலின், தனதானசத்துவமாய் மனஞ்சேடிக் கத் தாமதப்ராசதநசித்தலெனவும், சூக்குமதேகநாசத்தைப்பற்றிச்சொப் பிரகாசமேலீடாதலால் அதனேடொக்க நசித்தல்கூடுமென்பார், சத்து வந்தானு மிலிங்கதேகமடங்கும்போ தடங்குமெனவுங்கூறினுர் இத னுல், மனமெனல்; ரூபாரூபமெனப்பெற்ரும் ரூபமெனல், செகசீவ பரம்; அரூபமெனல்; அதன்வாசனை. மனேநாசம்வேண்டின், ரூபா ரூபநாசம்வேண்டும். இன்றேல், ஆகா. சின்மாத்திரமாக்கரைத்தல் ரூபநாசம். அதுவுமெல்லமெல்லவூர்த்தமுகமாக நழுவல், அரூபநாசம். எனவே சைதன்யத்தின்ஸ்புரிப்பே மனமெனப்பெற்ரும் பெறவே சித்து சடமும், ரூபாரூபமும், ஸ்புரிப்பையன்றி யின்ருதலின், மனேநிலை யெனக்கண்டாய். காணவே, அரூபத்தைப்பாழெனல், குற்றம், அன் றேல், அந்தப்பாழையறியுந் தானெனலின்ரே? உளதெனில், அது, பாழுமன்று, நாமரூபமுமன்று, ஞானமுமன்று அஞ்ஞானமுமன்றென் பதாயிற்று. இதனை இவ்வாறென்றறியாதார்கண்டபடியுரையிடிஞ மோ? ஆமெனின். யுத்திக்குமுரணும். முரணின், அனுபவமுமுரணும், முரணின், முன்போற் பெத்தநிலையாம். இப்பேதமைக்கு ஞானநூல் முற்றுமுணர்ந்து மோதியும் பயனென், என்னை, "புராணமிகிகாசமெ வையுங்கலையனைத்தும் பிராணனறியாதுள விடத்திவை பிதற்றேயென் ரூர்" தத்துவராயர் மேல்காரணதேகநாசங்கூருது சூக்குமதேகநாசங் கூறியது, ஐயந்திரிபுக்குவினைமுதன சிக்கில்தானேயவித்தையழியுமெ னக் கூறவேண்டுமோ, என்பதுபற்றியென்க, இதனை லட்சியார்த்தத் தாலன்றி வாச்சியார்த்தத்தா லெங்ஙனங்கணிப்பது கூடாதிருக்கப் பதவுரையாற் கணிக்கப்புகுவார் மிக்க விவேகியர் போலும், அவர் சாம்பிரதாயமுமங்ஙனம்போலும், தற்கண்டார்க்கென்னு முடியும். ஆத லின், புகழுக்கும், அபினி, கஞ்சா, முதலியபோதைக்கும், கள்ளமங் கையர் போகத்துக்கும் விழைழந்தலைகின்றனர். கள்ளங்கடந்தஞானிய ரெங்கனுமரியர், இதுநிற்க. இங்ஙனமாய விவ்விரண்டுமுத்திமேற் பழுதுரைப்பாருளரேல், அவர் எத்தேகமாயினும், எப்போகமாயினும், ஆன்மாவெனவும், முத்தியெனவுங்கொள்வார்போலும், தேகமும்போக முந்தனக் கன்னியமெனத்தெளிந்தனரோ, தெளியாதாரோ? தெளிந் தனரெனின், லட்சியார்த்தமுகர்ந்தனரன்றே. இவர்கட்சியை யெங்ங னும் கடைப்பிடியற்க.

(க-து) மனோநாசம்வேண்டின் ரூபா ரூபநாசம்வேண்டுமென்பது. (20)

21 - கவி (அ - கை.)

[சீவன்முத்தருருவநாசமனதினராதலினானும், அதனாலெவற்றையும் பற்றின்றி யனுபவிக்கக்கூடுமாதலானும் இங்கே கூடு மென்பதை இக்கவியிற் கூறுகின்றார்.]

சுத்தமாஞ் சத்துவமே யுண்மை யாகுந் துகளிருள்போ னால் மனமென் சொல்லும் போம்போம் வர்த்தமா னத்தில்வந்த வுண வை யுண்பார் வருவதும்போ வதுநினைந்து மகிழார் வாடார், கர்த் தாவா மகந்தையைவிட் டகர்த்த ராகிக் கரணவிருத் திகளவத்தை காண்பா ராகி, முத்தரா யிருக்கலுமாம் புசிப்புங் கூடு முட்டிலையென் றறிந்துசங்கை மோசிப் பாயே.

(இ-ள்) சுத்தமாஞ்சத்துவமேயுண்மையாகுந் துகளிருள்போனால் மனமென்சொல்லும்போம்போம் (எ-து)—சுத்தமாயுள்ள சாத்துவித குணமே மெய்யுணர்வாம், இம்மெய்யுணர்வே பழுதின்றி யெங்கனு மொருதன்மைத்தா விளங்குஞ் சொப்பிரகாசமாம், இச்சொப்பிரகாசமே லீட்டில், ராசத, தாமதமென்னுங் குணங்களிருளாம், இவ்விருளெங்ங னமகலாதுநிற்கும, அகலுமாயின், மனமென்பதும் எங்ஙனநிற்கும், நில்லாதாயின், மனமென்னுஞ் சொல்லு மெங்ஙனமகலாதுநிற்கும், அகன் றேவிடும்:—(ஆதலின்) வர்த்தமானத்தில் வந்த வுணவையுண்பார் வருவதும்போவதுநினைந்து மகிழார்வாடார் (எ-து) நிகழ்காலமாகிய விப்போது கிடைத்தவுணவுயாதோ அதனையுண்பார்கள், இனிவரு வதைப்பற்றியும் வந்துபோவதைப்பற்றியும் நினைக்கமாட்டார்கள் நினைத்துச் சுகத்தால் சந்தோஷித்தலும் இடுக்கத்தால் துக்கித் தலுங் கொள்ளார்கள்:—கர்த்தாவாமகந்தையை விட்டகர்த்தராகிக் கரண விருத்திகளவத்தை காண்பாராகி (எ-து)—கர்த்தத்துவமாநின்றுள்ளயா னெனதென்னும் அகம்பாவத்தை யொருங்கேவிட்டு அவ்வகந்தை சிறிதுமிலராகியும் அகக்கரணபுறக்கரணவிருத்திகளையும் மூன்றவஸ் தாச்சூழலினையுங்காண்பவராகியும்:-முத்தராயிருக்கலுமாம்புசிப்புங் கூடு முட்டிலையென்றறிந்துசங்கைமோசிப்பாயே (எ-து)—சீவன்முத்தராகியு மிருக்கவுங்கூடும் சகல போகமுநுகரவுங்கூடும் இவற்றிற்கெல்லாம் யாதோர்தடையும் இன்றென்று உணர்ந்து இதுபற்றி இனி வினவப்புகு தலை யொழிதி. எ-று.

சாத்துவிதத்தைச் சுத்தமெனவு முண்மையெனவுங்கூறியதா லேனைய குணமிரண்டையு மசுத்தமெனவும் மித்தையெனவுங் கொண்

டாம். இருள் போல்பவைகளையிருளென்றது உவமையாகுபெயர். இவ்விரண்டையுமிருளென்றதனால் ஏனையொன்றும் பிரகாசமெனப்பெற்ரும் கர்த்தராமகந்தையெனின் திணைவழுவாதலின் கர்த்தாவர்மகந்தையென்ரும் எதுகைபற்றியெனின் முதலடியிரண்டாமடிக்கென்செய்தும். அகர்த்தராகியென்றதனால் சைதன்யத்தை யானெனவும், பொதுப்படக் கரணமென்ருதனால் அக்கரணம்புறக்கரணமெனவும், அவத்தையென்றதனால் மூன்றவத்தையெனவுங் கொண்டாம் ரகரவொற்றெதுகை யர்செதுகை.

(க-து) மனது விஸ்மரணையாநின்று சகலவிவகாரங்களையும் வழுவாது நடத்தும்போது தஸ்மரணையாநின்று நடத்துவதற்குத் தடையென்னை. மூடஞானக்கிரியையினும் கல்விஞானக்கிரியை சிறந்தது, அதனினுந்தத்துவ ஞானக்கிரியைசிறந்ததன்ரே? ஆதலால் மனத்தாலனுபவித்தல்கூடுமென்பது எனவே, எல்லாமாயல்லவுமாயிருப்பதுதனது நிலையாயினும் நடுநிலையாநின்றெவற்றையு மனமியற்றுமென்க. இதனினுமிக்க தெளிவோடுநின்றுஇயற்றல் யாதுமின்றெனவுணர்க. பிரவிர்த்திநிவிர்த்திகளை விருத்தியென்ருரெனக்கொண்டு காண்பாரென்றுரைக்கினுமமையும். அனுபவிமுன்னிலையிலிதுதெரியும். (21)

## 22 - கவி (அ - கை)

[விவகாரங்கள் மனவலைவுக்கிடமாதலின் கூடாதென்ற மாணாக்கற்குத் திருஷ்டாந்தபூர்வமாக ஆசிரியர் இக்கவியில் விடை கூறுகின்ருர்.]

விவகார வேளையெல்லாஞ் சமாதி யென்ருல் விகற்பமன்ரே மனமலைந்து விடாதோ விட்டா, லவதான நழுவுமன்ரே வென்ருயாகி லதற்கொருதிட் டாந்தங்கே ளாசை கொண்டு, நவமாகப் பர புருடன் றன்னைக் கூடி நயந்து சுக மனுபவித்த நாரி நெஞ்சந், தவமான மனைத்தொழில்கள் செய்யும் போதுந் தழுவியனு பவித்த சுகந்தனைவி டாதே.

(இ-ள்) விவகாரவேளையெல்லாஞ் சமாதியென்ருல், விகற்பமன்ரேமனமலைந்துவிடாதோவிட்டா, லவதானநழுவுமன்ரேவென்ருயாகில் (எ-து) — விவகரிக்குங்காலமெல்லாஞ் சமாதிசெய்தலெனத் தேவரீர்கூறின் பலவாகச் சிதையுமல்லவோபலவாகச்சிதையின் மனமலைந்து விடாதோ அங்ஙனமலைந்து விடுமாயின் உண்மை ஞான நழுவுமல்லவா இதற்கென்செய்து மெனச் சங்கிப்பையாயின்: — அதற்கொருதிட்டாந்தங்கேளாசைகொண்டு நவமாகப்பர புருடன்

றன்னைக் கூடி (எ-நு) - நீவிறைவியதற்காக வேர்நிட்டாந்தமுள்ளது அதனையான்கூறக்கேளுதி மிக்கவாசை கொண்டுபுதிதாகவோர்சோர நாயகனைக்கூடி:- நயந்துசுகமனுபவித்தநாரி நெஞ்சம் (எ-து) - மிகவும் விருப்ப முற்றுச்சுகத்தையனுபவித்த வோர் ஸ்திரீயின்மனமானது:- தவமானமனைத் தொழில்கள் செய்யும்போதுந் தழுவியனுபவித்தசுகந் தனை விடாதே (எ-து)—நோன்புவழுவாதியற்றற்குரிய இல்லறமார்க் கத்தொழில்களைச்செய்கிறபோதும் கள்ளநாயகனைத்தழுவியனுபவித்த மிக்கசுகப்பெருக்கைவிடுமாவிடாதே. அதுபோன்றிருக்கும் எ-று

விகற்பம்-விடயம் பலவாகச் சிதைதல். அவதானம்-பேரின்ப மெனினும் அமையும். பாபுருடனென்றதனுற் சோரஸ்திரீயென்பது தானேயமைதலின், நாரியென்பதற்குவிசேடமெற்றிற்கு விதிவழு வாதியற்றுமனைத்தொழிலெனினுமமையும். எனவே, அவள் பல தொழில் புரியினுமப்போதெல்லாஞ் சோரவின்பநழுவாததுபோலப் பேரின்பநழுவாதென்க. இவளெய்திய பயன்சுகமாதல் போல நிட்டை யாலெய்திய பயனுஞ்சுகமாம். இவள்பலதொழிலாற்பிரியினுமிவளைச் சுகம் விடாததுபோலச் சான்ருேர் பலதொழிலாற் பிரியினு மவரைச் சுகம்விடாதுபற்றி யிவ்வுவமைகூறினர். இதுகூடாதெனின், அதுவுங் கூடாதென்பம். சோரவின்பமிவளைவிடாதது பிரத்தியட்சமெனின். அவரையதுவிடாததும்பிரத்தியட்சமென்பமே. பருவமில்லாதுழலும் மங்கைக்கதுதெரியாததுபோல, பரிபாகமில்லாதுழலுவோர்க்கிஃதெங்ங னந்தெரியும், தெரியாததாலதுபொய்யோ; அன்றேல், இதுவும்பொய் யன்று. விவகாரத்தாலிவளுக்குமனம்பேதிக்கினுஞ் சுகம்பேதித்ததோ? இன்றெனின், அவருக்குமங்ஙனமாமெனவறிக. இந்தச்சுக மிவள் போன்றவளுக்குத்தெரியுமாறுபோன்று, அந்தச்சுகமும் அவர்போன்ற வர்க்குத்தெரியும். என்னை, "பெற்றவட்கேதெரியுமந்த்வருத்தம்பிள்ளைப் பெருப்பேதையறிவாளோபேரானந்த, முற்றவர்க்கேதெரியும்" என் ருர் தாயுமானர் இதனைமறுப்பார் போலிஞானியரு மடாஞானியரு மெனவறிக. இது குறிஞானமன்று, எதார்த்தஞானம். எதார்த்தஞா னம், குறியாலன்றிச் சுயமாவிளங்கல்.

(க-து.) பலவிவகாரத்தினுஞ்சுகபோதநழுவாதென்பது. ஆத லின் விவகாரவேளையெல்லாஞ் சமாதியென்பது பொருந்தும். (22)

## 23 - கவி. (அ - கை.)

[சீவன்முத்தர்களகர்த்தாவெனின் போகநுகர்தலெங்ஙனமென்ற சங்கைக்கு உத்தரங்கூறுவான்வேண்டிச் சத்துக்கள் மூன்றுவிதமா வதையும், அவர் நிலைமகிமையையும் இக்கவியிற் கூறுகின்ருர்.]

தேகத்த னலனுகி யகர்த்த னுகிச் சீவனன்றிப் பிரமமாய்த்
தெளிந்த முத்தன், போகத்தை யுண்பனென்றுற் கர்த்தா வாமேபூர
ணமாமகர்த்தனுக்குப் போக முண்டோ, சோகத்தை யறுத்தருளுங்குரு
வே யிந்தத் துகளறுக்க வேண்டுமெனச் சொல்லையாயின், மாகர்த்
தன் மாபோகி மாதியாகி வகைமூன்று யவரிருக்கு மகிமை கேளாய்.

(இ-ள்.) தேகத்தனலனுகியகர்த்தனுகிச் சீவனன்றிப்பிரமமாய்த்
தெளிந்தமுத்தன் (எ-து)—பிரக்ஞானமன்றித்தேகந்தானல்லாதவனுகி
யும், மறந்துந் தேகந்தானெனக்கோடலின்மையி னகர்த்தனுகியும்,
சீவத்துவமன்றிப்பிரமமேதானுகியும் தெளிந்தசீவன்முத்தனென்போன்:
—போகத்தையுண்பனென்றுற்கர்த்தாவாமே பூரணமாமகர்த்தனுக்குப்
போகமுண்டோ (எ-து)—விடயபோகமனுபவிப்பனெனில், தேகந்தா
னென்கிறகர்த்தத்துவம்வாய்ப்பதாமே. 'பூரணனெனில், பூரணமாமகர்த்
தாவுக்கனுபவித்தலில்லாவிடத்துப் போகமெங்ஙனமுண்டு. இல்லையே:
—சோகத்தையறுத்தருளுங்குருவேயிந்தத் துகளறுக்கவேண்டுமெனச்
சொல்லையாயின் (எ-து)—அடியேன் துயரமனைத்துந்தொலைத்தருளிய
குருநாதனே, இங்ஙனமாகவெழுந்த விந்தச்சந்தேகமாகிற களங்கத்
தை நீக்கியருளவேண்டுமெனக்கேட்பையாயின்:—மாகர்த்தன்மாபோகி
மாதியாகி வகைமூன்றுயவரிருக்குமகிமைகேளாய் (எ-து)—மகாகர்த்த
னெனவும், மாபோகியெனவும், மாதியாகியெனவு மூன்றுவகையார்
அவரிருக்குமகிமையைக்கூறுதும் நீ கேளுதி. எ-று.

தேகமிருந்துமிதுபூதவிகாரந் தானல்லவெனத்தெளிதலின், தேகத்
தனலனுகியெனவும், இவ்வுடலிருப்பும், அபிமானித்தலும் காத்தலும்,
உபசரித்தலும், இதுநானெனக்கோடலும், இதனதுபூரிப்புவாடலுக்
கின்பதுன்பமெய்தலும், இன்னுமிவைபோன்றபிறவுமாதலும், அறிவா
தலா லறிவேதானெனக்கண்டா ரிவ்வுடல்தானென்பரோ என்னுர்.
ஆதலின் அகர்த்தனுகியெனவும், அறிவுதானென்றுயபோது கூடஸ்த
னென்பதாயிற்று; ஆகவேசீவனுயிருந்துஞ்சீவனல்லன், உடலாகாரந்
தவிர்ந்துவருதலின், சீவனன்றியெனவும், உடலுமுயிருமின்னும்வேறு
படுதலின்மையின், சீவனின்றியெனப்பாடமோதியுரைகோடல்கூடாது.
கூடுமெனின், மகானெனப்படாது. படுதலின், அதுவமு சீவத்துவ
நமுவியக்கண் ணீசத்துவமெங்கே. ஒருவனுக்கின்றியக்கண் பலருக்கு
மின்றே, பலருக்குமிவ்வனுபவமொருங்குவாய்க்கின் பலருக்கும் எங்
கே? ஆயின் சீவத்துவங்காரணமாக ஈசத்துவமென்றருத்தாபத்தியாற்
கோடலாகின்றதே யீதென்னைகொலோ விபரீதமென்னற்க எங்
கெங்கே சீவத்துவபாவமுண்டோ, அங்கங்கேயீசத்துவபாவமுண்டு.

இன்றேலதுவும்இன்றாம். இதிலென்ன ஐயமுளா. இன்றுதலாலது பொருந்தும் சீவத்துவநழுவியக்கண் கூடஸ்த்ஞ மெனல்வழுவன்றே. வழுவெனில் கூறியதுகூறலென்னுங்குற்றமாம். வழுவன்றெனின், ஈசத்துவநழுவியக்கண் பிரமஸ்வரூபமாவனென்பதெங்ஙனமறுக்கப் படும். படாதாதலின், பிரமமாயெனவும் சுருதியுத்தியனுபவத்தாலன் றியைந்திரிபருநு. அறுமெனின் வறியசொல். மூன்றுமொக்கத்தேர்ந்த விடத்தேவிபரீதமறும், அறுதலேதெளிவாம். அன்றேல், மருளாம் சீவன்முத்தனெனற்பாலதுதெளிவாதலால், தெளிந்த முத்தனெனவுங் கூறினர்.

(க-து) சீவன்முத்தர்போகமனுபவிக்கக்கூடுமெனற்கு விடை கூறுவான் வேண்டி விரதத்திரயந்தொகுத்துக்கூறினரென்பது. இது தொகுத்துச்சுட்டலென்னுமுத்தி. இனிவகுத்துக்காட்டலென்பதனு லவற்றைத்தனித்தனிக்கூறுதும். மாகர்த்தன்முதலிய மூன்றுமாரியமாத லின் மிகாவாம். (23)

## 24 - கவி. (து - கை)

[முன்னர்கூறியமுறையே மாகர்த்தனிலக்கணமிவையதென இக்கவியிற் கூறுகின்றார்]

செய்கையுஞ்செய் விக்கையுமற் றிருக்குங் காந்தச் சிலைமலை
முன்னிரும்புகள்சேட்டிக்கு மாபோற், செய்கையுஞ்செய் விக்கையுமற்
றிருக்கு மென்முன் செடமான வுலகமெலாஞ் சேட்டை செய்யு, மெய்
கலந்த விந்திரிய விகார ரூப விவகார விருத்திக்கும் விருத்திதானு,
மெய்கலந்த சமாதிக்குஞ் சாட்சி யேநான் வெயில்போலென்றுறைத்த
வனே விபுமா கர்த்தன்

(இ-ள்) செய்கையுஞ்செய்விக்கையுமற்றிருக்குங்காந்தச்சிலைமலை முன்னிரும்புகள் சேட்டிக்குமாபோல் (எ-து) —தன்வினையாகிய செய்கை யும், பிறவினையாகிய செய்விக்கையுமின்றிச் சும்மாவிருக்குங்காந்தக்கற் களாலமைந்த பர்வதத்துக்கெதிரில், இரும்புகளெங்ஙனமசையுமோவது போல:-செய்கையுஞ்செய்விக்கையுமற்றிருக்குமென்முன் செடமான்வுல கமெலாஞ்சேட்டைசெய்யும் (எ-து)-செய்கையுஞ்செய்விக்கையுமின்றிச் சும்மாவிருக்கின்றவெனக்கெதிரில் சடரூபமாயுள்ள செகங்களனைத்தும் பற்பலகிர்த்தியங்களைச் செய்யாநிற்கும்:—மெய்கலந்தவிந்திரிய விகார ரூபவிவகாரவிருத்திக்கும் விருத்திதானு மெய்கலந்தசமாதிக்கும் (எ-து) —தேகசம்பந்தமான ஞானேந்திரிய கன்மேந்திரிய காரணமாக்நிகழும்

பற்பல விகற்பரூபமாயுள்ள விவகாரச் சேட்டைகட்கும், சகலவிருத்தி களுந் தானுவிளங்கிய வாத்மசம்பந்தமாக நிகழுஞ் சொரூபசமாதிக் குப்:—சாட்சியே நான்வெயில்போலென்றுறைத்தவனே விபுமாகர்த் தன் (எ-து) தன்முன்சகலவுயிர்களும் பற்பலகிரியைகள் இயற்றற்குச் சாட்சியாநின்றுள்ள சூரியனைப்போல நானேசாட்சியெனத்திரமாகக் சலங்காது நின்றுனெவனோ அவனே விபுவனைத்திற்கும் விபுவாயுள்ள மாகர்த்தனெனப்படுவோன். எ-று.

செய்கையுஞ்செய்விக்கையுமாவது; அசைத்தலையு மசைப்பித் தலையுமெனக்கொள்க. காந்தமலையானது அசைக்கவுமில்லை யசைப் பிக்கவுமில்லை இங்ஙனமிருக்க, இதினெதிரிலிரும்புகளசையுமாறுபோல; உடாதிரகிதமாகவிளங்கு நானசைக்கவுமில்லை யசைப்பிக்கவுமில்லை இங்ஙனமிருக்க, எனக்கெதிரில் சமஸ்தவுலகமுமசையுமாதலால், என் முன்னுலகமெலாஞ்சேட்டைசெய்யுமெனவும், சகலவுயிர்களுந் தத்தங் கிரியைகளியற்றற்குச் சாட்சியாநின்றுளோன் சூரியனுதல்போல, அநாத்மவிவகாரம் ஆத்மவிவகாரமென இரண்டாம். அநாத்மவிவ காரம் தேகாகாரமாக அகக்கரணபுறக்கரணங்களோடு கூடி யியற்றுங் கிரியை. ஆத்மவிகாரம்; மெய்யுணர்வு சம்பந்தமாக விவேகாகார மாகக் கரணசம்பந்தமின்றிநின்றியற்றுங்கிரியை. அந்தக்கிரியை மூடமெனவும், இந்தக்கிரியை சமாதியெனவுமாம். இவ்விருவகைக் கிரியையும் என்னுலியற்றப்படினுநானன்று. அஞ்ஞானமாநின்றக் கிரியைபுரிந்ததும் நானே. ஞானமாநின்றிக்கிரியைபுரிந்ததும்நானே. ஆயினும். இவ்விரண்டுகாலத்தும்நானெனலிருத்தலானும், இவ்விர ண்டுமொன்றிலொன்றில்லாததானும் நானெனலேயுண்மை, நானே சாட்சி, என்பதுபற்றி மெய்கலந்தவிருத்திக்கும், மெய்கலந்தசமாதிக் குஞ் சாட்சியேநானெனவுங் கூறினர். நானென்பதே சந்நிதியாகவும், சாட்சியாகவு நின்றமைகாண்க விருத்திதானுமென்றதனுல், அறிவை யன்றிச் சகல விருத்திகளும் இன்றெனப்பெற்றும்.

(க-து) சகலமுமெனக்குமுன்னிகழுமெனவும், சகலகிரியைகட் குஞ் சாட்சியானெனவுந் திடமாகத்தெளிவுற்று நின்றுனே மாகர்த்த னென்பது. இதுதுணிபு. (24)

## 25 - கவி (அ - கை)

[நிறுத்தமுறையானே யேனைய மாபோகி மாதியாகிகளின் இலக்கணங்களை இக்கவியிற் கூறுகின்றார் ]

அறுசுவையின் குணங்கற்ற மசுத்தஞ் சுத்த மபத்தியம்பத்திய மெனவூ ணுய்ந்தி டாமற், பொறுமையுடன் கிட்டினதைக் காட்டுத் தீப்போற் போகங்கள் புசிப்பவன்மா போகி யாகுஞ், சிறிது வலி துகடனதன் னியங்க ணன்மை தீமைகள்சே ரினும் படிகச் செயல் போற் சித்தம், வெறிதிருக்கு மவனேமா தியாகி யாவன் விரதமிம் மூன் றுள்ளவரே வீடுள் ளோரே.

(இ-ள்) அறுசுவையின் குணங்கற்ற மசுத்தஞ்சுத்த மபத்தியம் பத்திய மெனவுணுய்திடாமல் (எ-து)—அறுவகைருசியினிதெனவும் அன்றெனவும் அசுத்தமெனவும் சுத்தமெனவும் அபத்தியமெனவும் பத்தியமெனவும் தானுண்ணுமுணவு காரணமாகவதனைப்பகுத்துண ராது: — பொறுமையுடன்கிட்டினதைக்காட்டுத்தீப்போற் போகங்கள் புசிப்பவன்மா போகியாகும் (எ-து) —பொறுமையோடு எது கிடைத்த தோ அதனைப்பகுப்பின்றிப்பற்றியெரியுங் காட்டுத்தீயைப்போலப் பிராரத்தமாகிய இன்பதுன்பபோகங்களெனப் பகுப்பின்றியனுபவிப் பவனெவனோ அவன் மாபோகியெனப்படுவன்: —சிறிது வலிதுகடன தன் னியங்கணன்மை தீமைகள் சேரினும்படிகச் செயல் போற்சித் தம் (எ-து)—பிராரத்துவ போகமற்பமகத்தாக வேனும் தனதாக வேனு மன்னியமாகவேனும் நன்மையாகவேனுந் தீமையாகவேனு நேரிடினுமதன்பால், தனதிடத்திலியல்பாகத்தோற்றும் பிரதிபிம்பந் தானுகாதுநிற்கும்படிகக்கண்ணுடியின்செயலைப்போலத் தனதுசித்தம்: - வெறிதிருக்குமவனேமாதியாகியாவன் விரதமிம்மூன்றுள்ளவரே வீடுள் ளோரே (எ-து) — பற்றின்றிநிற்பவனெவனோ அவனேமாதியாகி யெனப்படுவோன். ஆதலினிவ்விரத மூன்றுமுள்ளவர்களே ஐக்கிய முத்தியுடையவர்களாம். எ-று.

அறுசுவையாநின்றபதார்த்தங்களை யறுசுவையென்றது, குண வாகுபெயர். உண்ணற்பாலதியாதோ அதனையூணென்றது, தொழி லாகுபெயர். ஆய்ந்திடாமல் புசிப்பவனெனவும், சேரினும்வெறிதிருக் குமவனெனவுங் கூட்டி முடித்திடுக. அதன்பாலென்பதைவருவித்தாம். அங்ஙனம்போகநுகர்தலுஞ்சித்தம். வறி திருத்தலும் சன்னி பித்தம் முதலியவியாதிமேலிட்டோர்பாலுமுளவே. யிவர்களும் மாகர்த்தன் மாபோகியெனப்படுவார்களேபேதமென்னை, இவர்கள் மூடத்தாலும் வியாதிமேலீட்டாலும், ஆபத்துமேலீட்டாலும், கவலைமேலீட்டாலும். அவர்கள் ஐயந்திரிபகன்ற தெளிவுமேலீட்டாலும் மரணமறவாமை மேலீட்டாலும் சுகமுஞ்சுகியுமெங்கேயென்னும் ஆராய்ச்சிமேலீட்டா லும் இவைபோன்றபிறவற்றாலுமாதலின் பேதமேயெனவுணர்க. இத னைச் சொல்லாலுணர்வார், மறுப்பர்.

(க-து) இவ்விரண்டு கவியானும் விரதத்திரயங் கூறியதென்பது. (25)

## 26 · கவி. (அ · கை.)

[விதிவிலக்கு வழுவின்றியசெயல்கள் அகலாதிருக்க இவனைக்கிருத கிர்த்தியனென்ப தெங்ஙனங்கூடுமென வினவுதலை இக்கவியிற் கூறுகின்றார்.]

வேறு

மெய்யுங் கொண்டு பிராரத் வந்தரு விதிவழி நின்றிடவு
முய்யுங் கன்மிக ளுக்கனு குணமா வுறுதொழில் செய்திடவுஞ்
செய்யுஞ் செய்கை முடிந்தவ னென்றுரை செப்புவ தெப்படியோ
நையுந் துன்ப மகற்றிய குருவே நலமா வருள்வீரே.

(இ-ள்.) மெய்யுங்கொண்டுபிராரத்வந்தரு விதிவழிநின்றிடவும், உய்யுங்கன்மிகளுக்கனுகுணமா வுறுதொழில்செய்திடவும் (எ-து) — அகக்கரணபுறக்கரணங்களையன்றியுந் தேகத்தையுந்துணைக்கருவியாகக் கொண்டு, பிராரத்வந்தருகின்ற நெறிவழித்தாய் வழுவின்றிநின் றரிய தொழிலியற்றுநிற்கவும், திரிசியமேபொருளெனநம்பி உய்யுங்கன் மகாண்டிகளுக் கனுகூலமாகவதற்கியைந்த விதிமார்க்கக்கிரியைகளைச் செய்துகொண்டிருக்கவும்: — செய்யுஞ் செய்கைமுடிந்தவனென்றுரை செப்புவதெப்படியோ (எ-து) — இங்ஙனமிருக்கச் செய்யவேண்டிய செய்கையெல்லாஞ் செய்துமுடிந்தவனென்று சொல்மாத்திரமா வெவ ருகூறுவதென்னைகொலோ: — நையுந்துன்பமகற்றியகுருவேநலமா வருள்வீரே (எ-து) — வருத்தத்தையேசெய்யுந்துன்பமாவுள்ள அனைத் தையுநீக்கியருளிய எனதுகுருநாதனே இதனுக்குவிடைசெவ்விதாவு ரைத்தருளுவீராக வென்றிரந்துகேட்டனன். எ-று.

மெய்யுமென்னுமும்மை; இறந்ததுதழீஇயவெச்சவுமமை. உய் யுங்கன்மிகளென்றது; கன்மமேபயனாகவுய்தலை. கன்மிகளுக்கனுகுண மாவுறுதொழில்செய்திடல்; சரியைகிரியைகளைவிதிவழிததாச்செய்து காட்டலை. செய்யுஞ்செய்கைமுடிந்தவனென்றதனால், கிருதகிருத்திய னென்றாயிற்று. துன்பஞ்செய்பவைகளைத் துன்பமென்றது குணவாகு பெயர்.

(க-து.) விதிவிலக்குவழுவாச்செயல் முயலாநிற்க இவனைக் கிரு தகிருத்தியனெனல் எங்ஙனங்கூடுமென்பது (26)

27 - கவி. (அ – கை.)

[பலவியாப்தி விர்த்திவியாப்தி யென்பவற்றுள் இவன் விர்த்திவியாப்தியனுதலின் இவன்செய்துஞ் செய்திலனென்பதை இக்கவியிற் கூறுகின்றார்.]

ஆடவர் செய்தொழின் மூவகை யாகு மவித்தை வசத்துறுநா
ளீடணை மமதை யகந்தை யுளார்க்கே யிகபர விவகாரம்
வீடணு குவமெனு மிச்சை யுளார்க்கே வித்தை படிப்ப வெலாம்
பாடன் மிகுந்தொழி லாற்பல னுண்டோ பரிபூரணமா னால்

(இ-ள்) ஆடவர்செய்தொழில்மூவகையாகும் (எ-து) – புருடர் செய்யுந் தொழில்கள் மூன்றுவிதமாயிருக்கும்:-- அவித்தைவசத்துறுநாளீடணைமமதையகந்தையுளார்க்கேயிகபரவிவகாரம் (எ-து) – அவித்தாமயமாய காலத்தில் ஈடணைத்திரியமும், அகமமதையுடையார்யாரோ அவர்களுக்கே யுரியது, இகலோகசுகத்தையும் பரலோகசுகத்தையும்பற்றி முயலும்விவகாரம்: - வீடணுகுவமெனுமிச்சையுளார்க்கே வித்தைபடிப்பவெலாம்(எது) – முத்தியடைகுதுமென்றவாசையுடையோர்யாரோ அவர்களுக்கே அறிவைப்படிக்கு முயற்சியனைத்தும்: – பாடன்மிகுந்தொழிலாற் பலனுண்டோ பரிபூரணமானால் (எ-து) - அறிவேவடிவாகப்பரிபூரணமாயிடினவர்கட்கு ஞானநூல் முதலியவைகளிலுள்ள பாடல்களை மிகவும் அப்பியாசிக்கு முயற்சியால் யாதானுங் கிஞ்சித் பயனுளதோ இல்லையே எ-று.

வித்தைபடித்தல்; கல்விபடித்தலெனின், அஃதஞ்ஞானதிசை, எல்லாக் கல்வியையும்பழுதறக்கற்ற வறிவைக்கற்றல். அன்றெனின், வீடணுகுவமெனுமிச்சையுளார்க்கேயென்பானேன்? புகழணுகுதுமெனுமிச்சையுளார்க்கேயெனப்பாடமிருக்கின், கல்விபடித்தலெனக்கூறலாம். ஆதலின், அதுவமு இகபரவிவகாரம், அஞ்ஞானதிசை. வித்தைபடிப்பது, ஞானதிசை பரிபூரணமாதல், இவ்விரண்டு நிலையுமகன்றதிசை. வித்தைபடித்தலாவது; பொன்னையன்றிப் பணிபேதங்களில்லாவாறு போன்று. அறிவையன்றிச் சகசீவபரபேதங்கள் சற்றுமின்றென வாச்சியார்த்தத்தால் தீரவுணர்ந்து, அதனைச்சற்குருவினருளா லிலக்கியார்த்தத்தால் தெளிவுபெறவிளக்கிக்கொண்டதனைக்கண்டுகண்டிதுநானிது நானெனப் பலகாலமும்விடாதுபயிறல். இதனையப்பியாசமெனினுமமையும். அமையவே, பரிபூரணமாதல், ஆரூடமென்றாயிற்று. இதனைப் புறக்கணிப்போரகங்காரிகள். சுயமாகப்பாட மிக்கவலியுளதாதலின் பயனெனினுமமையும். பரிபூரணமாதல், தானேயனைத்துமா விளங்கல். இத்திசையில் செய்துஞ் செய்திலனென்றாயிற்று.

(க-து.) பரிபூரணனாதலால் பாசமுயற்சியெய்தாதென்பது. (27)

28 - கவி. (அ - கை )

[தேவரீாகூறியதொக்கும், இனியோர்சங்கை. அதாவது; ஞானமே தானெனப்பழகுவோர்க்குச் சிரவணாதிகள் வேண்டுவதின்றோவென வினவல் அதனை இக்கவியிற் கூறுகின்றார்.]

குரவர் சிகாமணி யேநீர் கேளீர் கூறிய வழியொக் கும், பர முடனிகமு மிகந்தவ ரன்றோ பழகுவர் மெய்ஞ்ஞானம், விரவுமுயற் சியின் மீண்டவ ரதையினி வேண்டுவ ரோவேண்டார், சிரவண மனனு திகள்வேண் டாவோ சித்த முறைத்திடவே

(இ-ள்.) குரவர்சிகாமணியேநீர்கேளீர் கூறியவழியொக்கும் (எ-து) — எல்லாவாசிரியர்க்குஞ் சிகாமணிபோன்றுவிளங்குபவரே, அடியேனிரந்து கேட்கும்விண்ணப்பமொன்றுளது அதனைநீர்கேட்டருளும் அதாவது; தேவரீர் இதுகாறுங்கூறிவந்த மார்க்கமனைத்தும் அங்கீகாரமே: — பரமுடனிகமுமிகந்தவரன்றோ பழகுவர்மெய்ஞ்ஞானம் (எ-து) —பரலோகஇச்சையும், இகலோகஇச்சையுங் கடந்தவரன்றோ மெய்யுணர்வேயானெனப்பழகாநிற்பர்: —விரவு முயற்சியின் மீண்டவரதையினி வேண்டுவ்ரோவேண்டார் (எ-து) — இச்சையில் மேல்கீழென மிசிரிம்பித்துநின்றுள்ள முயற்சியினின்று வெறுத்துத்திரும்பினவர்கள் இனியதை மறந்தும் விரும்பியுழல்வரோ உழலார்: — சிரவணமனனுதிகள் வேண்டாவோ சித்தமுறைத்திடவே (எ-து) — இங்ஙனமாயினும் இவர்கட்குச்சித்தங் கலங்காது உறுதிபெற நிற்றற்குக் கேட்டல், சிந்தித்தல், தெளிதல் வேண்டுவனவின்றோ. எ-று,

பரமுடனென வுடன்கொடுத்துப்பிரித்தது; சொற்கமாதி, சத்தியமாதியென மதத்தர்கூறு மேலிட்டபதவிகளை நோக்கியென்க ஒன்றினுநிலையுறாத முயற்சியாதலின் விரவுமுயற்சியெனவும், ஓர்கால் சித்தங்கலக்க முறற்பாலதின் சித்தமுறைத்திடவெனவுங் கூறினார். முடிந்தவனுக்குச் சிரவணாதிகள் மீண்டும் வேண்டுவது, மாயாமயமாதலைப்பற்றியென்க. களங்கமற்ற கண்ணாடி பலவாடைகளால் மூடப்பட்டிருக்கினுந் தூசடையுமாறு போன்று, தெளிவுற்றதேனும் அறிவாகிற கண்ணாடிக்கு ஐயந்திரிபு எங்ஙனமேனுஞ் சற்றடையும்,

(க-து) மகான்கள் கிருதகிர்த்தியர் அன்றெனக் குறிப்பிக்கச் சிரவணாதிகள் வேண்டாவோவென்பது. இச்சை-தொக்கது. (28)

29 - கவி (அ—கை)

[அதற்கு விடைகூறுவான்வேண்டிக் கேட்டல, சிந்தித்தல், தெளிதல்செய்வார் இன்னின்ன தகையினராவரென இக்கவியிற் கூறுகின்றார்.]

கிளர்மக னேகேள் தத்துவ மறியார் கேட்டல் செயக்கடனே
தளர்வறு சிந்தித் தலின்முயல் வார்சிலர் சந்தே கங்களு ளார்
தெளிதலி னிற்பார் விபரீ தப்பேய் தீரா வாதனை யோர்
வெளியுரு வாயறி வாய்நிறை வாயினர் வேண்டுவ தொன்றுண்டோ

(இ-ள்) கிளர்மகனேகேள் தத்துவமறியார் கேட்டல் செயக் கடனே (எ-து)— சின்மாத்திரமாவிளங்கு ஞானபுத்திரா யான் கூறு வதைக்கேளுதி, மெய்யுணர்வினையதெனக் கேட்டுமறியாதார் சிர வணம் பண்ணிக்கொண்டிருப்பர்:-தளர்வறு சிந்தித்தலின்முயல்வார் சிலர் சந்தேகங்களுளார் (எ-து) — சந்தேகங்க ளகலாதசிலர் ஓயாத மனனவயத்தராய் முயலாநிற்பர்: — தெளிதலினிற்பார்விபரீதப் பேய் தீராவாதனையோர் (எ-து) — விபரீதமென்னும்பேயினுல் தீராதவாதனை யுடையோர்கள் சித்தந்தெளிவுபெறு முயற்சியில்விடாதுநிற்பர்:-வெளி யுரு வாயறிவாய் நிறைவாயினர் வேண்டுவதொன்றுண்டோ (எ-து) — சுத்தமான வெளிமயமாகியும், ஞானப்பிரகாசமாகியும், அகண்ட பரிபூரணமாகியும் விளங்கினவர்; யாதானும் இம்மூன்றனுள் வேண்டுவ தொன்றுளதோ இல்லையே. எ-று.

தத்துவம், அறிவு, அது; கற்பிதம், எதார்த்தமெனவிருபாற்று. கற்பிதம், அனர்த்தம். எதார்த்தம், அர்த்தம். கற்பிதமெனினும், விபரீதமெனினு மொக்கும். விபரீதவுணர்வு, பண்டிதர் பாமரரிடத் தும், எதார்த்தவுணர்வு, தத்தெரிசனமுடையோரிடத்துமெனவுணர்க. இது உத்தமம், மத்திமம், அதமமெனமூன்றும். தெளிதலினிற்றல், உத்தமம். சிந்தித்தலினிற்றல், மத்திமம். கேட்டலினிற்றல், அதமம். இம்முத்திசையுங்கடந்தவரென்பது தோன்ற, வெளியுருவாயறிவாய் நிறைவாயினரென்றார்.

(க—து) கிருதிகிர்த்தியரெனக் குறிப்பிக்க இம்முத்திசையுங் கடந்தவரென்றாரென்பது. செயக்கடனென்பதை முதனிலைத்தீபமாக்கி, ஏனையிரண்டிடத்துமொட்டுக. விபரீதப்பேயெனல், உருவகம். ஒன்றை யொன்றுக் கோடல்சர்வமதத்தருமாதலின் இதனையே பேயெனலறிக. அறியார், உளார், வாதனையோர், எழுவாய். வினையாலணையும் பெயராதலினென்க. (29)

## 30 - கவி (அ – கை)

[அஞ்ஞானியர்போலப் பலவேறு விகற்பக்கிர்த்தியம்புரிதருஞே. கிருதகிர்த்திய நிலைக்கடையாளம். இதனைத்தெரித்தருளு மெனவினவியதை இக்கவியிற்கூறுகின்றார் ]

ஐயா கேளீர் தத்துவ ஞானியு மஞ்ஞா னிகள் போலச்
செய்யா நின்றேன் கண்டேனுண்டேன் சென்றே னெனலாமோ
பொய்யாம் விபரீ தங்க ளவர்க்குப் போயின வென்றீ ரே
மெய்யாம் பிரம விசாரமி தன்றே வெளியா யுரையீரே.

(இ-ள்) ஐயாகேளீர் தத்துவஞானியு மஞ்ஞானிகள்போலச் செய்யா நின்றேன்கண்டேனுண்டேன் சென்றேனெனலாமோ (எ-து) —ஐயனேஇன்னுமடியேன் கேட்கும்விண்ணப்பமொன்றுளது அதனைக் கேட்டருளும், உண்மை ஞானியரும் அஞ்ஞானிகள்போலச் செய்ய நின்றேன், கண்டேன், உண்டேன், சென்றேனெனச்சொல்லத்தகு மா:— பொய்யாம்விபரீதங்களவர்க்குப்போயினவென்றீரே (எ-து) — பொய்மயமாகியவிபரீதங்களவர்க்குநீங்கிப் போயினவென்றுகூறினீரே:— மெய்யாம் பிரம விசாரமிதன்றே வெளியாயுரையீரே (எ-து) —மெய்யாம்பிரமவிசாரணை இதல்லவே இதனைவிளங்கத் தெளிவாயு ரைத்தருளும். எ-று.

செய்யாநின்றேன், உண்டேன், சென்றேனென்பவை, மித்தை யாத்தியாசம். கண்டேனென்பது, இதராத்தியாசம், இங்ஙனமிருக்க, இவை போயினவெனக்கூறுவதெங்ஙனமியையும். இதுமெய்ம்மையான பிரமவிசாரமல்லவே, இதனைத்தெரித்தருளுமென்பார், மெய்யாம்பிரம விசாரமிதன்றே வெளியாயுரையீரே என்றார்.

(க-து) கிருதகிர்த்தியர் என்பதற்கு இது தக்க உத்தரம் அன்றெனக் குறிப்பித்ததென்பது.

## 31 - கவி (அ – கை)

[இவ்விவகாரம் விதேகமுத்திபரியந்தந் தொடர்ந்தே நிற்கும். தொடரினுந் தெளிவினிற்றலின் ஏனையர்போலன்றென இக்கவியிற் கூறுகின்றார்.]

ஓய்ந்த கனவிற் கண்ட பழங்கதை யோதுவன் வசதனையா
லாய்ந்தறி வுற்றவ னப்படி செப்புவ னுபா சனுமாகான்
மாய்ந்தத னுடல்வே மளவும் விண்ணவன் மனித னெனப்படுவான்
வீய்ந்தசி தாபா சன்போ மளவும் விவகா ரந்தொடரும்.

(இ-ள்) ஓய்ந்தகனுவிற்கண்ட பழங்கதை யோதுவன் வாதனை யால், (எ-து) கனுக்கண்டவன் ஓய்ந்துபோன தனதுகனவிற்கண்ட பழங்கதையினை மறவாதுவாதனையாற்சொல்லுவன்: – ஆய்ந்தறிவுற்ற வனப்படிசெப்புவ னுபாசனுமாகான் (எ-து) – தானினையனெனச்சுருதி, யுத்தி, அனுபவத்தால் ஐயந்திரிபறவாராய்ந்து தெளிவுற்றவறிவுடை யோனும் அவன்கூறுமாறுபோன்று கூறுவன் கூறினும், இவனவன் போலதனைமெய்யென நம்பிக்கூறுவனல்லன் அதனல், இவனவன் போலாபாசனுமல்லன். ஆவனெனில், தெளிந்தசிந்தையனுதலின் அங்ஙனமொருக்காலுமாகான்: – மாய்ந்ததனுடல்வேமளவும் விண்ண வன் மனிதனெனப்படுவான் (எ-து) – முன்னரே பிரக்ஞோதயத்தால் மரித்த தனது காரணசரீரம் ஞானக்கினிமேலீட்டால் நீருமளவும், மனிதனுயினும், தேவனே. இவனுக்கிவன்தேவனுயினும், பார்ப்பவர்க் குமனிதனுகக்காணப்படலின் பிறரால் மனிதனென வழங்கப்படுவன்: – வீய்ந்தசிதாபா சன்போமளவும் விவகாரந்தொடரும் (எ-து) – ஆத லின், அறிவேதானெனக் கண்டவக்கணமே மரித்தசிதாபாசத்துவம் அவித்தைபோற்போமளவும் இவனுக்கு உலக விவகாரந் தொடர்ந் தே நிற்கும். எ-று.

அவனுலகைமறந்தது நித்திரைவந்துழி. இவன்மறந்தது விசா ரத்தெளிவு வந்துழி. கனுக்காட்சியவனுக்குச் சொற்பனம். நனுக்காட்சி இவனுக்குச்சொற்பனம். அதுகணசொற்பனம். இதுதீர்க்கசொற்பனம். அவனவிழிப்பு, அஞ்ஞானம். இவன்விழிப்பு, ஞானம் அஃதவன் மறந் துழிநடந்தது. இஃதிவன் மறவாது மறந்துழிநடந்தது. அதனை யவனுலகாக விழித்துழிச் சொல்லுமாறு போன்று, இதனையிவனறிவாக விழித்துழிச்சொல்லுவன். அதனையவன் மூடவினோதமாகச்சொல்லுமாறு போன்று, இதனையிவன் ஞானவினோதமாகச் சொல்லுவன். பண்டிதன் அதனையாதோவென உண்மையாகக்கொள்ளாவாறுபோன்று, ஞானி இதனைத் தற்பிரதிபலனமென உண்மையாகக்கொள்ளான். அவனுக்கு அது சொல்லுநயமுமாத்திரமாயதுபோல இவனுக்குஇது. சொல்லுந் தோற்றமுமாத்திரமாயது. ஆதலின் இவ்வுவமை பொருந்தும், பொருந் தா தென்பாரை அவாந்தரவாதிகளென அறிக. அவாந்தரவாதம்; கோழிகேர்ழி, என்னவிலை என்னவிலையென்ருற்போல்வது. ஆய்ந்தறி வுற்றவனுமென்றவும்மைதொக்கது. ஆபாசனுமென்றவும்மையிழிவு சிறப்பு. மாய்ந்தெனவினையெச்சமாக்கினு மொருசாரமையினுமமையும். இருமுக நோக்கும் உணர்ந்தவனுதலின் ஆபாசனுமாகானெனக்கொ ள்க. உலகிருப்புந் தன்னிருப்புமுணராவிடத்ததவன்விவகாரம். உணர்ந் தவிடத்ததிவன்விவகாரம். இங்கேயுடலென்பது, தூலமெனின், அது

மாய்ந்தவிடத்தும் அதுவெந்தவிடத்துந் தேவனுதல் எவருந் தூலதேகத் தராதலின் பொருந்தாதே. இவனுக்குமாத்திரமெனின். அப்போது தூல தேகமன்று. சூக்குமவுடலெனின், சொப்பனஞ்சுழுத்தியிலும் சர்வ சங்காரகாலத்திலும் எவரும் விண்ணவராகவேண்டும். இன்றே. இங் கேவிண்ணவன், ஐக்கியமுத்திக்குரியோன். அன்றெனின், "ஐயத்தி னீங்கித்தெளிந்தார்க்கு வையத்தின்வானநணியதுடைத்து" என்னுங் கவியில் வானம் பதவிமுத்தியோ; பதவிமுத்தியெனின், ஐயந்திரி பறத்தேர்தலும் யாகாதிகிருத்தியமியற்றலுமொன்ரே? ஒன்றெனின், தன்னைத்தானெய்தில், அயலெனலில்லை இல்லையாகவே, சுகமுமய லெனலின்றித்தானே சுகவடிவாகத்தானனுபவித்தல் கன்மகாண்டத் திலுண்டோ. இதனைப் பாடுதுறையில், கககூ-அதிகாரத்திற்காண லாம். இன்றெனின், ஒன்றெனல்கூடாது. இதுகூடாதாகவே, அது வுங்கூடாதெனமுடியும். ஆதலின் காரணவுடலாகிய அவித்தையை உடலென்றார். வீய்ந்தசிதாபாசன் போமளவும் விவகாரந்தொடரு மென்றது; மாய்ந்ததன்னுடல்வேமளவும் விண்ணவன் மனிதனெனப் படுவானென்பதுபற்றி. மாயினுங் காரணவுடனீருமளவுமனிதனெனப் படுவான்போன்று. வீயினுஞ்சிதாபாசன்போமளவும் விவகாரந்தொட ரும். உடனீருயின், சிதாபாசன் மாப்பிள்ளைத்தோழன்போற் சொல் லாது நழுவுவன். அது நீருமளவு மனிதனெனலுண்டு. இவன்போ மளவும் விவகாரமுண்டு, மனிதனெனப்படினுந்தனக்கில்லை. அதுபோல, விவகாரந் தன்பானிகழினுந் தனக்கில்லை. சிற்பிரகாசநாட்டத்தில் தானெவ்வகைத் தோற்றத்தானு மல்லனுதல்போலத், தற்பிரயமகலா நாட்டத்திற் கிரியை செய்துஞ்செய்திலனென்ருயிற்று. இங்ஙனநின் ருர்க்கே இதுதெரியுமன்றிச்சொல்லாலும், நினைவாலுமென்னைபயனுள. இவற்ருலிதனைமறிக்கிற் பயனின்மையின் தள்ளுதும்.

(க-து) ததாகாரத்தில் செய்துஞ்செய்திலனென்பது. இச்சை, அநிச்சை, பரவிச்சையுளொன்றுகாரணமாக வினைநிகழினும், தன்னை யகண்டமாகக்காண்டலின், கிருதகிர்த்தியனெனக்குறிப்பித்தது. இத னைத் தற்சோதனையிற் காண்க. (31)

## 32 - கவி. (அ — கை.)

[நிட்டையகலானெனினும் அதுவுஞ்செயலன்ரே; கிருதகிர்த்தியனெ னல் எங்ஙனங்கூடுமென்பதை இக்கவியிற் கூறுகின்ருர்.]

ஆனு லையா குருவே காண்ப தசத்திய மென்ருலு
நானு விவகார ரந்துய ரலவோ ஞானசு கந்தருமோ

போனு லன்றே நன்று நிட்டை புரிந்திடல் வேண்டாவோ
தானு நிட்டை புரிந்தாற் செய்கை தவிர்ந்தவ னெப்படியோ.

(இ-ள்.) ஆனுலேயாகுருவேகாண்ப தசத்தியமென்றாலும் நானு விவகாரந்துயாலவோ ஞானசுகந்தருமோ (எ-து) — ஐயனே, குருநாதனே, மகானென்போன்கிருதகிர்த்தியனுனல்காணப்படுவனவனைத்துந் திரிசியமன்றே அதுதிரிசியமாயினும் அநிர்தமன்றே; அநிர்தமெனினும், அதனைமெய்யெனக் கொள்வதென்னையோ, கொண்டுநானுவிவகாரம்புரிதலென்னையோ, புரிந்தும் அதனுலெய்தும்பயன் சுகமாயினும், அதுமெய்ப்பொருள் காரணமாகவந்ததன்றாமையின் துயராகமுடியுமன்றே; அதனுலது துயரல்லவோ; அது மேலிடும் அன்றே; மேலிடுந்தோறும் தனித்துநிற்கைவாய்க்குமோ; வாய்க்காவிடத்து அது சிதானந்த வாழ்வைத்தருமோ: — போனுலன்றே நன்று நிட்டைபுரிந்திடல்வேண்டாவோ (எ-து) — இவ்விவகாரமொருங்கேநீங்கினுலன்றே. தனித்திருக்கைக்கு நன்கு. இந்நன்குநிலேத்தல் நிட்டைபுரியாதுழி வாய்க்குமோ; வாய்க்காவிடத்து நிட்டைபுரிந்திடல்வேண்டாவோ: — தானுநிட்டை புரிந்தாற் செய்கை தவிர்ந்தவனெப்படியோ (எ-து) — வேண்டுமெனின், தானேதானுதற்கியைந்த இந்த நிட்டைபுரிதலுஞ் செய்கையன்றே, எந்தச்செய்கையும் அகன்றவனுயினும், இந்தச்செய்கையகலானுதலின், கிருதகிர்த்தியனென்பது இவனுக் கெங்ஙனமியையுமோ அறிகிலன். எ-று.

(க-து.) கிருதகிர்த்தியனெனல் சொல்லாலன்றி அர்த்தங்கண்டிலன் என்பது. இதினுன்கோகாரமுமெதிர்மறைப்பொருள். விடாவழக்கெனல் இங்ஙனமாயதெனவுணர்க. அசத்துக்காரணமாகவரும் விவகாரமாதலின், துயரலவோவெனப்பட்டது. அறிகிலனென்பது சொல்லெச்சம். (32)

## 33 - கவி. (அ — கை.)

[இக்கிரியைகள் அகத்திலன்றிப் புறத்தினிகழின், கிருதகிர்த்தியனெனக் கோடற்கவென்பதை இக்கவியிற்கூறுகின்றார்.]

தெரிதரு மகனே யாரம் பத்தொடு தீரும் விவகார
முரிய சமாதியும் விவகா ரங்களு முள்ளத் தொழிலன்றே
துரிய பரம்பொரு ளானவர் வேறொரு தொழில்செய் வதுமுண்டோ
வரிய சமாதிகள் பழகுவ னேலவ னொரு டனுமன்றே.

(இ-ள்.) தெரிதருமகனேயாரம்பத்தொடுதீரும்விவகாரம் (எ-து) — சகல அர்த்தங்களையும் எளிதில்தெரிந்துகொள்ளத்தக்க ஞானபுத்திரா;

ஆரம்பத்தில்சிரவணமனனுதிகள் செய்யும்போதே சகலவிவகாரங்களும் நீங்கிவிடும்: — உரியசமாதியும்விவகாரங்களும் உள்ளத்தொழிலன்றே (எ-து)—தன்னை விளக்கற்குரிய நிட்டையும், கேட்டவாறுசிந்தித்துத் தெளிதலாகியச்கலவிவகாரங்களும் உள்ளத்தின்கணிகழுந் தொழில் களன்றே: —துரியபரம்பொருளானவர் வேறொருதொழில்செய்வதுமுண் டோ (எ-து)—துரியமாகவிளங்கும் பிரமசொரூபமானவர்கள் பிறிதோர் தொழில் செய்வதுமுளதோ: - அரியசமாதிகள் பழகுவனேலவ னாரூட னுமன்றே (எ-து) —செய்தற்கரியசமாதிகள் கைகூடும்படி பழகுவனு யின் அவனாரூடனுமல்லனே. எ-று.

சகலவிவகாரங்களோடு சிரவணுதிகள் செய்யின் பயன்படா. படுமெனின், பெருமைபற்றியெனவேண்டும். அதுபற்றியெனின், துக் கநிவிர்த்திக்கென்செய்தும். இன்றுதலின், சிரவணுதிகள்செய்யும் ஆரம் பத்தில்தானே சகலவிவகாரங்களுநீங்கியேவிடும். (எங்ஙனமெனின்) சிரவணம் ஆறுவகைப்படும். அவை; உபக்கிரமோபசங்காரம், அப்பி யாசம், அபூர்வதை, பலம், உபபத்தி, அர்த்தவாதமென்பன. உபக் கிரமமாவது; சிருட்டிக்குமுன் சகத்துசத்தெனல். உபசங்காரம்; அந்தச் சத்து, சுசாதிக விசாதிக சுகதபேதமிறந்ததெனல். இதனை ஒன்றுக்கி உபக்கிரமோபசங்காரமென்பர். இந்த ஒன்றை விசாரித்துத்தெளிதற் கே விவகாரசிந்தைசற்றுமிலதாகவேண்டும். ஆதலின், ஆரம்பத்தொடு தீரும் விவகாரமெனவும், சவிகற்பசமாதி, நிர்விகற்பசமாதியைச் சமாதியெனவும், இவற்றிற்குரிய அரியவுழைப்புகள் பலவாதலின் விவகாரங்களெனவும், இவையனைத்தும் அகத்திலாதலின், உள்ளத் தொழில் எனவும், துரியமேபரமாதலின், துரியபரம்பொருளெனவுங் கூறினர். ஆரூடனுயின்சமாதிபழகுவனு; பழகுவனேலாரூடனுமன் றென்பதிலும்மை இழிவு சிறப்பு. ஆரூடனுமன்றெனவே, அப்பியாசி யென்ருயிற்று.

(க-து.) சமாதிகூடப்பழகின், கிருதகிர்த்தியனன்றென்பது. ஏழாம்வேற்றுமை மூன்றும்வேற்றுமையாயதுருபுமயக்கம். (33)

## 34 - கவி. (அ — கை.)

[ஆரூடர்களிற் சிலர் தியானுதிகள்செய்வ தெற்றிற்கென வினவியதற்கு விடை இக்கவியிற் கூறுகின்ருர்.]

உத்தம குருவே யாரூ டருமா யொருதொழி லற்றவருள்
சித்த மடங்கு தியானு திகள்சிலர் செய்குவ தென்னென்று

வித்தல மருவும் பிராரத் வப்பிறி வெப்படி யப்படியே
முத்தரும் வெகுவித மாகுவ ரென்பது முன்னே சொன்னேனே.

(இ-ள்) உத்தமகுருவேயாரூடருமா யொருதொழிலற்றவருள் சித்தமடங்குதியானாதிகள்சிலர் செய்குவதென்னென்றால் (எ-து) — உத்தமமானகுருநாதனே, விவகாரங்களுள் ஓர்தொழிலுமின்றி எத்தொழிலுமிறந்து நிற்பவர்களுக்குள் சிலராரூடராயிருந்துஞ் சித்தமொருப்படற்கியைந்த தியானாதிகளை செய்வதியாதிற்கெனக்கேட்பையாயின்:— இத்தலமருவும் பிராரத்வப்பிறிவெப்படியப்படியே (எ-து) — பிறவிகாரணமாக இப்பூமியினேரிடும் பிராரத்வ பேதங்களெங்ஙனமெங்ஙனமோ அங்ஙனமங்ஙனமே:—முத்தரும் வெகுவிதமாகுவரென்பது முன்னேசொன்னேனே (எ-து) — சீவன்முத்தரும் அனேகவிதமாவாரென்பதைப்பற்றி முன்னமேசொல்லியிருக்கின்றேனே அடிக்கடி கேட்பதென்னே. எ-று.

(க-து) ஆரூடராயிருந்துஞ் சிலர் கிருதகிர்த்தியராநில்லாது தியானாதிகள் செய்வதென்னையென்ற வினாவிற்குத்தரம் பிராரத்வகன்மபேதத்தால் எனவறிகவென்பது ஆரூடருமாயென்பதிலும்மை, இழிவு சிறப்பு. பிராரத்வகன்மபேதச் சேட்டைகளை அவர்மேலேற்றிக்காணின் அப்பியாசியரெனவும், அவரது தீர்ந்தநிலையினை அவர்மேலேற்றிக் காணின் ஆரூடரெனவுந்தோன்றுவர் (பிழை) காண்பார்மிசைத்தாதலின் அவராரூடரேயெனவறிகவென்பார், பிராரத்வப்பிறிவெப்படியப்படியே முத்தரும் வெகுவிதம் ஆகுவரென்பது முன்னே சொன்னேனே யென்றார். சித்தமடங்குதியானாதிகள் செய்தல், அப்பியாசம். இத்தல மருவும்பிராரத்வப்பிறிவு, அவரவர்வினைக்களவாக இம்மையிலவரவர் பாலெய்தும் பிராரத்வபேதங்கள். இது பசுக்குழாத்துள் அதனதன் கன்று தேடித்தாயைமருவுமாறுபோல்வது. என்னை, "தாந்தாமுன் செய்தவினைதாமேயனுபவிப்பர்" என்றாள் ஔவையார். திரிசியநாட்டத்தில் வினையுண்டெனவும்திருக்கு நாட்டத்தில வினையின்றெனவுங் காணும். அதோமுகமாதலின் ஆன்மா பலவாகவும், ஊர்த்தமுகமாதலின் ஆன்மா ஒன்றாகவுங் காண்டலின் அது பொருந்தும். இருவகை முகமும், இருவகை நாட்டமுமின்றேல், ஆன்மாபலவெனலும், ஒன்றெனலும், வினையுண்டெனலும், இன்றெனலுமெங்கே? இவ்வுளவறியாதார் எத்தனை பல்லூழிகாலம் வாதிக்கினுமென்பயன்? உடலுஞ் சேட்டையுங்காரணமாக மாணாக்கன் கேட்டலின் விடையுந்தக்கது. (34)

35 - கவி. (அ- கை.)

[ஞானிகள் விவகாரம் உலகோபகாரமாகவன்றித் தமக்கன்றென உபமானபூர்வமாக இக்கவியிற் கூறுகின்றார்.]

நல்லவ னேகே ளுலகுப கார ஞானிகள் விவகார
மல்லது வேறொரு பெறுபே றும்மிலை யதனாற் பிணியுமிலை
வல்ல சிருட்டி முதற்பல தொழிலால் வருபுண் ணியபாவ
மெல்லவ ருக்கு மனுக்கிர கஞ்செயு மீச னடைந்திலனே.

(இ-ள்.) நல்லவனே கேளுலகுபகார ஞானிகள் விவகாரம் அல்லதுவேறொருபெறுபேறும்மிலை அதனாற்பிணியுமிலை (எ-து)சற்புத்திரா வீணாச்சங்கியாது யான்கூறுவதைக்கேளுதி ஞானிகள்செய்யும்விவகாரங்களனைத்துமுலகோபகாரமாகவன்றித்தமக்கன்று. அதனால்தாமடையும்வேறோர்சுகப்பேறும் அசுகப்பேறுமுளவோ யாங்கண்டிலம். இதுயாதுபோல்வதெனின்:—வல்லசிருட்டிமுதற் பலதொழிலால்வரு புண்ணியபாவம் (எ-து)—செய்தற்கு வலியுள்ள சிருட்டியாதி பல தொழிலியற்றுவதால் வரக்கிடந்த புண்ணியபாவங்களை:—எல்லவருக்குமனுக்கிரகஞ்செயுமீசனடைந்திலனே (எ-து)—ஏற்றற்பாலரெவரோ அவரவர்களுக்கெல்லாந் தரமறிந்து கொடுத்தருளுவனன்றி ஈசன் தானடைந்தனனோ, இலனே, இதுபோல்வதென்றறிதி. எ-று.

அவரவர் சன்மார்க்கத்தாலுய்யும்பொருட்டு அவரவர் கருத்தின் வண்ணஞ் சிருட்டியாதியீசன் செய்வனன்றிக்கெடுக்கற்கன்று. அதுபோல, ஞானவான்களுமுயிர்களுய்யும்பொருட்டவரவர்க்கியைவதும் தடிவதுமன்றித் தம்பயனுக்காகவன்று. இவர்சீவகாருண்ணியரன்றேலிவையெற்றிற்கு. ஈசன்முத்தியிலுயிர்களைக்கூட்டுவானேல்வேண்டித்தனுகரணாதிகளைக் கொடுப்பித்துப் புசிப்பித்துத்தொலைப்பிப்பானென்பதுபொய்யோ, மெய்யோ? பொய்யெனின், புடைபெயர்ச்சியில்லாதிருக்கவேண்டும். இருத்தலின், காணப்படாதேனும் வினை முதலிருக்கவேண்டும். இல்லாதுயாதும்நிகழாது. ஆதலின், அவனன்றியோரணுவு மசையாது என்றனர் சான்றோர்பலரும், இதனை மறுப்பரார் தரம்யாதால்மூன்றவத்தைநினுமாறுதசைக்கப்படுவதுமெனக் கிஞ்சிந்துமறியாதார், பிறர்கூறினுங்காதுகொடார் இவரைஅவிவேகியென்பாரிவர்போல்வர். இந்தத்தனுகரணபுவனபோகம் வாய்த்தது அவரவர்வினையாலன்றி அவனாலன்று. அவனாலெனின், விதிவிலக்கெற்றிற்கு. எதுகாறுமெனின், அயலைத்தரவின்னதென்றுதளவும். அப்பாலோவெனின், தானேதானாகில்விதிமதியெழற்கிடமின்றே; இன்றாகவே, அனைத்துஞ் சின்மாத்திரமாவிளங்

கும். விளங்கவே, மேல்கீழொப்பின்றியும் சுசாதியாதி மூன்றுமின்றியும் தான்மாத்திரமாக மிஞ்சிநிற்குதும் அப்பாலோர்செயலுமில்லை. இது தனது சுயகஷ்டத்தால் உணர்வதன்றிப் பேச்சாற் பயனின்றியமையும்.

(க-து.) ஈசனைப்போல ஞானிகள் வியவகாரமும், அதன்பயனும் உலகோபகாரமாக முடிவதன்றித் தமக்கன்றென்பது. இதனால் இவர் கிருதகிர்த்தியர் என்ருயிற்று. (35)

36 - கவி. (அ—கை)

அனந்த ஏதுக்களில் எந்த ஏதுவினால் ஞானி ஈசனுக்கு ஒப்பாவனே என்ற வினாவிற்கு உத்தரம் இக்கவியிற் கூறுகின்றார்.]

ஈசனு மாயரு வாயுரு வாகி யெழுந்தரு ளுங்குருவே
யீசனு ஞானியு மொப்பென் றீரே யெப்படி யொப்பென்று
லீசனு ஞானியு மமதை யகந்தை யிகந்ததி னாலொப்பா
ரீசனு மாம்பல சீவரு மாமுல கெல்லா மிவனாமே.

(இ-ள்) ஈசனுமாயருவாயுருவாகி யெழுந்தருளுங்குருவே (எ-து) —ஈசனாகியும், அருவமாகியும், உருவமாகியும் எளிதில் எம்பால் எழுந்தருளுங் குருமூர்த்தமே:—ஈசனுஞானியுமொப்பென்றீரே எப்படி ஒப்பென்றால் (எ-து) - ஈசனும்ஞானியுஞ்சமானமாவரென்று முன்னர்கூறினீரே எங்ஙனம் ஒப்பாவரெனக் கேட்பையாயின்:—ஈசனுஞானியுமமதையகந்தையிகந்ததினா லொப்பார் (எ-து)— ஈசனும் ஞானியும் அகமமதை அற்றிருப்பதால் ஒப்பாவர். (இஃதன்றியும்): —ஈசனுமாம் பலசீவருமாமுலகெல்லாமிவனாமே (எ-து)—இந்தஞானி ஈசனாகியும், சமஸ்தசீவர்களாகியும், சகலலோகங்களாகியும் இருப்பன். எ-று.

சலட்சணவிலட்சணமாயும், நிட்களமாயும், சகளமாயுங் குரு இருத்தலின், ஈசனுமாயருவாயுருவாகி எழுந்தருளுங்குருவே. எ-ம்,— தன்னையன்றிச் செகசீவபரமின்றாதலின் ஈசனுமாம் பலசீவருமாமுலகெல்லாமிவனாமே எனவுங்கூறினார். சீவன்முத்தர் பிரக்ஞாசொரூபமாக விளங்கலின் இவை எல்லாம்பொருந்தும். எங்ஙனமெனில், பிரக்ஞையை அன்றி இவைமூன்றும் உளவோ, இலவோ? உளவெனில், சோதனை ஞாயங்களாற் காட்டலாம். கூடாதெனில், இலையென்பமே. தோற்றுமாவெனின், ஓரணுவேனுஞ்சுயம்பாச்சோதனையிற்காட்டலாமே, கூடாதெனின், இல்லையென்று ஒத்துக்கொள்ளலாமே, இதன்றியும்,

அறிவு தன்னை அறிந்து இச்சாஞானக்கிரியைபுரியுமா எனில், புரியும். எங்ஙனம். பொருளல்லவற்றைப் பொருளென்றுணர்தல், மருளோ, தெருளோ? தெருளெனின், அறிவு சலனமுறுமா? சுபாவம் எனின், சுபாவத்துக்கு விதிவிலக்கெற்றிற்கு. மருளெனின், பொருளல்லவற்றைப் பொருளென்றுணர்வதினாலன்றோ அறிவு மருளென்றாயிற்று. ஆகலாமா, ஆகக்கூடாதே அதனையுன்னாததென்னை. தோற்றத்தை மெய்யென்பதூஉம், அறியாமையை அறிவென்பதூஉம் நமதுபிழை. அதனை மறுக்குதும். தோற்றமாநின்றதும் மருளாநின்றதும் ஞெப்தியே வேறன்றெனவுணர்க. மருளில்பலவிவகாரமியையும்போதுதெருளியியையாதோ? கூறவேண்டுமோ.

(க-து) இவன்ஞெப்திமாத்திரமாவிளங்கலின் இவனுக்கீசனையுவமித்ததில் என்னிழிவெனக்குறிப்பித்தாரென்பது. தன்னை மறந்தியற்றுவதிலும் மறவாதியற்றல், மிகச்சிரேட்டமாதலின் ஈசனுக்கு உவமிக்கப்பட்டதென்க.

### 37 - கவி (அ—கை)

[எல்லாச்சீவரும் இவனுமெனவே, அதுகாரணமா விருதலை இக்கவியிற் கூறுகின்றார்.]

எல்லாச் சீவரு மிவனு மென்றீ ரிவன்றான் முத்தியடைந்
தெல்லாச் சீவரு முத்தி பெறும லிருப்பா னேனையா
வெல்லாச் சீவரும் வெவ்வே றானு லிவனெல் லாமலனே
யெல்லாப் பொருளு முரைத்தருள் குருவே யிதைநீர் மொழியீரே.

(இ ள்) எல்லாச்சீவருமிவனுமென்றீர் இவன்றான்முத்தியடைந்தெல்லாச்சீவருமுத்திபெறுமலிருப்பானேனையா (எ-து) – ஐயனே சமஸ்தசீவர்களும் இவனே என்றுரைத்தீர், இவன்முத்தியடைந்ததுபோல் எல்லாச்சீவரும் முத்தியடையவேண்டுமே, அடையாததற்கேதென்னை கொலோ:— எல்லாச் சீவரும்வெவ்வேறானு லிவனெல்லாமலனே (எ-து) – முத்தியடையாததால் எல்லாச்சீவரும் வெவ்வேறுமன்றோ. வெவ்வேறுகுமானால், இவனெல்லாச் சீவருமல்லனுமே: – எல்லாப் பொருளும் உரைத்தருள்குருவேயிதை நீர்மொழியீரே (எ-து) — அரிய பொருளனைத்தையும் உரைத்தருளிய குருநாதனே இதையும் நீர் விளக்கியருளும். எ-று.

இவனே எல்லாச்சீவருமெனின், இவன்போல் அவை முத்தியடையாததென்னை. அடையாததால் உயிர் வெவ்வேறாகவேண்டும்.

லெவ்வேருகும் எனின், இவனெல்லாச்சீவருமெனல் பொருந்தா தென்க. முத்தியடைய எனற்பாலது, முத்தியடைந்தென்ருயது; "சொற்றிரியினும்பொருடிரியா வினைக்குறை" என்பதனுற்காண்க. எல்லாச்சீவருமுத்திபெருமலிருப்பானேனென்றவிடத்து ஞானிமுத்தி பெற்றவனெனக் குறிப்பாற்கொள்ளவொட்டாது இவன்ருன் முத்தி யடைந்தென வெள்ளிடையாகக்கூறினுர். இனிமுத்தியடைவானை யடைந்தவனென்றது துணிவுபற்றி. இமையளவிற்பூர்வவாசனையாலே னும் ஆடியிற் பிரதிபிம்பம்போல அறிவிற்சடிதியிலெழுந்தடங்குந்தே காதிபிரபஞ்சப்பாவைகளளவின்றே எங்ஙனந்துணிவுபெறலாம். "களங் கமற்ற கண்ணுடி தன்முன் வேருேர் களங்கமற்றகண்ணுடி காட்டும் போது" என்ற கவியிற்கூறியவாறிருப்பராதலின் அங்ஙனங் கூற வேண்டுவதாயிற்று. ஆதலிற்பழுதின்றெனின், அங்ஙனமிருப்பினு மிப்போதே முத்தியென்னலாமா, இனியெய்தற்பாலதாகிய நிரதிசயான ந்தவாழ்வு இங்ஙனேயெய்தியதால் ஐயமென்னையெனின், இங்ஙன மேற்கோளுளவோ? "ஏட்டிலறிவின்றியிறை தன்னிலறிவின்றியிவ்வு டம்பினுடனே வீட்டிலுறைவானை யினிவீடுபெறு மென்பதுவிளம்பு கிலமே" என்ருர்தத்துவராயர். "ஐயத்தினீங்கித்தெளிந்தார்க்கு வை யத்தின்வானநணியதுடைத்து" என்ருர் திருவள்ளுவர். இது நிற்க.

(க-து) இவன்போல் எவவுயிரும் முத்தியடையாததற்கு ஏதென்னை என்பது. (37)

## 38 - கவி (அ - கை)

[பொதுப்படச் சீவனெனினும் அதுமலரகிதத்தால் ஆன்மாவெனவும், சகிதத்தாற் சீவனெனவுங்கொளக்கிடத்தலின், ஆன்மா, ஏகமெனவும், சீவன் பலவெனவும் இக்கவியிற் கூறுகின்ருர்]

அகமெனு மான்மா பூரண மேக மநேக விதஞ்சீவ
னகமெனு மந்தக் கரண வுபாதிக ளளவிலை யாதலினுற்
சகமுழுதுங் குளிர் சந்திர னேகஞ் சலசந் திரர்பலவாஞ்
சகமதி லேரி குளஞ்சிறு குழிசால் சட்டி குடம்பலவால்.

(இ-ள்) அகமெனுமான்மாபூரணமேகம் (எ-து)— நானென்னுமான் மாவானதுபரிபூரணமாகவிளங்கலின், ஏகமெனவும்:— அனேகவிதஞ் சீவன்அகமெனுமந்தக்கரணவுபாதிக ளளவிலையாதலினுல் (எ-து)— நானென்னுமந்தக் கரணுேபாதிக ளளவின்ருதலின் சீவன் பலவித மெனவுமாம்:—சகமுழுதுங் குளிர்சந்திரனேகஞ் சலசந்திரர்பலவாம்

(எ-து) உலகமுழுதுங் குளிர்ச்சி செய்கின்ற வானசந்திரனேகமும், சலப்பிரதிபிம்பசந்திரர்கள் பலவுமாம்: சகமதிலேரிகுளஞ் சிறுகுழி சால்சட்டிகுடம்பலவால் (எ-து)—இவ்வுலகத்தின்கண் ஏரியும், குளமும், சிறுகுழிகளும், சாலும், சட்டியும், குடமும், இவைபோல்வன பிறவும் பலவாயிருத்தலால். எ-று.

அகமென்பது, நான். தேகோகமுதல்சிவோகமீருவுள்ள அக மென்னும் பேதங்களளவிற்புகாதன. இதிலந்தக்கரணவுபாதிகளுமடங் கின. அந்தக் கரணபிரதிபலனன் சிதாபாசனென்றிருத்தலானும், இவ் வந்தக்கரணமே உபாதியாநிற்றலானும். இவ்வுபாதிபேதங்க ளளவை கடந்தனவாதலானும் இங்ஙன மளவுகடந்ததுபற்றி அனேகவிதஞ் சீவனெனப்பட்டது, அறிவு, உபாதியென விரண்டாம். மெய்யறிவு நானுகவிளங்கல், ஆன்மா. யாதானும் ஓருபாதியை யானெனவழங் கல், சீவன் இதுவுமறிவேனுங் கற்பிதத்தை யானெனலால், அறியா மையே. அதலினிதனைச்சிதாபாசனென்பர். அகமெனுமான்மாவென் ருற்போல, அகமெனுமுபாதியெனக்கூட்டிப் பொருள் கொள்க. அக மெனு ஆன்மாவென்ருற்போல, அகமெனுஞ்சீவனென்றுரை யாதது. ஆன்மாபொருண்மாத்திரமாயும்; சீவன்சொன்மாத்திரமாயுமிருத்தல் பற்றியென்க. என்னை, "சீவனென்கின்றசொல்லும் பொருளுமாச் செறிந்த ஆன்மா." என்ருர் வசிட்ட பகவான். அறிவையன்றி யானெனற்குப் பொருளின்மையின், ஆன்மாவெனப்பட்டது. மூன்ற வஸ்தாவயமாகாது அவற்றைச் சாட்சியாகநின் றுணர்வதெவ்வறி வோ, அஃதான்மாவெனவும், அவஸ்தைத் தோறு மவ்வவ்வுபாதி வயத்தாநின்றுணர்வதெவ்வறிவோ, அது சீவனெனவுங்கொள்க. தன்னைச்சொப்பிரகாசமாக்காண்டல், ஆன்மா. தன்னையுபாதியாக் காண்டல், சீவன். எனவே, சொன்மாத்திரமாயும் பொருண்மாத்திர மாயுமெனக் கூறியதில்லையமென்னை. வான சந்திரன்போல்வது ஆன் மா. சலசந்திரன்போல்வதுசீவன். வானசந்திரன்; எதார்த்தமாயும், ஏகமாயும், பிம்பமாயும் நிற்கும். சலசந்திரன்; கற்பிதமாயும், பல வாயும், பிரதிபிம்பமாயும்நிற்கும். அதுபோல, ஆன்மா; எதார்த்தமா யும், ஏகமாயும், பிம்பமாயும் நிற்கும். சீவன்; கற்பிதமாயும, பலவா யும், பிரதிபிம்பமாயுநிற்கும். ஆதலினுவமை பொருந்தும். எழுவகைத் தோற்றமாநின்று உயிரெனப்பெயர்கொண்டுசுக்த்தைநுகர்வதுடலோ, உணர்வோ? உடலெனின், தன்னைத்தானுணரவேண்டும். உணராதெ னின், உடலன்று, உணர்வெனின், கன்மேந்திரியம், ஞானேந்திரி யம், மனுதியந்தக்கரணங்கள், உயிர் இவை தன்னைத்தானறியாததால்

இவையனைத்துமுணர்வன்று. தன்னைத்தானுணரற்பாலதெதுவோ அது மெய்யுணர்வென்னப்படும். இந்தமெய்யுணர்வை ஆன்மாவெனவும், அவையனைத்துங்கற்பித வுணர்வாதலின், சீவனெனவுங்கொள்க. தானுகிறணர்வையெட்டவறியார்கற்பிதவுணர்வைச் சீவனெனவும், ஆன்மாவெனவும் பாகுபாடு சற்றுமுணராது மிசிரிம்பித்துக்கூறுவர். இவர் மொழி வாய்மையன்று. எந்தவுயிரைச் சோதிக்கினும், அறிவாகவேமுடியும் ஆதலால் அது திணைபாலிடங்கழன்றது. அதனை ஆன்மாவென்பதற்கையமென்னை. அவ்வறிவையுபாதியுளொன்ருமுடிக்கின் அதனைச்சீவனென்பதற்கையமென்னை. அறிவொன்றேபல்லுயிராக் காண்டலின் இவ்வுவமைதள்ளற்பாற்றன்று. இதனை மறுப்பார், தன்னைவிட்டுச்சோதிப்போர்.

(க-து) இவன்போலவெவரு முத்தியெய்தாததென்னையென்ற வினுவிற்கு உத்தரங்கூறுவான்வேண்டி இக்கவியிலுவமைகாரணமாக உயிரொன்றெனற்கும் பலவெனற்கு இலக்கணங் கூறியதென்பது (38)

39 - கவி (அ - கை.)

[ஞானியே பல சீவரெனற்கும் இவன் போலவர்கள் முத்தி அடையாததற்கும் உதாரண முகத்தால் இக்கவியில் உத்தரங் கூறுகின்ருர்.]

சட்டி குடங்களிெனென்று நசித்திட வதனுட் சலசந்த்ர
ஞெட்டு முதற்சந் திரனேடு கூடு மொழிந்தவை கூடாவே
கட்டு முபாதி நசித்திடு சீவன் காரண வான்மாவிற்
கிட்டு மயிக்கிய முபாதி கெடாதவர் கேவல மாகாரே.

(இ-ள்) சட்டிகுடங்களி லொன்று நசித்திட வதனுட் சலந்த்ர ஞெட்டு முதற் சந்திரனேடுகூடு மொழிந்தவைகூடாவே: (எ-து) — முன்னர் சட்டிகுட முதலாகக்கூறிய வுபாதிகளுளோருபாதி நசிக்க அக்கணமே யதனுட்காணப்பட்டுநின்றசலசந்திரன் தனக்குமுதலாக வானத்தினின்றுள்ள பிம்பசந்திரனேடு ஒட்டியேகமாகும். ஏனைய பிரதிபிம்பசந்திரர்கள் அங்ஙனம் ஏகமாகக் கூடுமாகூடாவே; (அது போல): — கட்டுமுபாதிநசித்திடு சீவன்காரணவான்மாவிற்கிட்டு மைக்கியம் (எ-து)—பந்தித்திருக்குங் காரணேபாதியை நசிக்கச் செய்த சீவன் எல்லா உயிர்க்குமுதற்காரணமாநின்றுள்ள அதிஷ்டானமான் மாவிற்கலந்தேகமாவன்: — உபாதிகெடாதவர் கேவலமாகாரே (எ-து) — காரணேபாதியை நசிக்கச் செய்யாத ஏனையசீவர் ஐயிக்கியமாகார். எ.று.

உபாதிநசித்திடுசீவன், உபாதிகெடாதவரென்னுமிடத்து இவ்விருவுபாதிகளுந் தூலதேகமென்றருத்தங்கோடற்கன்றே; சட்டி குடங்களி லொன்று நசித்திடவென்று உவமானித்தார். இங்ஙனமிருக்க. அவித்தையாகியகாரண உபாதியென்றருத்தங் கொண்டதெற்றிற்கோ, சட்டி குடசந்திரனென்னுது சலசந்திரனென்றமையானும், சலாதாரத்துக்காகவன்றிச்சட்டிகுடங்களாதி கூறற்கு அவசரமின்றுதலானும், பிரதிபிம்பத்தற்காய தர்மஞ் சலத்திலிருப்பதானும், அந்தத் தர்மஞ் சலமுமன்று சலத்தையன்றி வேறுமன்று சலமெனின் சலம் பிரதிபிம்பமாகுமா; வேறெனின், சலத்தையன்றிவேருகுமா; இங்ஙனமுரணுமாதலானும், அந்தத்தர்மம்பேதாபேதமாநிற்குமாறுபோன்று, தூலான்மாவென்னுது அந்தக்கரணபிரதிபலன் ஆன்மா வென்றமையானும், கரணுதாரத்துக்கன்றி யெவ்வகைதூலமுங்கூறற்கு அவசரமின்றுதலானும், பிரதிபிம்பத்திற்காய தர்மம் கரணத்திருப்பதானும், அந்தத்தர்மங்கரணமெனின், கரணம்பிரதிபிம்பமாகுமா? கரணத்தையன்றிவேருகுமா; இங்ஙனம் முரணுமாதலானும், அந்தத்தர்மம் பேதாபேதமாநிற்குமாதலானும், இதனையே அவித்தையெனக்கொண்டு உவமானித்ததென்க மகானிடத்தும் ஏனையோரிடத்துங் கரணமிருந்தும் ஐயந்திரிபுநிற்றற்கும் அஃதற்கும் இடமின்மையின் நசித்திடவென்றது அவித்தாவுபாதிக்கே தகுமெனவறிக. இதுநிற்க. தூலநாசம் முத்தியெனின், பிரளயமுத்தியாகக்கண்டிலமே. சூக்குமநாசம்முத்தியெனின், சர்வசங்காரம் முத்தியாகக்கண்டிலமே. ஆதலின் உபாதியைக் காரண உடலென்றனரெமதாசிரியர் காரணவுடல், அறியாமை. அதாவது: செகசீவ பரஞ்சுயம்பன்றியிருக்க இவற்றைச்சுயம்பென்றும், அநாதிநித்தியத்துவம் என்று முணர்தல். எனவே, அறியாமையெனலெங்கெங்குளதோ, அங்கங்குளதுசீவன் இலதேலில தென்றுயிற்று. ஆகவே, சீவன், அறியாமை, வடிவனெனப்பெற்றும். பாலையன்றித்தயிரோர்முதலன்றுமைபோல, அறிவையன்றி அறியாமையோர்முதலன்று. அறியாமைநசித்தவிடத்து அஃதெங்ஙனமாம், தனதுமுதலாம். நசியாவறியாமை தனதுமுதலாகாது. ஓர்சந்திரனே பலசந்திரனுகக்காண்டல்போல, ஓரறிவேபல அறிவாகக்காண்கின்றது. அவை பலவுஞ்சந்திரர்களாயின், இவைபலவுமறிவுகளாகலாம். ஆகாவேல் ஆகாவென்க. அவற்றுளோர்சந்திரனசிக்கில் முதல்சந்திரனேடொட்டும். அதுபோல, அவற்றுளோரறியாமைநசிக்கின் முதலறிவோடொட்டும்- ஏனையவை அங்கேயொட்டாவாறு, இங்குமொட்டாவாம், ஆதலின் இவ்வுவமை பொருந்தும்.

(க-து) சீவன்முத்தனே பலசீவரெனலும், பலசீவரு முத்தியெய் தாரெனலு மேற்க அமைந்ததென்பது. (39)

40 - கவி (அ – கை)

[முன்னர் ஞானியீசனுமாமென்றதற்கு ஒருவாற்ருலுத்தரங்கூறி னீர் அதனைப்பூரணமாகவேற்றற்குத்தடைகளுள, அவற்றிற்கு விடை தரவேண்டுமெனலை இக்கவியிற் கூறுகின்ருர்.]

இவனயன் மால்சிவ ஞகிய வீசரோ டெப்படி யொப்பாவன்
சிவன்முதன் மூவரு மகில சிருட்டித் திதிநா சங்கள்செய்வா
ரவர்பிறர் மதிகளு மூக்கா லங்களு மறிவார் விபுவாவார்
தவமிகு குருவே யிவனுக் கவைபோற் சற்றுங் காணேனே.

(இ-ள்) இவனயன் மால்சிவனுகிய வீசரோடெப்படியொப்பாவன், (எ-து) இந்தஞானவான், பிரமா, விட்டுணு, ருத்திரன், என்றீஸ்வரத்துவம் வாய்த்தவரோடு எப்படியொப்பாவன்: – (ஏனெனில்) சிவன்முதன்மூவருமகிலசிருட்டிதிதிநாசங்கள்செய்வார் (எ-து) – உருத்திரன்முதலியமூவருஞ் சமஸ்தத்தையுஞ் சிருட்டி, திதி, சங்காரங்கள் செய்யாநிற்பர்: – அவர்பிறர்மதிகளு முக்காலங்களுமறிவார்விபுவாவார் (எ-து) - இன்னுமவர்கள் பிறர் நினைப்பவைகளையுந்திரிகாலங்களையு மறிவார்கள், அறிவதுமன்றி, விபுவுக்கெல்லாம்விபுவாவார்கள்: – தவமிகுகுருவேயிவனுக் கவைபோற்சற்றுங்காணேனே (எ-து) - தவத்தில் மிகுந்தகுருநாதனே இந்தஞானவானுக்குஅந்தச் சாமர்த்தியங்களி லொன்று மிருக்கக்கண்டிலனே இதென்னசிறுமை. எ-று.

மூவருக்குப்ஈசத்துவஞ் சிருட்டியாதிதொழில்களால்வாய்த்தலின் ஈசரென்வும், குரு எல்லாத்தவங்களிலுமிக்கவராதலின் தவமிகுகுருவே யெனவுங் கூறினர்.

(க-து) மும்மூர்த்திகோலமீசனுதலின் இவனுக்குஞானியொப் பாவனெனில், சிருட்டியாதிதொழில்களும், சர்வஞ்ஞத்துவமும், திரிகாலஞானமும், விபுத்துவமுமெங்கே, இல்லையேயென்பது. ஞானமானல், இந்நான்குமிருக்கவேண்டும். இன்றேல், ஞானமல்லவென்பார்பலரும்; இவ்வேதுகொண்டுகேட்டனனென்க. இந்நான்கும், ஞானத்தினதுசேட்டைகள் இது, புரிவானதுசேட்டைகளைப் புரிவானென்பதுபோலும். ஆகுமா? ஆகுமெனின். வினைமுதலேவினையென்னல்வேண்டும், அங்ஙனம் எப்பாடையிலக்கணமுமின்றே,இது நூதன விலக்கணமாகவேண்டும், இங்ஙனமெங்குமின்றே, ஆதலிற்பொருந்

தாது பொருந்துமெனில், குதர்க்கம். குதர்க்கம், முறைவழு, ஞான மெனல், எல்லாச்சேட்டைகளுமற்றுத் தான்மாத்திரமாவிளங்கலென் போர் நுண்ணுணர்வோர். இவரேஞானியரென்போர். இப்பேதந் தெரிவதரிது (40)

41 - கலி (அ - கை)

[ஞானியுமீசனுமாயையாற்பேதமாவரன்றி, யறிவாற்பேதமாகா ரென்பதை இக்கவியிற் கூறுகின்றார் ]

தடத்து நீர்நிலாத் திரியெரி யுபயமுந் தழுவுமூர் தனைக்காக்கும்
குடத்து நீர்விளக் கினிலொளி யிரண்டுமோர் குடும்பமாத்திரங்காக்கு
மடுத்த மைந்தனே ஞானியு மீசனு மறிவினாற் பிறிவில்லை [மால்
கெடுத்த மாயையின் குணங்களான் மேலென்றுங் கீழென்றும் பிறிவா

(இ—ள்.) தடத்துநீர்நிலாத்திரியெரியுபயமுந் தழுவுமூர்தனைக் காக்கும் (எ-து) — தடாகசலமும், மத்தாப்புமாகியவிவ்விரண்டும், ஏகமா நின்றுள்ளவோரூரைக்காக்கும்: — குடத்துநீர்விளக்கினிலொளி, யிரண் டுமோர்குடும்பமாத்திரங்காக்கும் (எ-து) — கடசலமும் தீபவொளியுமா கியவிவ்விரண்டும்; ஓர்குடும்பமாத்திரங்காக்கும்: — அடுத்தமைந்தனே ஞானியுமீசனு மறிவினாற்பிறிவில்லை (எ-து) — என்னைவிடாதடுத்தஞான புத்திரா ஞானியும் ஈசனுமாகியவிவ்விருவரும், ஞானத்தினாற் சற்றும் பேதமிலராவர்: — கெடுத்தமாயையின்குணங்களால் மேலென்றுங் கீழென்றும்பிறிவாமால் (எ-து) — ஒன்றுபடாமற்கெடுத்தமாயையின் குணபேதத்தால் மேலென்றுங் கீழென்றும் வேறுபாட்டையடையும் எ-று.

தழுவுமூரென்றது; வெவ்வேறாகாது ஏகமாகநின்றவூர். குடும் பத்தைக்காப்பது, ஊரைக்காக்காது. ஊரைக்காப்பது, குடும்பத்தை யுங்காக்குமெனப்பொருள்படலின், ஞானிகாத்தல், தன்மட்டும். ஈசன் காத்தல், ஞானியுடனனைத்தையுமெனக்கொள்க. இங்கேகாத்தல், தனுகரண புவனபோகங்களை. இதுமாயாசம்பந்தமாதலின், கெடுத்த மாயையின்குணங்களால் மேலென்றுங்கீழென்றும்பிறிவாமால் (எ-து) — சமஷ்டிவியஷ்டியென்னும்பேதங்களை, யிருவருஞ்சின்மாத்திரமாக் கரைத்தலின், ஞானியுமீசனுமறிவினாற் பிறிவில்லையெனவுங்கூறினார், அறிவினாற்பிறிவில்லையென்பதைப் பிரமன் கூறியபிரமகீதையினும், கிருஷ்ணபகவான்கூறியபகவத்கீதையினும், சிவன் கூறிய ஈசுவர கீதையிலும் சிவஞானபோதத்திலுங்காணலாம். இம்மூவரும் ஞானத்

தையே பிரதிவாதித்தனர். ஆதலினிவர்மூவருஞ்ஞானியரே. இவர் உபாதி குணந்தொழிலாற் பேதித்தாற்போல, ஞானியும்பேதித்தலின், இது மாயாசம்பந்தமென்றாயிற்று. தனுகரணபுவனபோகங்களைத் தனித்தனி சீவர்காக்கினும், பிரித்தலுங்கூட்டலுமீசனுதலால் இவ் விரண்டுகாத்தலுமிவனுக்கே பொருந்தும்.

(க-து) ஞானியுமீசனுமாயையாற்பேதமுறுவரன்றி யறிவாற் பேதமுறாரென்பது. மாயையென்பதறியாமை. அதுசெகசீவபரங்களை மெய்யென்றுணருமறிவு. இம்மூன்றுமறிவுக்கனர்த்தம், அறியாமைக் கருத்தம். இது மூடர்பாலது, அதுவிவேகியர்பாலது; அறிவொத்த லின் ஞானியையீசனென்பதேற்கும். (41)

42 - கவி (அ—கை)

[மானிடரிற்சிறந்தோர்சித்துப்புருடர், பிறவியிற்சிறந்தோர்தேவர். அதுபோலப் பிரமபாவனையிற்சிறந்தோரெவர் என்பதை இக்கவியிற் கூறுகின்றார்.]

நரரின் மன்னனைச் சித்தரைப் போலவே நாரணன் முதலான
சுரர்கண் மாயைவல் லவரணி மாதிக டொக்கமா தவமிக்கோர்
தரணிமானிடர்க் கவைகளில் லாமையாற்றாழ்வுள ராறுைம்
பிரம பாவனை யாலிவ ரவரெனும் பேதமொன் றிலைபாராய்.

(இ-ள்) நரரின்மன்னனைச்சித்தரைப்போலவே (எ-து)—மானி டர்களில் அரசனும், அரசனில் சித்துப்புருடனு மெங்ஙனமதிகாரத் தானும், மகிமையானுமேலிட்டார்களோ அவர்போலப் பிறவியில்:— நாரணன் முதலானசுரர்கள் மாயைவல்லவரணிமாதிக டொக்கமாதவ மிக்கோர் (எ-து)— விட்டுணு முதலியதேவர்கள் மாயாவல்லபமுடை யோர், அணிமாதிசித்திகள் நிறைந்துள்ளமகத்தானதவத்தில் சிறப் புற்றோர்:— தரணி மானிடர்க்குஅவைகளில்லாமையால் தாழ்வுளரானு லும் (எ-து) பூமியில்மனிதர்களுக்கு அவ்வல்லபங்களில்லாமையால் அந்நிலைக்குத்தாழ்ந்தநிலையினராயினும்:— பிரமபாவனையால் இவரவ ரெனும்பேதமொன்றிலைபாராய் (எ-து)— பிரமமேதானெனச்செய்யும் பாவனையினால் மானிடரிவரென்றும், தேவர்கள் அவர்களென்றுங் கொள்ளும்பேதம் யாதானுமொன்றுளதோ? இல்லையே நீயே இதனைச் சோதித்துக்காணுதி. எ-று.

பிரமபாவனைசெய்வோர் மானிடர்மாத்திரமன்று தேவருமாதலின் இவ்விருபேதமுமதிலுண்டோ? உண்டெனில். அதுபிரமபாவமன்று.

நரரிலென்பதுபோலத் தேவரிலெனக்கூறலாமெனின் நாரணன் முத லானசுரர்களென்றிருக்கின்றதே. ஆதலிற்பிறவியிலெனவருவித்தாம். பிறவியிற்சிறந்தன ரென்றுணர்த்த எழுவகை தோற்றத்தில் தேவரை முதலில்வைத்து வழங்குகின்றதன்றோ? இதனாலுமுணர்க. மனிதரில் மன்னனும், சித்துப்புருடனு மென் சிறப்புறினும், மனிதரே. அது போலப்பிறவியிற் சிறந்த தேவரில், இந்திரனும், பிரமனும், நாரண னும், ருத்திரனும், அணியணியாக வென்சிறப்புறினுந் தேவரே. இவர் பிரமபாவனையிலெவர், பேதமின்றுதலால், ஞானி தேவனு மல்லன், மானிடனுமல்லனென்றாயிற்று. சித்திபெற்றதாலுயர்வும், பெருததாலிழிவும், பிரமபாவனையிலெங்கே, இன்றுதலால், பிரம பாவனையாலிவரவரெனும் பேதமொன்றிலை பாராரயென்றார்.

(க-து) பிரமபாவனையில்பேதமின்மையின் ஈசனு ஞானியு மொப்பரென்றது ஐயமின்றி ஏற்கப்படுமென்பது. இதனைச்சோதனை யாற்காண்க. (42)

## 43 - கவி (அ-கை)

[அஷ்டமாசித்திகளும் இவ்வுலகில்முனிவர்பாலதா நிகழ யாங் கண்டிருக்க, இவையீசனது சுதந்தரமென் றதென்னை என்ற வினாவிற்கு, இவர்கள் தத்தந் தவமுயற்சியாற் சிற்சிலவடைந் தனர் அன்றி சுதந்தரரல்லரென்பதை இக்கவியிற்கூறுகின்றார்.]

முத்தி நல்கிய சற்குரு வேபல முனிகளுக் கணிமாதி
சித்தி பூமியிற் கண்டிருக் கவுமந்தச் செல்வமீ சனதென்றீர்
புத்தி யொத்திட வுரைத்தரு ளென்றிடிற் புகழுமீ சனைவேண்டிப்
பத்தி செய்திடுந் தவத்தினல் யோகத்தாற் பலித்ததென் றறிவாயே.

(இ-ள்) முத்திநல்கியசற்குருவேபல முனிகளுக்கணிமாதி சித்தி பூமியிற்கண்டிருக்கவும் (எ-து) — முத்திசாம்பராச்சியத்தை யடியேனுக் கனுக்கிரகித்தசற்குருநாதனே, பலமுனிகளுக்கணிமாமுதலிய சித்தி களுளவாகப்பூமியில்கண்டிருக்கின்றனமே அங்ஙனங்கண்டிருக்கவும்: — அந்தச்செல்வம் ஈசனதென்றீர் புத்தியொத்திடவுரைத்தருளென்றிடில் (எ-து) — அந்தமகாசெல்வமானது ஈஸ்வரசுதந்தரமாம் என்று உரைத் தருளினீர்; அஃதெங்ஙனம் அடியேன் புத்திக்கு ஒத்திருக்கும் வண்ணந் தெரிவிக்கவேண்டுமெனக் கேட்பையாயின: — புகழும் ஈசனைவேண்டிப் பத்திசெய்திடுந்தவத்தினல் யோகத்தாற் பலித்ததென்றறிவாயே (எ-து) — யாவரானும் புகழ்ந்தருச் சிக்கதக்கபரமசிவத்தை வேண்டி மிகுந்த பக்தியோடு செய்யுந் தவத்தினனும், கிரியாயோகத்தினனும் வாய்த்ததென்றறிந்து கொள்ளுதி. எ-று.

முன்கவியில் நாரணன் முதலியதேவர்கள்; அணிமாதிகடொக்கமாதவமிக்கோரெனவும், இக்கவியில் பலமுனிகளுக் கணிமாதிசித்திகள் தவத்தினல் யோகத்தாற்பலித்ததெனவுங் கூறினதால் இருவருக்குந் தவங்காரணமாக அணிமாதிகள் வாய்த்தனவென்ருயிற்று. இவர்களுக்குவாய்த்ததீசனல், அவர்களுக்கு வாய்த்ததாராலெனின், அவ்வீசனல் என அறிக. ஈசனெனல் மாயாரகிதனே. ஏனேயோர் மாயை வல்லவர் என்றதனல் மாயாசகிதர் எனத்தானே அமைகின்றது. அவர்கள்மிக்கதவத்தா லணிமாதிகள் முழுதும்பெற்றனர், இவர்கள் தவத்தளவாகச்சிற்சிலபெற்றனர். அணிமாதிகளவர்கட்கே உரிமை. இவர்க்கு இரவல். எனவே, ஈசனதமிசந்திரிமூர்த்திகளென்ருயிற்று ஆயினீசனல்லர். இவர்களீசனுடையகோலமன்ரூே. கோலமா ஈசன்? அல்லவே, இது நிற்க.

(க-து.) ஞானிகள் சித்திகளேத்தவத்தினல் அடைந்தனர் என்பது. சுதந்தரரன்று. (43)

44 - கவி. (அ — கை.)

[இப்போது ஞானிகளுக்கு அவர்கள் போற் சித்தி வாய்க்காததற்கேதென்னேஎன்றுவினுவலே இக்கவியிற் கூறுகின்ருர் ]

சிவசொ ரூபமாந் தேசிக மூர்த்தியே சித்திமுத் திகளிரண்டுந்
தவமு ளோரடைகு வரெனி லவர்கள் போற்சகலரு மடையாரோ
வவர்கள் பூருவஞ் சித்தியு ஞானமு மடைந்ததுங் கண்டோமே
யிவர்கண் ஞானிகளென்றிடிற் சித்திக ளிவர்க்கிலா வகையேதோ.

(இ-ள்.) சிவசொரூபமாந் தேசிக மூர்த்தியே சித்திமுத்திகளிரண்டுந் தவமுளோரடைகுவ ரெனிலவர்கள்போற் சகலருமடையாரோ (எ-து)சிவசொரூபமே குருமூர்த்தமாக வெழுந்தருளியகர்த்தனே சித்திமுத்திகளென்னுமிரண்டினேயுந் தவமுடையவர்களடைவார்களென் றுரைத்தால் அவர்களேப்போலச் சகல முனிவருமதனேயடையாததற்கேதென்னேகொலோ: — அவர்கள் பூருவஞ்சித்தியுஞானமுமடைந்ததுங்கண்டோமே (எ-து) — அந்தஞானிகள் பூர்வத்திற் சித்தியையும், ஞானத்தையுமடைந்ததையுஞ் சுருதியாற்கண்டிருக்கின்றனமே: — இவர்கள் ஞானிகளென்றிடிற் சித்திகளிவர்க்கிலாவகையேதோ (எ-து) — இப்போதிருக்கிறவர்களேயும் ஞானிகளென்று சொன்னல் இவர்களுக்கு அச்சித்திகள் இல்லாததற் கேதென்னேகொலோ, அறிகிலம். எ-று.

அவர்கள்போற் சகலருமடையாரோ, அடைவார்களெனின், இவர்க்கிலாவகை ஏதோ என்று வினவவேண்டியது இதைவிட்டு அடைவாரோவெனப்பாடமோதி அடைவார்களாவென்றுரைகூறின், அடையமாட்டார்களென்றாகின்றதே. இது வினவா? அல்லவே. அடையாரோ இவர்க்கிலாவகையேதோ என்பதிரண்டுஞ் சீடன்வினா. அடைவாரோவென்றது விடை. இவ்விடை குருவினதாகவேண்டும். இக்கவியில் வினாவையன்றிவிடையொன்றுமின்றே இதுதோன்றாமை. வழுவன்று பின்கவி ஆசான்விடை. இக்கவி மாணாக்கன்வினா. இதையறிந்து உரை கூறவேண்டும். இது நிற்க.

(க-து.) பூர்வஞானிகள் சித்தி எய்தினர் எனில், இப்போதுள்ள ஞானியரடையாரோ, அடையாததென்னையென்பது. இவை வினா. (44)

45 - கவி. (அ கை )

[முன்னர் தவமென்றார் அஃதிருவகை யெனவும், அவற்றால் எய்தும் பயனிணையவெனவும் இக்கவியிற் கூறுகின்றார்.]

காமி யத்தவங் காமிய மொன்றையுங் கருதிடாத் தவமென்றும்
பூமி யிற்றவ மிருவகை சித்தியும் போதமும் தருமைந்தா
வாமி வற்றிலொன் றியற்றினு லொன்றையேயடைகுவ ரிதுதீர்வை
யாமு ரைத்தவவ் விரண்டையு மியற்றினு ரன்றுள பெரியோரே.

(இ-ள்.) காமியத்தவங்காமிய மொன்றையுங் கருதிடாத்தவமென்றும் பூமியிற்றவமிருவகைசித்தியும் போதமுந்தருமைந்தா (எ-து) —காமியத்தவமெனவும், நிட்காமியத்தவமெனவும் பூமியிலிருவகைத் தவமுண்டு. ஞானபுத்திரா! இவைசித்தியையேனும் முத்தியையேனுந் தவறாது தந்துவிடும்: —ஆமிவற்றிலொன்றியற்றினு லொன்றையேயடைகுவ ரிதுதீர்வை (எ-து). - இங்ஙனமாகநின்றுள்ள இரண்டினுள் தவமொன்றையே புரிந்தோரதற்குரிய பலனொன்றையே யடைவார்களிதுதீர்ப்பாம்:—யாமுரைத்தவவ்விரண்டையுமியற்றினுரன்றுள பெரியோரே (எது) – யாமுன்னர்க்கூறிய அவ்விரு தவங்களையும், செய்தவராகும் பூர்வத்திலுள்ள ஞானிகள். எ-று.

ஒன்றிலிச்சை கருதிச் செய்யுந்தவம், காமியத்தவம். கருதாது செய்யுந்தவம், நிட்காமியத்தவம். காமியத்தவம் சித்தியையும், நிட்காமியத்தவம் முத்தியையுந்தருமெனக்கொள்க. ஒன்றியற்றில் மற்றோர் பயனுறாதென்பார், ஆமிவற்றிலொன்றியற்றினு லொன்றையே யடைகுவரெனவும், முன்னர்ச்சித்திமுத்தியடைந்தோர் இருதவமு முயன்றவராகுமென்பார், யாமுரைத்த அவ்விரண்டையுமியற்றினு ரன்றுள பெரியோரே எனவுங் கூறினர்.

(க-து) இருவகைத்தவமுயற்சியாலன்றி இவ்விருபயனுஞ் சிறிது மெய்தாதென்பது. இவ்விருபயனும் கடவுளிட்டத்தாலெனின், யாவரிடத்துமோர் படித்தா நிகழ வேண்டும். இன்றேல் பாரபட்சமுடையராம். இது கூடாது. சுபாவமெனின், முயற்சியும் விதிவிலக்குவமுலாதியற்ற வேண்டு மென்பது மெற்றிற்கு கண்டபடி நடக்கலாமெனின். மிருகங்களினுமென்சிறப்பு. மனுநீதிக்கொத்துநடக்குதுமெனின், மறுமெக்கெதற் கொத்து நடக்கவேண்டும் வேண்டுவதின்றேல், இதுவும் வேண்டுவதின்று. அரசனுக்கினை நேரிடுமே எனின், அதுவுமீசுராக்கினையாலிடுக்கணேரிடுமன்றோ, அதுபிரத்தியட்சமன்றேயெனின், இந்தப்பிரத்தியட்சத்தாற்கணிக்கவேண்டுமன்றோ? அன்றேல், மானிடத்தன்மைக்கென்சிறப்பு. ஆதலினவரவர் வினைகாரணமாகவேயவரவரின்பதுன்பநுகர்வர். ஒருவரின்ப துன்பம் பிறருக்கியையாததென்னை? இதுபற்றிக் கன்மகாண்டத்தில் விபரமாகக்காணலாம். இதுஞானகாண்டமாதலின் வினைவழியேவந் தணைவசீவரையென்றார் சான்றோர். அவரினுந் தெளிந்ததென்னை, இதனையுமறுப்பார், மக்கட்பதர். (45)

46 - கவி (அு கை)

[அந்தச்சித்தி முத்தியாற் பயனெய்தினோர் இனையரென இக்கவியிற் கூறுகின்றார்.]

அனக மைந்தனே முத்திஞா னத்தையே யடைந்தன ரல்லாமல்
சனகன் மாபலி பகீரதன் முதலினோர் சித்திகள் படித்தாரா
வினிய சித்தியை விரும்பினர் சிலர்சில ரிரண்டையு முயன்றார்கள்
முனிவர் சித்திகள் விநோதமாத் திரந்தரு முத்தியைத் தாராவே.

(இ-ள்) அனகமைந்தனே முத்திஞானத்தையே யடைந்தனரல்லாமல் சனகன் மாபலி பகீரதன் முதலானோர் சித்திகள் படித்தாரா (எ-து) அகம்மதையிறந்தஞானபுத்திரா? சனகமகாராசனும், மகாபலிச்சக்கிர வர்த்தியும், பகீரதராசனும் முதலியசான்றோர் முத்தி வேண்டி ஞானத்தையேசாதன மாகவடைந்தனரன்றிச் சித்திகள் வேண்டிமுயன்றனரா இலரே:— இனிய சித்தியைவிரும்பினர்சிலர் சிலரிரண்டையு முயன்றார்கள் (எ-து)—கண்டுமகிழ்தற்கினியதாயுள்ள அணிமாதிசித்திகளைமாத்திரஞ் சிலர்விரும்பிமுயன்றார்கள். சிலர் சித்தி முத்திகளிரண்டையும் வேண்டிமுயன்றார்கள்:— முனிவர் சித்திகள் விநோதமாத்திரந்தருமுத்தியைத்தாராவே (எ-து)— இவ்விருதிறத்தினருமுனிவரேயன்றிவேறல்லர், அஷ்டமாசித்திகளும் வாய்க்கில் விநோதமாக விளையாடல் புரிதல் மாத்திரந்தருமன்றி ஐக்கிய முத்தியைச் சிறிதுந்தாரா. எ-து.

எனவே, சித்தி அதிசயானந்தத்தையும், முத்திநிரதிசயானந்தத்தையுந் தருமென்பதாயிற்று. சித்தி, காலம்போக்கல். முத்தி, காலாதீதமாதல்.

(க-து) சிலர்முத்திக்கும், சிலர்சித்திக்கும், சிலரிருமைக்கு முயன்றனர் என்பது. இங்ஙனமனுபவமிருத்தல் பற்றிக் கூறியதென்க (46)

47 - கவி (அ-கை)

[ஞானிகளிற் சிலர் பயனின்றெனத் தெரிந்துஞ் சித்திபற்றி வருந்திமுயன்ற நெற்றிற்கென்ற வினாவிற்கு உத்தரம் இக்கவியிற் கூறுகின்றார்.]

யோக ஞானமேமுத்தியைத்தருமெனி னொழிந்தசித் திகள்வேண்டி
மோக மாயுடல் வருந்தினார் சிலசில முத்தர்க ளேனென்றாற்
போக மாய்வரும் பிராரத்த கன்மங்கள் புசித்தன்றோ நசித்தேகு
மாகை யாலந்தச் சித்திகள் பிராரத்வ மாகுமென் றறிவாயே.

(இ-ள்) யோகஞானமே முத்தியைத் தருமெனி னொழிந்த சித்திகள் வேண்டிமோகமாயுடல்வருந்தினார்சிலசில முத்தர்களேனென்றால் (எ-து) ஞானயோகமேமுத்தியைத்தருமாயினது நீங்கலான சித்திகளடையவேண்டிச் சிலசீவன்முத்தர்கள் மிகவுமதில்மோகமுற்றுடலம் வருந்தினார்களே யஃதுயாதுக்கெனின்:—போகமாய்வரும் பிராரத்தவ கன்மங்கள்புசித்தன்றோநசித்தேகும் (எ-து)—போக நிமித்தநேரிடும் பிராரத்தவகன்மங்களை யனுபவித்தாலன்றோ அவையொழிந்துபோகும்:—ஆகையாலந்தச் சித்திகள் பிராரத்துவமாகுமென்றறிவாயே (எ-து)—ஆதலினந்தச்சித்திகள் பிராரத்வ கன்மபலன் என்றுணர்தி. எ-று.

கிரியாயோகம் ஞானயோகமென்றிருத்தலின் யோகஞானத்தை ஞானயோகமென்றும். மோகமாயுடல்வருந்தல்; அதிகமோகங்கொண்டுகனலிடையிலும் ஒற்றைக்காலாற் கழுத்தளவு நீரிலும் ஊசிமுனையிலும் காற்றுப்பட்சணையிலும் இன்னுமிவைபோன்ற அரிய விடுக்கண்களிலும் புற்றுய்க் கல்லாய் மரமாய்ப் பன்னாள் நின்றரிய கடுந்தவமுயறலே. சித்திகள் வேண்டியுடல் வருந்தல் இச்சைபற்றியாதலின், இச்சாபிராரத்துவமென்க. பிராரத்வகன்மங்கள் புசித்தல் தனுகரணபுவன போகங்களிலொன்றாதலின், போகமென்றார். யாவருமனுபவித்துத் தொலைப்பதெல்லாம் பிராரத்துவ மென்றுணர்த்தப் பிராரத்தகன்மங்கள் புசித்தன்றோ நசித்தேகு மெனப்பட்டது.

(க-து) ஞானிகள் மிகமுயன் றெய்தியசித்திகள் இச்சா பிராரத் துவமென்பது. இது; இச்சை அனிச்சை பரவிச்சை யென்னும் பிராரத்துவத்துளொன்று.

48 - கவி (அ - கை)

[இங்ஙனமுரைத்தருளிய ஆசிரியரைப்புகழ்ந்து துதித்தலை இக்கவியிற் கூறுகின்றார்.]

இலக்க மாயிரஞ் சுருதியா லூகத்தா லென்மன மசையாமல் [னேன்
பிலக்க வேண்டுமென் றருள்குருவேயகப் பிராந்திபோய்த்தெளிவா
துலக்க மானகண் ணடியை யடிக்கடி துலக்கினுற் பழுதன்றே.
யலக்கண் மாற்றிய தேவரீ ரெனக்குரை யமுதங்க டெவிட்டாவே.

(இ-ள்.) இலக்கமாயிரஞ் சுருதியாலூகத்தா லென்மன மசையாமல் பிலக்கவேண்டுமென்றருள் குருவேயகப் பிராந்திபோய்த்தெளிவானேன், (எ-து) – எண்ணிறந்த சுருதிகளாலும், யுத்திகளினுலும், என்மனமானது கலங்காதுஉறுதிபெறவேண்டியனுக்கிரகஞ்செய்தருளியகுருநாதனே! எனது மனேமயக்க நீங்கித்தெளிவுற்றனன்: – துலக்கமானகண்ணடியை யடிக்கடி துலக்கினுற்பழுதன்றே (எ-து) – களங்கரகிதமான கண்ணடியை யடிக்கடி துலக்கிக் கொண்டுவந்தாற் குற்றமுண்டோ? இல்லையே: — அலக்கண்மாற்றிய தேவரீரெனக்குரையமிர்தங்கடெவிட்டாவே (எ-து) – துயரங்களனைத்தையு மொருங்கே யொழித்தருளிய தேவரீர் அடியேனுக்குச் சொல்லிக் கொண்டுவரும் அமிர்தானுபவங்கள் தெவிட்டவில்லையே. எ-று.

அகிலாண்டகோடி யெல்லாமென்கிறவிடத்தில், அகிலாண்டகோடியென்பது; கணக்கின்மையெனப் பொருள்படுதல்போல, இலக்கமாயிரஞ் சுருதியென்பது; கணக்கிறந்த சுருதியெனப்பட்டது. பலக்கவென்பது பிலக்கவெனமரீஇயது. அகப்பிராந்தி, சித்தபிராந்தியை, தெளிவாதல், சங்கற்பத்தைத்தவிரச் சகமின்னெத்தெளிதலே. அமிர்தங்கள், சுருதியாதி மூன்றையுமெனப்பன்மைகொடுத்தார். இது, உவமையாகுபெயர். அறிவே யானந்தமாகமுடிதலின், தெவிட்டாவே யென்றார்.

(க-து.) தேவரீரருளிய சுகப்பேறுகள், தெவிட்டாவமிர்தம்போல் பவென்பது. இதனுல், மூன்றுமொத்துத் தெளிந்தனனெனக் குறிப்பிக்கப் பெற்றும். (48)

49 - கவி. (அ - கை.)

[ அவரவருந் தத்தம்வினைகளை யனுபவித்தே தீரவேண்டுமென்றும், அவ்வஞானுக்கினியானீருமென்றும் வேதங்கூறில், யான் துணிவதெங்ஙனமென மாணுக்கன்வினவலை இக்கவியிற் கூறுகின்றார் ]

கைத வங்களைச் சாத்திரஞ் சொல்லுமோ கருணையா லெனையாளு
மைய னேகுரு வேயெவ ராகிலு மனுபவித் தாலன்றிச்
செய்த கன்மங்கள் விடாதென்ற வசனமுஞ் சென்மசஞ் சிதம்வேவத்
துய்ய ஞானத்தீச் சுடுமென்ற வசனமுந் துணிவதெப்படி நானே.

(இ-ள்.) கைதவங்களைச் சாத்திரஞ்சொல்லுமோ கருணையாலெனையாளுமையனேகுருவே (எ-து) கிருபையோடென்னையாள வெழுந்தவையனே. குருநாதனே! பிறழ்ந்துகூறுமொழிகளை வேதஞ்சொல்லுமா? அஃதியாதெனில்: — எவராகிலு மனுபவித்தாலன்றிச் செய்தகன்மங்கள்விடாதென்றவசனமும் (எ-து) — யாவராயினுந் தான்தான் முன்செய்தவினைகளைத் தாமே அனுபவிக்கவேண்டும், அனுபவித்தாலன்றி விடாதென்றவசனமும்: — சென்மசஞ்சிதம்வேவத் துய்யஞானத் தீச்சுடுமென்றவசனமுந் துணிவதெப்படி நானே (எ-து) பிறவிக்குகாரணமாநின்றுள்ள சஞ்சிதவினைவேகும்படி யதனைப்பரிசுத்த ஞானக்கினிநீருக்குமென்றவசனமுமாம். இவ்விருவசனங்களில் இஃதுண்மையென யான் துணிவதெங்ஙனம் அதனைத் தெரித்தருளும் (எ-று.)

கைதவம்; உறுதியின்றியமொழி. எவ்வினுமமையும் எவராகிலுமென்றது, எவ்வளவுயர்ந்தநிலையினராயினுமென்பதை. இவர்திரிமூர்த்திகளெனினுமமையும், நாரணன்முதலானசுரர்கள் அணிமாதிகடொக்கமாதவமிக்கோரென்பதனுலென்க. நாரணன்முதலினரும் செய்தமாதவமிகுதியாலன்றே தொக்கவணிமாதிகளென்றார். அணிமாதிசித்தி முழுதும் இவர்களுக்குவாய்த்தல், பிராரத்துவம். யாதுமுயற்சியால், தத்தந்தவமிகுதியாலென்றுயிற்று. ஆகவே, இவர்களும்வினையனுபவித்துத் தீரவேண்டுமென்பதுபெற்றும்

(க-து.) எவரேனும்வினையனுபவித்துத் தீரவேண்டுமென்றும், அவ்வினைஞானக்கினியானீருமென்றும், வேதங்கூறுவதில் யாதுண்மையென்பது. செய்யுங்கன்மமென்னுது செய்தகன்மமென இறந்தகாலத்தாற்கூறியதால் சஞ்சிதவினையென்றேகொள்ளவேண்டும். (50)

50 - கவி (அ - கை.)

[அவ்வினுவிற்குவிடைகூறுவான்வேண்டி வேதங்கள்கூறும் பூர்வ

பட்சம் சித்தாந்தம் இனையவென இக்கவியிற்
கூறுகின்றார்.]

*சீவ பேதங்க ளளவிலை மைந்தனே செய்கையு மளவில்லை*
*யாவ வாமவ ரவரதி காரங்க ளறிந்துபக் குவநோக்கிப்*
*பூவ லர்ந்துபின் பலங்கள்காட்டுவனபோற் பூருவஞ் சித்தாந்தங்*
*காவல்வேதங்களிரண்டையும்வசனிக்குங்காண்டமூவகையாலே.*

(இ-ள்.) *சீவபேதங்களளவிலைமைந்தனே செய்கையுமளவில்லை* (எ-து) – ஞானபுத்திரா! சீவபேதங்களளவுபடாததால் அவர்கள்முயற்சி பேதங்களுமளவுபடாவாம் — ஆவவாமவரவரதிகாரங்களறிந்துபக்குவ நோக்கி (எ-து)—அவசியமாக வேண்டுவனவாகிய அவரவரதிகார தாரதம்மியங்களை யுற்றுணர்ந்து தக்கபக்குவங்களையுநோக்கி: – பூவலர் ந்துபின்பலங்கள்காட்டுவனபோல் (எ-து) – விருட்சங்கள் முன்னர் புஷ் பித்து பின்னர் பலன் தருமாறுபோன்று: - பூருவஞ்சித்தாந்தங் காவல் வேதங்களிரண்டையும் வசனிக்குங்காண்டமூவகையாலே (எ-து) – நமக் குவிதிவிலக்காற்காவலாநின்றுள்ள வேதங்கள்; பூர்வபட்சம், சித்தாந்த மென்னுமிரண்டுநியமங்களையும், கன்மம்பத்தி ஞானமென்னுமூன்று காண்டங்கள் காரணமாகத்தெரிவிக்கும். (எ-று.)

சைதன்யம்; உபாதிசகிதத்தாற்சீவனெனவும், உபாதிகளெண் ணிறந்தனவாதலின் சீவனுமெண்ணிறந்தனவாயிற்று இங்ஙனமாதல் பற்றிச் சீவபேதங்களளவிலையெனவும், அச்சீவர்கள் சுகம்வேண்டிப் பற்பலகிருத்தியங்களியற்றுநிற்றலின், செய்கையுமளவில்லையெனவும், அதிகாரம், ஆளுகை. அறிந்து, திறமறிந்து. எனவே, அவனவனாளு கைத்திறமறிந்து பூர்வபட்சத்தைச்சித்தாந்தமாகவும், சித்தாந்தத்தைப் பூர்வபட்சமாகவும், மூன்றுகாண்டங்களாலே வேதங்கள் பிரதிவாதிக்கு மென்பார், ஆவவாமவரவரதிகாரங்களறிந்து பூருவஞ்சித்தாந்தங் காவல்வேதங்களிரண்டையும் வசனிக்குங்காண்டமூவகையாலேயென வுங்கூறினார். பலங்கள்காட்டுவன விருட்சங்களாதலினிவ்விருட்சங்களை தோன்றுவெழுவாயாக்கிவருவித்தாம். அறிந்துவசனிக்கு மெனவும், நோக்கி அலர்ந்து காட்டுமெனவுமுடிக்க மூன்றுகாண்டங்களையு மாங் காங்குமுத்தியென வேதங்கூறலினிதுபற்றிப் பூர்வபட்சஞ் சித்தாந்த மென்றேற்கலாயிற்று. பட்டிமாடுபோற்றிரிவானைக் கன்மகாண்டம் விதிவிலக்கு வயப்படுத்தவேண்டி இதுமுத்தியெனல், சித்தாந்தம். முன்பட்டிமாடு போற்றிரிந்தது பூர்வட்சம். சமஸ்தத்தையுமீஸ்வரார்ப் பணம் பண்ணுது தேகமேயான்மா போகமேமுத்தியென்றிருத்தலின் இதன்மேற்பழுதுரைத்தல், பூர்வபட்சம். அதனைச்சுத்தமாக்கல், சித்

தாந்தம். அங்ஙனமீஸ்வராற் பணம்பண்ணினுந் திரிபுடியறுதற்பால தன்றாமையின் அதனைச்சோரவிடல், பூர்வபட்சம். அறுத்தற்பாலதுண் மைஞானமாதலின் அதனைவிடாதுபற்றல், சித்தர்ந்தம் இதுபற்றி இவ்விரண்டும், வேண்டுவதாயிற்று.

(க-து) முன்கவியிற்கூறிய இரண்டுவசனம்பற்றித் துணிவு கூறுவான் வேண்டி இக்கவியில்பூர்வபட்சசித்தாந்தங்களைக் கூறிய தென்பது. பூர்வபட்சம், அன்றெனல். சிந்தாந்தம், ஆமெனல். (50)

51 - கவி (அ-கை.)

[அவசரம்பற்றி அவ்விரண்டுவசனமும் ஏற்றற்பாலதென இக்கவியிற்கூறுகின்றார்]

ஆன பாவிக ளடைவன நரகங்க ளவசிய மானாலுந்
தான மந்திர விரதவோ மங்களாற் றவிருமென் பதுபொய்யோ
வீன மாம்பல சன்மசஞ் சிதவினை யெத்தனை யானாலு
ஞான மாங்கனல் சுடுமென்ற மறைமொழி நம்பினால் வீடுண்டே.

(இ-ள்) ஆனபாவிகளடைவனநரகங்க ளவசியமானாலும் (எ-து —கொடியபாதகங்களையே விரதமாகச் செய்தற்குரியபாவிகள் அவசிய மடையவேண்டியது நரகங்களையே, அங்ஙனமாயினும், (அவைகள்): —தானமந்திர விரதவோமங்களாற் றவிருபென்பதுபொய்யோ (எ-து) —தீர்த்தங்களினம்பி மூழ்கும்ஸ்தானங்களினாலும், மந்திரங்களினாலும் விரதங்களினாலும், யாகங்களினாலும் நீங்கிவிடுமென்று வேதங்கூறு வதுபொய்யாகுமோ: — ஈனமாம்பலசென்மசஞ்சிதவினை யெத்தனையானா லும் (எ-து) — இழிவுக்கிடமாயுள்ள பலசென்மசஞ்சிதவினைகள் எத்தனை பற்பலவிகற்பமாயினும்: — ஞானமாங்கனல் சுடுமென்றமறைமொழிநம் பினால்வீடுண்டே (எ-து) — அவற்றைஞானமாகிற அக்கினி நீருக்கி விடுமென்றுகூறும் வேதவசனத்தைத் திரிகரண மொத்து நம்பி யனுட்டிக்கின்முத்தியுண்டாகுமே. எ-று

நரகங்கள்; மந்திரமுதலியவற்றாற்ற விருமென்பதும், சஞ்சித வினைகள்; ஞானக்கினியானீருமென்பதும் வேதமாதலாலிதனைநம்பிப் புரியாவிடத்துப்பொய்யாம். நம்பிப்புரிந்தவிடத்துப்பொய்யாமா வீடா மேயென்பார், மறைமொழிநம்பினால்வீடுண்டேயென்றார். இரண்டு வீடெனினும், அதுபதவிமுத்தியும், இஃதயிக்கமுத்தியுமாம். ஞான மாங்கனலென்பது, விர்த்திஞானத்தை. அதனால் நரகங்கள்தவிரும், இதனாலினிப்பிறப்பதுதவிரும், இதனை அனுபவத்தாற்காண்பதன்றி வறுமொழியாலன்று. ஞானமாங்கனலுருவகம்.

(க-து) அவ்விரண்டுவசனமு அவசரம்பற்றி மெய்யென்று ஏற்கப்படுமென்பது. தானம், ஈகையெனினுமமையும் (51)

52 - கவி (அ கை)

[சென்மசஞ்சிதத்தை நீருக்குவது ஞானமாயிருக்கக் கன்மத்தை விரும்பிமுயல்வ தெற்றிற்கெனவினுவலே இக்கவியிற்கூறுகின்றூர் ]

என்மனந்திருக் கோயிலாத் தினங்குடி யிருந்தருள் குருமூர்த்தி
சென்ம சஞ்சித வினையையே ரறுத்திடுந் தேவரீர் மெய்ஞ்ஞானந்
தன்ம யந்தரு மகிமையை விபுதரர் சகத்துளோ ரறியாமல்
கன்ம மாங்குழி யினில்விழுந் தழிகின்ற காரண முரையீரே.

(இ-ள்) என்மனந்திருக்கோயிலாத்தினங்குடி யிருந்தருள்குருமூர்த்தி, (எ-து) - என்மனதையேசிறந்தவாலயமாகத் தினமுங்குடிகொண்டெழுந்தருளியகுருமூர்த்தியே சென்மசஞ்சித வினையைவேரறுத்திடுந் தேவரீர்மெய்ஞ்ஞானம் (எ-து) தேவரீரருளியமெய்ஞ்ஞானமானது சென்மசஞ்சிதவினையை வேரோடுகல்லிவிடும்: - தன்மயந்தருமகிமையை விபுதரர் சகத்துளோரறியாமல் (எ-து) - சமஸ்தமுந்தன்மயமாகும்படியாகவுஞ்செய்யும், இங்ஙன மாயநிலையைத்தரத்தக்கமகிமையைத் தேவருஞ்சகத்திலுள்ளமானிடருமறியாமல்: - கன்மமாங்குழியினில் விழுந்தழிகின்றகாரணமுரையீரே (எ-து) - கிரியாமார்க்கமென்னும்படுகுழியில் வீழ்ந்தழிகின்றகாரணம் யாதுக்கோ, அதனைத்தெரித்தருளும். எ-று.

துரியாதீதநிலையே சிந்தையனுதலின் என்மனந்திருக்கோயிலாத்தினங்குடியிருந்தருள்குருமூர்த்தியெனவும், சங்கற்பமெழுந்தோறும் அதனைச்சின்மாத்திரமாக்குமகிமையதாதலின் மெய்ஞ்ஞானந்தன்மயர்தருமகிமையெனவும், சமஷ்டிவியஷ்டிகளை ஆண்டானடிமையெனக்கொண்டு பூசிக்கின் உபாதியன்றே சீவனீசனுமா ஆகாதே ஆகாதளவும் பூசிப்பதிலென்பயன், பரர்க்கில்ழிவரன்றே? அழிவதுபற்றிக்கன்மமாங்குழியினில் விழுந்தெனவுங் கூறினர் இதுபடுகுழியென்றறியாது அதனைச் சிறப்பென்றுன்னுவோர் தேவரு மனிதருமாதலின், இவர்களைவிபுதரர் சகத்துளோரெனப்பட்டது இங்கே கன்மமென்றது, சரியைகிரியைகளை இவற்றுற்பயன், சித்தசுத்தியன்றிநிரதிசயானந்தமன்று. இவற்றையே மேலெனத்திடமுற்றே ரெங்ஙன ஞானமொன்றுள்தாகக் கருதியனுட்டித்துத்தெளிவர். இன்றுதலின் அழிவரெனப்பட்டது. சரியைகிரியைகளைப்புரிவது தோடமன்று, சித்தசுத்திக்கிடம்.

இடமாயினும், அவ்வளவோடுநில்லாது, மேற்கிரியாயோகத்துக் கிடம் பெறவேண்டும். இடம்பெறின்; ஞானயோகத்துக்கிடம்பெறும். இடம் பெறின் தானேதானுதற்கியையும். இம்முறையறியார், யோகத்தையும், ஞானத்தையும் பழுதுகூருநிற்பர். இதுநிற்க

(க-து.) ஞானனுட்டானஞ்செய்வது சித்தாந்தமாயிருக்கக் கன்மானுட்டானம் புரிவதெற்றிற்கென வினவியதென்பது. கன்மமேபுரிவார் பலருமாதலின் இவ்வையந்தவிர்தற்த ஆசிரியரைவினவினனென்க, கன்மத்தைக் குழியென்றது, மனேவைலவுக்கொழிவின்மைபற்றி. (52)

53 - கவி. (அ-கை.)

[அதற்குவிடைகூறுவான்வேண்டி அந்தர்முகம்பகிர்முகமெனப் பிரித்து அவற்றின்பயன்இனையவென இக்கவியிற்கூறுகின்றார்.]

அழிவி லாததற் பதந்தனை மைந்தனே யகமுகத் தவர்சேர்வார்
வழிந டப்பவர் பராமுக மாகினுன் மலர்ந்தகண் ணிருந்தாலுங்
குழியில் வீழ்வர்கா ணப்படி வெளிமுகங்கொண்டுகா மிகளானோர்
பழித ரும்பிற விக்கட லுழலுவார் பரகதி யடையாரே.

(இ-ள்) அழிவிலாததற்பதந்நனைமைந்தனே யகமுகத்தவர்சேர்வார் எ-து-ஞானபுத்திரா அழிவின்றிச்சதோதயமாக விளங்குந்தானுகியபதத்தை அந்தர்முகமாகநின்றவரெவரோ அவரேயடைவார்: — வழிநடப்பவர் பராமுகமாகினுல் மலர்ந்தகண்ணிருந்தாலுங் குழியில்வீழ்வர்காண் (எ-து) — வழிநடப்பவர்கள் பராமுகமாகச்செல்லில் அவர்கள் கண்கள்மூடாது திறந்திருக்கினுந் தப்பாதெதிரினின்றபள்ளத்திலவசியம் விழுவார்கள், அதுபொய்யோ நீயேகாணுதி: — அப்படிவெளிமுகங் கொண்டுகாமிகளானோர் (எ-து) — அவ்வாறுபகிர்முகமே தமக்குப்பயனுகக்கொண்டு விடயவிச்சைமேலிட்டுழலுங்காமிகள்: — பழிதரும்பிறவிக் கடலுழலுவார் பரகதியடையாரே (எ-து) — பழியையேதரற்பாலதாகிய பிறவிசாகரத்தில்மூழ்குவரன்றிப் பரகதியாகிய முத்தியையடையவேமாட்டார்கள். எ-று.

அழிவிலாதபதந்தனையென்னுது தற்பதமென்றதனுல், தானுகிய பதமென்றும். தொம்பதந்தற்பதமென்பவற்றுள்; தற்பதம், பிரமமெனினும் அமையும். ஆயினும், தத்துவக்குழாமனைத்துந் தானல்ல தானல்லவெனவிலக நியதிகளையமிஞ்சிநின்றது தானே, அயலோ? அயலெனின், உடலாதிதத்துவக்குழாங்களை அயலெனக்களைவதெற்றிற்கு. பிரம மயலோ? தானுயின், சீவேஸ்வரராகிய ஆரோபங்கட்குக் கூடஸ்

தபிரமம் அதிஷ்டானமெனக்கூறவரலாமா? கூறவந்தது தானெனும் பதம் அதிட்டானமென்றது. எங்ஙனம், தான் அதிட்டானம், தனக்குக் கூடஸ்தபிரமம் ஆரோபம். இவற்றிற்குச் சீவேஸ்வரர் ஆரோபம். எனவே, கூடஸ்தபிரமம் சீவேஸ்வரர்களுக்கு அதிட்டானமெனவும், தானெனுநிலைக்கு ஆரோபமெனவும் பெற்றும். சீவேஸ்வரராக நின்றதுங் கூடஸ்தபிரமமாகநின்றதுந் தானே. தானென்பதைத்தள்ளி இந்நான்குசைதன்யமுமெங்கே தான்இன்னன்குமன்று. தன்னைத்தவிரவுமில்லை ஆதலின் தானயலன்று இதுபற்றித்தானாகிய பதமெனவுரைகொண்டாம் அறிவேதானெனக்காண்பாரகமுகத்தவர் அயலேதானெனக்காண்பார்வெளி முகத்தவர். அதற்குப்பயன் சிதாகாசமாதல் இதற்குப்பயன் பிறவியாதல். இதுபற்றி அவர் தற்பதந்தனைச்சேர்வரெனவும், இவர் பிறவிக்கடலுழல்வரெனவுங்கூறினர். உயர்வுபற்றி அழிவிலாத தற்பதமெனவும், இழிவு பற்றிப் பழிதரும் பிறவியெனவும் அடைகொடுத்ததென்க. வெளிமுகமாதலுக்குவமை பராமுகம். அகமுகமாதலுக்குவமையெங்கே. இன்றேனும் சொல்லெச்சத்தாற் பராமுகமாகாமையெனக்கொள்க. என்னை, "பிறவிப்பெருங்கடனீந்துவர்நீந்தா ரிறைவனடிசேராதார்." என்னுங்கவியில், நீந்துவரென்னும் வினைமுற்றிற்கு எழுவாயின்றேனு சொல்லெச்சத்தாற் சேர்ந்தாரெனவருவித்தாற் போலும்.

(க-து.) அகமுகத்தவர் தானவர், பகிர்முகத்தவர் அயலாவரென்பது. இவ்விருமுகமுஞ் சொல்லாலறிவார்க் கென்பயன். (53)

## 54 கவி. (அ—கை.)

[தற்பதமடைவதும் பிறவியடைவதும் ஈசச்செயலாலன்றிச் சீவச்செயலாலன்றேயென்பானைநோக்கி இதுமூடர்வசனமாகுமென்று இக்கவியிற்கூறுகின்றார்.]

சிறந்த நன்மையுந் தீமையு மீசனார் செய்விக்குஞ் செயலன்றே பிறந்தசீவர்களென்செய்வா ரவர்கள்மேற் பிழைசொலும் வகையேதோ, துறந்த தேசிக மூர்த்தியே யென்றிடிற் சுருதிநூற் பொருண்மார்க்கம், மறந்த மூடர்கள் வசனிக்கும் பிராந்திகாண் மைந்தனேயதுகேளாய்.

(இ-ள்.) சிறந்தநன்மையுந்தீமையுமீசனார் செய்விக்குஞ்செயலன்றே (எ-து)—சீவர்கள் சிறந்த சற்கிருத்தியஞ்செய்வதும் இழிந்ததுற்கிருத்தியஞ்செய்வதும் ஈஸ்வரன்செய்விக்குஞ் செயலினாலல்லவா:— பிறந்தசீவர்களென்செய்வார் அவர்கள்மேற்பிழைசொலும் வகையேதோ (எ-து)—அவன்பிறப்பிக்க அதனாற்பிறந்த சீவர்கள் சுதந்தர

ஈனராயிற்றே அவர்களென்னசெய்வார்கள் அவர்கள் மேற்பிழை சொல்லும் வகையாதோ: துறந்ததேசிகமூர்த்தியேயென்றிடில் (எ-து) —சகலபற்றினின்று நீங்கிய ஆசிரியமூர்த்தமே யெனக் கேட்பையாயின்:— சுருதிநூற் பொருண்மார்க்கமறந்த மூடர்கள் வசனிக்கும் பிராந்திகாண் மைந்தனேயதுகேளாய் (எ-து) —வேதசாஸ்திரங்களிற் கூறிய அர்த்தமார்க்கங்களை மறந்த மூடர்களெவர்களோ அவர்கள் பிதற்றுமயக்கவசனமேயன்றி அறிஞர்கூறும்வசனமன்றுஞானபுத்திரா! இதனைப்பற்றியாந்தெளிவாகக்கூறுதும் அதனைக் கேளுதி (எ-று)— காண், அசைநிலை.

பிராந்தி, ஒன்றையொன்றுகக்கொண்டு பிதற்றும்வசனம், ஆட்டுவிப்பானையன்றி யாடுவார்க்கென்னசுதந்தரமுண்டென்பார்போலச்சீவர்களென் செய்வாரவர்கள் மேற்பிழைசொலும்வகையேதோ வெனவும், உயிருமுடலுங் கூட்டலும் பிரித்தலுஞ் சீவத்தொழிலன்றே இரண்டுங் கூட்டிய விடத்து இயங்குமியக்கமுஞ் சீவத்தொழிலாமா ஆகாதேயென மறுத்ததென்னில், ஒருவன் தன் மண்பெண்பொன்னைப் பிறர் அபகரிக்கின் இவன்சம்மதியான்பிறர் பொருளை இவன் கவர்தற்குச் சம்மதிப்பதென்னை இது ஞாயமாவெனஇவனைக்கேட்கில் நானென்செய்வன் சிவனிப்படிக்குப்புத்தி கொடுத்தானென்பன் அவனுமங்ஙனஞ்சொல்வானன்றே? அதற்குமறுமொழியென்னையுள, ஆதலின் இவையெல்லாஞ்சிவன் செயலேயன்று சீவன்செயலேயென்பதை மறந்தவர்பேசுமொழியென்பார், சுருதிநூற்பொருண்மார்க்க மறந்த மூடர்கள் வசனிக்கும் பிராந்திகாணெனவுங் கூறினர்.

(க-து) அனைத்துஞ் சிவன்செயலன்றென்பது. (54)

55 - கவி (அ—கை)

[முன்கவியில் அனைத்து ஈசச்செயலன்றெனவே சீவச்செயலென்பதாயிற்று. அப்பேதங்களை இக்கவியிற் கூறுகின்றார்.]

திகழ்ந்த வீசனார் சிருட்டியுஞ் சீவனார் சிருட்டியும் வெவ்வேறே
சகந்த னிற்பொதுவீசனார்சிருட்டிகள் சராசரப் பொருளெல்லா
மகந்தை யாமபிமானங்கள் கோபங்க ளாசைக ளிவையெல்லா
நிகழ்ந்த சீவனார் சிருட்டிக ளாகுங்கா ணிமலனார் செயலன்றே

(இ-ள்) திகழ்ந்தவீசனார் சிருஷ்டியுஞ் சீவனார்சிருஷ்டியும் வெவ்வேறே, (எ-து) — எங்குந்தானாவிளங்கும் ஈசசிருட்டியும் சீவ

சிருட்டியுமனுபவமாயிருக்க ஈசனதென்பதுகூடாது. வெவ்வேறும்:- சகந்தனிற்பொதுவீசனூர் சிருட்டிகள் சராசரப்பொருளெல்லாம் (எ-து) —(எங்ஙனமெனில்) உலகத்திற்பொதுவாநிற்பன ஈஸ்வரசிருஷ்டிகள். அவை சராசரமாநின்றுள்ள பொருள்களனைத்தும். இது சீவச்செய லன்று: -அகந்தையாமபிமானங்கள் கோபங்கள் ஆசைகளிவையெல் லா நிகழ்ந்தசீவனூர்சிருட்டிகளாகுங்கா ணிமலனூர்செயலன்றே (எ-து) —உலகத்தில் மிகவுந் தம்மைமறந்து தமதிட்டப்படிநிகழ்வன, சீவ சிருஷ்டிகள். அவை, அகந்தையாகிய அபிமானங்களும் கோபங்களும் ஆசைகளும் இவைபோல்வனபிறவுமாம். இஃதுநின்மலமான ஈசச் செயலன்று. ஆதலின் சிருஷ்டி யிருவகையாகும். எ-று.

சகத்தையிருவழியுமொட்டுக பொதுவென்றதனூற்சிறப்பென வும், நிமலனூர்செயலன்றே யென்பதனுல், சீவனூர்செயலன்றேயென வும் வருவித்தாம். சீவனூரீசனூரிவை மரூஉமொழி. பொது; தனுகரண புவனங்கள். சிறப்பு, போகம். போகமென்பது, இன்பதுன்பங்களை. போகநுகர்தலுக்குத்தனுகரண புவனமின்றேற்கூடாது. ஆதலினிம் மூன்றையும் பொதுவெனவும் தத்தமுயல்வாலன்றிப்போகமெய்தாது, ஆதலிற்போகமொன்றையுஞ் சிறப்பெனவுங்கண்டாம். சராசரமென் பன, இங்கேயுடல்களை சீவனெனின், சிருஷ்டிபேதம் பிரிப்பானேன்? சராசரந்தனுவாகுழி. பொருளெல்லாமெனல் ஏனைய கரணபுவன மென்ருயிற்று. புவனமென்றது, பூமிமாத்திரமன்று, சகல அண்டாண்ட கோடிகளையும், கயிலாயமுதலிய பதவிகளையு மெனக்கொள்க. இது பற்றிச் சராசரமும் ஏனையபொருளிடங்காலமுமென உம்மைத்தொகை யாக்காது, சராசரமாகியபொரு ளெல்லாமெனப் பண்புத்தொகை யாக்கின் முரணும்.

(க-து) செய்கைபேதத்தாற் சிருஷ்டிபேதந்தெரிவித்தனரென் பது. அச்செயலாலாயவை, சராசரப்பொரு ளெல்லாம். இச்செயலா லாயவை, அகந்தையபிமானமுதலியன. (55)

## 56 - கவி (அ-கை)

[சராசரமுதலியன முத்திசாதனமெனவும், அபிமானமுதலியன பந்தசாதன மெனவும், சராசரமாதி நசிக்கிற் பிறவிநசியாவெ னவும், அபிமானமாதி நசிக்கிற் பிறவிநசிக்குமெனவும் இக்கவியிற் கூறுகின்ருர்.]

மூவ ராம்பரன் சிருட்டிக ளுயிர்க்கெலா முத்திசா தனமாகுஞ்
சீவனாது சிருட்டிக டங்களைச் செனிப்பிக்கும் பிணியாகுந்
தாவ ராதிக ணசித்திடி லொருவர்க்குஞ் சநநங்கணசியாவாங்
கோபமாதிக ணசித்திடிற் பந்தமாங் கொடும்பிற விகள்போமே.

(இ-ள்) மூவராம்பரன்சிருட்டிக ளுயிர்க்கெலாமுத்தி சாதனமாகும் (எ-து) — மும்மூர்த்திகோலமாநின்றுள்ள ஈஸ்வரசிருட்டியாலாயவை யெல்லாவுயிர்களுக்கும் முத்திசாதனமாயிருக்கும்:-சீவனாதுசிருட்டிகள் தங்களைச் செனிப்பிக்கும் பிணியாகும் (எ-து) — சீவசிருஷ்டி யாலாயவை தங்களைச் செனிப்பிக்கத்தக்க வியாதியாநிற்றலின் இவைபந்தசாதன மாயிருக்கும்: தாவராதிகணசித்திடிலொருவர்க் குஞ்சனங்கணசியா வாம் (எ-து) — விருட்சமுதலியசராசரப்பொருள் கணசித்திடில் யாதோரு ருயிர்க்குஞ்செனனங்கள் நசிக்கமாட்டாவாப: — கோபமாதிகணசித்தி டிற் பந்தமாங்கொடும் பிறவிகள்போமே (எ-து) — கோபமுதலியவை நாசமாகுமாயின் பந்தமாநின்றுள்ள கொடியபிறவிகள் நாசமாம் எ-று.

சிருட்டியாலாயவைகளைச் சிருட்டிகளென்றது, தொழிலாகு பெயர். ஈசகாரியம், தாவராதிகள். சீவகாரியம், கோபமாதிகள். முத்திசாதனம் இருக்கினுமழியினும், கோபமாதிகணசியாவிடத்தென் பயன். எனவே, ஈசன் மேற்பழியின்றென்பதாயிற்று. தாவராதிகள் பெரும்பாலும் பந்தசாதனமாயிருக்க, முத்திசாதனமெனறது; தவம் புரிவோர்க்கு உணவுக்கு இலை காய் கனி கிழங்குகளும் தங்கற்குவனம் குகையாதி யிலையந்தவிடமும் தாகந்தணிதற்குச் சுனையர்தி நீருமா யிருத்தல்பற்றி. கோபம் கௌதமரிடத்தும், காமம் கிருஷ்ணபகவானி டத்தும், இருந்தும் கொடும்பிறவிபோய தென்றதென்னை? துஷ்ட நிக்கிரகத்திற்கும் முன்னர்க்கூறிவந்த வேறுபாட்டிற்கும் எழுந்ததே யன்றித் தம்பொருட்டாகவன்று. குணமென்னுங்குன்றேறி நின்றார் வெகுளிகணமேயுங்காத்தலரிதெனவும், நித்தியபிரமச்சாரியெனவும் வழங்குவதெற்றிற்கு.

(க-து) பிறவிக்கிடம், பந்தம். பந்தத்திற்கிடம், காமவெகுளி மயக்கம். இவற்றிற்கிடம் சீவச்செயலென்பது. இவ்வடுக்குநழுவின், பிறவிநசிக்கும். காமாதிமூன்றும் ஈசசெயலாயின், தாவராதிகள் சீவச் செயலென்பம். அன்றேல், சொன்னவாறுகேளுதி. (56)

57 - கவி (அ - கை)

[காமாதிகள்சீவச்செயலன்றி யீஸ்வரச்செயலன்றென.
இக்கவியிற் கூறுகின்றார் ]

ஈசர் காரியம் பிரளயத் தொழியவு மெவர்பவ மொழிந்தார்க
டேச காலதே காதிக ளிருக்கவுஞ் சீவகா ரியமோக
நாச மாகியவ் விவேகத்தி னுயிரொடு ஞானமுத் தர்களானார்
பாச மோகங்கள் பசுக்களின் செயலன்றிப் பசுபதி செயலன்றே.

(இ-ள்) ஈசர்காரியம்பிரளயத்தொழியவு மெவர்பவமொழிந்தார்கள் (எ-து) — ஈஸ்வரசிருஷ்டியாலாய பூதபௌதிககாரியங்கள் பிரளயகாலத்தொழிந்தும் பவமொழிந்தவரெவர் கண்டிலமே: — தேசகாலதேகாதிகளிருக்கவுஞ் சீவகாரியமோகநாசமாகியவ் விவேகத்தினுயிரொடு ஞானமுத்தர்களானார் (எ-து) — தேசமும் காலமும் தேகாதிவஸ்துக்களும் சிறிதுமழியாமலிருக்கவும் சீவசிருஷ்டியாலாய மோகாதிகாரியங்கள் மயமாகாது விவேகத்தால் நாசமுற்றுயிரிருக்கவும் அவ்விவேகங்காரணமாக ஐக்கியமுத்தியடைத்தனர்: — பாசமோகங்கள் பசுக்களின்செயலன்றிப் பசுபதிசெயலனறே (எ-து) — பாசத்துக்கியைந்த மோகாதிகாரியங்கள் சீவசிருஷ்டியாலாயதன்றி ஈஸ்வரசிருஷ்டியாலாயதன்று. எ-று.

சீவன்காரியம் சீவகாரியமென்றாற்போல ஈசன்காரியம் ஈசர்காரியமென்பதில்வழுதென்னை ஈசகாரியம் மிருக்கவு மெவர்பவமொழிந்தார்களெனப் பொருடர ஒழியவுமென்றார். ஒழியவுமென்பதிலுள்ளவும்மை, இறந்ததுதழீஇயது. இது சாத்தனும்வந்தானென்பதுபோலும் இருக்கவுஞான முத்தர்களானாரென்பதனால் இருக்கவுமென்பது இரும்கத்ததாகும். ஆதலின் இஃதரிமாநோக்கெனப்படும். இதுபற்றியிம்மொழியையிரட்டித்துக்கூறு தொழிந்தனர். பாசமோகங்கள் இரண்டாம் வேற்றுமையுருபும்பயனுந் தொக்கதெனினுமமையும். பாசத்துக்கிடமாதலின், பாசமோகங்களெனவும், பசுவுக்குப்பதியாதலின் பசுபதியெனவுங்கூறினர். பசு உயிர். ஞானமுதிர்ச்சிக்கு, ஞானமுத்தரெனினுமமையும்.

(க-து) காமாதிகள்விளைவு ஈசச்செயலாலன்றென்பது பந்தமுமுத்தியும்; காமாதிகள் விளைவினாலும், ஒழிவினாலுமெய்துமென்ருயிற்று. இவ்விருமுயற்சியு ஈசனதன்றென்க. காமாதிகள்விளைவே, பந்தம். பந்தவிளைவே, பிறவி. காமாதிகளொழிவே, பந்தநாசம். பந்தநாசமே, பிறவிநாசம். இஃதெவர்முயற்சி. (57)

58 - கவி (அ - கை)

[சீவேசநிலைமை இத்தகையதென்றுணர்த்த உவமையால் இக்கவியிற் கூறுகின்றார்]

அச்சு வத்தமென் றொருமர மதிலிரண் டரும்பற வைகள்வாழு
நச்சு மங்கொரு பறவையம் மரக்கனி நன்றுநன் றெனத்தின்னு
மெச்சு மங்கொரு பறவைதின் றுதென வியங்கியப் பொருளாக
வைச்சு மாமறை சீவனை யீசனை வகுத்தவா றறிவாயே.

(இ-ள்) அச்சுவத்தமென்றொரு மரமதிலிரண் டரும்பறவைகள் வாழும் (எ-து)—அரசெனப்பெயருள்ள விருட்சமொன்றுளது; அவ் விருட்சத்தில் அரியபட்சிகளிரண்டுவாழாநிற்கும்: — நச்சுமங்கொரு பறவையம்மரக்கனி நன்றுநன்றெனத்தின்னும் (எ-து) - யாவரானும் விரும்பத்தக்க வங்குள்ள பறவைகளிலொன்று, அம்மரக்கனிகளைக் கண்டுகொத்திக்கொத்தி நன்றாயிருக்கின்றதுநன்றாயிருக்கின்றதெனத் தின்னாநிற்கும்: — மெச்சுமங்கொருபறவை தின்றுதென வியங்கியப் பொருளாகவைச்சு (எ-து) — யாவரானுந்துதிக்கப் பெற்றவங்குள்ள மற்றோர்பட்சி அக்கனிகளைத்தின்றதென்று பெருமைதந்து அந்தப் பட்சிகளைக்குறிப்பொருளாகவைத்து:— மாமறைசீவனைஈசனை வகுத்த வாறறிவாயே (எ-து) — மகத்தானவேதங்கள் சீவனையுமீசனையும் வகுத்துக் கூறியமுறையை நீ யறிந்துகொள்ளுதி. எ-று.

அச்சுவத்தம். நிலைகீழ்தாவள்ளமாயாவிருட்சம். எனவே, எம தறியாமை யென்றாயிற்று. ஆகவே, சீவேஸ்வரர்கள் கற்பிதமெனக் கொண்டாம். கொள்ளவே, கனிகள் விடயமெனவும் அவற்றை நுகர்வது சீவனெனவும், தின்றதது ஈசனெனவும்பெற்றும். 'இங்ஙனம் வகுத்தது யாமன்றென்பார், மாமறை வகுத்தாவாறறிவாயேயென் றார். இங்கே யறியாமையில் அறிவறியாமை. இவ்விருவருந் தன்னைத் தானறியாராகலின் இவரறிவு, அறியாமையென்னப்படும். ஆதலின் இதனை மாயாவிருட்சமெனவும், தன்னைத்தானறியாத கடுந்துறவி போறலின் ஈசனையறிவெனவும், கடுந்துறவியல்லார் போறலிற் சீவரைஅறியாமையெனவும், இவ்வேதுபற்றி யம்மரக்கனியைத்தின்னு மெனவுந் தின்றதெனவும், இவ்வறியாமை மூட்டத்திலாதலின் இம் மூடஞ் சத்தன்றாதலானும், இவ்வசரத்தில் பரஞானம் அபரஞானமாக வும், அபரஞானம் பரஞானமாகவும், மாறிக்காண்டலானும், அச்சு

வத்தமென்றது; தலைகீழதானவிருட்சமெனவும், இதுமாயையெனவுங் கூறியவாறுகாண்க. அணிர்தசடதுக்கத்தைச் சச்சிதானந்தமெனக் காண்டல்மாருயவுணர்வாதலின் இதனைத்தலைகீழதெனவும், சுயம் பல்லாததைச் சுயம்பெனக்கோடல் தேகாதிகளேயாதலின் இதுவுந் தலைகீழதெனவும், நிரவயவமானதன்னைச் சாவயவமாகக்காண்டலும், அவஸ்தாரகிதமானதன்னை அவஸ்தாமயமாகக்காண்டலும், காரண காரியரகிதமான தன்னைக் காரணகாரியமாகக்காண்டலும், தந்தை யாதிய கற்பனையிறந்த தன்னைத் தந்தையாதியாகக்காண்டலுமாகிய இவையனைத்துந் தலைகீழதெனவும், பிறப்பிறப்பற்றதன்னைப் பிறப் பிறப்புடையனுகக்கோடல் தலைகீழதெனவுங் கொள்ளினுமமையும். இன்னுமிவைபோல்வன பிறவுங்கொள்க. இன்னுமுரைக்கிற்பெருகும். என்னை, "சொற்றவற்றியலான்மற்றையபிறவுந், தெற்றெனவுணர்தல் தெள்ளியோர்கடனே" யென்ருர் சான்ருேர். ஆதலின தலைகீழதான மாயாவிருட்சமென்பது தடையின்றியமையும்.

(க-து) சமஸ்தமுமித்தையெனக்காட்டியதில் சீவேஸ்வர தார தம்மியம் இனையவெனவுணர்த்தியதென்பது. அறிவையன்றிச் சீவே சரின்மையானும், அவ்வறிவு பொருளல்லவற்றைப் பொருளாயறிவ தானும், இவ்வறிவை நிதானமெனல் கூடாமையானும் தலைகீழதான மரமாக உவமித்ததிலென்பிழை. மறுப்பார்தன்னறிவைச்சற்றுஞ் சோதித்தறியார்போலும். தத்தெரிசனத்தாலன்றிக் கல்விஞானம் திரிகாலஞான முதலியவற்ருல்நிமிராஞான மாதலின் இதனை அச்சு வத்தமென்றதை முடத்தால் மறுக்கிலென்பயன். (59)

59-கவி (அ—கை)

[காமாதிசேட்டைகள் தம்மால்விளைந்ததெனக்கண்டார், அவற்றை யங்ஙனே களையத்துணிவர். ஈசனுல்விளைந்ததெனக் கொண்டார் களை தற்குச் சற்றுமெண்ணமுருர் என்பதை இக்கவியிற் கூறுகின்ருர்]

இந்தச் சீவனல் வருமறு பகையெலா மிவன்செய லல்லாம
லந்தத் தேவனல் வருமென்ற மூடர்க ளதோகதி யடைவார்க
ளிந்தச் சீவனல் வருமறு பகையெலா மிவன்செய லல்லாம
லந்தத் தேவனு லன்றெனும் விவேகியே யமலவீ டடைவாரே.

(இ-ன்) இந்தச்சீவனல் வருமறு பகையெலா, மிவன் செயலல் லாமல் (எ-து)—இந்தச்சீவனல் விளையுங் காமக்குரோதாதிகளென்

னும் பகையனைத்தும் இவன்செயலா லுண்டாயினவென்று உணர வேண்டுவதன்றி:-அந்தத்தேவனல்வருமென்ற மூடர்களதோகதியடைவார்கள் (எ-து) அந்தத்தேவனால் விளையுமென்ற மூடர்கள் நரகமேயடைவார்கள்:—இந்தச்சீவனால் வருமறுபகையெலா மிவன் செயலல்லாமல் (எ-து) - இந்தச்சீவனால் விளையுங்காமக் குரோதாதிபகைகளனைத்து மிவன் செயலாலுண்டாயினவென்று உணரவேண்டுவதன்றி:—அந்தத்தேவனலன்றெனும் விவேகியே யமலவீடடைவாரே (எ-து) – அந்தத்தேவனால் விளைந்ததன்றென வூகிக்கத்தகும் விவேகியரெவரோ அவரே நின்மலமுத்தியையடைவார். எ-று,

அணிமைபற்றி இந்தச்சீவனலெனவும், சேய்மைபற்றி அந்தத்தேவனலெனவுங்கூறியதென்க. அணிமைசேய்மை; காமாதிகள் தனது விகற்பபுத்தியேயெனக் களைதல்காறு நீங்காமையல். அறுபகை; காமக், குரோத, லோப, மோக, மத, மாச்சரியமென்பன இவற்றைப்பகையென்றது உவமையாகுபெயர். அதோகதி; எவற்றினுங்கீழாயகதி. அதாவது; தேவகதி, மனுடகதி, விலங்கின்கதி, நரககதியென்பவற்றுள் நரககதி விவேகியேயென்பதில் ஏகாரம் பிரிநிலை. "திரிவிதவுலகத்தரிதொருஞானி" யென்றலின் அருமைபற்றி விவேகியேயென்றெருமையாக்கியதென்க அறுபகையுந்தமதுவினையென்பார், அவற்றை நசிக்கத்துணிவர். அயன்வினையென்பார், அவற்றைவினைதமாகக் கொள்வர். இவரைமூடரென்பதும், அவரைவிவேகியரென்பதும் குற்றமோ? குற்றமெனின், இவர்கட்குமனசலனமும் அவர்கட்கு அதின்மையும் வரற்கிடமென்னை. ஆதலிற்பொருந்தாது.

(க-து) காமக்குரோதாதிவினைவு தமதுசெயலாலெனக்கண்டார் வீடுவரென்பது. இவன்செயலென்றுமலெனப்பாடமுமிருக்கின்றது. இவன் செயலாலாயதென்றுமலெனப்பொருள்படும், இதுவுங்கூடும். காமக்குரோதாதிவினைவையும், அவற்றாலாயவின்பதுன்பத்தாக்கையும் ஈசச்செயலென்று தாரெங்கணுமரியர். இதுபற்றிவரையறுத்ததென்க. இம்மூடபாத்திரர் மதத்தர். அல்லாதாரத்துவிதிகள். அவர்களயலைநானென்போர். இவர்களறிவை நானென்போர். ஆதிலினவரைமூடரெனவும், இவரைவிவேகியரெனவுங் கூறப்பட்டன. அயற்கோடற்பாலதன்றுமையின், நானெதலறிவென்றும். அல்லவென்பார் மூடரெனற்குரியர். இவர்வாதமே மாயாவாதமெனப்படுவது இது தன்பாலதெனச்சற்றுந் தெரியாது அயலார்மேலேற்றினரே. இவரை மிருகமென்னது பிறப்பால் மனிதரென்பதிலென்சிறப்பு. முன்கவியிற்

சீவரென்போரிவரெனத் தெரிவித்தற்கு இக்கவியிலிங்ஙனங் கூறிய தென்க. இவர்களே நாஸ்திகராஸ்திகரென்பவரும், யுத்திக்கொவ்வாது கூறும் வேதாந்தி யருமென்பதிற் சிறிதுமையங்கோடற்க. (59)

## 60 - கவி. (அ - கை.)

[ஈஸ்வரசிருஷ்டிபொதுவெனல் முரணுவதென்னையென்றதற்கு விடை இக்கவியிற்கூறுகின்றார்.]

நலமெய் யையனே யெல்லவர்க் குந்தெய்வ நாயகன் பொதுவா னாற், சிலரை வாழ்வித்தல் சிலரொடு கோபித்தல் செய்வதே னென்று யேற், குலவு மைந்தரைத் தந்தைபோற் சிட்டரைக் குளிர்ந்து துட்டரைக்காய் வன், கலைக ணல்வழி வரச்செய்யுந் தண்டமுங் கருணையென் றறிவாயே.

(இ-ள்.) நலமெய்யையனே யெல்லவர்க்குந் தெய்வநாயகன் பொதுவானால் (எ-து) — நன்மையேமெய்வடிவாயமைந்தகர்த்தனே! யாவருக்குமீஸ்வரன் பொதுவாயிருப்பனாயின் : சிலரை வாழ்வித்தல் சிலரொடுக்கோபித்தல் செய்வதேனென்றுயேல் (எ-து) — சிலரைவாழ்வித்தலும் சிலரைக்கோபித்தலுஞ் செய்வதெற்றிற்கெனக்கேட்பையாயின்: — குலவுமைந்தரைத்தந்தை போற் சிட்டரைக்குளிர்ந்து துட்டரைக்காய்வன் (எ-து) - குலவிக்கொண்டிருக்கும் புத்திரைத் தகப்பனெப்படிநேசிப்பதுங் கோபிப்பதுமோ அது போலச் சிவன் சிட்டபரிபாலனமுந் துட்டநிக்கிரகமுஞ்செய்வன்: — கலை கணல்வழிவரச்செய்யுந் தண்டமுங்கருணையென் றறிவாயே (எ-து) -துன்ப முறத்தண்டித்தலும்; வேதாகமசன்மார்க்கநெறியில் வரும்படிசெய்யுங் கிருபையென்றறிதி. எ-று.

சிட்டரைக்குளிர்ந்துதுட்டரைக்காய்வனென்பது; சிட்டரைநேசித்துத்துட்டரைவெறுப்பனென வுரைகொளற்கியையும். தண்டித்தலுங் கருணை யென்றதனால் பகையாக அன்றென்பதாயிற்று

(க-து) ஈசன், எவர்பாலுமிரக்கமுடையனென்பது. இதனால் பட்சபாதனல்லனெனப்பெற்றும். நீதிவான்தண்டித்தல் ஒழுக்கநெறி சேறற்கு. இது போலுமெனின், யாதோர்காரணமாகவேனு நடுநிலைமைசற்றுநழுவினுநழுவு மெனத் தந்தையையுபமானித்தார். (60)

## 61 கவி. (அ — கை)

[இன்னும் அவர்பட்சபாதரல்லரெனலை வற்புறுத்த இக்கவியிலும்

உபமானபூர்வமாகக்கூறுகின்றார்.]

மனைவி லங்கறு மைந்தனே கற்பக மரங்கனல் புனன்மூன்றுந்.
தனைய டைந்தவர் வறுமையுஞ் சீதமுந் தாகமுந் தவிர்த்தாளு, மனைய
வீசனு மடைந்தவர்க் கருள்செய்வா னகன்றவர்க் கருள் செய்யா
னினைய குற்றங்க ளெவர்குற்றமாகுமென் றெண்ணி நீயறிவாயே.

(இ-ள்.) மனைவிலங்கறுமைந்தனே கற்பகமரங்கனல்புனல் மூன்றும் (எ-து) —குடும்பவிலங்கைத் தறித்தெறிந்தஞானபுத்திரா! கற்பகவிருட்சமும் அக்கினியும் சலமுமாகியவிவைமூன்றும்: —தனையடைந்தவர்வறுமையுஞ்சீதமுந் தாகமுந்தவிர்த்தாளும் (எ-து) —தன்னையடைந்தவரெவரோ அவரது, தாரித்திரியத்தையுங்குளிரையுந்தாகத்தையுநீக்கி யிரட்சிக்கும்:— அனையவீசனு மடைந்தவர்க்கருள் செய்வானகன்றவர்க்கருள்செய்யான் (எ-து) - அத்தகையதாகவீசனுந் தன்னையடைந்தவர்களுக்கு அனுக்கிரகிப்பன் அடையாதவர்களுக்கு அனுக்கிரகிக்கான்:—இனையகுற்றங்க ளெவர்குற்றமாகுமென் றெண்ணி நீயறிவாயே (எ-து) — இப்படிப்பட்ட குற்றங்கள் எவர்குற்றங்களாகுமென்று நீ சிந்தித்துத்தெரிந்து கொள்ளுதி எ-று.

கற்பகமரமாதி மூன்றும் வறுமையாதி மூன்றும் நேர்நிரனிறை. இவ்வுவமை யேற்பதற்கு ஐயஞ்சிறிது மின்றெனக் கொள்க. மூன்றுமென்பது; தொகை யொருமையாதலின் தனையடைந்தவரென்றொருமையிற் கூறினார். பாரபட்சனல்லனெனக்குறிக்க அனையவீசனென்றார். இவ்வளவு தெரியாதார் அவரிஷ்டமென்பர். இவர்கள் குருத்தனம் ஐயமகலாமைக்கிடமாம். எங்ஙனமெனில், சீவர்களென்செய்வரவர்கள் மேற்பிழையேதோ வென்பதையும், ஈசன்பாரபட்சமுடையனென்பதையும், அல்லனென முரணின்றிக் கூறவகையின்மையையும், அவனைவெறுத்துக்கொள்ளுதற் கிடமாமென்பதையும் வற்புறுத்துகின்றது. இனியங்ஙனமாகாமல் விதிவிலக்கு இயற்றினரெனில், இப்போதவரிஷ்டமெனவந்ததற் கேதென்னையோ இனியும் அவரிஷ்டப்படி நடத்துவரெனத்தானே பொருள்படுகின்றதே, ஆதலின் விதிவிலக்காலென்பயன். இனி விதிவிலக்காற் பயனுளதெனின், அப்போது எந்த சென்மத்திற்செய்த விதிவிலக்காற் சிலரின்பமும் சிலர்துன்பமு மனுபவித்துக் கொண்டிருக்கின்றனர். இது வகையறுதபோது அஃது எங்ஙனம் வகையறும். இவ்வெல்லாஞ் சந்தேக விபரீதமறுத ஏற்பாடாம், இதுநிற்க.

(க-து) சற்கருமங்காரணமாக இன்பத்தையுந் துற்கருமங் காரணமாகத் துன்பத்தையுந்தருபவனீச னென்பது. இஃது அநாதி தொட்டெனவறிக. அநாதியிற்சீவர்கள் கன்மம்புரிவானே னெனின், இப்போதுபுரிவானேன். இனிவரும் பயனுக்கெனின், இப்போதுவந்த பயனுக்கெப்போது செய்தது. அவ்விஷ்டமெனின், கூறியதுகூறலாற் கூடாது. முன்பின்முரணுருது கூறவகையறியாதார் அத்துவிதிமுன் னென்செய்வர், இவரைநண்ணற்க. (61)

## 62 - கவி (அ - கை)

[ஐயனே விடாதுயிர்களியற்று மிருவினைக்கீடாக வின்பதுன்பங் களையீசன்தருவனெனின் இதற்குமுடிவுதானின்றோ வெனின், உண்டென இக்கவியிற்கூறுகின்றார்.]

ஒன்று கேண்மக னேபுமான் முயற்சியா லுரைத்துமா னிடர்க் கீச, னன்று செய்யவே காட்டிய நூல்வழி நடந்துநல் லவர்பின்னே, சென்று துட்டவா தனைவிட்டு விவேகராய்ச் செனித்தமாயையைத் தள்ளி, நின்று ஞானத்தை யடைந்தவர் பவங்கள்போ நிச்சய மிது தானே.

(இ-ள்) ஒன்றுகேண்மகனேபுமான் முயற்சியா லுரைத்து மானிடர்க்கீசன் (எ-து) — அங்ஙனமாயின் ஞானபுத்திரா! யான்கூற வேண்டுவது உறுதிமொழியொன்றுளது அதனைக்கேளுதி. அதாவது; புருடப்பிரயத்தனத்தினலன்றி வேறொன்றுலாகாதெனமுன்னர்கூறிப் பின்னரீசன்மனிதர்களுக்கு: — நன்றுசெய்யவேகாட்டியநூல்வழி நடந்து நல்லவர்பின்னே சென்று (எ-து) — மிக்கவுபகாரஞ்செய்யு நிமித்தமாக வே யேற்படுத்திக்காட்டியவேதாகமநூல்கள்கூறும் விதிவழியேதவருது நடந்து சற்சனரைவிடாதவர்பின்சென்று: — துட்டவாதனைவிட்டுவிவே கராய்ச்செனித்தமாயையைத்தள்ளிநின்று (எ-து) — துட்டசேட்டை களையும் அதுகாரணமாகப்பற்றுந் துட்டவாதனைகளையு மொருங்கே யொழித்துவிட்டு விவேகபாத்திரராய் முன்னர்புத்தி விகற்பத்தால் தமதிடத்திற்செனித்த பிராந்தி ரூபமானமாயையென்பதைத்தள்ள வேண்டியவாறுதள்ளி மனஞ்செல்லுழிச்செல்லாதுநின்று: — ஞானத்தை யடைந்தவர்பவங்கள்போநிச்சய மிதுதானே (எ-து) — ஞானமினைய தென வுணரவேண்டியவாறுணர்ந்து அதனைத் தானுகவனுட்டித்து அடைந்தவர்களெவர்களோ அவர்கள்பவத்துக்கே துவானசஞ்சிதவினை

களனைத்துமொருங்கேயொழிந்துபோம் இதிலையமென்னை இன்ருதலால் இதுவே நிச்சயமாம். எ-று.

விவேகியாயெனினுமமையும், ஆயின் இது பலர்பாலைத்தராமை பற்றிவிவேகராயென்ரும். நடக்குதலும் செல்லுதலும் விடுதலும் விவேகராதலும் தள்ளுதலும் அடைதலும் புருடப்பிரயத்தனமின்றிக்கூடாமையின், புமான்முயற்சியாலெனவும், ஏனையவுயிர்கட்கன்றென்பார் மானிடர்க்கெனவும், ஏனையவுயிரையொழித்தது; பெரும்பாலுந் தேவர் புண்ணியகன்மத்தராதலின் சுகத்துக்கீடாயபோகத்துக்கேயுரியர். மிருகாதி ஐவகைத்தோற்றவுயிர் பாபகன்மத்தராதலின்துக்கத்துக்கீடாய போகத்துக்கேயுரியராதலினென்க மனிதர்மிசிரகன்மத்தராதலினிவ் விரண்டிற் கீடாயபோகத்துக்கே யுரியராதலைப் பற்றியும், சுகதுக்க நிலையைக்கலந்தனுபவித்தலி னிவர்கள் அந்நிலையைக் கணித்தொழிப்பரென்பதுபற்றியும், இவரொழித்தற்கையைந்தவராதலின் ஞானமெய்துவரென்பதுபற்றியுந்தெரிந்தவன் ஈசனுதலின் ஈசனுரைப்பனெனவுங் கூறினர் முத்தியெய்தற்பாலரிவராதலின் இவர்கட்கே நன்றுசெய்யவே காட்டியதுநூலெனத்தகும். பொதுப்படமானிடரெனினும், சாத்துவித குணமிக்காரையெனக்கொள்க. ஏனையகுணமானிடரை மத்திம அதமத்திற் கூட்டுக. நூல்வழிநடப்பதினல்விதிவிலக்குக்குக்கட்டுபடுதலும், நல்லவர் பின்னேசெல்லுதலால் அவரதுநல்லொழுக்கம்படிதலும், ஞானத்தையடைதலால் தானன்னியமாகாது ஞானமாய்விளங்கலுமாம். இது கிருதகிருத்தியமாதலால்இனிப் புண்ணியபாவவினைக்கிடமின்றெனவுணர்க.

(க-து) ஞானகாரமே சங்கற்பநாசமெனவும், சங்கற்பநாசமே யிருவினைநாசமெனவும், இருவினைநாசமேபுண்ணியபாவநாசமெனவும், புண்ணியபாவநாசமே சுகதுக்கநாசமெனவுங் குறிப்பிற்றெளிவித்தசரென்பது. இதுசீவன் வினைபுரிதற்கும், ஈசன் இதற்கியைந்தபலன் தருதற்கும், ஞானகாரமுடிவாதலால் இதுமுடிவிடங்கூறலெனனுமுத்தி. பொதுவாகஞானத்தை இங்கே சொல்லி இனிஇதனையே சொல்லப்புகுதலால் நுதலிப்புகுதலென்னுமுத்தி. பவமகற்றத்தக்கது ஞானமெனவே, பொருளைப்பொருளாகக்கொள்ளுமெய்யுணர்வென்பதாயிற்று. இது பரிச்சின்னதோடமற்றது. (62)

## 63 — கவி. (அ-கை)

[இந்தஞானம் உதிக்குமாறு எங்ஙனமென்ற வினவிற்கு விடை

விசாரத்தாலென இக்கவியிற் கூறுகின்றார்.]

இந்த ஞானந்தான் வருவதெப் படியெனி லிடை விடா விசாரத்தால்
வந்த டைந்திடும் விசாரந்தா னேதெனின் மறுதியாஞ் சரீரத்தி
லிந்த நானெவன் சித்தெது சடமெது விரண்டு மொன்றாகக் கூடும்
பந்த மேதுவீ டேதென் வுசாவுதல் பகர்விசா ரமதா மே

(இ-ள்) இந்தஞானந்தான் வருவதெப்படியெனி லிடைவிடா விசாரத்தால்வந்தடைந்திடும் (எ-து) - இந்தஞான முதிக்குமாறுதா னெங்ஙனமென வினவில், கணநேரமுமிடைவிடாது விசாரிக்கும் விசாரத்தினால்வந்துகிடைக்கும் :— விசாரந்தானேதெனின் மறுதியாஞ்சரீரத்தில் (எ-து)--ஆயின்விசாமென்பதுதான்யாதோவெனின் மனமுதலாக நின்றுள்ள தேகங்களிலிருக்கின்ற :— இந்தநானெவன்சித் தெதுசடமெது விரண்டுமொன்றாகக்கூடும்பந்தமேதுவீடேதெனவுசாவுதல் பகர் விசாரமதாமே (எ-து) — இந்தநானென்பவனெவன் சித்தெனலுஞ்சடமெனலும்யாவை இவ்விரண்டுமொன்றாகச்சம்பந்தித்த சம்பந்தம்யாது இனிச்சம்பந்தமுறாததற்குவிடுதியாது என்றுஓயாது விசாரனே பண்ணிக் கொண்டிருத்தலே முன்னர் கூறிய விசாரமாவதென்றறிந்து கொள்ளுதி. எ.று.

மறுதியாஞ்சரீரமென்றது; சூட்சுமதூலகாரணமென்றாயிற்று உசாவுதல்; சான்றோரிடத்து இவற்றை விளங்கவிசாரித்தலே.

(க-து) ஞானம்; விசாரத்தாலன்றியெய்தாதென்பது இங்ஙன மாய விசாரமின்றியெய்தல் அபரஞானம். இங்ஙனம்விசாரித்தல் விடுதி விசாரம். ஏனையவிசாரம் பந்தவிசாரம். விசாரமென்றறிவாயேயென் றது பகர்விசாரமதாமேயெனப்பாடமோதியதெற்றிற்கெனின், மோனே பகரம்போலவியைபு பகரம்வராமையாலென்க. என்னே, "எழுவா யெழுத்தொன்றின்மோனேயிறுதியை" யென்பதனுற்காண்க. விசாரம் இனேயதெனவுணர்த்தியது. விசாரமதாகுமென்னுது பகரென்றமிகை யால், ஐயந்திரிபகற்றத்தக்கோனிடத்தென்றாயிற்று. (63)

## 64 - கவி (அு—கை)

[ஞானத்தை புண்ணிய பரிபாகந் தராதாவென்ற வினவிற்கு
விடை இக்கவியிற் கூறுகின்றார்.]

போன சன்மங்க டமிலனுட் டித்தநற் புண்ணிய பரிபாக
ஞான மாக்குமே விசாரமே னென்றிடி றுமுரைத் திடக்கேளா

யான புண்ணிய மீசுரார்ப் பணஞ்செயி னசுசிபோஞ் சுசியாகு
மான தம்பினை விசாரித்து ஞானத்தை மருவுமென் றறிவாயே.

(இ-ள்) போன சென்மங் கடமிலனுட்டித்தநற் புண்ணியபரிபாகம் (எ-து) முன்னனேக சென்மங்களில் யாமனுட்டித்த நல்ல புண்ணியபரிபாகமானது :— ஞானமாக்குமே விசாரமேனென்றிடினு முரைத்திடக்கேளாய் (எ-து) ஞானத்தையும் விளைவிக்குமே இங்ஙன மிருக்க; விசாரணை பண்ணுவதெற்றிற்கு விவர்த்தந்தானேயெனக் கேட்பையாயின், மெய்யே அதுபற்றியாமுரைக்க வேண்டுவதொன்றுளது அதனைக்கேளுதி:—ஆனபுண்ணியமீ சுரார்ப்பணஞ் செயினசுசி போஞ்சுசியாகும் (எ-து)— அங்ஙனமாய புண்ணியங்களை ஈஸ்வரப் பிரீதிசெய்தால் அசுத்தநீங்கும் அசுத்தநீங்கவே சித்தசுத்தியுண்டாகும்:—மான தம்பினை விசாரித்து ஞானத்தை மருவுமென்றறிவாயே (எ-து)— சித்த சுத்தியுண்டாயபின்னர் அங்ஙனமாயமனமானது தன்னையுள்ளவாறு விசாரணை செய்து உண்மை ஞானத்தைத் தானுக அடையுமென்றுணர்தி. எ-று.

இச்சென்னமுளதாதலின் போன சென்மங்களுமுண்டு இச்செனனத்திலனுட்டிக்கும் புண்ணியர்கள் ஆங்காங்குளர் அதனைக்காண்கின்றேம். இதுபோல, முன்னருமுள சென்பதற்கையமென்னை. புண்ணியபரிபாகம்; புண்ணியமேலீட்டாலாய பக்குவத்தை. புண்ணிய பரிபாகம்; மேலாயபோக பாக்கியத்தைத்தருவதன்றியு ஞானமுமாக்குமே எனக்கொள்ள வேண்டுவதாதலால் இதிலும்மை தொக்கது. விசாரத்தால் ஞானம்வருமென முன்கவியிற்கூறி இக்கவியில் புண்ணியபரிபாக ஞானமாக்குமேயெனக்கூறில், அது கருவிப்பொருளும் இதுகர்த்தாவுமாகின்றதே யெனில், மெய்யே ஒருபிரிதிஞானமாக்குமேயெனவும் மற்றோர் பிரிதிஞானமாகுமேயெனவும் இருப்பதற்கென் செய்தும். புண்ணியபரிபாக ஞானமாகுமேயெனப்பாடமோதி புண்ணிய பரிபாகத்தால் ஞானமெய்தலாகுமேயென எமதாசிரியருரையிட்டனர் அதுவே பொருந்து மெனினுமங்ஙனமாக்குக. புண்ணியமீஸ்வரார்ப் பணஞ் செயினெனவே பாவமன்றெனப்தாயிற்று. பாவத்தையெனின், அசுசிபோய்ச்சுசியர்காது. ஆயின் பாவமன்னிப்பென்றதெற்றிற்கு? இடைவிடாது பாவஞ்செய்தற்கு. அன்றேல் மன்னிப்பெற்றிற்கு. தானேவிட்டுவிடலாமே, தன்னைப்புனிதனெனப் பிறர்மெச்சற்கோ. பயனென்னை.

(க-து) புண்ணியபரிபாகத்தால் மன்ஞ்சுத்தமாம், அந்தச்சுத்தத்

தால் விசாரணைக்கிடமாம், அந்தவிசாரணையால் ஞானம்வரும், அந்த ஞானத்தால் முத்திகைகூடும், இங்ஙனமிருக்கப் புண்ணிய பரிபாகம ஞானமாகுமேயெனக் கூறலாமா? இது முறையன்றென்பது புண்ணியம்-சற்கருமம் அது, திரிகரணமுமொத்துப்புரிதல் இங்ஙனம் புரிதலை விட்டுச் செய்தல், புண்ணியப்போலி இதனையாவர்மாட்டுங் காணலாம். (64)

## 65 - கவி (அ - கை)

[கருமம் விசாரம் என்பவற்றுள், விசாரம் கருமத்தைப்போல எல்லாந்தரவலியதா அல்லவே கருமம் ஞானத்தையுந் தராதாவென்றவினவை இக்கவியிற் கூறுகின்றார்.]

பத்தி யும்வயி ராக்கிய மும்பர லோகமு மணிமாதி
சித்தி யுந்தவ நிட்டையும் யோகமுந் தியானமுஞ் சாரூப
முத்தி யுந்தரும் விசித்திர கருமங்கண் மோகமாத் திரந்தள்ளும்
புத்தி யுந்தர லருமையோ விசாரமேன் புண்ணிய குருமூர்த்தி.

(இ-ள்) பத்தியும் வயிராக்கியமும் பரலோகமு மணிமாதி சித்தியுந்தவ நிட்டையும் (எ-து)—ஈசுரபத்தியையும் நிராசையையும் சுவர்க்காதிலோகங் களையும் அணிமா முதலியவஷ்டமாசித்திகளையும் காமியத்தவத்தையும் நிட்காமியத்தவமாகிய நிட்டையினையும்:—யோக முந்தியானமுஞ் சாரூபமுத்தியுந்தரும் விசித்திரகருமங்கள் (எ-து)—இருவகையோகங்களையும் மூர்த்தியாதிய தியானங்களையும் சாரூபபத முத்தியையும் தரத்தகுந்தவினோதகருமங்கள்:—மோகமாத்திரந்தள்ளும் புத்தியுந்தரலருமையோ விசாரமேன் புண்ணிய குருமூர்த்தி (எ-து)—தருமசொரூபியாகிய குருமூர்த்தியே! அஞ்ஞானத்தை மாத்திரந் தள்ளத்தகுந்த ஞானத்தையுந்தருதல் அவற்றிற்கருமையா? அல்லவே, விசாரமெற்றிற்கு. இதெனனவியப்பு. எ-று.

(க-து) பத்தியாதி முத்தியிறு வாக்கிடந்த ஒன்பதுபேற்றையுந் தரவலியுள்ள கருமத்துக்கா ஞானத்தைத்தருதற்கு வலிமையில்லை, இதென்ன வியப்பென்பது. விசித்திர கருமங்களெனப்பன்மை யாக்கியது; வினோதவித்தைகள் அளவின்மையினது பற்றியென்க. மோகந் தள்ளும்புத்தியென்னுது மாத்திரமென மிகைபடக்கூறியது, வலியற்றதெனக்காட்டற்கு. இவ்வொன்பதையுந் தரவலியுள்ள கருமம் புத்தி யுந்தருமேயெனப் பொருள்படலின், புத்தியுமென்பதிலும்மை இழிவுச்

சிறப்பாயிற்று ஏனையவொன்பது வகையும்மை யெண்ணும்மை, விசாரமினையதெனத் தெரிவித்துங் கன்மவழுத்தம் விடவில்லையே ஏனையரெங்ஙனம்விடுவர். சென்மம்பல வேண்டும். விசாரமில்லாவிடத்து முற்றத்துறந்தும் என்பயனென்பதை இவனறியான் போலும். அறியினும் ஆசான்மொழியால் அறிதுமென வினவியதாகலாம். ஆதலின் இஃதறிவினு இது பரிட்சிப்பதன்றோவெனின், தெரியினும் இன்னும் விடையாதுளதோ வென்னு ஐயத்தாற்கேட்டதாகக் கொள்ளலாகாதா? ஆதலின் பரிட்சிப்பதற்கன்றென்க. இங்ஙனமாகவரும் வினவனைத்தும் அறிந்துமறியாவினு. (65)

66 — கவி. (அ கை)

[இது விசாரத்தாலன்றிக் கருமத்தாலாகுமாவென யுத்தியால் உபமானபூர்வமாக இக்கவியிற் கூறுகின்றார்.]

வேடமாறிய பேர்களை யறியவே வேண்டினன் மகனேகேள்
கூட மாமவர் சுபாவங்கள் சீலங்கள் குறிகளாய்ந் தறியாம
லோடியுங்குதித் துந்தலை கீழ்நின்று முயர்ந்தகம் பத்தேறி
யாடியும்பல கன்மங்கள் செய்யினு மவருண்மை தெரியாதே.

(இ-ள்.) வேடமாறியபேர்களையறியவேவேண்டினன்மகனே கேள் (எ-து) சற்றுமொழியின்றி வேடத்தால்மாறியபேர்களை இனையரென்றறியவேண்டுதற்கே யெண்ணங்கொண்டு கண்டுபிடிக்கவிருப்பங் கொள்ளில் யாம் ஓர் தந்திரங்கூறுதும் ஞானபுத்திரா! அதனைக் கேளுதி: கூடமாமவர்சுபாவங்கள் சீலங்கள் குறிகளாய்ந்தறியாமல் (எ-து) — இரகசியமாயுள்ளவவர்கள் சுபாவ நடைகளையும் ஒழுக்கங்களையும் குறிகளையும் ஆராய்ந்துணர்வதைவிட்டு: — ஓடியுங் குதித்தும் (எ-து) — நாளொன்றுக்குஏழு கோடியும்மருள்கொண்டார் போல் ஆவேசம்வந்துகுதித்தும்: — தலைகீழ்நின்று முயர்ந்தகம்பத்தேறி யாடியும பலகன்மங்கள்செய்யினு மவருண்மைதெரியாதே (எ-து) — தலைகீழதாக நின்றுதவஞ்செய்தும் மிகவுமுயர்ந்தகம்பத்தின்மேலேறிக்கூத்தாடியும் இன்னுமிவைபோன்றபலவிநோதகன்மங்கள்செய்தாலும் அவ்வேடதாரிகளின் எதார்த்தவடிவம் எங்ஙனந்தெரியும் தெரியமாட்டாதே எ-று.

கூடம் மறைவு. தேசவுளவுகாண அரசனலேவப்பட்டோனது மாறு வேடந்தள்ளியவனையினையனெனக்காணப்புகுந்தமற்றொருவன

வனோடுகூடியுறவாடிநின்றுபழகில் அவனுண்மை வடிவங்கண்டுபிடிக்கலாம். இங்ஙனஞ் செய்தலைவிட்டு, அவனுண்மைவடிவங் காணவேண்டிப் பலவிடத்தோடுதலும் குதித்தலும தலைகீழதாநிற்றலுமாகிய இவைபோன்ற பலகோரணை நடிப்புகள் செய்யினுங்காணுமா காணு தேயிதுபோலக் கைலாயமுதலியதேசவுளவுகாண அஞ்ஞனென்னுமரசனலேவப்பட்டோன் அவனெழுவகைத்தோற்றவேடத்தால் மூடப்பட்டுளந்நேரமுங்கரந்துள்ளான், அவனதுமாறுவேடந்தள்ளி அவனை இனையனெனக்காணப்புகுந்த விவேகப்போலியென்போனொருவன் பகிர்முகமாகாது ஆங்காங்குசிந்தைமறந்து சிதரு துதனித்துஅவனோடு பலகால் நிர்விகற்பத்தாற்பழகில் அவனுண்மைவடிவங்கண்டுபிடிக்கலாம் இங்ஙனமாய அதிசூக்குமவாராய்தலைவிட்டு இவனுண்மை வடிவங்காண வேண்டிச்சந்நியாசம்பூண்டு மீண்டுஞ்செல்லாது நாளொன்றுக்கு ஏழூர் சுற்ற விரைவாகஓடியும் பரவசமாகிக்குதித்தும் தலைகீழதாநின்றரியதவம்புரிந்தும் ஊசிமுனைபோன்ற உயர்ந்தகம்பத்தேறியாடியும், இன்னுமிவைபோன்ற அரியபற்பல சற்கருமஞ்செய்தும் பயனென்னை, இன்றுதலால்ஆராய்தலே தகுதி, ஆராய்தல்ஆளை வெளிப்படுத்தும், சற்கருமங்கள் மனதைப் புனிதமாக்கும். இஃதைதைச் செய்யாது, அஃதிதைச்செய்யாது. கருமம்புரிவோர்க்காராய்தல் தோடம். ஆராய்தல்செய்வோர்க்குக்கருமந்தோடம். இது முறையாதலால் வழுவன்று. ஆராய்தல்செய்வோர்பிறர்க்குபகாரமாகக் கன்மம்புரியினும் புரிவர். கன்மம்புரிவோர் புகழ்வேண்டி ஆராய்தல்செய்யினுஞ் செய்வர். உபகாரமும் புகழுந் தன்னைவிளக்கற்நன்று. ஓடியும் குதித்தும் தலைகீழ்நின்றும் கம்பத்தேறியும் ஆடியும் பலகருமங்கள்செய்தும் அவருண்மைதெரியாதெனமுடிக்க. செய்துமென்றதைச்செய்யினுமென்றது காலமயக்கம். ஐந்து வினையுமிறந்தகாலமாயிருக்க வொருவினையெதிர்காலமாதலைப்பற்றியென்க.

(க-து.) ஞானோதயத்துக்கு விசாரமே தக்கதென்பது. இதனினுந் தந்திரம் வேறில்லையென்பது அருத்தாபத்தி. (66)

## 67 — கவி. (அ—கை.)

[விசாரமின்றியக்கண்ஞானமெய்தலுந் தன்னைத்தானறிதலுங்கூடாதென்பதை யிக்கவியிற்கூறுகின்றார்.]

இன்ன வாறந்தப் பிரமத்தை யறிவிக்கு மிலக்கணத் தால்

வேதஞ், சொன்ன ஞானமும் விசாரத்தால் வருமன்றிச் சுருதிநூல்
படித்தாலு, மன்ன தானங்க டவங்கண்மந் திரங்களா சாரங்கள்
யாகங்க, ளென்ன செய்யினுந் தன்னைத்தா னறிகின்ற திவைகளால்
வாராதே.

(இ-ள்) இன்னவாறந்தப்பிரமத்தை யறிவிக்குமிலக்கணத்தால் வேதஞ்சொன்னஞானமும்விசாரத்தால்வருமன்றி (எ-து)— இவ்வண்ணமேயந்தப் பிரம்சொரூபத்தை அறிவிக்கதக்கவிலக்கணத்தினுல் வேதஞ் சொல்லிய ஞானமும் விசாரத்தால்வந்தெய்துவதன்றி; - சுருதிநூல் படித்தாலும் அன்னதானங்கடவங்கள் மந்திரங்களாசாரங்கள் யாகங்களென்னசெய்யினும் (எ-து) — அன்னதானங்களையும் தவங்களையும் மந்திரங்களையும் ஆசாரங்களையும் யாகங்களையும் இங்ஙனமாகவென்ன கிரியைகள் செய்யினும்:— தன்னைத்தானறிகின்றதிவைகளால்வாராதே (எ-து) — இக்கிரியைகளால் தன்னைத்தானறியவருமா வராதே. எ-று.

விசாரத்தினுலன்றிக் கருமத்தினுல் ஞானத்தையடையக்கூடாது கருமத்தினுல்ஞானமெய்தலாமெனின் இங்ஙனமெய்தினுர் எங்ஙனுங் கண்டிலமே அனுபவமுண்டானுல் ஏற்கப்படும்.

(க-து) கருமம் சித்திசுத்திமாத்திரந் தர வலியுள்ளது, ஞானத்தையுந்தர வலியுள்ளதாயின் சிரவணுதிகளெற்றிற்கென்பது. இதனுல் ஒன்றுமற்றென்றுலாயபயனைத் தராதென்பதுபெற்றும். பெறவே விசாரமே ஞானத்துக்குத் தக்கதென்பதாயிற்று. ஆகவே முயற்சி தாரதம்யம் இனையதெனக் கண்டாம். (67)

68 - கவி (அ—கை)

[கருமமே தக்கதென அதற்கியைந்த உபமான பூர்வமாக உபமேயம் மாணுக்கன் கூறுவதை இக்கவியிற் கூறுகின்றுர்.]

துளங்கு தர்ப்பண மழுக்கறக் கைக்கொண்டு துலக்கினுற் போமன்றி
விளங்கு புத்தியா லுலகிலார் துலக்கினுர் விமலதே சிகமூர்த்தி
களங்க மாகுமஞ் ஞானமு மப்படி கருமத்தாற் கழுவாம
லுளங்கு றித்தஞா னத்தினு லெப்படி யொழியுமீ தருள்வீரே.

(இ-ள்) துளங்குதர்ப்பணமழுக்கறக் கைக்கொண்டு துலக்கினுற் போமன்றி (எ-து) —பிரகாசிக்கின்ற செப்புக்கண்ணுடியைக் களிம் பறக்கையினுல் துலக்கினுற் போகுமேயல்லாமல் :— விளங்குபுத்தி

யாலுலகிலார் துலக்கினர் விமலதேசிகமூர்த்தி (எ-து) நின்மலமான குருமூர்த்தியே! துலக்கமாயுள்ள புத்தியினல் துலக்கினவர்களெவர் கள், (அதுபோல): களங்கமாகு மஞ்ஞானமும் அப்படி கருமத்தாற் கழுவாமல் (எ-து) — அசுத்தமாயுள்ள அஞ்ஞானத்தையும் அவ்வண் ணம் புண்ணிய கருமத்திறை் சுத்தஞ்செய்யாமல் :— உளங் குறித்த ஞானத்திறைலெப்படி யொழியுமீதருள்வீரே (எ-து) உள்ளத்தின்கண் இனையதெனக் குறித்துக்கொண்ட ஞானத்தினல் எங்ஙனமொழியும் ஈதென்னை கொலோ இதனையறிந்திலேன் இது விளங்கத் தெரித்தரு ளும். எ-று.

கையால் துலக்கினலன்றிக் களிம்பு நீங்கிச் செம்புக்கண்ணுடி விளக்கமாகாது. (அதுபோல) திரிகரணமு மொத்துச்செய்யும் புண் ணியகருமம் மேலீட்டாலன்றி அஞ்ஞானநீங்கி ஞானம்விளங்காது. இங்ஙனமிருக்க, மனதில் நிச்சயித்துக்கொண்ட நிச்சயஞானத்தினல் அஞ்ஞானமெங்ஙனநீங்கும். ஞானம் எங்ஙனங்கை கூடுமென்ரு னென்க.

(க-து) அஞ்ஞானவொழிவுக்குப் புண்ணியகருமமே தக்கதாகத் தோன்றுகின்றதேயென்ருனென்பது ஆடி, செம்புக்கண்ணுடி, பளிங் குக்கண்ணுடி யென்றிருபாலது. முன்னர் பெரும்பாலும் பளிங்குக் கண்ணுடி வழங்குதலின்மையும் இப்போது செம்புக்கண்ணுடி வழங்கு தல் சிறிது மின்மையுமாம். ஆயினும் இந்நூலாசிரியர்காலத்து இவ் விருவகையாடியும், வழங்கியதாகக் காண்கின்றது. இவன்செம்புக் கண்ணுடிபூர்வமாகச் சித்தாந்தப்படுத்தலும், அவர் பளிங்குக்கண்ணுடி பூர்வமாகச் சித்தாந்தப்படுத்தலுமாயிருத்தலினென்க. ஆயினும் இவன் கருமமே முக்கியமென்பன், அவர் விசாரமே முக்கியமென்பர். இது பற்றி இனிவருங் கவிகளாற் காணலாம். (68)

### 69 - கவி (அ — கை)

[விசாரமே தக்கதெனக்குறிப்பிக்க அதற்கியைந்தவுமான பூர்வ மாக ஆசிரியர் அதனைமறுப்பதை இக்கவியிற் கூறுகின்ருர்.]

தர்ப்ப ணத்தினிற் களிம்புவாஸ் தவமலஞ் சகசமா தலின் மைந்தர், கற்ப ளிங்கினிற் கருநிறஞ் சகசமாக் கறுத்ததன்ரு ரோபந், தர்ப்ப ணத்தினி லழுக்கற வேண்டினுற் சாதனத் தொழில் வேண் டுங், கற்ப ளிங்கி லா ரோபமே கறுப்பெனக் கண்டிட மனம்போதும்.

(இ-ள்) தர்ப்பணத்தினிற் களிம்புவாஸ்தவமலஞ் சகசமாதலின் மைந்தா (எ-து)-ஞானபுத்திரா! செம்புக்கண்ணாடி யிலுள்ள களிம்பானது அதற்குரிய வுண்மையழுக்காம், அன்றியுஞ்சுபாவமாம், ஆதலால்:-(இதுபோல) கற்பளிங்கினிற்கருநிறஞ்சகசமாக் கறுத்த தன்றாரோபம் (எ-து)-படிகக்கல்லிற்றோற்று நின்றகருநிறமானது சுபாவமாக்கறுத்ததுமன்று, உண்மையும் அன்று தோற்றன்மாத்திரப் பொருளாம்:-தர்ப்பணத்தினிலழுக்கற வேண்டினுஞ் சாதனத்தொழில் வேண்டும் (எ-து)—செம்புக்கண்ணாடியிலுள்ள களிம்பு அகலவேண்டில் தரமுதலிய கருவிகளாற்றுடைக்குஞ் சாதனத் தொழிலவசியம வேண்டும்:— கற்பளிங்கிலாரோபமே கறுப்பெனக் கண்டிடமனம் போதும் (எ-து)—படிகக்கல்லில் தோற்றுநின்ற கருநிறமானது தோற்றன்மாத்திரப் பொருளென அறிதற்குச் சாதனத்தொழில் வேண்டுவ தின்று மனமே போதும். எ-று.

செம்புக்கண்ணாடியழுக்கு வாஸ்தவம் சுபாவம். படிகக்கல் கருநிறவழுக்கு உண்மையுமன்று சுபாவமுமன்று. அதனைப்போக்கச் சாதனத்தொழில் வேண்டும், இதனைப்போக்க அறிதலே போதும். அசுத்தமும் அஞ்ஞானமும் ஒன்றென்கை அவன்கொள்கை. வேறென்கை இவர்கொள்கை. அவனிவ்விரண்டுநசித்தற்குச் கருமமேபோதுமென்கை. இவர் அசுத்தநசித்தற்குக் கருமமும், அஞ்ஞானநசித்தற்கு விசாரமும்போதுமென்கை புண்ணியகன்மங்களிலும் பாவகன்மங்களிலும் எய்ப்பெழுலசுத்தநீக்கம். பொருளல்லவற்றைப் பொருளெனக் கோடலில் எய்ப்பெழுல் அஞ்ஞானநீக்கம். களிம்பைப்போக்கப்போக்க, மீண்டுமீண்டெய்தல் செம்புக்கண்ணாடிக்கியல்பு. நீலநிறத்தை இது தோற்றன் மாத்திரமெனக் காணக்காணவிடாது மெய்போலத்தோற்றுதல் படிகக்கல்லுக்கியல்பு. அதனைப்போக்கற்குக் கருமம்பலதரமும், இதனைப்போக்கற்கு விசாரம் ஒரேதரமும் வேண்டுமென்க இதுபோல, மனதைச் சுத்தமாக்கச்சுத்தமாக்க மீண்டுமீண்டசுத்தமாதல்மனதுக்கியல்பு. அறிவை விளக்கி அதிற்சகசீவபரத்தை இவை தோற்றன் மாத்திரமெனக் காணக்காண விடாது மெய்போலத் தோற்றுதல் அறிவுக்கியல்பு அசுத்தம்போக்கற்குப் புண்ணியகருமம் பல்காலமும், பிராந்திபோக்கற்குத் தீர்ந்தவிசாரம் ஒரேநிமிடமும்வேண்டுமென்க. அனுபவத்தாலன்றி இவைவிளங்காவாம் (69)

70 - கவி. (அ — கை)

[உபமேய பூர்வமாக அதனை இக்கவியில் ஆசிரியர் கூறுகின்றார்.

இங்கு மப்படி சச்சிதா னந்தத்தி லிடர்சடம் பொய்மூன்றுந்
தங்கு மாயையின் கற்பித மன்றியே சகசவாஸ் தவமன்றே
பங்க மாகுமஞ் ஞானத்தைக் கருமங்கள் பகைசெயா துறவாக்குந்
துங்க ஞானமே கருமவஞ் ஞானத்தைச் சுடுகின்ற நெருப்பாமே.

(இ-ள்.) இங்குமப்படி சச்சிதானந்தத்தி லிடர்சடம் பொய் மூன்றும் (எ-து) — உபமேயத்திலு முபமானத்திற் சொல்லிய படி சத்து, சித்து, ஆனந்தமென்னுமூன்றிலுள்ள பொய்யாகியஅசத் தும், சடமாகியமூடமும், இன்பம் போற்காணுந் துன்பமுமாகிய இம் மூன்றும்: — தங்குமாயையின்கற்பிதமன்றியே சகசவாஸ்தவமன்றே (எ-து) — காற்றிற்சலனம்போற்பிரமத்திற்றங்கிய மாயையினாலாய கற்பனைவடிவமேயல்லாமல் சுபாவமுமன்று, எதார்த்தமுமன்று: — பங்க மாகுமஞ்ஞானத்தைக் கருமங்கள் பகைசெயாதுறவாக்கும் (எ-து) — அசுத்தமாநின்றுள்ள அஞ்ஞானத்தைப்புண்ணியகருமங்கள்கெடுக்கா மல் அதனைவிர்த்தியாக்கும்: — துங்கஞானமேகருமவஞ்ஞானத்தைச் சுடு கின்ற நெருப்பாமே (எ-து) — எல்லாநிலையினுமேலாய பரஞானமே, கருமமேதனக்கு வடிவாநின்றுள்ள அறியாமையைத் தகிக்கத்தக்க அக்கினியாம். எ-று.

சச்சிதானந்தத்தில் அநுர்தசடதுக்கமெனவே, சத்தே யசத்தும். சித்தே சடமும், ஆனந்தமே துக்கமுமென்றாயிற்று. சச்சிதாநந்தம் பிரமத்தின்சுயம்பெனவும், சகசமெனவும், வாஸ்தவமெனவுந் தோன்ற, இடர்சடம்பொய் மூன்றுந் தங்குமாயையின் கற்பிதமன்றியே சகச வாஸ்தவமன்றென்றார். சச்சிதானந்தத்தில் இடர் சடம்பொய்யெனல், எதிர்நிரனிறைப்பொருள்கோள். உதாரணம்: 'களிறுங் கந்தும் போல, நளிகடற் கூம்புங் கலனுந் தோன்றும் தோன்றன் மறந்தோர்துறை கெழுநாட்டே'. இதுபெயர்ச்சொற்களும் பெயர்ப்பயனிலைகளுமாநின்ற எதிர்நிரனிறை. அறிவுமுதற்காரணங்கருதாது சத்தெனவறியச் சகஞ் சத்தாக்காணும். சுயம்பு யாதெனவறியப்புகச் சகமசத்தாக்காணும். காரணங்கருதாமைமூடம், கருதுதல்தெளிவு. இம்மூடத்தாலன்றோ சகஞ்சுகமெனக்காண்டல். மூடங்காரணமாகவெழல் சுகமாகுமா, ஆகா தே, துக்கமே சுகமாகக்காண்டலெனவுணர்க, சுகமெனின், மூடமன் றிக்காட்டவேண்டும். இன்றேல், துக்கமாம். சகத்தைச்சத்தாவறிதலுஞ்

சுகமாச்சுகித்தலு மறிவையன்றியின்மையானும்; பிராதிபாலிகசத்தை யன்றிச் சகத்தும், அறிவையன்றிப்பிராதிபாலிகசத்தும், இன்ருதலால் அறிவேசத்து, செகமசத்து. மூடமன்றிச் செகத்துண்மையும், அறிவை யன்றிமூடமுமின்ருதலால், அறிவேசித்து, செகமூடம். செகந்தனது பிரிதிபலன மெனக்காணுமையா லெழுஞ்சுகமாதலின் இச்சுகம் அறி யாமையின் பாலது அறிவேயறியாமையாதலின், அறிவேசுகம். செகம் துக்கம். எனப்படுவதினுனும் அறியாமையன்றிச் சகமாதிமூன்று மின்மையானும்; இம்மூன்றும் மாயாகாரியமெனப்படலால் அறியாமை யேமாயையெனப்படுமாதலினுனும், அறிவேபிரமமெனவும், அறியா மையே மாயையெனவும். அறிவுக்குச்சச்சிதானந்தமெனவும், அறி யாமைக்கு அநுர்தசடதுக்கமெனவும். அறிவையன்றி அறியாமையின் மையின் சச்சிதானந்தமே யநுர்தசடதுக்கமெனவுங்கொள்ளக்கிடந்த தென அறிக. அறிவானையறியாத்து புண்ணியகன்மம் ஆதலின் பங்க கமாகுமஞ்ஞானத்தைக் கருமங்கள்பக்கை செயாதுறவாக்குமெனவும், சச்சிதானந்த இலக்கண மினையவெனக்கண்டு ஒருமையாக்கிய தெளி வே தெளியாமையை கெடுக்குமாதலின். துங்கஞானமேகருமவஞ் ஞானத்தைச் சுடுகின்றநெருப்பாமேயெனவுங்கூறியதை மறுப்பதற்கு எக்காலத்தும் என்ன வலியுளது. இன்ருதலால் இவ்வுவமேயம் பொருந்துமெனவறிக, விசாரஞானத்தாலெய்துவது விருத்திஞானமாத லின் இதனை நெருப்பென்றதென்க் கொள்க.

(க-து) ஞானத்துக்கு அஞ்ஞானம்பேதமாதலின் விசாரஞானத் தாலன்றிக் கருமத்தால் அஞ்ஞானநசியாதென்பது. இதுபெறுமென மாட்டலால்மாட்டெறிந்தொழுகலென்னுமுத்தி. அஞ்ஞானத்தைக் கெடுத்தற்பாலது கருமமன்று விசாரஞானமென்றலின், இன்னதல்ல திதுவென மொழிதலென்னுமுத்தி சச்சிதானந்தமறியார், சகசீவபரம் அனுதிநித்தியமென்பர். அறிந்தார்க்கு அயலேது. (70)

## 71 - கவி (அ — கை.)

[அறிவறியாமை நினைப்புமறப்பெனக் காட்டத் தன்மறதியைக் கெடுப்பது தன்னினைவினுலன்றி அயலாலன்றென இக் கவியிற் கூறுகின்ருர் ]

மனைக்குள் வைத்தபண் டங்களை மறந்தவன் வருடநா ளுழுதாலு நினைத்து ணர்ந்தபின் கிட்டும்ப படியிந்த நிருமல வான்மாவு மநர்த்த மான்தன் மறதியைக் கெடுக்குந்தன் னறிவின்றிக் காணுமற்

கனத்த கன்மங்க ணூறுகஞ் செய்யினுங் காணுமோ காணுதே.

(இ ள்) மனைக்குள் வைத்தபண்டங்களைமறந்தவன் வருடநூறமுதாலு நினைத்துணர்ந்தபின்கிட்டும் (எ-து) — ஒருவன் ஓர் வீட்டினுள் வைத்த பொருள்களைமறந்துவிட்டான்; அங்ஙனமறந்தவன் காணேமேயென்றுவருடநூறமுதாலுங்காணுமா, இவனுக்கே நினைப்புவந்து இன்னவிடத்தில்வைத்தோமல்லவாவென்றுணர்ந்த பின்னரன்றே அவைகிட்டும், அல்லாமற்கிட்டுமாகிட்டாவே: —அப்படி இந்த நிருமலவான்மாவும் அநர்த்தமான தன்மறதியைக் கெடுக்குந்தன்னறிவினுற் காணுமல் (எ-து) — அங்ஙனமிந்தநின்மலரூபமான ஆன்மபுருடனும் அநர்த்தரூபமான தன்மறதியைக்கெடுப்பது தன்னினைவேயாதலால் அதனையுமறியாது அதனுல்தன்னையுங்காணுமல்: — கனத்தகன்மங்கணூறுகஞ் செய்யினுங்காணுமோகாணுதே (எ-து) - மேலானயாகாதிகிருத்தியங்களைநூறு யுகஞ்செய்தாலுந் தன்னுண்மைவடிவம்விளங்குமா விளங்காதே. எ-று

செகசீவபரஞ்சுயம்பெனல், விகாரத்தை. அல்லவெனில், சோதனையில் ஒவ்வொன்றும் விகாரமென்முடியாது காரணகாரிய ரகிதமாகக் காட்டலாம். கூடாதெனின், இவைமூன்றும் அர்த்தரூபமென்னலாமா, அநர்த்தரூபமென்னலாமா? அர்த்தரூபமெனின், ஒவ்வொன்றிற்குஞ் சுயம்பிஃதெனக்காட்டவேண்டும். கூடாதேல், அநர்த்தரூபமென்பதற்குச் சற்றுமையமின்று. ஆதலின், கமாதிமூன்றும் அநர்த்தரூபமெனத்தகும். இவை தன்னைமறந்தவிடத்தில் தோற்றுபவாதலினுனும். மறதிநீக்கத்தின்றுதலினுனும், மறதியே இவை மூன்றுமென்றுல் வழுவென்னை, இன்றுதலா லநர்த்தமானதன்மறதியெனவும். நினைப்புமறப்புரகிதமான ஆன்மா தன்னைமறந்ததுபோலவுந் தன்னை நினைத்துக்கொண்டதுபோலவுந் தோற்றலின், தன் மறதியெனவும், தன்னறிவெனவும், அவஸ்தா வயப்படாமல் அவற்றைச் சாட்சியாநின்றுணர்த்தல், ஆன்மா. அவஸ்தைகடோறும் அந்தந்த உபாதிவயப்பட்டு இன்பதுன்பநுகர்தலாகக் காண்டல், சீவன். ஆதலின் நின்மலவான்மாவெனவும், தன்னைத்தானெட்டுங்காலத்துத் தான்சேய்மைத்தாயினும் அயலையுணர்த்தத்தான் அணித்தாநிற்றலின் அகத்துச்சுட்டால் இந்தவான்மாவெனவும், தன்னைமறந்தது தன்னுலன்றி அயலாலன்று இங்ஙனமிருக்கத் தன்னையறிவதுந் தன்னுலன்றி அயலாலாகுமா? ஆகுமெனின்; தன்னைமறந்ததும் அயலா லென்பம். திரோபவ சத்தியால் மறப்பும், அனுக்கிரகசத்தியால் விடுதியுமெனின், இவ்விரு

வகைசத்தியும் ஆர்பாலது? மஹேஸ்வரன், சதாசிவன்பாலதெனின், ஆன்மாவுக்கு என்னசுதந்தரம் ஈசனெனின், இங்ஙனம் ஆட்டுவிப்பானேன்? வினைக்கீடாயெனின், திரிபதார்த்தமும் அனாதியாயிருக்க உயிர்க்கு வினைவருவானேன்? சுபாவமெனின், இடையிலிவர்கள் முயற்சியால் நீங்குமா, கூடுமா? இதுவுஞ் சுபாவமெனின், நாஸ்திகனிலும் இஃதென்சிறப்பு, இன்றாதலால் இது மறுக்கற்பாற்று. தன்னைத் தான் விசாரித்துழியன்றித் தன்னைத்தான்காணக்கூடாதென்பார், ஆன்மாவுந் தன்மறதியைக்கெடுத்துத் தன்னறிவினாற்காணாமல் கனத்த கன்மங்களாறுகஞ்செய்யினுங் காணுமோ காணாதேயெனவுங் கூறினார். ஆன்மா கன்மம்புரிதற்பாலது பலனுமபுரிதற்பாலதோவெனின், இன்மையிலொருவன்தீங்கேபுரியில் துன்பத்தையும், அவனேயதைவிடிலின்பத்தையும் அனுபவிப்பதுபிரத்தியட்சமன்றோ. இவ்வினைகட்குப்பயன் தர மற்றொருவன்வேண்டுமோ, அவ்வவ் வினையே அவ்வவற்றின் பலனாகின்றது இயல்பாயிருக்க, இங்ஙனங் கேட்பது வினாவன்று, வினாவழு. இம்மையிலேனுமறுமையிலேனும் அவனவன்வினையே அததற்குரியபயனைத்தந்தேவிடும். இதுபற்றித் "தான்றாமுன்செய்த வினைதாமேயனுபவிப்பரென்றார் சான்றோர்" தீவினைவிடலதன்பயனும், நல்வினைவிடில் அதன்பயனும், இவ்விரண்டுமொருங்கேவிடில் அதன தன்பயனுந் தானேயகலும், இதற்கொருவனென்றிற்கு இங்கேயொருவன் வேண்டியதாகக்கூறியது, அவனைவேண்டிப் பூசித்தற்கென்க. ஏனெனில், பயபத்தி வரவேண்டுவதுபற்றியாதலினானும், இன்பமுந் துன்பமும் அவன்தருவதாக ஐதீகமிருத்தலினானும், அவனன்றியோரணுவுமசையாதெனும்பழைய வாப்தமொழியிருப்பதினானும், அவன் தரில் ஆர்தடுப்பவரென்றிருத்தலினானுமென்க. அங்ஙனம் எவர் வேண்டினும் அவரவர் வினைக்களவாகவன்றித் தன்னிட்டப்படி தரான், தரின், பராபட்சன் இதுநிற்க, தன்னைத்தவிர எங்கேயுன்னியமின்றோ அது பரஞானம். ஈசனேனுமுளதேல் அஃது அபரஞானம். பரஞானத்தில் ஏற்போரிடுவோரெங்கே. தன்னைமறந்தது தன்னாலே, தன்னை யறிவதுந் தன்னாலேயாதலின் தன்மறதியைத் தவிர்கவென்பதாயிற்று.

(க து) ப்ரக்ஞைக்கு அயலாகத்தோற்றுஞ் சகமாதிமூன்றும் அனர்த்தரூபமாகலால் அவைதன்மறதியெனத்துணிகவென்பது. தன்மறதியேதனக்கயலெனல் திண்ணம். தனக்கயல் தோன்றுமளவுந் தான் விளங்காது. தன்னை உன்னிடில் தான்விளங்குமென்க. (71)

72 - கவி. (அ — கை)

[சுகந்தருவது ஞானமெனவும், கன்மமெனவும், வேதங்கூறுகின்றதே]
இதில் யாதுதுணிவு, கூறுவதெற்றிற்கென மாணாக்
கன்வினாவலை யிக்கவியிற்கூறுகின்றார்.]

நன்மை யாங்குரு வேசுகந் தருவது ஞானமே யெனும்வேதந்
தன்ம பாவமிச் சிரங்களாற் றேவர்க டருவிலங் குகண்மாந்தர்
சென்ம மாகுவ சாதியா சாரமே செய்தவஞ் சுகமென்று
கன்ம காண்டத்தில் விதிப்பதென் விதித்துள காரண முறையீரே.

(இ-ள்) நன்மையாங்குருவே சுகந்தருவது ஞானமேயெனும் வேதம் (எ-து) — நன்மையேவடிவாயுள்ளசற்குருவே! ஞானகாண்டத்தில், சுகத்தைத் தருவதுஞானமேயென்று விதித்தவேதமானது: — தன்ம பாவமிச்சிரங்களாற்றேவர்கடருவிலங்குகண் மாந்தர்சென்மமாகுவ (எ-து) — புண்ணிய கன்மம் பாவகன்மம், மிசிரகன்மமெனமூன்றும். இம்மூன்றுகன்மங்களில்; புண்ணியகன்மத்தால் மேலாய தேவசென்மமும், பாவகன்மத்தால் கீழாயவிருட்சம் விலங்கு பறவைமுதலியசென்மமும், மிசிரகன்மத்தால் நடுவாய மனிதசென்மமுமாம்: — (இவற்றிற்கேதுவாய) சாதியாசாரமேசெய்தவஞ்சுகமென்று கன்மகாண்டத்தில்விதிப்பதென் விதித்துளகாரணமுறையீரே (எ-து) — வருணாசிரமத்துக்குரிய விதிவிலக்கிகலாதொழுகுமொழுக்கமே செய்கின்ற தவமாம். இங்ஙனமாய தவமே சுகத்தைத்தருமென்று கன்மகாண்டத்தில் விதித்ததெற்றிற்கு, அங்ஙனம்விதித்தற்குக் காரணம்யாது தெரிகின்றிலன் இதனைத் தேவரீர் தெரித்தருளவேண்டும் எ-து.

(க-து) வேதமானது ஞானகாண்டத்தில் ஞானமே சுகந்தரற்பாலதெனக்கூறிக், கன்மகாண்டத்தில் வருணாசிரமவொழுக்கமே சுகந்தருமெனக் கூறுவானேனென மாணாக்கன்வினாவினனென்பது. ஞானமே யென்றதினால் செய்தவமேயென்றும். ஆசாரத்தையன்றித் தவம் வேறன்றெனற்கு, ஆசாரமே செய்தவமென்றார். சாதிகூறியதுபற்றி ஆசிரமம்வருவித்தாம். புண்ணிய கன்மமுதலிய மூன்றினாலாய பிறவி பேதங்களைப்பற்றி விரிவாக முன்னரே கூறி இருக்கின்றனம் அதனாற் காணலாம்.

## 73 - கவி (அ - கை)

[கருமஞ் சுகந்தருமென்றது ஒரவசரப்பற்றியன்றி ஞானம்
போல்வதன்றெனக் குறிப்பிக்க இக்கவியில்
அறம்புரியுமாறு கூறுகின்றது.]

தினமு மண்ணுகர் பிள்ளைநோய்க் கிரங்கியே தீம்பண்ட மெதிர் காட்டிக், கனம ருந்துக ளொளித்துவைத் தழைக்கின்ற கருணையாந் தாய்போல, மனைய றங்கள்செய் மகங்கள்செய் நன்றென்று மலர்ந்த வாசகஞ் சொல்லு, நினைவு வேறுகாண் சுவர்க்ககா மிகளந்த நிர்ண யந் தெரியாரே.

(இ-ள்) தினமுமண்ணுகர் பிள்ளைநோய்க்கிரங்கியே தீம்பண்ட மெதிர்காட்டி (எ-து) — தினந்தோறு மண்ணைக்கரந்துண்கின்ற குழந் தைக்கு நோய்மிக அதனைக்கண்டு இரக்கமுற்று மதுரமானவஸ்துவை ஓர்கரத்தேந்தி அந்தக்குழந்தைக்கெதிரேகாட்டி: — கனமருந்துகளொ ளித்துவைத் தழைக்கின்ற கருணையாந்தாய்போல (எ-து) மேலான அவுஷதங்களை மற்றோர் கரத்தேந்தித் தன்பின்னே ஒளித்துவைத்துக் கொண்டு அக்குழந்தையை அழைக்கின்ற இரக்கமுள்ள தாயைப் போல: — மனையறங்கள் செய்மகங்கள்செய் நன்றென்று மலர்ந்தவாச கஞ்சொல்லும் (எ-து) — இல்லறங்களைச்செய், யாகாதி கிருதியங்களைச் செய், ஏனெனில், இனியடையும்பிறவிக்கு இதுநன்றென்று வேத மானது இனியமொழி களாற்றெரிவிக்கும்: — நினைவுவேறு காண் சுவர்க்க காமிளந்த நிர்ணயந்தெரியாரே (எ-து) — தெரிவிக்கினும், கருத்து இஃதன்று வேறுதான், அக்கருத்தைச் சுவர்க்காதிபோகத் துக்கே அங்காந்து திரியுங்காமிகள் சற்று முணரார், எ-று.

மண்தின்னுதல் குழந்தைப்பருவம், ஏனையபருவமன்று, விடய நுகர்தல் அஞ்ஞானப்பருவம், ஏனையபருவமன்று, மண்தின்னலாலாய நோய் காமாலை முதலியன, விடயநுகர்தலாலாயநோய் பிறவிமுதலி யன. தீம்பண்டமெதிர் காட்டல்போல் பதவிப்பேறுகளையெதிர்காட்டல். காமாலை தீர்க்கத்தகு மருந்துபோல்வது பிறவி தீர்க்கத்தகுமருந்து. தாயானவள் தீம்பண்டங்காட்டல் சொல், மருந்தொளித்துவைத்தல், கருத்து. அதுபோல வேதமாதாவும், சுவர்க்காதிபயன்காட்டல் சொல், அனைத்தையுமொருங்கே விடவேண்டுமெனல் கருத்து.

எல்லா எண்ணங்களையு மொருங்கேமறந்து விடலே, பிறவி நோய்க்குத் தக்கமருந்து. அவளொளித்துவைத்தது அந்தமருந்து. இவளொளித்து வைத்தது இந்தமருந்து, அந்தமருந்தைக்காட்டினால் குழந்தைவராது, இந்த மருந்தைக் காட்டினால் மக்களுயிர்வராது.

ஆதலால் ஒளித்துவைத்தெனவும், இவளழைத்தல்போல் வேத மாதா அழைத்தலே இனிவருங்கவிகளாலுங்காணலாம் அவளுக்குக் கருணை தன் குழந்தைமேல், இவளுக்குக் கருணைமக்களுயிர்மேல். குழந்தைக்குத்தாய் அவள். மக்களுயிர்க்குத்தாய் இவள். அவள் சொல்லையுங்கருத்தையுங் குழந்தையறியாவாறுபோல, இவள் சொல்லை யுங் கருத்தையு மக்களுயிர் அறியாது. ஆதலால், நினைவு வேறுகாண் சுவர்க்ககாமிகள் அந்தநிர்ணயந் தெரியாரேயெனவுங் கூறினார்.

(க-து) வேதம்; கருமமே சுகந்தருவதெனக் கூறினதாகக் கொள்ளின், சொல்லுங்கருத்துமொத்தன்றோ கூறவேண்டும், அங்ஙனங் காணோமேயென்பது. இதுபூர்வபட்சமாகத் தகுவதாதலின் சித்தாந்த மன்று. அந்தநிர்ணயந் தெரியாரேயென்பதினால், கருமமேசுகமெனப் புரிவரென்பதாயிற்று. தேகபோகத்துக்கு இயைந்தகருமமே முக்கிய மன்றி விசாரஞானம் அங்ஙன்மன்றெனமறுத்தல் தானேகெட உப மானங்கூறியதென்க. (73)

## 74 - கவி (அ - கை)

[போக நுகர்தற்கன்றோ மனையறங்கள்செய் மகங்கள்செய்யென்றது, இஃதுயிர்கட்கியல்பாயிற்றே இதனைவிதிப்பானேனென்ற சங்கைக்கு உத்தரம் இக்கவியில் வேதம் மூடமன்றெனக் கூறுகின்றார்.]

போக மாருயிர் கண்டதை யுண்பதும் புணர்வது மியல்பேகா
ணாக மங்களுஞ் சுபாவத்தை விதிக்குமோ வத்தனை தெரியாதோ
காக மேகறுத் திடுநெருப் பேசுடு கசந்திடு வேம்பேநீ
வேக வாயுவே யசையென வொருவரும் விதித்திடல் வேண்டாவே.

(இ-ள்) போகமாருயிர் கண்டதையுண்பதும் புணர்வதுமியல் பேகாண் ஆகமங்களுஞ் சுபாவத்தை விதிக்குமோ (எ-து) - உயிர்கள் தமக்குப்போகமாகக் கண்டதையெல்லா முண்பதும், போகிப்பதுமியல் பாயிருக்க, இந்தச் சுபாவத்தை வேதாகமங்களும் விலக்காது இதனை விதிக்குமா, இஃதென்னை கொலோவெனின்: — அத்தனை தெரியாதோ காகமேகறுத்திடு நெருப்பேசுடு கசந்திடு வேம்பேநீ வேகவாயுவே

யசையென வொருவரும் விதித்திடல் வேண்டாவே (எ-து)—வேதாகமங்களுக்கு அவ்வளவு யூகித்துணர்த்தல் தெரியாதா, அத்தனைமூடமா, காகமே நீ கறுத்திடுகவெனவும், நெருப்பே நீ சுடுகவெனவும், வேம்பே நீ கசந்திடுகவெனவும், வேகமாயுள்ள காற்றே நீ யசைகவெனவும் ஒருவர்கட்டளையிடல் வேண்டுமோ ஒருவரும் வேண்டுவதின்றே அது சுபாவமாயிற்றே. எ-று.

உயிர்களிட்டத்தின்படி கண்டு சொல்லுந்தோறும் அப்போதப்போது அவ்வவற்றுனேரிடும் இடுக்கண்களைக்காட்டல் வேண்டும். அங்ஙனங்காட்டாவிடில் தோடந்தோன்றாது, தோன்றாவிடில், இடுக்கணியல்பென அப்போகங்களிலேயே உழன்றழியும். அங்ஙனம் உழன்றழியக்காணல்நன்று, ஆதலின் பையப்பைய அவ்வவ்வுயிரினிட்டப்படிசென்று, ஆங்காங்குள்ள குற்றங்களைக்காட்டி மீட்கவேண்டும். இங்ஙனமாய தந்திரத்தைவிட்டு, நீ திரும்பென்றால் திரும்புமா, அது பலாத்காரமன்றோ, அது முற்றுநிற்குமா, நில்லாதே, இதுவிவேகமா, அல்லவே. இது பற்றியன்றோ வேதமும், "மனையறங்கள் செய் மகங்கள்செய் நன்றென்று" என்று கூறிற்று. இதனையறியாது இங்ஙனம் வினவல் முறையன்று. முறைவழுவென்பார், அத்தனை தெரியாதோவென்றார். காகமாதிகள் சுபாவத்தை ஒருவரும் விதித்திடல் வேண்டாவேயென்றது; சுபாவத்தை வேதம் விதிக்குமா வெனக்காட்ட. அத்தனை தெரியாதோவென்றது, இதனை மறுக்க விதித்தது; உயிர்கள் வழிச்சென்று அவைகளைத் தம்வழிமீட்க இவ்வுளவறியாதார் விடயமோகிகள். இவர்கள்தாம் வேதத்தின் கருத்தறியாது வேதத்தின் சொல்வழிச்சென்று அறம்புரிவோர் வேதமானது சுபாவத்தை விலக்குவான் வேண்டியே விதித்ததென்க.

(க-து) வேதத்தின் கருத்தறியாது மறுத்தல் பிழையென்பது. (74)

### 75 - கவி (அ—கை)

[பட்டிமாடுபோற் கட்டுக்கடங்காரைக் கட்டுக்கடங்கக் கன்மம் புரிய விதித்ததேயன்றி வேறுக்கன்றென இக்கவியிற் கூறுகின்றார்.]

கள்ளு மூனுநீ விரும்பினன் மகங்கள்செய் காமத்தின் மனதானுற், கொள்ளும் பெண்டொடு கலவிசெய் யெனிலிவன்குறையெலாந் தொடானென்றே, தள்ளும் வேதத்தின் சம்மதஞ் சக

லமுந் தவிர்வதே கருத்தாகும், விள்ளு மிவ்விதி யென்னெனிற் பூருவ நியமமாம் விதியன்றே,

(இ-ள்) கள்ளுமூனு நீ விரும்பினுல் மகங்கள்செய் காமத்தின் மனதானுற் கொள்ளும் பெண்டொடுகலவிசெய்யெனில் (எ-து) - கள் ளருந்தவும், மாமிசந்தின்னவும் நீயாசைகொள்ளில், யாகாதி கிருத் தியங்களைச் செய்திடுக, புணர்ந்தனுபவித்தலாகிய காமத்தில் மன தெழுமானுல் நீமணம்புரிந்து கொண்ட மனைவியோடு கூடிப் புணர்ந் திடுகவென்று சொன்னுல்:-இவன்குறையெலாந் தொடானென்றே தள்ளும் வேதத்தின் சம்மதஞ் சகலமுந்தவிர்வதே கருத்தாகும் (எ-து) —இவன் மற்றவைகளையெல்லாந் தொடவே மாட்டான் என்று எண்ணங்கொண்டதன்றோ, இதுபற்றித் தொடானென்றே அவற் றைத்தள்ளிவிடும். அயின் இதுதானோ வேதத்தின் சம்மதமெனில், உயிர்கள் சமஸ்த பற்றுக்களையும் ஒருங்குவிட்டுவிடற்கே தனதெண்ண மாம்:— விள்ளுமிவ்விதி என்னெனில் பூருவநியமமாம் விதியன்றே (எ-து)—இங்ஙனஞ் செய்யெனக்கூறிய இவ்விதி யாதுக்கெனக் கேட் பையாயின், பூர்வபட்சமாகத் தகுந்ததே அன்றி நிச்சயமானவிதி யன்று. எ-று.

நிச்சயமானவிதி, சித்தாந்தம் எனவே, பூர்வபட்சம், சித்தாந்த பட்சமெனவிரண்டாம். பூர்வபட்சம், களைதற்பாலது. சித்தாந்தபட்சம், நிலைத்தற்பாலது. இவ்விதி நிலைத்தற்பாலதன்றென்பார், பூருவமென் ருர். விரும்பினுல் மகங்கள்செய், காமத்தின் மனதானுல் கலவிசெய் யெனவே, விரும்பாமற்போனுல் செய்யவேண்டாம் என்ருயிற்று ஆக வே, இதுகன்மிகளுக்கு விதித்ததென்பதுபெற்ரும். பெறவே, பூர்வ பட்சமெனக்கண்டாம்.

(க-து) விதிக்கடங்காதார்க்கு விதித்த தந்திரமிஃதென்பது. இங்ஙனமாய தந்திரங்களைக் கன்மகாண்டத்திலறிக. குறையெல்லாந் தொடுதலாவது; கடைகடோறுஞ் சென்று போதைமிகுதியால் அவ மானப்படலும், நல்லோரால் இகழப்படலும், பிறர்மனை நயத்தலும், அவமானமெய்தலும், நடுக்கமல்லாமையுமாம். சகலமுந்தவிர்வதே கருத்தாவதெற்றிற்கு, ஆன்மாக்கள் எப்பற்றும் அகன்றிருக்கிற் பிறவி அகன்றிருக்குமென்பது பற்றியென்க ஆன்மா அறிவாதலால் அறிவு மாத்திரநிற்க ஞானகாண்டத்திற் பிரதிவாதிக்கின்றதே இதனுல், கன்மகாண்டத்தில் பற்றுக்கள் அகறற்குத் தந்திரமும், ஞானகாண் டத்தில் அறிவாவிளங்கற்குத் தந்திரமுங் கூறுமெனக்கண்டாம். இது காருணியத்தை விளக்குகின்றது. (75)

76 - கவி (அ - கை)

[மெல்ல மெல்லப் பற்றுக்கள் அகறற்குத் தந்திரங்களை வேதங் கூறுதலை அறிந்து கருமம்புரிதலை ஒழிந்திடுக வென இக்கவியிற் கூறுகின்றார்.]

மதுவி றைச்சிகளுண்ணென்ற சுருதிபின் மணந்துபா ரெனல்பாராய்
மிதுன விச்சையும் புத்திரோற் பத்தியால் விரும்பென்ற விதிபாரா
யிதையும் விட்டொழி யதிநயிட் டிகவன்னிக் கிகழ்ச்சியற் றதும்பாரா
யதைய றிந்துகன் மங்களா சைகளொழிந் தானந்த மடைவாயே.

(இ-ள்) மதுவிறைச்சிக ளுண்ணென்ற சுருதிபின் மணந்துபா ரெனல்பாராய் (எ-து) — மதுமாமிசங்களைப் புசியென்றவேதமானது பின்னர்மோந்து பார் புசியாதேயென்பதைப்பார்: — மிதுனவிச்சையும் புத்திரோற்பத்தியால் விரும்பென்றவிதிபாராய் (எ-து) - புணர்ச்சியாசையும் புத்திரோற்பத்தி வேண்டுமாதலால் அதுபற்றி விருப்பங் கொள்ளென்று கூறும் விதியினைப்பாராய்: இதையும் விட்டொழியதி நயிட்டிகவன்னிக் கிகழ்ச்சியற்றதும் பாராய் (எ-து) — மது இறைச்சியோடு புணர்ச்சியையும் ஒருங்கே விட்டொழிந்த சந்நியாசிக்கும், நயிஷ்டிக பிரமசாரிக்கும் யாதோர் பழிப்புமற்றதென்பதும் பாராய்: — அதை யறிந்து கன்மங்களாசை களொழிந்தானந்தமடைவாயே (எ-து) -- இங்ஙனங் கூறும் அவ் வேதத்தின் கருத்தை அறிந்து புண்ணிய கன்மங்களில் வைத்த, ஆசைகளினின்று நீங்கிப் பிரமானந்தத்தை ஞானத்தினாலடைதி எ-று.

முதலில் உண்க புணர்க என்ற வேதம் கடையில் முகர்க, புத்திரோற்பத்தியால் விரும்புகவென்றது; பற்றறுத்தற்கென்க. முதலில் கூறியதுஉயிர்வயப்படற்கும், கடையில் கூறியது உயிர் கேவலமாதற்கு மென்வறிக. புத்திர உற்பத்தியால் மிதுன இச்சையும்விரும்புகவென்றது; புத்திரன்குடும்பங்காக்கும் யோக்கியம்வரில் புணர்ச்சி விருப்பம் விட்டுத் தவத்துக்கு வனத்துக்கேகக வேண்டுமென்ற பொருள் படநின்றது. இகழ்ச்சியற்றதென்பதுமென்னுது இகழ்ச்சியற்றதும் எனக்கூறலின், என்பதெனல் சொல்லெச்சம். கன்மங்கள் ஆசைகளொழிந்து ஆனந்தமடைவாயே என்பதினால், கன்மஞ் சுகந்தருமெனல் பூர்வபட்சமெனவும், ஞானஞ் சுகந்தருமெனல் சித்தாந்தமெனவுங் கொள்க.

(க-து) இவ்விரண்டில் ஞானமேசுகமெனத் துணிந்தாமென்பது. இது ஒருதலைத் துணிதலென்னு மதம். இதுகாறுங் கருமமே சுகமெனக்கொண்டு இங்கேமறுத்தலின் இது பிறர்தம்மதமேற்கொண்டு களைதலென்னு மதம். கருமமே சுகமென்பார் இக்கருத்தறியாதார் அறியின் அக்கணமேவிடுவர். (76)

77 - கவி. (அ - கை)

[சுகம் இருவகையுள் கருமசுகம் ஓரவசரம் பற்றிக் கூறியதாக வேற்றனன், இதுநிற்க. முன்னர், 70ம். கவியில் ''பங்கமாகும் அஞ்ஞானத்தைப் பகைசெயாதுறவாக்கும்'' என்பதைப்பற்றி ஐயஞ்சிறிதுளது அதனை அகற்றல் வேண்டு மென வினாவலை இக்கவியிற் கூறுகின்றார்.]

உலக மானவஞ் ஞானமுங் கருமமு முறவென்ற வழிகூடும்
பலவு மானவஞ் ஞானமு ஞானமும் பகையென்ப துளதானு
னிலவி லேமறுப் போலவஞ் ஞானமு நிமலஞா னத்தோடே
குலவி நின்றிந்தச் சிருட்டிகள் செய்யவுங் கூடுமோ குருமூர்த்தி.

(இ-ள்) உலகமான அஞ்ஞானமும் கருமமுமுறவென்றவழி கூடும் (எ-து) — சகத்துருவமா நின்றுள்ள அறியாமையும், யாகாதி கிருத்தியமும் உறவாகுமென்று தேவரீர்கூறியவழி ஏற்றற்பாலதே: — பலவுமானவஞ்ஞானமு ஞானமும் பகையென்பதுளதானல் (எ-து) — சகத்துருவமாகவன்றியும் இன்னும்பற்பல விஞேதரூபமாகவுமிருந்துள்ள அறியாமையும் அறிவும்பகை என்பதுண்மையானல்: - நிலவிலே மறுப்போல அஞ்ஞானமு நிமலஞானத்தோடே குலவி நின்றிந்தச் சிருட்டிகள் செய்யவுங் கூடுமோ குரு மூர்த்தி (எ-து)—குருமூர்த்தியே! நிலவிற்களங்கமுறவாயிருப்பதுபோல அறியாமையும் நின்மலமான அறிவோடு கூடியுறவா நின்று, இந்தச்சிருஷ்டியாதிகளைச் செய்யத்தான் கூடுமோ கூடாதே. எ-று.

உலகமான அஞ்ஞானம் பலவுமான அஞ்ஞானமென்பன; அஞ்ஞானத்தைமுதற்காரணமாக உலகமும் இன்னும் பிறவும் பெருநிற்றலின் காரியத்தைக் காரணமாக உபசரிக்கப்பெறநின்றன. நிற்கவே, அபேதகாரணகாரியமெனப்பெற்றும். பெறவே, அறியாமையே சகமாதிமூன்றுமென்ருயிற்று. இத்துணிபுபற்றியே காரியத்தை முன்னருங் காரணத்தைப்பின்னருங்கூறியதென்க. அறியாமையே செகமாதி மூன்றெனலை ஞாயமாதியாலுணர்த்துதும். இங்ஙனமுணர்த்த வலியில்லார்,

யாது கூறினுந் துவிதமாக முடியும். முடியின், பிறவிநாசமின்ரும். பயனென்னே, இது நிற்க. களங்கத்துக்கு நிலவு இடமாதல்போல, அறியாமைக்கு அறிவு இடமாயிற்று. ஆகவே, அறிவு பூரணமும், அறியாமை யேகதேசமுமெனக் குறிக்கின்றது. நிமலமின்ருதலின் அஞ்ஞானமென்ருர். நிமலஞானமென்றது; பொருளேப் பொருளாக உணருமவசரத்தை. சக்கரவர்த்திக்கு உறவாநின்று அவனிலத்தை ஆளக்கூடும் பகையாநின்ருளக்கூடுமா? அதுபோல, ஞானத்துக்குற வாநின்று அதின்கண்ணஞ்ஞானஞ் சிருட்டியாதிகள் செய்யக்கூடும், பகையாநின்று செய்யக்கூடுமாவென்பான், அஞ்ஞானமு ஞானமும் பகையென்பதுளதாஞல் நிலவிலேமறுப்போல அஞ்ஞானமு நிமல ஞானத் தோடே குலவி நின்றிந்தச் சிருஷ்டிகள்செய்யவுங் கூடுமோ வென்ருன்.

(க-து) ஞானத்துக்குப் பகையாக் அதினின்று அஞ்ஞானஞ் சிருஷ்டியாதிகள் செய்வதெங்ஙனமென்பது. பலவு மென்றதனல், செகமோடு ஏனைய இரண்டும் வருவித்தாம். உள்ளதென்பது உள் தென்ல் இடைக்குறை செய்யவுமென்பதில் உம்மை இழிவுசிறப்பு. கூடுமோவென்பதில் ஓகாரம், எதிர்மறை. பலவென்ல், உயிரையும் பரத்தையும். என்னே, "ஒன்றல்லனபல தமிழ் நடை வடநூலிரண்டல் லனபல வென்றிசிஞேரே" என்பதினுற் காண்க. பலவு மென்பது இறந்தது தழீஇய எச்சவும்மை (77)

78 - கவி. (அ. - கை.)

[பொதுப்படஞானமென்ருரேனும் அது சொரூபஞானம் விருத்தி ஞானமென இரண்டாம். அஞ்ஞானத்துக்குச் சொரூபஞானம் உறவும், விருத்திஞானம் பகையுமென இக்கவியிற் கூறுகின்ருர்]

சொரூப ஞானமும் விருத்திஞா னமுமென்று சோதிஞான மதிரண்டாஞ், சொரூப ஞானமே விருத்தியின் ஞானமாத் தோன் றுமவ் நிலைமைந்தா, சொரூப ஞானமஞ் ஞானசத் துருவன்று சுழுத்தியிற் கண்டாயே, சொரூப ஞானத்தின் மருவுமஞ் ஞானத் தைச்சுடும்விருத் தியின்ஞானம்.

(இ-ள்) சொரூபஞானமும் விருத்திஞானமுமென்று சோதிஞான மதிரண்டாம் (எ-து) — சோதிஞானமானது, சொரூபஞானமெனவும் விருத்திஞானமெனவும் இரண்டாநிற்கும்: — சொரூபஞானமே விருத்தி

யின் ஞானமாத் தோன்றும் வேறிலைமைந்தா (எ-து) — ஞானபுத்திரா! சொரூபஞானமே விருத்திஞானமாத் தோன்றுவதேயன்றி அஃதோர் பொருளாகத் தனித்தெங்கணுமில்லை: - சொரூபஞானமஞ்ஞானசத்துரு வன்று சுழுத்தியிற் கண்டாயே. (எ-து) - சொரூபஞானமானது அஞ்ஞான சத்துருவேயன்று, இதனைத் தினசுழுத்தியிற்காண்கின்றனையே: — சொரூபஞானத்தின் மருவு மஞ்ஞானத்தைச் சுடும்விருத்தியின் ஞானம் (எ-து) - சொரூபஞானத்தில் உறவாமருவி நின்றுள்ள அஞ்ஞானத்தை விருத்திஞானமானது எரித்துவிடும். எ-று.

என்றெனலை யீரிடத்துமொட்டுக. சுழுத்தியிற் செகந்தோற்ற வில்லை என்று அங்கே அறியவிடாது எவ்வுயிர் கேவலத்தின்கண்ணும் அறிவிருத்தலின் அது சொரூபஞானம் எனவும், தனித்துந்தன்னைத் தான் காணவொட்டாதது அறியாமையாதலின் அதனை அஞ்ஞானம் எனவும், அறிவுமறியாமை யுமபேதமாய் ஆங்கு உறவாநிற்றலின் சொரூபஞானமஞ்ஞான சந்துருவன்று சுழுத்தியிற்கண்டாயேயென வும், சமாதியிலுதிக்குஞானம் விருத்தி ஞானமெனவும், ஞானவான் கள் சிந்தையாவிளங்குவது சோதிஞானமெனவும் கொள்க. சொரூப ஞானமஞ்ஞான சத்துருவன்றெனப்பாட மோதில் மறுபடியும் மறு பாட்டு முரணுதலுக்கென்செய்தும். வலிந்துரை கோடலிற் பிறர்பழிப் புக்கிடமாம், இதனைவிடுதல்நன்கு. சுழுத்தியில் மூடவயமாகாது தான றிவாகவிருந்து அம்மூடத்தை யெதிரிட்டறிதலைப்பற்றிச் சத்துரு வென்றதெனின், சுழுத்தியில் அஞ்ஞானக்கேடெய்தியதுண்டா? முத்தி பெற்றருண்டா, விசாரமெற்றிற்கு எனவரும். இங்ஙனமாய வினவுக் கெல்லா மென்செய்தும். உரைக்குப்பாட்டன்று. பாட்டுக்குரையாத லிற்பாட்டுச் செல்வுழிச்செல்லல் வேண்டும்.

(க-து) விருத்திஞானமும், அஞ்ஞானமுமுறவன்றென்பது. எனவே, சொரூபஞானமும் அஞ்ஞானமுஞ் சத்துருவன்றென்பதாயிற்று. விருத்தி ஞானத்தோடன்றிச் சொருபஞானத்தோடுறவாமளவுஞ் சிருட்டியாதி நடக்கு மெனக்குறிப்பித்ததாம் சோதிஞானத்தையன்றிச் சொரூபஞானமும் சொரூபஞானத்தையன்றி விருத்திஞானமும் இன் றெனக்கூறவந்தது, அஞ்ஞானஞ் சிருட்டியாதிகள் செய்தற்கு உத்த ரங்கூறவேண்டியென்க. விருத்திஞானம் எழில் அஞ்ஞானமிருந்தாலன் றோ சேட்டையுண்டாம், இன்றாதலால் இதுவே அஞ்ஞானநாசத்துக் கெல்லையென்க. அவனே இவனென்றாற் போலச் சொரூபஞானமே விருத்தியின்ஞானமென்றிருத்தலின், ஏகாரந்தேற்றம். (78)

79 - கவி (அ - கை)

[அஞ்ஞானஞ் சொரூபஞானத்தால் எரிபடாது விருத்திஞானத்தால் எரிபடுவதை உபமானபூர்வமாக இக்கவியிற் கூறுகின்றார்.]

துருத்தி மாயையைச் சுழுத்தியிற் சுடாதது சொரூபஞானந்தானே
விருத்தி ஞானமாச் சுட்டதெப் படியெனில் வெய்யிலா லுலகெங்கும்
பரித்த சூரியன் சூரிய கரந்தத்திற் பற்றியக்கினியாகி
யெரித்த வாறுபோற் சமாதியில் விருத்தியா லெரிக்குமென்றறிவாயே.

(இ-ள்) துருத்திமாயையைச் சுழுத்தியிற்சுடாதது சொரூப ஞானந்தானே விருத்திஞானமாச் சுட்டதெப்படியெனில் (எ-து) — துருத்திபோல்வதா வுள்ள மாயையாகிய வஞ்ஞானத்தைச் சுழுத்தியவஸ்தையில் எரிக்காதது சொரூபஞானந்தானே, அதுவிருத்திஞானமாநின்று எரித்ததெங்ஙனமோ அதனைத்தெரிவிக்கவேண்டுமெனில்: — வெய்யிலாலுலகெங்கும்பரித்த சூரியன் சூரியகாந்தத்திற்பற்றி யக்கினியாகியெரித்தவாறுபோல் (எ-து) — உஷ்ட்ணகிரணத்தினால் உலகமுழுவதுஞ் சுமந்தசூரியனானவன் சூரியகாந்தக்கல்லிற்பற்றி யக்கினிவடிவமாநின்று அனைத்தையுமெரித்துவிட்ட தன்மையைப் போல: — சமாதியில் விருத்தியா லெரிக்குமென்றறிவாயே (எ-து) — நிட்டையின்கண் விருத்தி ஞானக்கினியாயெழுந்து அதனால் அஞ்ஞானத்தை எரித்துவிடுமென்றறிதி. எ-று.

துருத்திபோல்வது, உசுவாசநிசுவாசம். அதனை யுடையது உடல், அவ்வுடல் நானெனல் அறியாமை, அவ்வறியாமையேமாயை, இந்தமாயையே அஞ்ஞானம், ஆதலின் துருத்தியென்பது ஊதுந்துருத்தி. இது போன்றது மாயையெனப் பொருள்படும், படுதலானுவமைத்தொகை, பண்புத்தொகையன்று, தனதாக்கினையினால் உலகைச் சுமக்கின்றவன் அரசனென்றாற்போல, வெய்யிலால் உலகெங்கும் பரித்தசூரிய னென்றிருத்தல்முறை. வெய்யிலாலென்பது பரித்தலென்னும் வினைகொண்டுமுடிய, எரித்தலென்னும் வினைகொண்டு முடித்தற்கிடகின்று. எரித்தலுக்காக்கின், பரித்தலுக்கேதுவெங்கே, இதுநிற்க. சூரயன் தானே பஞ்சையெரிக்காமல் சூரியகாந்தத்திற் பட்டெழுந்த தனதம்சாக்கினியால் எரிப்பன். அதுபோல, சொரூபஞானமானது தானேயஞ்ஞானத்தை யெரிக்காமல் சமாதியில் தனிப்பட்டவிடத்துதித்த தனதம்ச விருத்திஞானத்தால் எரிக்குமெனமுடிக்க: இதனால் அஞ்ஞானத்திற்கு உறவு சொரூபஞானமும், பகை விருத்தி

ஞானமுமேயென்ன வற்புறுத்தியதாகப்பெற்றும்.

(க-நு) விருத்திஞானமே அஞ்ஞானநாசமென்பது. சொரூப ஞானம் சூரியன். பரிபாகவறிவு, சூரியகாந்தம். விருத்திஞானம், அக்கினி. மாயா காரியத்தைமாயையென்றது. காரணவாகுபெயர். வெய்யிலாலுலகெங்கும் பரித்தசூரியனென் றடைகொடுத்தது, வெய்யிலா லெரிக்காமலென்னு நயந் தோன்றற்கென்க. (79)

## 80 கவி. (அ—கை.)

[விருத்திஞானமு மனத்தொழிலாலாயது, இதுவுங் கருமமன்றோ இஃது அஞ்ஞானத்தைக் கெடுக்குமன்றோ? இங்ஙனமிருக்க. கருமம், அஞ்ஞானத்தைக் கெடுக்காதென்றது என்னையென வினவிலை இக்கவியிற் கூறுகின்றார்.]

அருளு மையனே திரிவித கரணத்தா லாகிய தொழிலெல்லாங்
கரும மல்லவோ விருத்திஞா னமுமந்தக் கரணகா ரியமன்றோ
வுரிய கன்மமஞ் ஞானத்தைக் கெடுக்குமென் றோதினு லாகாதோ
பெரியஞானமென்றதற்கொருபெயரிட்ட பெருமையையுரையீரே.

(இ-ள்) அருளுமையனே திரிவிதகரணத்தாலாகிய தொழிலெல்லாங் கருமல்லவோ (எ-து)—சகலார்த்தத்தையும் உணர்த்தியருளிய கர்த்தனே! மனோவாக்குக் காயத்தாலாகிய கிரியையனைத்துங் கரும மல்லவா:—விருத்தி ஞானமுமந்தக் கரண காரியமன்றோ வுரியகன்ம மஞ்ஞானத்தைக் கெடுக்குமென்றோதினுலாகாதோ (எ-து)—விருத்தி ஞான மென்பதும் மனதின் காரியமல்லவா, இங்ஙனங் காரியமாக்கற்குரிய விருத்தி ஞானமென்னுங் கன்மம் அஞ்ஞானத்தைக் கெடுத்து விடுமென்று சொன்னுலாகாதோ:—பெரியஞான மென்றதற் கொரு பெயரிட்ட பெருமையை யுரையீரே (எ-து)+மேலான ஞானமென்று அதற்கொரு பெரிய பெயரிட்டமகிமையைத் தேவரீர் தெரிவித்தருள வேண்டும். எ-று.

சமாதியாயினுந் திரிவிதகரணம் ஒத்துச் செய்தலன்றோ, செய்தல் தொழிலன்றோ, இந்தத்தொழிலாலாயது விருத்தி ஞான மன்றோ, இந்த விருத்தி ஞானமும், அந்தக் கரணத்தாலாகிய பயனன்றோ, இந்தப்பயன், அந்தக்கரண காரியமன்றோ, இதனுல் விருத்தி ஞானம் கருமமாயிற்று. இதைக் கருமமாக்கி, இந்தக்கருமத்தாற் கெடு மஞ்ஞான மென்றால் என்ன வழு. இங்ஙனமிருக்க, இதற்குப்பெரிய ஞான மெனப் பெயரிடுவதென்னை.

(க-து) விருத்திஞானமாகிய கன்மம் அஞ்ஞானத்தைக் கெடுக்குமென்பது இன்னுங் கன்மமே முக்கிய மென்றானென்க. (80)

81 - கவி. (அ - கை)

[விருத்திஞானமுங் கன்மமும் அந்தக்கரணகாரியமெனல் மெய்யே
இதுவே சித்தாந்த மாயின் இருவகை தந்திரமெற்றிற்
கென விடைதரலே இக்கவியிற் கூறுகின்றார்.]

விருத்தி ஞானமந் தக்கர ணத்தொடு விருத்தியா கிலுமைந்தா
வொருத்திமக்களே தங்களிற்பகைக்கின்ற துலகெங்குங் கண்டோமே
கருத்த னாகிய புருடதந் திரங்களாங் கருமங் ளவைபோல
வருத்த ஞானமோ புருடதந் திரமன்று வஸ்துதந் திரமாமே.

(இ-ள்) விருத்தி ஞானம் அந்தக்கரணத்தொடு விருத்தியாகிலுமைந்தா (எ-து)—ஞானபுத்திரா! விருத்திஞானமானது அந்தக்கரணத்தோடுகூடிச் சம்பந்தித்த புடைபெயர்ச்சியாகினும்: ஒருத்தி மக்களே தங்களிற் பகைக்கின்றதுலகெங்குங் கண்டோமே (எ-து) - ஒரு ஸ்திரீயின் பிள்ளைகளே தங்களுக்குள்ளே ஒருவரோடொருவர் பகைத்து அடித்துக்கொண்டு இறப்பதை உலகமுழுதுங்கண்டிருக்கிறோமே: — கருத்தனாகியபுருடதந்திரங்களாங்கருமங்களவைபோல (எ-து) - கருமங்கள், அகம்பாவமுடையோனாகிய புருடனது தந்திரங்களெனப்படும். அவைபோல: - வருத்த ஞானமோபுருடதந்திரமன்று வஸ்து தந்திரமாமே (எ-து)— அகமுக்நாட்டத்து அதிகவருத்தத்தாலெய்திய விருத்திஞானமோஎனில், புருடதந்திரமன்று வஸ்துதந்திரமெனப்படும். எ-று.

ஒருத்தி, காரணம். அவள்பிள்ளைகள், காரியம். அவர்களொருவரோடொருவரடித்துக்கொள்ளுதல், புடைபெயர்ச்சி. இறத்தல், அப்புடைபெயர்ச்சியின்பயன். இதுபோல, அந்தக்கரணம், காரணம். விருத்தி ஞானமும், கருமமும், காரியம் இவ்விரண்டும் ஒன்றோடொன்று மாறுபடல், புடை, பெயர்ச்சி. மாளல், இப் புடைபெயர்ச்சியாலாய பயன். விருத்தியாகிலு மென்பதிலும்மை, இழிவுசிறப்பு. புருடனாலாய தந்திரம் புருடதந்திரம். வஸ்துவாலாயதந்திரம், வஸ்துதந்திரம். கர்த்தனும்புருடதந்திரமெனவே, அகர்த்தாவாம் வஸ்துதந்திரமென்றாயிற்று. உபாதியானெனல், கர்த்தத்துவம். அறிவுயானெனல், அகர்த்தத்துவம். மனமுபாதிவடிவா நின்றியற்றல், கருமம் அறிவேவடிவா நின்றியற்றல், ஞானம். இவ்விரண்டும் மனத்தின் காரியமாயினும்,

அஞ்ஞானத்தை நீறுபடுத்தும் வலியேற்றற்பாலதியாது. இதனைக் கணிப்பார் தத்துவ ஞானியரே யன்றி யேனையரல்லர். ஏனையருமெனின், சொல்லாலன்றி அர்த்தத்தாலல்லர். ஒருத்தி மக்கள் என்பதுஉல், தானே தாயென்றமையும். தாயென் றுரைகூறவேண்டுமோ, கூறல், மிகைபடக்கூறலென்னுங் குற்றமாயமையும், ஆதலின் வேண்டுவதின்று. புருடனது தந்திரமென்ருவதால், வேற்றுமைத்தொகை. புருடன் தந்திரம், புருடதந்திரமென்ருயது. ''சிலவிகாரமா முயர்திணை'' என்பதினுலென்க. புருடனென்னல் போதும், கருத்தனுகிய புருடனென்றது; ஞாயிறு, திங்களென்னல்போதும் செஞ்ஞாயிறு, வெண்டிங்களென்ருற்போலும். அடைவேண்டாது அவற்றிற்கு அடை கொடுத்தல் மிகையாயினுஞ், சான்ருேரேற்றலின் வழுவமைதியென்க.

(க-து) தந்திரமிரண்டாக்கியதால் அஞ்ஞானத்துக்குச் சத்துரு விருத்தி ஞானமெனத் தானே யமையுமென்பது. தமது புண்ணிய கன்மங்களை யெல்லாம் ஈஸ்வரார்ப்பணஞ்செயல், புருடதந்திரமெனல் மெய்யே. இதுபோல வஸ்துதந்திர நிலையெங்ஙனமாயதோவெனில், அல்ல இல்லை ஆமுண்டெனற்கியையாது, நின்றுள்ளதுயாதோ அது வஸ்து. சித்தமும் அந்நான்கின்வயமாகாது. அவ்வஸ்துவினேரே நிற்றலைச்சமாதியென்பர். பலகாலமும் நேரேநிற்க நிற்களங்குமாநிறைந்துள்ள சிற்சோதியானது, அங்ஙனமசையாது நின்றுள்ள சித்தத்தின்கண் இருளில் மின்மினிபோலவும், சுடர்போலவும், வளர்பிறை வரிசைபோலவும், சூரியோதயம்போலவும், பகலொளிபோலவும், கணக்கின்றிய சூரியர்போலவும், உபாதி ரகிதப் பிரகாசம்போலவும். தனதமிசம் பிரதிபலித்தல் தந்திரமெனவறிக இம்முறையறியார்பால் கேட்டென் பயன். (81)

### 82 - கவி (அ கை)

[கருமத்தைத் தியானயோகமெனவும், ஞானத்தை ஞானயோகமெனவும் இரண்டாக்கி இக்கவியில் விடைகூறுகின்ருர்.]

வகுத்த கன்மங்கள் செய்யவுந் தவிரவு மற்ருென்ருக் கவுங்கூடு
மிகுத்த ஞானமப் படியன்று தியானமும் விவேகஞா னமும்வேறே
செகத்தி லொன்றையொன் ருவிவன் பாவிக்குந் தியானங்கற் பித
முகஸ்த மாக்கண்ட ஞானமே வாஸ்தவ மோகமா மயங்காதே. [யோக

(இ-ள்) வகுத்தகன்மங்கள்செய்யவுந் தவிரவுமற்றொன்றாக்கவுங் கூடும் (எ-து)—சான்றோரால் வகுக்கப்பட்டுள்ள கருமங்களானவை. செய்யவுங்கூடும், விட்டுவிடவுங்கூடும், வேறொன்றாக்கவுங்கூடும்:— மிகுந்த ஞானமப்படியன்று தியானமும் விவேகஞானமும் வேறே (எ-து) - மிகச்சிறப்பித்துள்ள ஞானமானது, அவைபோலப் புருடரால் வகுக்கப்பட்டதன்று (எங்ஙனமெனில்) தியானமென்பதூஉம் விவேக ஞானமென்பதூஉம் வெவ்வேறு வகுக்கப்பட்டுள்ளனவாம்:—செகத்தி லொன்றையொன்றாவிவன் பாவிக்குந் தியானங் கற்பிதயோகம் (எ-து)—உலகத்திலிவன் ஒன்றைமற்றொன்றாகப் பாவிக்குந் தியானமே கற்பிதயோகமெனவும்:-முகஸ்தமாக்கண்ட ஞானமே வாஸ்தவ மோக மாமயங்காதே (எ-து)—பிரத்தியட்சமாகக்கண்ட ஞானமே உண்மை யான ஞானயோகமெனவும் பெயராம். இஃது அதுபோலத் தெளி வின்மையால் ஒன்றுமற்றொன்றாகக் கலங்காதே. எ-று.

இரண்டுமொன்றறென விபரீதபுத்தியால் நீமயங்காதேயெனினு மமையும். வகுத்தகன்மங்கள், மிகுத்தஞானமென்றிருத்தலின், புருட தந்திரத்தால் வகுக்கப்பட்டுள்ள கன்மங்களெனவுந், வஸ்துதந்திரத் தால் சிறப்புமிக்குற்ற ஞானமெனவும் பொருள்கொள்ளினுமமையும். வகுத்த, மிகுத்தவென்றதினல் பிறவினையாக்கினும். கன்மானுஷ்டா னம் இட்டங்காரணமாகவாதலின் வருத்தம்பற்றிச் செய்யவுந் தவிர வும் மற்றொன்றாக்கவுங் கூடுமெனவும், ஞானானுஷ்டானஞ் சுகப்பெருக் கே மேலிடச்செய்தலின், இட்டம்வைப்பெற்றிற்கு. வருத்தந்தட்ட லெங்ஙனமென்பதுகொண்டு அப்படியன்றெனவும், சகளம் வேட லெனக்கொள்ளாது வேடதாரியாகக்கோடலின், செகத்தில் ஒன்றை ஒன்றாவிவன் பாவிக்குந்தியானமெனவும், வாஸ்தவஞானமெனினும், விவேக ஞானமெனினுமொக்கும். தேவதத்தனை அவன்வேடங்காரண மாகக் குடும்பி என்றும், சந்நியாசியென்றுங் காணாது உள்ளவாறு அவன் சுயவடிவைக் காண்டலே முகஸ்தமாக்கண்ட ஞானமே வாஸ் தவமெனவுங் கூறினர். தியானமும், விவேகஞானமும் வேறேயென்ப் பகுத்துத் தியானங் கற்பிதயோக மெனவே, விவேகஞான மெதார்த் தயோகமெனப்பெற்றும். கன்மம்; தியானகமனவும், கற்பிதயோக மெனவும் பெயர்பெற்றாற்போல ஞானமும்; விவேகஞானமெனவும் எதார்த்தயோகமெனவும் பெயர்பெற்று நின்றது.

(க-து) இங்ஙனமாய வேதுக்களாற் கன்மமும், ஞானமும், வேறே யென்பது. இன்பதுன்பங்களிடைவிடாது ஒழிவின்றி வினை

வசத்தால் எய்தினும், உள்ளக்களிப்பணுவேனுந்தாழாது உயராது ஒருபடித்தாநிற்கும். இங்ஙனநிற்றல் விழிப்பினுமுறக்கத்தினுமாயின் தள்ளுவதெங்ஙனம்? கொள்ளுவதெங்ஙனம்? இதுயாதுகாரணமாக வெய்தியது? ஞானங்காரணமாக. அந்தஞானம்; வாஸ்தவமாகவும், முகஸ்தமாகவுமிருக்கும் அபரோட்ச ஞானமன்றிப் பரோட்சஞான மன்று இஃதென்னவலியது, மேல்கீழொப்பின்றெனச்செய்யும் வலியது, யாதாகச்செய்யும் வலியது? சமஸ்தமுஞ்சின்மாத்திரமாகச் செய்யும் வலியது, இதுகாரணமாவெய்தியசுகம் எங்ஙனமாயதோ? இதனை உடையாரே அறியவேண்டும். அயலாயினார் எங்ஙனமறிவர். முகஸ்தமாக்காணு ஞானம் அத்துவிதியிடத்தும், கற்பிதயோகம் ஏனையோரிடத்து மெனக்கொள்க. அஃது அதிஷ்டானம், இஃது ஆரோபம். அது மாருதது, இது மாறுவது. (82)

## 83 - கவி (அ—கை)

[மேற்கூறிய இருவகை யோகத்தின் இலக்கணங்களை இக்கவியில் விளக்கி அஞ்ஞான நாசத்தையுங் கூறுகின்றார்.]

கண்ட றிந்தது ஞானங்கேட் டதுதனைக் கருதுபா வனையோகங்
கண்ட பேர்சொலக் கேட்டது மறந்துபோங் கண்டது மறவாதே
கண்ட வஸ்துமெய் தியானவஸ்துக்கள்பொய் கறுவியஞ்ஞானத்தைக்
கண்ட வக்கணங் கொல்வது ஞானமே கருமமன் றறிவாயே.

(இ ள்) கண்டறிந்தது ஞானங் கேட்டதுதனைக் கருதுபாவனை யோகம் (எ-து)—பிரத்தியட்சமாகக் கண்டறிந்தது ஞானயோகமென வும், ஒருவர் சொன்னவண்ணங்கேட்டு அதனைப் பாவிப்பது பாவ யோகமெனவும் பெயராம்:—கண்டபேர் சொலக் கேட்டது மறந்து போங்கண்டது மறவாதே (எ-து)—கண்டவர்கள் சொல்லக் கேட்பது மறந்துபோகும், அங்ஙனமாகாது தான் கணடது மறந்துபோகுமா? மறந்துபோகாதே:—கண்ட வஸ்துமெய் தியானவஸ்துக்கள் பொய் (எ-து)-நேரே கண்ட வஸ்துயாதோ அதுமெய், பாவிக்கப் பட்ட வைகளெவைகளோ அவைகள் பொய்:—கறுவி அஞ்ஞானத்தைக் கண்ட அக்கணங் கொல்வது ஞானமே கருமமன்றறிவாயே (எ-து) —அஞ்ஞானத்தைக் கண்ட அக்கணமே அதனைச் சீறிக்கோறற்பாலது மெய்ஞ்ஞானமேயன்றிக் கருமமன்றென அறிதி. எ-று.

வஸ்து மனோவாக்குக்கெட்டு மெட்டா தென்பதைப்பற்றி முன்னரே கூறியிருப்பதால், இங்கேகூற வருவது முறையன்று. ஆயினும் இங்கேசற்று விசாரிக்குதும். காலதேசவஸ்துவையன்றிச் செகமெனல் தோற்றன்மாத்திர முஞ்சொன்மாத்திரமுமா முடிகின்றதே, இப்போது உலகமெனற்குப்பொருளெங்கே? இதோ தோற்றுகின்றதே எனில். அம்மூன்றிற்படாது காட்டலாமே? பொருளிடங்காலமென்னுங் காரணங்கருதாவிடத்துத் தோற்றலும், கருதியவிடத்துத்தோற்ரு மையுமானல், அப்போது உலகிருப்புக்குமின்மைக்குங் காரணங் கருதாமையுங் கருதலுமாகின்றதே, இவ்விருபுடைபெயர்தலுக்கும் வினைமுதல் மனமாகின்றது. இந்த மனதையன்றிப் புடைபெயர்ச்சியும் இந்தப்புடைபெயர்ச்சியையன்றிச் செகத்துண்மையும் இன்மையும் எங்கே? ஆதலின், மனோகற்பிதமே உலகென்ருயிற்று. இதற்குதாரணம். வாசிட்டம், விரதசூயைகதையில், 3 - கவியிற்காணலாம். மனமானது தானே சகத்தாகப் பரிணமித்துத் தானேதன்னைப் பார்க்கின்றதென்ருல். தன்னைவிகற்பித்துத் தன்னைத்தான் காண்கின்ற இது; தன்னைத்தான் விகற்பிக்காமல் சுயம்பாகக் காண்கின்றதரிதோ? அங்ஙனந் திரும்பாத குறையேயன்றி வேறன்று இதற்கு உதாரணம்; வாசிட்டத்தில். "ஆன்றவம்மனம்பூர்ணத்தையடைந்து பூரண வெண்டிங்கள் போன்றுற விளங்கு" மென்னுங் கவியாற்காணலாம்.

(க-து) இவ்விருவகை யோகஇலக்கணங்களைவிளக்கியதால் அஞ்ஞானத்துக்கு ஞானமே சத்துருவெனத் துணிந்தா மென்பது உலகத்தில், பெரும்பாலும் அனேகர் வேதாந்திகளென மடாதிபதிகளாயிருந்து கண்டறிந்தது ஞானமென்பதற்கு உரை; வேதாந்த நூல்களால் அறிவேயுண்மையெனக்கூறியிருப்பதை மனதில் திடபாவமாய் உறுதிகொள்வதெனவும், மனனம், நிதித்தியாசனம், இதுவேயெனவும், இதற்குப்பயன் ஈசனை வந்தித்தலேயெனவும், ஈதல்லவெவெனப்பரமஞானிகள் சொல்லினுங்கேளாது தங்கள்மரபின்வழித்தா நடக்குதுமெனவுங்கூறுவர் இதென்னபுதுமை கேட்டதுதனைக்கருது பாவனை யோகமெனற்கென்செய்வர். கண்டவஸ்துமெய் தியானவஸ்துக்கள்பொய்யென்பானேன். நிச்சயஞானம்பரோட்சமாயிற்றே; இஃது அபரோட்சஞானமாகுமா? ஆகுமெனில், ரவியாதியின்றி இருள்நாசமாகுமா, யுத்தியாவது, அனுபவமாவது உண்டா? இதோசூரியனென நினைத்தாலும், சொன்னாலும் இருள்போகுமா? போகுமானல்கரும

மும்; விருத்திஞானமுமெனவிரண்டாகக் கூறுவானேன். ; அறிவே உண்மையென நினைவால் திடபாவங்கொள்ளில், அறிவு திரிசியங்களி லொன்ருய்முடியும், அல்லதுபாழாகவேனும், நினைவாக வேனுமுடி யும். பாழெனில், மாயை திரிசியமெனில் உலகம். நினைவெனில் தனது சூக்குமதேகம். அறிவிங்ஙனமாயதன்ருே? என்னை, "அறியாப் பொருள் காரணமாயை குறித்தறியும்பொருள்காரியமாமுலகிந், நெறி யாற்றிகழ் நான்மறையந்தமெலா நீயன்றெனவோதுநிரந்தரமே." (எ-ம்)—"அறியும் பொருளன்றறியாப்பொருளன் றறிவாகிய நீயெனு மப் பொருடான், பொறியின்வழி நின்றறியும்பொருளோ போதக் கண்விழித்தறியும் பொருளே" (எ-ம்) - கூறியவாற்ருற்காண்க. தேகாதி தத்துவக்குழாங்கள், அறிவானுல் சிவமறிவாகலாம். சிவ தரிசனத்தில் தத்துவங்களும், தத்துவதரிசனத்தில் சிவமும்அபாவ மாயிற்றே. இரண்டையும் அதநுவாயிருந்து அறிந்தது அறிவாயிற்றே. அஃதிருந்தபடியிருக்கின்றதே. அநுசிவமாகுமா, தத்துவங்களாகுமா, ஆகாதே; இவ்விரண்டவசரநிலையாயும், அன்ருயுமிருக்கின்றதே இவ் வறிவே, சகலநானுயிருந்தும் ஆங்காங்கு எட்டப்புகில் தூரதூரமாக வகன்று ஏகின்றதே, இதனைத் தரிசிப்பதற்கன்ருே, சிரவணமனனுதி கள் செய்வது. இவ்வறிவைத்தவிர மேலாயதென்னையுளது. இருக்கின் றதெனின். அது தானுயிருந்தறிவதும் இவ்வறிவுதானே. அன்றெ னின், கருமானுஷ்டானமும், ஞானனுஷ்டானமும் புரியும் அறிவு பயன்வேண்டியன்ருே? அப்பயன் அறிவுக்கன்ருே, இம்மைப்பயனும் அறிவுக்கன்ருே, அப்பயனிப்போதும், இப்பயனப்போதுமுண்டா? பயனென்றிலொன்றில்லாதாயினும் அதனை அனுபவிக்கும் அறிவு எப்போதின்று. எப்போதும் இருக்கின்றதெனின், இதனை இலட்சியார்த் தத்தாற்காணுது பராக்கிற்செல்வதென்னை. இவ்வறிவையன்றி நானெ னற்குப்பொருள் கண்டிலமே. உபாதி நானுகுா? ஆகாதவுபாதியை நானெனப்பார்ப்பதுபோல, நானெனலை விசாரித்து உண்மையாகப் பார்க்கவேண்டுமன்ருே? எங்கேபார்க்கின்றனம், தன்னைவிட்டுத் தனக் கயலை நாடப்புறப்பட்டனமே, இதுதானுவேதாந்தியென்பதற்கு உப நிடத சம்மதம். நன்றுநன்று, இப்போதே இப்பெயரை யொழிக்கா விடில், நம்பியடுப்பார் கெடுவர். இதுதிண்ணம். இதுநிற்க இவரிப் போதே உலகைமித்தையாக்கறகறியார் எங்ஙனம் பிரமமாக்குவர். மித்தையாக்குவரெனின், இவ்வுலகஞ் சுழுத்தியில் இல்லையெனக் கூறுவதா மித்தையாக்கல், நன்கு நன்கு இப்போது இல்லாத கானனீரை உவமைகூறவந்தது உலகம் இப்போதுமில்லை யென்றகன்ருே இக்காலத்தில் கேட்கில் அக்காலத்தில் கூறவருவது:

கல்வித்தேர்ச்சியையும் அனுபவத்தெளிவையுங் காட்டுகின்றதே, இது நல்லவேதாந்தம். இங்ஙனங்கூறி உடலைவளர்த்தலேயன்றி உணர்வை வளர்த்தலாகுமோ? இனியாவது இம்மடமை மரபைவிட்டுத் தன்னை உள்ளங்கைநெல்லிக்கனிபோற்காட்டவல்லாரைத் தேடியடுக்கிற் பிழைக்குதும், அன்றேற்கெடுதும். இஃது அகங்காரத்தாற் கூறியதன்று துக்கநிவிர்த்திக்கென்க. நாம் ஏகமெனலைச் சொல்லாற் காணுது, கண்ணுற்காணத் துணியின் அதுபயன்படும். கண்டவஸ்து மெய் தியானவஸ்துக்கள்பொய் என்பதில் ஐயமென்னை? தன்னைத் தான் காணுதளவும், செகசீவ பாஞ் சத்தியம் காணின் மித்தை. எனவே, காணுமையே சத்தியமெனவும், காட்சியே மித்தையெனவும் ஆயிற்று. ஆகவே, காணுமையுங் காட்சியுந் தனது புடைபெயர்ச்சி. அப்புடைபெயர்ச்சிக்கு வினைமுதல் தான், இங்ஙனந் தன்னையன்றி வினைநிகழ்தலும், நிகழ்தலையன்றிச் சத்தியமுமித்தையும் இல்லையெனக் கண்டாம். இதனினுமிக்கவித்தை யெங்குமில்லை இது பிறவிதவிர்க்கும். ஈஸ்வரார்ப்பணஞ் செய்தலாகிய புண்ணியமோ, அதன் பலனையனுபவிக்கப் பிறவிதரும். ஆதலின் ''பிறப்பென்னும்பேதைமை'' என்ருர் பெரியோர். கேட்டவண்ணம் பாவித்தல் யோகம். பாவித்தவண்ணங்காண்டல் ஞானம். இங்ஙனங் காண்டலைத்தான் ஞானகதப் பிரத்தியட்சமென்பர். பாவனையையன்று. (83)

## 84 - கவி (அ—கை)

[தியானம் அசத்தியமென்ருல் அதுகாரணமாய் எழுமுத்தியும் அசத்தியமன்றோ என்ற வினுவிற்கு விடை இக்கவியிற் கூறுகின்ருர்.]

சருவ முத்தியைத் தருகின்ற தியானமுஞ் சத்திய மன்றென்ருல்
சருவ முத்தியுஞ் சத்திய மன்றென்று சங்கியா தேநீகே [மன்றே
ளுருவங்கேட்டவன் றியானிக்கும் பொழுதிலவ் வுருவம் வாஸ்தவ
யுருவ மாகுமப் பொழுதுகண் ணுற்கண்ட வுருவம் வாஸ் தவமாமே.

(இ-ள்) சருவமுத்தியைத் தருகின்ற தியானமுஞ் சத்தியமன்றென்ருல் (எ-து)—சர்வமுந் தானுகவிளங்கும் முத்தியை நேரேதருகின்ற தியான யோகமும் மித்தையாமெனத் தேவரீர் கூறினுல்:— சருவமுத்தியுஞ் சத்தியமன்றென்றுசங்கியர்தே நீ கேள் (எ-து)—சர்வமும் தானுவிளங்கு முத்தியுந் தியானங்காரணமாக வந்தபடியால் அதுவுமித்தையாகின்றதேயெனச் சங்கியாமலே யான்சொல்வதை நீ

கேளுதி: — உருவங்கேட்டவன் தியானிக்கும் பொழுதி லவ்வுருவம் வாஸ்தவமன்றே (எ-து) — பிரமஸ்வரூபம் இங்ஙனமிருக்கின்றதெனக் கேள்வியுற்றவன் அதனைச்சிந்திக்கும் பொழுதில் அதுவிளங்காமை யால் அப்போது அந்தப்பிரமஸ்வரூபம் அவனுக்கு வாஸ்தவமல்ல வே, ஆயின்: — உருவமாகுமப்பொழுது கண்ணுற் கண்ட வுருவம் வாஸ்தவமாமே (எ-து) — தானே அந்தப் பிரமஸ்வரூபம் ஆகும் பொழுது பிரத்தியட்சமாக ஞானக்கண்ணுற்கண்ட அவ்வடிவம் அப் போது உண்மையாகாதா, உண்மையாகுமே. எ-று.

அதற்கு உத்திரமிருப்பதால சங்கியாதே நீ கேளெனவும், கேள்விப்பட்டுத் தியானிக்கில், அது சாதனமன்றோ, சாத்தியப்பட்ட விடத்தன்றோ அது தானுகவிளங்கும். அப்போது விளங்காததனுற் பொய்யானதும், விளங்கினதால் மெய்யானதும் அவனுக்கன்றி வஸ்து வுக்கன்றே. ஆதலின், தியானிக்கும் பொழுதில் அவ்வுருவம் வாஸ் தவமென்றேயெனவும் கண்ணுற் கண்டவுருவம் வாஸ்தவமாமே யெனவும் கூறினுர். காரணம், தியானம். காரியம் முத்தி. காரணம் பொய்யாகும்போது காரியமெய்யாகுமாவென்பது சங்கை. இதனைத் தானே யாசங்கித்தார். தியானமே முத்தியென்பதை மறுத் தற்குத் தியானமித்தை யென்றதென்க. தியானமே முத்தியாயின் மேலே ஞானமெற்றிற்கு? தியானத்தாற் பரோட்சமும், ஞானத்தால் அபரோட்சமு மெனப்பெறும். பெறவே, தான் சுயம்பிரகாசமாக விளங்கல் வாஸ்தவம், அன்றாக விளங்கல் வாஸ்தவமன்மையெனலைக் கண்டாம்.

(க-து) பிரத்தியட்ச ஞானமே அஞ்ஞான நாசமாமென்பது. பிரத்தியட்சம் ஞானமாயின் திரிபுடியாமேயெனின், சமஸ்தமுஞ் சொப் பிரகாசமாக விளங்கில் அயலெனலேது? இல்லையே, ஆதலின், திரி புடி நாசமெனக்கொள்க. எங்ஙனமெனின், ஞாதுரு, ஞானம், ஞேய மென்பவற்றுள், இடையிலுள்ள ஞானத்தை விளக்காவிடில், திரிபுடி யுண்டு. விளக்கில், எங்கே? ஆதலின், அஞ்ஞான விமோசனத்துக்குக் கண்ணுற்கண்ட உருவம் வாஸ்தவமெனப்பட்டது. விரிக்கிற் பெரு கும். (84)

## 85 - கவி (அ—கை)

[தியானிப்பானுக்குத் தியானம் மித்தையாயினும் அவன் தியானித்த வண்ணம் பெத்தமேனு முத்தியேனும் எய்து மெனலை இக்கவியிற் கூறுகின்றார்.]

சடம தாகிய தியானமெய் யாகிய சர்வமுத் தியைநல்குந்
திடம தானதெப் படியெனி லவரவர் தியானமே பிறப்பாகு
முடலமாசையாற் றியானிக்கிற் றியானித்த வுடல்களா குவர்மைந்தா
தொடர்ப வங்கெடச் சொரூபமே தியானிக்கிற் சொரூபமா குவர்
(மெய்யே.

(இ-ள்)சடமதாகியதியான மெய்யாகிய சர்வமுத்தியை நல்குந் திடமதானதெப்படியெனில் (எ-து) சடமாநின்றுள்ள தியானமானது, சர்வமுந்தானாக விளங்கும் மெய்யாகிய முத்தியைத்தருமென்ற திடத்தை உறுதியாகக்கொள்வது எங்ஙனமெனக் கேட்பையாயின்:—அவ ரவர்தியானமே பிறப்பாகு முடலமாசையாற் றியானிக்கிற் றியானித்த வுடல்களாகுவர் மைந்தா (எ-து)—ஞானபுத்திரா! எவரெவர் எங்ஙன மெங்ஙனந் தியானிக்கிறார்களோ அவரவர் தியானத்தின் வண்ணம் அங்ஙனமங்ஙனமாய பிறப்பெய்தும் எங்ஙனமெனில், தேக ஆசை கொண்டு சிந்திக்கில் சிந்தித்தவண்ணம் அததற்குரிய உடல்கள் எடுப்பார்கள்:—தொடர்பவங்கெடச் சொரூபமே தியானிக்கிற் சொரூப மாகுவர் மெய்யே (எ-து)—விடாது தொடர்ந்துவருகின்ற பிறவி கெடவேண்டிப் பிரமசொரூபத்தைத் தியானஞ்செய்யிற் பிரமசொரூப மாகவிளங்குவர் இது சத்தியமே இதனைச் சிந்தித்தறிதி எ-று.

சடமதாகிய தியானமென்றது; தியானந் தன்னையும் மற்றொன் றையும் அறியாதெனவும், மெய்யாகிய சர்வமுத்தி யென்றது; தானன் னியமாகாது தானே தானாகவிளங்கலெனவும், பொருள்படுமாறு காண்க. உயிரெனல், உணர்வு. என்னை,''உணர்வியலாமுயிரொன்று மொழித்த, உடன்முதலனைத்து முயிரல்பொருளே'' என்றார் பவணந்தி. இதில், உணர்வியலாமுயிரென்பது அறிவுமயமாகிய உயிரெனக் கொள்க. இதுபற்றி ஓரறிவுயிர், ''புன்மர முதலவுற்றறியுமோரறி வுயிர்'' எனவும்; ஈரறிவுயிர். ''முரணந்தர்திநாவறிவொடீரறிவுயிர்'' எனவும் மூவறிவுயிர், ''சிதலெறும்பாதி மூக்கறிவின் மூவறிவுயிர்'' எனவும், நாலறிவுயிர், ''தும்பிவண்டாதி கண்ணறிவி னாலறிவுயிர்'' எனவும், ஐயறிவுயிர், ''வானவர்மக்கணர்கர்விலங்குபுள், ளாதிசெவி யறிவோடையறிவுயிரே,'' எனவுங் கூறியவாறு காண்க. இங்ஙன மாயது; ''மெய்நாமூக்குநாட்டஞ்செவிகளின், ஒன்று முதலாக்கீழ்க கொண்டுமேலுணர்தலின், ஓரறிவாதியாவுயிரைந்தாகும்'' என்பதனு லென்க. சத்தபரிசாதிகளையுணர்தலைப்பற்றி உயிர் ஐவகையெனவும்,

தோற்றபேதத்தால் உயிர் எழுவகையெனவும் உபாதி பேதத்தாலும், குணபேதத்தாலும், சத்தபேதத்தாலும், உணர்வு பேதத்தாலும் ஒவ்வொரு தோற்றவுயிர் பற்பல பேதமெனவுங் கொண்டதேயன்றி, வேறுகாரணம் பற்றியன்றே. எந்தவுயிருக்கு எந்தபிறவிசுதந்தரம்? இன்றே. உபாதி, தோற்றத்தானும், வினைக்கீடாகப் பிறவிமாறுவதானும் மேல்கீழதாகவும், கீழ் மேலதாகவும், உயிராகின்றதன்றே? உயிர் இங்ஙனமாதற்குக்காரணம்; கடவுளிஷ்டமெனில், பாரபட்ச தோடமெய்தும். சுபாவமெனின், அந்தந்தவுயிர் அந்தந்தத் தோற்றமாகவே மாறாது ஒருபடித்தாக இருக்கவேண்டும், அங்ஙனமின்றாதலால் தோடமெய்தும், நிலையாதுமாறுதலே சுபாவமெனின் முடிவின்றாம். முடிவின்றாகவே, ஒவ்வோருயிரும் பிறவியால் மாறி மாறி நிலையாது அலையுமன்றே? ஏற்றனம். ஒவ்வொருயிர்க்கும் பிறவி அளவின்றென நின்மொழி காட்டுகின்றனவன்றே? 'மாறிமாறிப் பிறவியெய்தற்கு உயிர் எப்போதுமிருக்க வேண்டுமன்றே? இங்ஙனமிருக்க, உயிர் முன்பின் இல்லாததெனக்கூறலாமா, கூறுகின்றனரே, இது போலவே அவரது வாதமும் இருக்குமெனவறிக. மீண்டுஞ் சுபாவமெனில், முற்று நிலையாவாததோடமெய்தும். வினையெனின், எதுகாறும். விருப்புவெறுப்புள்ளளவும். இது வெதுகாறும், பொருளல்லவற்றைப் பொருளாகக் கருதும் அறியாமையுள்ளளவும், இது எதுகாறும். தானேதானாக விளங்குமளவும். அப்பாலென்செய்யும். வினையொழிக. மீறிவினைவலெல்லாஞ் சொல்வாதமாயமையும்: உயிர்கள் இந்நிலைகள் பேதமறியாததால், இவற்றுள் ஒன்றையவாவி வினைபுரியுமன்றே? வினை புரிதல், சங்கற்பித்தலே. அதாவது; சிந்தித்தல். சங்கற்பம், சிந்தித்தல். தியானம் இவையனைத்தும் ஒருபொருட்கிளவி வினைபுரிந்தாலன்றே அதன்பயன் தமக்கெய்தும். எய்தினாலன்றே, அனுபவித்துத்தீர்த்தல். அனுபவித்தற்குத் துணைக்கருவி பிறவி வேண்டுமன்றே. இது தியானங்காரணமாக எய்தற்பாலதாதலின், பந்தத்துக்கேனு முத்திக்கேனும் அவரவர் தியானமே பிறப்பாகுமென்றார். தானே சமஸ்தபோகமுமாகப் பரிணமித்திருத்தலைத் தானென்றறியாது தனக்கயலெனக் கருதலளவும் அதனைச்சுகிக்க உயிர்கள் தாவுமன்றே? அங்ஙனந்தாவுதலே தியானம். அந்தத்தியானபேதம் அளவின்மையின், உடலமாசையால் தியானிக்கில் தியானித்த உடல்களாகுவரென்பதூஉம், சமஸ்தபோகமுந் தனதுபரிணமிப்பேயெனத் தெளிந்தார் மீண்டும் அயலென நாடுவரோ தன்னைத்தானடையத் தியானிப்பரன்றே,

ஆதலின், தொடர்பவங்கெடச் சொரூபமே தியானிக்கிற் சொரூப மாகுவர் என்பது உம்பொருந்தும்.

(க-து) இருவகையுள் எதைத் தக்கவாறு தியானிக்கின்றன ரோ, அதுவந்தே தீருமென்பது. இதனை மறாக்காததற்கு ஏது கூறி யதைக்காண்க. பொருளைப் பொருளாகக் காணுவளவும், அவாநாசத் துக் கிடமின்று. இடமின்றுவளவும் போகதாக நசியாது. நசியாவள வும், அதனை அனுபவிக்கயாதானும் வினைபுரியவரும். வருமளவும் பிறவியகலாது. அகலாதுபற்றி இங்ஙனங் கூறினரென்க, இப்போதே பற்பல பிறவிபேதமுந் தேகபேதமும் கோறிக்கை பேதமும், அடங்கா அவாபேதமும், சங்கற்பபேதமும், முயற்சிபேதமுமாய் உயிர்களிருக்க. இன்னும் பிரத்தியட்சம் யாதுக்கு (85)

## 86 - கவி (அ—கை)

[தான் பிரமமாதற்குத் தியானமேபோதுமெனின் விசாரமும்
ஞானமும் எற்றிற்கென்ற வினவுக்குவிடை
இக்கவியிற் கூறுகின்றார்.]

பிர்ம ரூபத்தைத் தியானித்த பேர்களும் பிரமமா குவரென்று
னரச ரீர்மாங் குரவனே விசாரமேன் ஞானமே னென்னுதே
பரம பாவனை பரோக்ஷமாம் பின்பந்தப் பரோக்ஷமே யபரோட்சந்
திரவி சாரமா ஞானமே முத்தியாந் தீர்வையீ தறிவாயே.

(இ-ள்) பிரமரூபத்தைத்தியானித்த பேர்களும் பிரமமாகுவ ரென்றால் நரசரீரமாங்குரவனே விசாரமேன் ஞானமேனென்னுதே (எ-து) — மானிட வடிவாயெழுந்தருளிய குருநாதனே! பிரமஸ்வரூபத் தைத் தியானித்தவர்களும் பிரமமாகவே விளங்குவரெனத் தேவரீர் கூறினால், மேலேவிசாரமும், ஞானமுமெற்றிற்கோவெனச் சங்கியாது நிற்றி, யான் கூறுவன் அதனைக்கேளுதி: — பரமபாவனை பரோட்சமாம் பின்பந்தப்பரோட்சமேயபரோட்சம் (எ-து) — பிரமத்தியானமே பரோட் சஞானமாம், பின்னர் அந்தப்பரோட்சஞானமே அபரோட்ச ஞான மாம் — திரவிசார ஞானமே முத்தியாந் தீர்வையீதறிவாயே (எ-து) — திடமாக விசாரிக்கும் விசாரத்தாலான அந்த அபரோட்சஞானமே நிரதிசயானந்தமாம், இதுவே தீர்ப்பென வறிதி. எ-று.

அறிவினது பிரதிபலனமாதலின் அனைத்தும் மீண்டும் அறி வாம். இது சுருதியுத்தி அனுபவத்துணிபு ஆதலானும், சோதனை

ஞாயம் பொருத்தமுகத்தால் ஆய்ந்த தெளிவாதலானும், அறிவே பிரமமெனப்பெறும். பெறவே, திணைபாலிடமாயும் அன்றியுமிருத்தலின் எல்லாமாயல்ல வுமாயிருந்தது இஃதெனச் சுட்டாது கூறினர் சான்றோர். ஆயினும், அஃது அறிவேயெனக்கண்டாம் கண்டதால் அது மறுத்தற்பாலதன்று, மறுப்பார், கெடுவர். என்னை. ''பூதாதியைந்து பொறிபுலன்களெல்லாஞ்சித் தேதாதியந்தமிவை யெல்லாஞ்சித் தோதரிய கற்பனையுஞ்சித்தனைத்துங் காண்பானுங்காட்சி யுஞ்சித் தற்பமும் வேறில்லாமையால்'' என்றார் சொரூபானந்தர். ''ஞானமே பிரமமென்ற முதன்மொழியின் பயன்கேள்,'' இதனை மகாவாக்கியத்திலும், அறிவே பரமென்பதைப்பற்றி முக்கியமாய், வாசிட்டத்தில், தேவபூசை கதையிலுங் காணலாம். சகல மதத்தரும் எதனைத் தெய்வமெனினுஞ் சொல்லால் அன்றிப் பொருளால் அன்று, சொல்லால் எனின், அறிபடுபொருளும் நினைவும் பாழுமாம். பொருளாவது, மெய்யுணர்வு. அதாவது; படிப்பானைப் படிப்பதெந்தவுணர்வோ அந்தவுணர்வு இங்ஙனமாயவுணர்வே தெய்வமன்றி வேறென்ப எல்லாஞ் சோதனையினிலையுருது தத்தளித்தழியும். ஆதலின் அறிவேதெய்வமென்றும். எல்லாவுயிரும் அறிவாதலின், ஒவ்வோருயிரும் தன்னைத் தானேனச் சிந்தித்தல், தியானம். அஃது அறிவெனவிசாரத்தால் தேர்ந்தும் விளங்காமை, பரோட்சம், அதனைத் தக்க ஆசானால் விளக்கிக் கொள்ளுதல், அபரோட்சம், அதோடு நில்லாது நானென லாதியாக அனைத்தையு மேல்கீழொப்பின்றி அவ்விளக்கமாகப்பன்னாள் அதிக வருத்தங் கொண்டு அகமுகமாகப் பழகியாக்கல், ஸ்திரவிசார மாஞானம். அப்போது அன்னியஞ்சிறிதுமின்றித்தானாய்த் தானன்றாய் விளங்கலின், அதுவேதுக்க நிவிர்த்தியுந் தடையற்ற ஆனந்தமுமாம், இங்ஙனமாய ஆனந்தமே தானாதல். இங்ஙனந் தானாதலே முத்தி. இதறியாதுபலருஞ் சொல்லப்பட்ட முத்திகள் இந்நிலைக்கு மாறாய்வாதலானும், இதுபோற் பழைமையன்றாமையானும். அந்நியமாதலானும், அஃதாகாவென்க. அது தீர்வை என்பார், பரமபாவனை பரோட்சமாம் பின்பந்தப் பரோட்சமே அபரோட்சந்திரவிசாரமா ஞானமே முத்தியாந்தீர்வையென்றார் இந்நூலாசிரியர். பரோட்சமே அபரோட்சமெனத் தேற்றேகாரங் கொடுத்தமையின், பரமபாவனையே பரோட்சம், பரோட்சமேயபரோட்சம், அபரோட்சமே திரவிசாரமா ஞானம், திரவிசாரஞானமே முத்தியெனத் தேற்றேகாரங்கொடுத்தனம். இங்ஙனங்கொடுத்தது ஒன்றுக் கொன்று தொடர்பாதல்பற்றி யென்க. இத்தொடர்பு செல்லும் வழிச் செல்ல அறியாதார், ஆங்

காந்த பயனிதுவேயென நிற்பர். நிற்பதால அவ்வவ்வவசரத்தை முத்தியென்பார். இவைமுத்தியாகுமா? ஆகாமை பற்றி இவற்றைப் பதவிமுத்தி யென்றனர் அறிஞர். இவ்வுளவறிந்தவர் ஆதலின் இவற்றைத் தீர்வையென்னுது ஒழிந்தனர் :

(க-து) பிரமஸ்வரூபத்தைத் தியானிக்குந்தியான முள்ளவா றெய்தினதோடுநில்லாது அதன்வழித்தாச் செல்லின் இவ்வவசரநிலைகளை முறையே தந்துவிடுமென்பது. இன்னுந் தொடர்பிருக்கப் பிரமத் தியானம் பிரமமாக்குமெனல், துணிவு பற்றி. (86)

87 - கவி. (அ கை.)

[அஞ்ஞானத்தைக் கெடுத்த பின்னர் விருத்திஞானம் இருக்க எங்ஙனம் அனுபவங் கைகூடும் என்ற வினுவிற்கு உத்தரம் இக்கவியில் கூறுகின்றார்.]

வீடதாம்பரி பூரண சொரூபத்தில் விருத்திஞா னமுங்கூடிச்
சேடமாகினு லகண்டமா மனுபவ சித்தியெப் படியென்றுற்
சாடி நீர்மண்ணைப் பிரித்ததேற் றும்பொடி தானுமண் ணெடுமாயு
மூடிஞானமு மறிவிலாமையைக்கெடுத் தொக்கவே கெடுந்தானே.

(இ-ள்) வீடதாம் பரிபூரண சொரூபத்தில் விருத்தி ஞானமுங் கூடிச் சேடமாகினுலகண்டமாமனுபவசித்தியெப்படியெனுல (எ-து) முத்திக்கு முதற்காரணமாகிய பரிபூரண சொரூபத்தில் அஞ்ஞானத்தைக் கெடுத்துத் தான்மாத்திர மிஞ்சிநின்றுள்ள விருத்தி ஞானமானது, தானும் அப்பிரமத்தோடுகூடி விசேடமாயிருக்குமானுல் துவிதமாகின்றதே, துவிதமானுல், எங்ஙனம் அகண்டாகார அனுபவசித்தி வாய்க்கும். வாய்க்காதே, இதற்கென் செய்தும் எனக்கேட்டையாயின்:—சாடிநீர் மண்ணைப் பிறித்த தேற்றும் பொடி தானு மண்ணெடு மாயும் (எ-து)—சாடியிலுள்ள கலங்கனீரை, நீர் வேறு அழுக்கு வேருகப் பிரித்த தேற்றுங்கொட்டைப் பொடியானது அவ்வழுக்கோடு தானுமொக்கமடியும்:—மூடி ஞானமுமறிவிலாமையைக்கெடுத்தொக்க வேகெடுந்தானே (எ-து) —(அதுபோல) விருத்திஞானமும் அஞ்ஞானத் தோடு எதிர்த்து அதனைநாசஞ்செய்து, அதனேடு தானுமொக்கவே மடியும். எ-று.

பரிபூரண சொருபமாதலே முத்தி யாதலால் இதனை முன் பின்னுக்கியது, காரியத்தைக்காரணமாக உபசரித்தற்கென்க. வீடு,

முத்தி, பரிபூரண சொரூபம், பிரமம். முத்திக்குப் பிரமம் பேதமெனக் கொண்டு நிமித்தகாரண காரியமென்பார் அந்நிலை அறியார்போலும். எந்த அறிவினால் தத்துவங்களையெல்லாம் விசாரித்துத் தானல்ல தானல்லவெனச் செல்லுகின்றதோ, அந்த அறிவைவிட நியதிகளையப் பெற்ற தத்துவக்குழாய்கள் வேருகுமானால் பிரமமும் வேருயிருக்கலாம். அங்ஙனமின்றே இங்ஙனமிருக்க. சுசாதிக விசாதிக சுகதபேதமயமாதல் தத்துவக்குழாய்கள். அன்ருதல், பிரமம். அந்த மயமா நின்றதும் இந்தமயமா நின்றதும், அறிவாதலால், அறிவே பிரம முதலியவனைத் துமெனவும், ஒன்றிலொன்றில்லாமை அறிவிலாதலால், அறிவே யுண்மை யெனவுங் கண்டாம். இங்ஙனமாய நிலை இவனின்னுமாகா மையால் இங்ஙனம் வினவினனெனப்பெற்ரும். பொருளல்லவற்றைப் பொருள் என்றுணர்ந்ததும், பொருளைப் பொருளென்றுணர்ந்ததுந் தானுதலால் அறிவே அஞ்ஞானமும் ஞானமுமென்ருயிற்று. ஆகவே தன்னுல் விளைந்த அஞ்ஞானந் தன்னுல் விளைந்த ஞானத்தாலழியும் போது, தன்னைவிடஞானம் வேறன்ருதலால் அஞ்ஞானத்தை அழித்துத் தானுமதனேடு ஒக்கமாயுமென உபமான பூர்வமாக விடைதந்த தெனத் தெரிந்தாம்.

(க-து) ஞானமுஞ் சேடமாகாதழியு மென்பது சேடம், மிச்சம் இந்த மிச்சம், பரிபூரணமெனற்குத் தடை. (87)

88 - கவி. (அ - கை.)

[இங்ஙனமிருக்கச் சீவன்முத்தரனுபவமெங்ஙனமோவென வினவலுக்கு விடை இக்கவியிற் கூறுகின்ருர்.]

இந்த நிச்சய முத்தரு ளனுபவ மிருப்பதெப் படியென்ருற்
சிந்தை யற்றபூ மண்டல விராசனுஞ் சிசுவும்போற் சுகமாவர்
பந்த முத்திகண் மறந்துபோ முண்டென்று பலர்சொலி னகையாவ
ரந்த ரத்தையுண் டுமிழ்ந்ததோர் கொதுகெனு மவர்களை நகையாரோ.

(இ-ள்.) இந்தநிச்சயமுத்தருளனுபவமிருப்பதெப்படியென்ருல் (எ-து) – இங்ஙனமாயதீர்ந்தநிலை சீவன்முத்தருக்குளனுபவமாக விருப்ப தெங்ஙனமோவெனக்கேட்பையாயின்: — சிந்தையற்றபூமண்டலவிராசனுஞ் சிசுவும்போற் சுகமாவர் (எ-து) – பயசிந்தையற்ற திரிலோக மண்டலாதிபதியாகிய சக்ரவாத்தியும், இதுநன்று தீதென்றறியாத சிசுவும்போலச் சுகரூபமாவர்: — பந்த முத்திகள்மறந்துபோமுண்

டென்று பலர்சொலினகையாவர் (எ-ந) — பந்த முத்தியுமறந்துபோ கும், பலருமுண்டென்று சொல்லுவராயின் சிரிப்பர்: — அந்தரத்தை யுண்டுமிழ்ந்ததோர்கொதுகெனு மவர்களைநகையாரோ (எ-து) - ஒரு கொசுகானது ஆகாயத்தை யெடுத்து வாயில்போட்டுத் துப்பிவிட்ட தென்று சொன்னாலவர்களைப்பார்த்து ஆர்தான் சிரிக்கமாட்டார்கள். எ-று

சிந்தையற்றபூமண்டலவிராசனுஞ் சிசுவும்போலெனவுவமை கூறியது; அரசனுக்கெதிரின்மைபோல் மகான்களுக்குச் சுசாதிவிசாதி சுகதபேதங்களின்மையினானும், சிசுவுக்குப் பகுப்பின்மைபோல் மகான் களுக்குத்தம்மைத் தவிரச்சிற்றறிவுபோறிவென்பதூஉம், சிற்றின்பம் பேரின்பமென்பதூஉம், ஆகிய பகுப்பு சிறிது மின்மையினானும், பந்த முத்திகள்மறந்துபோமென்றது; அஞ்ஞானத்தாற்பந்தமும், ஞானத் தால் முத்தியுமெய்தல்மரபு. இங்ஙனமிருக்க, இவர்களுக்குஞானபேத மேது, தம்மைத்தவிரஇவ்விரண்டுபேதமும் இன்மைபற்றி மறதிக்கே வருதலானும், உண்டென்றுபலர் சொல்லினகையாவரென்றது; சொல் லுவார்மடமைபற்றியாதலானுமென்க. இங்கே அந்தரமென்றது, ஞானகாயத்தை. கொசுகென்றது, தானலதைத் தானென்போரை. ஆகாயமாகிய விபுதத்துவத்தில் கொசுகெனல் ஓர் பரமாணுவினும் பரமாணுவெனத்தகுமா? இஃது ஆகாயத்தை விழுங்கி உமிழ்ந்ததென் றால் என்னவியப்போ, அதுபோல, சொல்லாலன்றிப் பொருளாற் பார்ந்தாயினுங் கேட்டாயினுமறியார், இவர்கள் அந்தப்பரமாகயத் தையன்றி இவர்களுளரோ, இவரே. இவர்கள் அதைவிழுங்கி உமிழ்ந் தாரெனல் வியப்பன்றே, என்றாரென்க. ஞானகாயத்தையெடுத்து விழுங்கல், முத்தி. உமிழ்தல் பந்தம். இதனை யார்தானேற்பர், இது பாமரருமேலாரெனலைக் குறிக்கின்றது. இவர்கள் அவமதிப்புக் கிடம் பெறுரோ பெறுவார்களென எதிர்மறைப் பொருடா நின்றது ஒகார மெனக் கொள்க. நகையாரே யெனப் பாடமோதின், ஏகாரம் எதிர் மறை.

(க-து.) மகான்கள் பந்தமுத்திமறந்தனரென்பது சிதாகாயத் தையன்றித் தனைபாலிடமில்லாமையின் ஏற்றற்பாலதேயென்றறிக. இருந்தாலன்றே மறவாதிருத்தற்கு. இதுதன்னைத்தான்சோதித்துழித் தெரியும். (88)

89 - கவி (அ - கை.)

[செகம்பொய்யெனற்குப் பொய்க்கதை ஒன்றை
இக்கவியிற் கூறுகின்றார்.]

மலடி மைந்தனுந் தாணுவிற் புருடனும் வான்மலர் முடிசூடி
யிலகு கந்தர்ப்ப நகரிலே சுத்திகை யிரசிதத்தை விலைபேசிக்
கலக மாயின ரிடையினிற் கயிற்றராக் கடித்திரு வருமாண்டா
ரலகை யாயின ரெனும்விவ காரத்தை யறிந்தவன் மயங்கானே.

(இ-ள்.) மலடிமைந்தனுந்தாணுவிற்புருடனும் வான்மலர்முடிசூடி, (எ-து) – மலடிபுத்திரனும். தறிபுமானும், இருவருங்கூடிக் ககனாரவிந்தத்தைக் குடுமியிற்சூடிக்கொண்டு: - இலகுகந்தர்ப்பநகரிலேசுத்திகையிரசிதத்தைவிலை பேசிக்கலகமாயினா (எ-து)—விளங்காநின்ற கந்தர்வமென்னுநகரின்கண் கிளிஞ்சல்வெள்ளியை விலைமதித்து, இவற்றைச்சுதந்தரமாக்கிக்கொள்ளுங் காரணத்தில் எனது எனதென்று வழக்கிட்டுத் தமக்குள்ளே கலகமாய்:—இடையினிற் கயிற்றராக்கடித்திருவருமாண்டார் (எ-து)—இங்ஙனங் கலகமிட்டுக் கொண்டிருக்கையில், பழுதைபாம்பு கடிக்க. அதனாலிருவருமிறந்தார்கள்:—அலகையாயினரெனும்விவகாரத்தை அறிந்தவன்மயங்கானே (எ-து) - அவ்வாறிறந்தவர்கள் பேய்களானார்கள், என்னுங் கதையினொழுங்கை அறிந்தவனெவனோ அவனிவ்வுலகாதியைமெய்யெனமயங்குவனு மயங்கானே எ-று

மலடியும், தாணுவுமெய் மைந்தனும், புருடனும்பொய். இது போல, பிரக்ஞைமெய். ஏனையவைபொய். சூடி, பேசி, கலகமாகி, மாண்டு அலகையாயினரென்பன எல்லாஞ் சேட்டைகள். இதுபோல; வந்தான், போனான், பார்த்தான், கேட்டான், நினைத்தான், மறந்தான், அறிந்தான், அறியான் என்பனவுஞ் சேட்டைகள். அந்தவினைமுதல் மெய்யாயின் அந்தச் சேட்டைகள் மெய்யாகலாம். இந்த வினைமுதல் மெய்யாயின் இந்தச்சேட்டைகள் மெய்யாகலாம். ஒருபோது மாகா வாறுபற்றி இங்ஙனமாயவுவமையால் மித்தையெனத் தெரிவித்தனர் உபமேயத்தை மித்தையெனக் காட்ட முழுதுமித்தையானகதையை இக்கவி உபமானித்ததால், பிறிது மொழிதலணி. உதாரணம், "நெடும்புனலுள் வெல்லுமுதலை யடும்புனலி, னீங்கினதனைப்பிற" என்பதனாலும்; "கொக்கொக்ககூம்பும்பருவத்து மற்றதன், குத்தொக்க சீர்த்தவிடத்து" என்பதனானுங்காண்க. முன்பின்பற்றி இங்கேயுவமே

யம் உலகாதியென்றும் ஏனையவையென்பது, தேகமுதலிய தத்துவக் குழாத்தை. இவைபிரக்ஞையினது சாயையென அறிக. உபாதான உபாதேயமயமாகாத தத்துவக்குழாங்கள் எங்கணுமில்லை. இங்ஙன மாய சோதனை அகலாதார் இக்கதையை மறவார். அகன்றார் மறப் பார் அசை குறைதலைப்பற்றி இரசிதத்தையென்றும். சில பிரதி, கலகமாய் முயற்கொம்பினுற்குத்தியே கிளைத்திருவருமாண்டார் என்றி ருககின்றது இதனையேற்கினு மேற்கலாம்.

(க-து) சித்தப் பிராந்தி, செகத் பிராந்தி தெளிந்தவன் மயங் கானென்பது கடிக்க வெனற்பாலது கடித்தென்றுயது காலவழுவ மைதி. காலதேசவஸ்து பரிச்சேத புடைபெயர்ச்சி சற்றுமின்றி ஞெப்திமாத்திரமாக ஒரு தன்மைத்தா விளங்குந்தன்பால் அவாந்தர மாகத் தினைத்துணைபுடைபெயர்ச்சி போற்றேன்றிய ஞெப்தி ஸ்புரிப் பே, மலடிமைந்தன், பரிபூரண நாட்டவிழப்பே. தானுவிற்புருடன். இழப்பென்றறியாமையே, வான்மலர். அது திணைபாவிடமா மீக்குற லே, முடிசூடல். இதிலெய்ப்புற்ற விடத்து அனைத்து மித்தையாகக் காண்டலே. கந்தர்ப்பநகர். தன்னைத்தானறெனவிசாரித்தலே சுத்தி காரசிதத்தை விலைபேசல். உபாதி சம்பந்தபாவநாசமெய்தலே, கலக கமாதல். ஆங்கெழுந்த விர்த்தி ஞானமே, கயிற்றரா. அஃதெரித்தலே கடித்தல், ஸ்புரிப்பும் நாட்டவிழப்பும் நசித்தலே, இருவருமாளல். பந்தமுத்தி கற்பிதமாக முடிதலே, அலகையாதலெனக் கொள்க பந்தமுத்தி பகுப்பின்மையைக்காட்ட, அலகை என்றார் (89)

## 90 - கவி (அ—கை)

[பொய்யே கதையான்வாறுபோலப் பொய்யே செகமெனக்கு றிப்பித்தமையின். இந்தப் பொய்யெனலையே மாயையென்றனர் அறிஞர். இந்தப் பொய்யே செகமாதியாகயாகவிகாரித்துப் தோற் றல் அனைத்து மாயாகாரியமெனப்படும். இதனிற் சித்தம் வையாது பூர்ணமான சத்தா நிற்றியென்பதை இக்கவியிற் கூறுகின்றார்

மாயையென்பது பொய்யெனிலது பெற்றவகையெலாம் பெய்யாமே
தாயை யன்றிமக் களுக்கொரு பிறவியுஞ் சாதியும் வேறுண்டோ
சேய சொர்க்கமு நரகமு நன்மையுந் தீமையும் பாராமற்
றூய சத்துசித் தானந்த பூரண சொரூபமா யிருப்பாயே.

(இ-ள்) மாயை யென்பது பொய்யெனி லதுபெற்றவகை யெ லாம் பெய்யாமே (எ-து)— மாயையெனப் படுவது பொய்யானுல், அதுகாரணமாக வந்தவனைத்தும் பொய்யாக வேண்டுமே, எங்ஙன

மெனில்: - தாயையன்றி மக்களுக்கொரு பிறவியுஞ்சாதியும் வேறுண் டோ (எ-து) - மாதாவினது பிறவியையுஞ் சாதியையுமன்றி அவள் பிள்ளைகளுக்கு வேறே பிறவியும் வேறே சாதியு முளவோ: - சேய சொர்க்கமு நரகமு நன்மையுந் தீமையும் பாராமல் (எ-து) - நெடுந் தூரத்தனவாகிய சொர்க்காதிபதவிகளும் ரவரவாதி நரகங்களும் நன் கெனப்பட்டவையும் தீங்கெனப்பட்டவையும் இவையெனப்பகுத்துணர் தல் செய்யாது: — தூயசத்து சித்தானந்த பூரண சொரூபமாயிருப் பாயே, பரிசுத்தமாநின்றுள்ள சத்துசித்து ஆனந்த நித்திய பரிபூரண இலக்கணமுடையதெதுவோ, அந்தச்சொரூபமே நீ யாதற்கு முயலுதி எ-று.

யா மா சா மாயா, என்னுஞ் சுலோகப்பொருளை யுணர்த்த நிற்றலின், மாயையென்பது பொய்யெனிலெனவும், சகசீவபரஞ் சத்தியம் போற்றேற்றுவவேனுந் தமக்கெனச் சுயம்பொன்றின்றிச் சோதனையில் யாவுமறிவா முடிவதென்னை? முடிதலின் அனைத்தும் அறிவின்கற்பிதமெனற்கு ஐயமென்னை? கற்பிதமாதலின் மாயாகாரிய மெனப்படும். இத்திண்ணநோக்கி, அது பெற்றவகை யெலாம் பொய்யாமேயெனவும், அனைந்துமாயாகாரிய மெனற்கு உதாரண மாகத், தாயையன்றிமக்களுக்கொரு பிறவியுஞ் சாதியும் வேறுண் டோவெனவும், அறிவைத்தவிர அயலொன்றுளதாகச் சோதனையிற் காணாமையின், சேயசொர்க்கமு நரகமு நன்மையுந் தீமையும் பாராம லெனவும், அநிர்தசடதுக்க அனித்தியகண்ட இலக்கணங்கட்கு அறிவு எதிர் மறையாதலின் தூயசத்து சித்தானந்த பூரண சொரூபமென வும், நாமெது வாதலோவென்னும் ஐயந்தவிர்தியென்பார், சொரூப மாயிருப்பாயே யெனவும் கூறினர். அது பெற்ற வகையாயுள்ள அனைத்துமெனப் பொருள் கொள்ளினு மேற்கப்பெறும். தாயை யன்றிமக்களுக்கொரு பிறவியுஞ்சாதியும் வேறுண்டோவென்ற உதா ரணம்; மாயையும், மாயாகாரியமும் அபேதமெனற்கன்றே, இங்கே கூறக்கிடந்தது. திரிபதார்த்தமும் அறிவுக்கய லென்னுமளவும், மாயா காரிய மெனப்படும். அறிவாயின், மாயையென லெங்கே, அதன் காரியமெனலெங்கே, இன்றுதலின், மறுக்கற்பாற்றே.

(க-து) யாவும் பொய்யாக்முடிதல்பற்றி அனைத்துமாயாகாரிய மென்பது இவற்றை மெய்யெனின் அஃது யாரேற்பர். (90)

## 91 - கலி (அ—கை)

[அனைத்துமாயாகாரியமாவதால் மித்தையாமேயெனின்,
எவரேற்பர், இதுகுற்றமாகமுடியாதா என்ற

வினவை இக்கவியிற் கூறுகின்றார்.]

பங்க யாசனன் முதற்பல தேவரும் பாருள பெரியோருங்
கங்கை யாதியாந் தீர்த்தமுந் தேசமுங் காலமு மறைநாலு
மங்க மாறுமந் திரங்களுந் தவங்களு மசத்திய மெனச்சொன்ன
லெங்க ணுயக னேயத னுற்குற்ற மில்லையோ மொழியீரே.

(இ-ள்) பங்கையாசனன் முதற்பலதேவரும் பாருளபெரியோ ரும் (எ-து)—தாமரைமலரையிடமாகவுடைய பிரமன்முதலிய பற்பல தேவரும் பூமியிலுள்ள சான்றோர்களும்; -கங்கையாதியாந் தீர்த்தமுந் தேசமுங் காலமு மறைநாலும் (எ-து)—கங்கைமுதலிய புண்ணிய தீர்த்தங்களும் காஞ்சி முதலிய புண்ணியஸ்தலங்களும், சிவராத்திரி, ஏகாதசி, நவராத்திரி நோன்பு, கார்த்திகை, முதலியபுண்ணிய காலங்களும், நான்குவேதங்களும்:- அங்கமாறு மந்திரங்களுந்தவங்களு மசத்தியமெனச் சொன்னல் (எ-து)— சந்தசு, கற்ப, வியாகரண முதலிய ஆறங்கங்களும், ஏழுகோடியாக விரிந்துள்ள மூலமந்திரங் களும், காமியம், நிட்காமியமென்னுந் தவங்களில் ஒவ்வொன்று அனேக பேதங்களா நிற்றலிற் றவங்களும், ஆகியவிவையனைத்தும் பொய்யென்று சொன்னல்: எங்கணுயகனேயதனுற் குற்றமில்லையோ மொழியீரே (எ-து)—எமக்குக் குருவாக எழுந்தருளிய நாயகனே! பொய்யென்று சொல்வதனுல் குற்றங்கள் சம்பவித்தற்கிடமில்லையோ? இதனை விளங்கத் தெரிவித்தருளும் எ-று

பங்கயாசனன் முதலென்றதனுற் பிரமா விஷ்ணு முதலிய பஞ்சகர்த் தாக்களுமெனப்பெற்றும் இக்கவியில் வந்திக்கத்தக்கவை களையே மித்தையாகுமென்று எடுத்துக்காட்டலின். எடுத்துக்காட்டணி. பங்கயாசனன் முதற்பலதேவருமெனவும், குற்றமில்லையோவெனவும், பாடமுமுண்டு. ஏனைய காலங்களையும், தேசங்களையுமருத்தங்கூறின். வழுத்தற்குரியதன்றும், வழுத்தற்குரியதாக்கின், இந்த அருத்தங்க ளெல்லாத் தாமேயுமையும். ஏனையவுமிங்ஙனமே.

(க-து) அனைத்துஞ் சத்தியமென்பவர் பலர். மித்தையென்ப வர் அரியர் இதுயாவருக்கும் குற்றமாமுடியுமே இதற்கென்செய்து மெனவினவினென்பது அனைத்தும்மித்தையென்றல் தனக்குடன்பாடன் றெனக் காட்டினென்க.

## 92 - கவி (அ—கை)

[அனைத்தும் பொய்யெனல் குற்றமன்றென

இக்கவியிற் கூறுகின்றார்.]

சொற்ப னந்தனிற் கண்டதைப் பொய்யென்று சொல்வது பிழையானு, லற்ப மாயையிற் றோன்றிய சகங்களை யசத்தெனல் பிழையாமே, சொற்ப னந்தனிற் கண்டதைப் பொய்யென்று சொல் லலா மெனின்மைந்தா, வற்ப மாயையிற் றோன்றிய சகமெலா மசத்திய மெனலாமே.

(இ-ள்) சொற்பனந்தனிற்கண்டதைப் பொய்யென்று சொல் வது பிழையானல் (எ-து)—ஒருவன் தன்கனவிற் கண்டதைப் பிற னுக்குச்சொல்ல அவன் அது பொய்யெனச்சொல்ல, கனவு கண்டவன் அதற்குடன்படாமல், நீசொன்னது தப்பெனச் சொல்லலாகுமெனின்: —அற்பமாயையிற்றோன்றிய சகங்களை யசத்தெனல் பிழையாமே (எ-து) — இயல்பாகவே அணுவாயுள்ளமாயை காரணமாகவுதித்த உலகங்களை வேதங்களும் மகான்களும் பொய்யெனக் கூறுவதுதப் பாகலாமே: -சொற்பனந்தனிற் கண்டதைப் பொய்யென்று சொல்ல லாமெனின் (எ-து)—தப்பென்று சொல்வதுதகாது, கனவிற்கண்ட தைப் பொய்யென்றே சொல்லலா மென்பையாயின்: —மைந்தா அற்ப மாயை யிற்றோன்றிய சகமெலாமசத்திய மெனலாமே (எ-து) - ஞான புத்திரா! இன்னதெனக் கணித்தற்கு அற்பமாயுள்ள மாயைகாரண மாகவுதித்த எல்லா வுலகங்களையும் ஐயமின்றிப் பொய்யெனக் கூற லாமே எ-று.

நிலையன்றி அப்போதப்போது வெவ்வேருகத் தோற்றுஞ் சொற்பனக் காட்சிபோல்வதா, என்றுமொருபடித்தா நிலையாயுள்ள வுலகம்? எனச்சங்கைவரின், மெய்யே, அந்தக்காட்சிக்கும் இந்தக் காட்சிக்குஞ் சுயம்புயாது? அதுவுமிதுவும் மனோகற்பிதமன்றி வேறு யாது. கனவில் நனவும், நனவிற்கனவுமெங்கே? காட்சியுமிங்ஙன மன்றோ. இவ்வுலகம், சாக்கிராவஸ்தையுள்ளளவும். அவ்வுலகம், சொற்பனுவஸ்தை உள்ளளவும். இவ்விரண்டவஸ்தையும் அறிவானை யன்றியில்லை. இவ்விருவித உலகமும் இவ்விரண்டவஸ்தையன்றி யில்லை இவ்விருவகையவஸ்தையும், இவ்விருவகையுலகமுஞ் சுழுத்தி யிற் கண்டிலம். இம்மூன்றவஸ்தையும் அறிவானையன்றி யொன்றி லொன்றின்றிச் சகடக்கால்போல் மாறுவதைத் தினந்தோறுங் காண்கின்றனம். இங்ஙனமாய நிலைகளை உன்னவுந்தெரியாது, பிறர் சொல்லினுஞ் செவிசாய்க்கவுந் தெரியாது, இவ்வளவு திறமையற்ற

வர்கள் கேட்குஞ்சங்கைக்கு உத்தரம பஞ்சமோ கூறுதும்- "எப் பொருளெத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்ப தறிவு" இந்நெறிச்செல்பவரோ? எப்பொருளெத் தன்மைத்தாயினு மப்பொருளப்படிக் காண்பதறிவு இந்நெறிச்செல்பவரோ, சங்கை செயப்புகுந்தோர். அந்நெறிச் செல்பவராயின் இங்ஙனங்கேளார். இந்நெறிச் செல்பவராயின் கேட்பர். எங்ஙனமெனில், அவர்கள் பொருளைப் பொருளாகவறிபவர்கள். இவர்கள் பொருளல்லவற்றை பொருளாகவறிபவர்கள். இவர்களுக்கு விடை யென்சொல்லினும் அவி சாரிக்குப்புத்தி சொல்லுவதுபோலும். பேதவாதம், அபேதவாதம் இத்தகையதெனவறியார் கண்டதேகாட்சி கொண்டதே கோலமென் போர், புறமுகநாட்டமின்றி அகமுகநாட்டங் கேட்டுமறியாஞானிகள். இவரிடுஞ்சங்கை இவர்போல்பவர் மதிப்பதன்றி அறிஞரெங்ஙன மதிப்பர். இது நிற்க.

(க-து) உலகம்; சொப்பனம்போறலிற் குற்றமன்றென்பது. இவ் வுவமை தக்கதென்க. சொப்பனத்திற் சுகித்தாற்போலும் இவ்வுல கிற் சுகித்தல், துக்கமெனக்காணளவும் (92)

## 93 - கவி (அ—கை)

[இன்னுமதனையே வைப்புறுத்தப் பொய் இஃதெனவும் மெய் இஃதெனவும் இக்கவியிற் கூறுகின்றார்.]

**பொய்யை மெய்யென்ற மூடர்புண் ணியரென்று புராணங் கூப்பிடுமானால், மெய்யை மெய்யென்ற ஞானிக்குக் குற்றங்கள் விதித்த சாத்திர முண்டோ. பொய்ய தேதெனி னும்ரூ பங்களாம் பூதமா கியமாயை, மெய்யதேதெனிற் சச்சிதா னந்தமா வியாபிக்கு மான்மாவே.**

(இ-ள்) பொய்யை மெய் யென்ற மூடர் புண்ணிய ரென்று புராணங் கூப்பிடுமானல் (எ-து)—செகசீவபரமென்னும் பொய்யைப் பொய் என்று அறியாது மெய் என்று அறிந்தார் மூடரன்றோ, இவர் கள் செய்த அன்னதான முதலிய முப்பத்திரண்டு அறங்களாலும், சிவகயிங்கிரிய முதலிய தவ சிரேஷ்டத்தாலும், பதினெண் புராணங் களும் இவர்களைப் புண்ணியவான்களென்று விடாது கோஷிடிக்கு மானல்: —மெய்யை மெய்யென்ற ஞானிக்குக் குற்றங்கள் விதித்த சாத்திரமுண்டோ (எ-து) - காரணகாரிய ரகிதமாயது யாதோ, அஃதன்

ரூே மெய்யெனத்தகுவது, அதனைச் சொல்லால் ஏலாது விசாரத் தெளிவாலேற்பதன்றூே ஞானம், அங்ஙனமாய ஞானத்தை உடையா ரன்றூே ஞானிகள் எனப்படுவோர், இவர்களன்றூே மெய்யை மெய் என்ற ஞானிகள், இவர்கள் மெய்யை மெய் என்றதனல் இவர்கள் மேற்குற்றம் விதித்தற்கு இடம் உண்டோ, இவர்கள்மேற் குற்றங் கள் விதித்த சாஸ்திரம் ஏதேனும் உண்டோ, இல்லையே. இதுநிற்க. பொய்யாவதுஇனையதெனவும், மெய்யாவதுஇனையதெனவும் இனிக் கூறுதும் அதனைக்கேளுதி: – பொய்யதேதெனி னுமரூபங்களாம் பூத மாகிய மாயை (எ-து)—பொய் எனப்படுவது யாதெனில், நாமரூபங் களாக எங்கணும் விரிந்துள்ள பஞ்சபூதமெனப்படுவதாகிய மாயை யாம்: – மெய்யதேதெனிற் சச்சிதானந்தமா வியாபிக்குமான்மாவே (எ-து)—மெய்யெனப்படுவது யாதெனில் சத்து, சித்து, ஆனந்தம் என்னும் இலக்கணமே வடிவாய் எங்கணுநிறைந்துள்ள ஆன்மாவாம். எ-று. ஏ — ஈற்றசை.

பிரத்தியட்சமாயுள்ள சகங்காரணமாக அன்றூே, அப்பிரத்தியட்ச மான சீவேசுராளுண்டெனக் கோடல். விகாரத்தைச் சுயம்பெனக் காட்டாது உலகைக்காட்டில், ஏனைய இரண்டையுங் காட்டலாம். அங்ஙனம் ஒருவரும் இன்றே. சொல்மாத்திரத்தானும், தோற்றன் மாத்திரத்தானும், இம்மூன்றுஞ் சத்தென்றேற்பதைவிடமித்தையென் றேற்பது மனமலையாமைக்கும், சஞ்சலமணுகாமைக்கும், உள்ளக்களிப் பகலாமைக்கும், தானேதாணுதற்கும் இடம்பெறுமன்றூே? இங்ஙன மாய பலனுக்கன்றூே, சற்கிருத்தியமாதி தொழில்புரிவது. இவற்றைப் புரிவதைவிட உலகை மித்தை என்று ன்னுவது மாத்திரஞ் செய்யின் இப்பயனனைத்தையும் இம்மையிற்றானே அனுபவிக்குதுமே, இது உள்ளங்கை நெல்லிக்கனிபோலாமே, இந்நன்மை அறியாமை பற்றிப் பொய்யைமெய்யென்ற மூடரெனவும், சகமாகத்தோற்றுவதும், அன்று கத் தோற்றுவதும், அறிவன்றூே, இதுவன்றூே மெய், இதனையன்றூே மெய்யெனக்கோடல், கொண்டபடி கண்டவரன்றூே மெய்ஞ் ஞானி கள், காணுதாரன்றூே போலி ஞானியர் இவரைப் போலி ஞானிய ரெனக் குறிக்கவன்றூே முன்னர் "கண்டறிந்தது ஞானம்" என்றது. இவற்றை எல்லாங் கருதி மெய்யை மெய் என்ற ஞானி எனவும், இவர்களை மூடர்களெனற்கு என்னையேதுளது. இன்றுதலின், ஞானிக் குக் குற்றங்கள் விதித்த சாஸ்திரம் உண்டோ எனவும் கூறினர். பொய்யாகிய சகசீவபரங்களைப் பொய்யென்றது. குணவாகுபெயர். மெய்யாகிய ஞானத்தை மெய்யென்றதூஉம் இங்ஙனமே. ஞானம்

அன்றி இல்லையாதலின், மெய்யதான்மாவென்றுரெனக்கொள்க. சச்சிதானந்தம் ஆன்மாவெனவே, அநுர்தசடதுக்கம் பிறவெனக்கண்டாம். சச்சிதானந்தமே அநுர்தசடதுக்கமாகத்தோற்றல் ஆன்றி அயலன்றெனச் சோதனையாற் காணுதி. எங்ஙனமெனில்; ஒன்று சொல்லுதும். ஓர் பாறையாகிய கருங்கல்; உளதோ, இலதோ? உளதெனில், சுயம்பாகவேண்டும். சுயம்பெனில், உளிமுதவிய கருவிகளாற் சேதிப்பதற்கு இயையாதிருக்கவேண்டும். இயையுமெனில், சுயம்பென்றிருக்கவேண்டும். இயைந்தபோதன்றே தூளாகக்காணும். இப்போது சுயம்பென்னலாகாதாவெனின், அந்தத்தூள்களின்சையோகமேபாறையாகத்தோற்றலன்றி இப்போது வேறாகக் கூறற்கு இடமுளதோ, இன்றே, தூளையன்றிப் பாறை எங்கே, நமது நாட்டந் தூளாகியக்கண், பாறையின்மையும், ஆகாயிடத்துண்மையுமாகக் காண்பதென்னை? நாம் சத்தாகக்காணில் சத்தாகவும், அசத்தாகக்காணில் அசத்தாகவுந் தோற்றலின் நமது சத்தைக்கொடுத்துப் பார்ப்பதனாற் சத்தாகத் தோற்றுவதேயன்றி வேறென்னையுளது. இதுவே தீர்ப்பெனற்கு, மெய்யதேதெளில் சச்சிதானந்தமாவியாபிக்கு மான்மாவே என்றார்.

(க-து) பொய் மெய் இலக்கணம் இத்தகையதென உணர்த்தியதென்பது. பொய்யை மெய்யென்னும் அளவுஞ் சென்மமே. அதாவது; உருவமாக வேனும் அருவமாகவேனும் பாவித்தல். வஸ்து, இங்ஙனமன்றுதலானும், தன்னையகலாததை விட்டுத் தனக்கயலாகக் கருதி எட்டத் தவம்புரியினும் அணித்தாதற்குஇயைவதன்றாமையானும், தன்னைத்தான் தேடிக் காணுந்தளவும், தான் தனக்கயலாக முடியும். பரமும் அயலாகமுடியுமெனக் கூறவேண்டுமோ? இதனாலன்றே, அருள், பலர, ஆனந்தம், ஆனந்தாதீதம் என்பவற்றை தனது அனுபூதிவிலாசமெனக்காணாது, சிவானுபூதி விலாசமெனப் பராக்காயினர், அங்குந்தானின்றே? இன்றெனின் அங்ஙனம் அனுபவித்தல் தானன்றே, அங்குந்தன்னையாயாமல் விட்டு விட்டார்களே, இவர்களுக்கு எங்கேதான் முடிவுண்டு, இல்லையே பந்தத்தில் அயல் நாட்டம் போல முத்தியிலும் அயனாட்டமென்னின் இதுஞானமாகுமா? தன்னை விட்டுவிட்டார்களே, மானிடசென்மத்தில் தானே கண்டுபிடிக்க வேண்டுமே. "இப்பிறவிதப்பினலெப்பிறவி வாய்க்குமோ" இதற்கென் செய்தும் யாமறிகிலம். ஆன்மாவேயுண்மை யென்றனரே இந்நூலாசிரியர். இதையாவதுவிசாரித்து தெளியாதது; செல்வக்கல்விமதர்ப்பு. பொய்யென்பதுமாயை. இதனைச்சத்தி என்று ஐவகையாக்கி மெய்யென்றனர் மூடரெனினுமமையும். (93)

94 - கவி (அ கை)

[அனைத்துமாயாகாரியமெனக்கூறி மித்தையென்றீர், அம்மாயா விலக்கணத்தையும், அதனது பேதாபேதங்களையும் தெரிவிக்கவேண்டுமென, அறுவகையாக வினவலை இக்கவியிற்கூறுகின்றார்.]

மாயை யென்பதே துடையரா ரெப்படி வந்தது வருவானேன்
மாயை யென்பது பிரமத்தின் வேறெனின் வஸ்துவு மிரண்டாமே
மாயை யென்பதும் பிரமமு மொன்றெனின் வஸ்துவும் பொய்யாமே
மாயை யென்றமே கங்களுக் கொருசண்டமாருத குருமூர்த்தி.

(இ-ள்.) மாயையென்பதே துடையரா ரெப்படிவந்தது வருவானேன் (எ-து) - மாயையென்பதியாது, அதனைச்சுதந்தரமாகவுடையார்யாவர், அது வந்தவகையெங்ஙனம், வருதற்கேதென்னை: - மாயையென்பது பிரமத்தின் வேறெனின் வஸ்துவுமிரண்டாமே (எ-து) - மாயையென்பது பிரமவஸ்துவினின்றும்வேறாயதெனின், அப்போது வஸ்து, இரண்டெனக்கொள்ளப்படுவதாமே: — மாயையென்பதும் பிரமமுமொன்றெனின் வஸ்துவும்பொய்யாமே (எ-து) — ஆயின் மாயையென்பதும், பிரமவஸ்துவும் ஒன்றெனக், கூறலாமேயெனின் மாயையைப்போலப் பிரமவஸ்துவும் பொய்யெனக் கொள்ளப்படுவதாமே: — மாயையென்றமேகங்களுக் கொருசண்டமாருதகுரு மூர்த்தி (எ-து) - மாயையென்றமேகங்களுக்கெல்லாம் ஓர்பிரசண்டமாருதம் போன்று விளங்குபவராகிய குருமூர்த்தியே. எ-று.

இங்ஙனம் மாயையைப்பற்றி அறுவகையாக வினவினனென்பது. அறிவே பிரமம், அறியாமையே மாயை. அறிவை அன்றி யறியாமைவேறாயின், பிரமத்தையன்றி மாயைவேறாகலாம். யாது காரண காரியங்கட்கும் உடன்படாமை இனையதென்றுணர்தல், அறிவு. உணராமை, அறியாமை. யாது உண்மையை உணர்கின்றதோ. அதுவே உணராததால், அறிவே அறியாமையாயிற்று. அறிவையன்றித் தெளிவும், மூடமும் வேறின்மையின், இவ்விருவினைக்கும் வினைமுதல், அறிவாயிற்று. அறிவாகவே, இரண்டெனப்படாது. ஒன்றெனின், அறிவையன்றி அறியாமையிருக்கவேண்டும். இன்றாதலின் பிரமத்துக்கென்னாது, பிரமத்தின் என்றார். மாயையென்பதும் பிரமமுமொன்றெனில் வஸ்துவும்பொய்யாமேயென்றது; இன்மைப்பொருளுக்கே இயைதற்பாலது மாயையாதலின் அதனோடு பிரமத்தையுஞ்

சேர்த்து ஏகமெனின், அதற்குரிய இன்மைத்தன்மை இதற்கும் எய்து மெனற் கென்க. சண்டமாருதம், பெருங்காற்று, மாயையென்ற மேகங்களென்பது உருவகம். சண்டமாருத குருமூர்த்தியென்பது, உவமைத்தொகை.

(க-து) மாயையைப்பற்றி அறுவகையாக வினாவினனென்பது. இது தொகுத்துச் சுட்டலென்னுமுத்தி. (94)

95 - கவி (அ - கை)

[மேல் அறுவகைவினாவினுள், இக்கவியில் நான்குவகை வினாவுக்கு உத்தரங் கூறுகின்றார்.]

அதனை யின்னதென் றுரைத்திடப் படாமையா லவாச்சியவடி வாகு, மிதுத னக்குள துடலியா னுலகுமெய் யெனுமவ ருடை யோர்கள், கதையி லாதபொய் வந்ததிப் படியென்று கண்டபே ரிலை மைந்தா, விதன மாயையேன் வந்ததென் றுற்புத்தி விசாரமற் றத னாலே.

(இ-ள்) அதனையின்னதென் றுரைத்திடப்படாமையா லவாச்சிய வடிவாகும் (எ-து) — அம்மாயை இத்தகையதென்று யாவரானு மளவைகளால் எட்டிச்சொல்லப்படாததனால் அஃதுஅவச்சியவடிவமெனப் படுவதாம்:— இதுதனக்குள துடலியானுலகு மெய்யெனுமவருடை யோர்கள் (எ-து) – இது தனக்குச்சொந்தம் இவ்வுடலேயான், இவ்வுலகஞ்சத்தியம், என்னுந்திடக் ஞானமுடையாரெவரோ, அவர்களே அம்மாயையுடையோர்கள்: கதையிலாத பொய் வந்ததிப்படியென்று கண்டபேரிலைமைந்தா (எ-து) ஞானபுத்திரா! கதைக்கட்டிச்சொல்வதற்கு வழியொன்றுமில்லாத பொய்யாகிய மாயை இன்னவிதமாக வந்ததென்று கண்டவர்களொருவருமில்லையே; — விதனமாயையேன்வந்ததென்றுற் புத்திவிசாரமற்றதனாலே (எ-து) — விதனத்துக்கேயிடமாயுள்ள மாயையானது, ஏன்வந்ததென்றால். ஞானவிசாரணைசெய்யும் விடாமுயற்சி சிறிதுமில்லாததினால், எ-று.

அவாச்சியவடிவம், தனக்கெனச்சொருபமொன் றில்லாமை. இதுதனக்குளது: மமகாரம். உடலியான், அகங்காரம். பொய்யை மாயையென்றது, காரணவாகுபெயர். தாய் தந்தை வந்த வரிசை யுகை ஆதிதொடங்கிச் சொல்லுதற்கெட்டாமையால், கதையிலாத பொய்யெனவும், உலகைமெய்யென நம்பினோர் உயிர்விடுங்கால்,

உலகை விடுதற்கிட்டஞ்சற்றுமின்றி வதைவர் ஆதலால் விதனமாயை யெனவுங்கூறினர். புத்திவிசாரமறுதல், தன்னைத்தான் உள்ளவாறு ஆராய்தலின்மை. மாயையைக் கதைகட்டிச் சொல்பவரும் அதனைமெய் யெனக் கேட்பவரும், அவிவேகியர். எங்ஙன மெனில், தன்னைத் தானுள்ளவாறு எட்டவகையறியார் ஆதலினென்க.

(க-து) நால்வகைவினவுக்கும் நால்வகைவிடைநேரேகூறின ரென்பது. இதுதனக்குளதுவுடலின லுலகுமெய்யெனப்பாடமுமுண்டு. அறுவகைவினவிருகக, ஐவகைவினவெனவும், அறுவகைவிடையிருக்க, ஐவகைவிடையெனவுங்கொண்டு உரைகூறுவதென் சிறப்போ யாமறி கிலம். இதுநிற்க. இவ்வினவிடைகள், நிரனிறைப்பொருள்கோள். ஏது, ஆர், எப்படிவந்தது, வருவானேன், இரண்டாமே: பொய்யாமே. இவைவினவோ, அன்றே? வினவெனின், ஆருதற்குத் தடையென்னை? அவாச்சியவடிவாகும், உடையோர்கள், கண்டபேரில்லை, புத்திவிசார மற்றதனல் வந்தது. இவைவிடையோ, வினவோ! விடையெனின், நான்காதற்குத்தடையென்னை. வினவிடையெனல் அறியார்போலும். (95)

## 96 - கவி. (அ — கை)

[வஸ்துவும் இரண்டாமேயென்னும்ஐந்தாம்வினவிற்குவிடை இரண்டு கவியினுங்கூறப்புகுந்தார், இக்கவியில், பிரமத் திற்கும், திரிசியங்கட்கும், இடையில்ஒர்சத்தி உண்டெனக் கூறுகின்றார்.]

அருவ மாகுமா யாவிவித் தைகள்விளை யாடுமுன்றெரியாவே
யுருவ மாம்பல கந்தர்ப்ப சேனையா யுதித்தபின்வெளியாகும்
பிரம சத்திக ளனந்தமா மதைக்கண்டு பிடித்திடல் கூடாதே
பரவு பூதங்கள் கண்டனுமானத்தாற்பலருக்கும் வெளியாமே.

(இ-ள்) அருவமாகுமாயாவி வித்தைகள் விளையாடுமுன் றெரி யாவே (எ-து) — இந்திரசாலஞ்செய்வோன், தனது வினோதங்காட்ட விளையாடுதற்கு முன்னரே, ஒருவர்கண்ணுக்கும் புலப்படாது அருவமா நின்றுள்ள தனதுவித்தைகள், எங்ஙனங் காணப்படும், காணப்படாவே: — உருவமாம்பலகந்தர்ப்பசேனையா யுதித்தபின்வெளியாகும் (எ-து) — அவை பிரத்தியட்சத்திற்கு உருவமாக் காண்டற்குறியபற்பல விசித்திர கந்தர்ப்ப சேனைகளாய்த்தோன்றியபின்யாவருக்குங்காணப்படும் (அது போல): — பிரமசத்திகளனந்தமா மதைக்கண்டுபிடித்திடல் கூடாதே

(எ-து) — பிரமத்திற்குரிய சத்திபேதங்கள் அனந்தவிதமாம், அதனைக் கண்டுபிடித்தல் யாவராலுங்கூடாது. (மற்றெங்ஙனமெனின்) — பரவுபூதங்கள் கண்டனுமானத்தாற் பலருக்கும் வெளியாமே (எ-து) — எங்குமாவியாபித்துள்ள பஞ்சபூதங்களைக்கண்டு, அதுகாரணமாக அனுமானிக்கும் அனுமானத்தினால்சகலருக்கும் இருப்பதாகவிளங்கும் எ-று.

கண்டனு மிதித்தலாலெனப்பாடமுமுண்டு. அருவமாகும்வித்தைகளென்முடிக்க. மாயாவி, பிரமம். வித்தைகள், சத்திகள் கந்தர்ப்பசேனை, பூதங்கள். இவை உபமான உபமேயங்கள் அனுமானம், பலருக்குமென்னும் இவ்விருமொழிகளையும் ஈரிடத்துமொட்டுக. மாயாவி வித்தைகள் கந்தர்ப்ப சேனைகளால் அனுமானித்தல்போன்று. பிரம சத்திகள் பரவுபூதங்களால் அனுமானிக்கபடுமெனவுணர்க. பிரம சத்திகளனந்தமென்றது; இச்சா சத்தி, கிரியாசத்தி, ஞானசத்தி, ஆதிசத்தி, பராசத்தியென ஐந்தாம், இவற்றுள் ஒவ்வொன்றும் எண்ணிறந்த பேதங்களாதல்பற்றியென்க, இவைசோதனையாற் றெரியலாம். அநந்தமென்பது தொகையொருமைபற்றி.

(க-து) இவ்வுபமானஉபமேயத்தால் சத்திகளிருப்பை அவற்றின் காரியங்களால் அறியலாமென்பது. அதிசூக்குமமான வித்தைகளெல்லாம், அறிவு நுட்பம்மேலிட மேலிடக்கண்டுகொணடே வருவதை இப்போது பிரத்தியட்சத்திற் காணலாம், (96)

97 - கவி. (அ-கை)

[வித்தைகள்போலச் சத்திகள்காரியகாரணமாயிருந்தும், ஆதார ஆதேயங்காணப்படுமாறுபோலத்தாங்காணப்படா என்பதை இக்கவியிற் கூறுகின்றார்.]

காரி யங்களுஞ் சத்தியா தாரமுங் காணுமற் றதுமாயம்
பாரி னின்றமா யாவியுஞ் சேனையும் பார்ப்பவர் கண்காணும்
வீரி யந்திசழ் வித்தையா யினசத்தி வெளிப்படா ததுபோலப்
பேரி யற்பிர மத்துக்கு மூலருக்கும் பிறிதுசத் திகளுண்டே.

(இ-ள்.) காரியங்களுஞ்சத்தியாதாரமுங்காணு மற்றதுமாயம் (எ-து) — சத்திக்குக் காரியங்களும், காரணமும், எவர்க்குங் காணப்படும். எனையசத்தியோ, சற்றுங் காணப்படாது: — (எங்ஙனமெனில்,) பாரினின்ற மாயாவியுஞ்சேனையும் பார்ப்பவர்கண்காணும் (எ-து) — பூமியிலிவ்வித்தைகளை விளையாடிக்கொண்டிருந்த, இந்திர

சாலஞ்செய்வோனும், அவ்விளையாட்டாற் காணப்படுஞ்சேனைகளும் வேடிக்கை பார்க்கப்புறப்பட்டவர்க்கு நேரே காணப்படும்: – வீரியந் திகழ்வித்தையாயினசத்தி வெளிப்படாததுபோல (எ-து) – இளையாத வீரத்துவத்தால் விளங்குகின்ற வித்தையாகிய சத்தியானது காணப் படாது, எங்ஙனமோ அதுபோல: – பேரியற்பிரமத்துக்குமுலகுக்கும் பிறிதுசத்திகளுண்டே (எ-து) – மிக்கவிலக்கணக்களையே இயல்பாக உடைய பிரமத்துக்கும், உலகத்துக்குமிடையே சிலசத்திகள் பிறிதாக விருக்கின்றனவே, அவைகாணப்படுமா, காணப்படாவே. எ-று.

சத்திக்காதாரம், பிரமம். ஆதேயம்' உலகம் மாயா சத்தியைத் தவிர உலகிருக்குமாயின், பிரமத்தைத்தவிர மாயாசத்தியிரு க்கலாம் எங்ஙனம்; அறியாமையன்றி உலகிருக்குமாயின், அறிவையன்றி அறியாமையிருக்கலாம். இல்லை எனின்' வஸ்துவுமிரண்டாமேயெனல் கூடாது. மாயாவியும், சாலக்காட்சியும் பிரத்தியட்சம். வித்தை அப் பிரத்தியட்சம். அதுபோல பிரமமும், உலகமும் பிரத்தியட்சம். மாயா சத்தியப்பிரத்தியட்சம். சத்தியாசாரமும் எனப்பாடமுமுண்டு. இங்கேயா சாரமுமென்பது பொருந்தாது.

(க-து) மாயாசத்தி பிரமத்தை த்தவிர வேறின்மையால் இரண்டுவஸ்துவாகாவென்பது. பிரமப்பிரதிபலனமே சத்தியெனவறிக.

(97)

98 - கவி (அ – கை)

[ஆரும் வினாவிற்குவிடை இக்கவியிற் கூறுகின்றார்.]

சத்தி சத்தனைத் தவிரவே றன்றுகாண் சத்தனு மாயாவி
வித்தை காட்டிய விந்திர சாலம்போய் வித்துவா னும்போலப்
புத்திமைந்தனே சத்திமா னாகியபூரண வான்மாவாம்
வத்து நிர்ணயஞ் சொன்னதிட்டாந்தத்தின் வழிகண்டு தெளிவாயே.

(இ-ள்) சத்திசத்தனைத்தவிர வேறன்றுகாண் (எ-து) – சத்தி யானது சத்தனைத்தவிர வேறோர் முதலன்றெனக்காணுதி: – சத்தனு மாயாவி வித்தைகாட்டிய இந்திரசாலம்போய் வித்துவானும்போல (எ-து) – சத்தனாகிய மாயாவித்தை செய்வோன் தனது வித்தையினால் காட்டிய இந்திரசால வினோதக் காட்சிகள் நீங்கியவிடத்தும் நீங்காது நின்றோன் வித்துவான் மாத்திரமாகுமாறு போல: – புத்திமைந்தனே சத்திமானாகிய பூர்ண ஆன்மாவாம் வத்துநிர்ணயஞ் சொன்ன திட் டாந்தத்தின் வழிகண்டு தெளிவாயே (எ-து) – அறிவுள்ளபுத்திரா!,

சத்திமானெனப்படும் பரிபூரணமாநிறைந்துள்ள ஆன்மவஸ்து நிச்சயத்தை முன்சொன்ன திருஷ்டாந்த முறையைக் கண்டு தெளிந்து கொள்ளுதி. எ-று.

இந்திரசாலம்; வித்தையைத்தவிர இல்லாவாறுபோல, வித்தையும், வித்துவானைத்தவிர வேறின்றும் என்பது எங்ஙனமோ அங்ஙனமே உலகமும்; மாயா சத்தியைத்தவிர இன்றும், மாயாசத்தியும்; சத்தனுகியவான்மாவைத்தவிர வேறின்றும். வேறின்றுகவே, இருப்பது, ஆன்மாமாத்திரமென்றுயிற்று. ஆகவே, வித்தையிருந்தபோதும் இல்லாதபோதும் வித்துவானிருக்கு மாறுபோன்று, மாயாசத்தியிருந்தபோதும் இல்லாத போதும் ஆத்மா இருக்குமெனப்பெற்றும். பெறவே, வித்தை; ஆபாசதர்மம் பெற்றுற்போல, வித்துவானுபாசதர்மம். பெற்றுனல்லன். அதுபோல, மாயாசத்தி ஆபாசதர்மம் பெற்றுற்போலச், சத்தனுகிய ஆன்மா; ஆபாசதர்மம் பெருவாறு கண்டாம். காணவே மாயையைப்போல, ஆன்மாபொய்யன்றெனத் தெளிந்தாம்

(க-து) வஸ்து; மாயையைப்போலப் பொய் யன்றென்பது. போகவென்றது, போயென்றுயது காலமயக்கம். ஆன்மாவின் வஸ்துவெனின், கிழமைப் பொருளாதற்கு இடமின்று. ஆதலின், ஆன்மாவாம் வஸ்துவென்றும். சிலரதியில், இந்திரசாலம் பொய் வித்துவான்மெய்போல, என்றிருக்கின்றது அங்ஙனம் பொருள் கொள்ளினும் அமையும். (98)

## 99 - கவி (அ - கை)

[முன்னர் மாயை என்பது பொய்யெனக் கூறிப் பின்னர் பிறிது சத்திகளுண்டே எனக் கூறுவதென்னைகொலோ என்ற வினாவிற்கு உத்தரம் இரண்டுகவியானுங் கூறப்புகுந்தார் இக்கவியில் உண்டென்று ஏற்காவிடில் சராசரங்கட்குச் சுபாவங்கள் வேறுமே யெனக் கூறுகின்றார்.]

இல்லை யாகிய சத்தியை யுண்டென்ப தெப்படி யெனக்கேட்கிற்
புல்லை யாதியா மசேதனப்பொருளெலாம் பூத்துக்காய்ப் பனபாராய்
நல்லை யாமக னேயதிற் சிற்சத்தி நடந்திடா திருந்தக்கால்
தொல்லை யாய்வருஞ் சராசர வுயிர்க்கெலாஞ் சுபாவங்கள் வேறுமே.

(இ-ள்) இல்லையாகிய சத்தியையுண்டென்ப தெப்படி யெனக் கேட்கில் (எ-து) மித்தியாகிய மாயாசத்தியை மீண்டுமுண்டென்பது

எங்ஙனங் கூடுமெனக் கேட்பையாயின்: — புல்லையாதியாமசேதனப் பொருளெலாம் பூத்துக்காய்ப்பனபாராய் (எ-து) புல்லையாதியாக வுடைய சடப்பொருள்களனைத்தும் புட்பித்துக் காய்க்கின்றவைகளைக் காணுதி: — நல்லையாமகனேயதிற் சிற்சத்தி நடந்திடாதிருந்தக்கால் (எ-து) — சற்புத்திரா! ஒவ்வொன்றிலுஞ் சிற்சத்தியானது வியாபியா திருக்குமாயின்: - தொல்லையாய்வருஞ் சராசரவுயிர்க்கெலாஞ் சுபாவங் கள்வேறுமே (எ-து) — தொன்றுதொட்டு விடாதுவருகின்ற சராசரமா நின்றுள்ள உயிர்களுக்கெல்லாஞ் சுபாவங்கள் வெவவேறுமுடியுமே எ-று.

சேதனம், அறிவு. அசேதனம், அறியாமை. இங்கே நடக்குதல், வியாபித்தல். சரம், அசைவு. அசரம், அசையாமை. சராசர வுயிர்களில் எது எதற்கு ஏது இயல்போ, அங்ஙனமங்ஙனமாவது சிற்சத்தியின் தன்மை எனக்காண்க சீர்மிகுமாதலின் அதிலதிலென வடுக்காது நின்றனர்.

(க-து) சமஸ்தமுஞ் சிற்சத்தியை ஆதாரமாகக் கோடலின் தத்தஞ்சுபா வத்தினின்று மாறுதென்பது. அனைத்துஞ் சிற்சத்தி விலாசமாதலின் சிற்சத்தி யுண்டெனப்பெற்றும். சத்தியுண்டெனல் பகிர்முகத்தாலென்க. (99)

## 100 - கவி (அ-கை)

[அனைத்துஞ் சிற்சத்தி நியமத்தினுல் தத்தம் இயல்பைவிட்டு மாருததை இக்கவியிற் கூறுகின்ருர்.]

கருப்பை முட்டையுட் பறவைகள் பலநிறங் கலந்தசித் திரம்பாரா
யருப்ப மாஞ்சத்தி நியமமில் லாவிடி லரசிலா நகர்போலாம்
நெருப்பு நீர்களாங் கசப்புமே மதுரமா நீசனு மறையோதும்
பொருப்பு மேகமாங் கடலெலா மண்களாம் புவனமிப் படிபோமே

(இ-ள்) கருப்பைமுட்டையுட் பறவைகள் பலநிறங் கலந்த சித்திரம்பாராய் (எ-து) — கருப்பையிலிருக்கு முட்டைக்குள் பட்சிகள் பலநிறங்கலந்திருக்கின்ற விநோதசித்திரங்களாயிருப்பதைக்காணுதி:— அருப்பமாஞ்சத்திநியமமில்லாவிடி லரசிலாநகர் போலாம் (எ-து) — உணர்தற்கரிதாகிய சிற்சத்தியின் நியமமில்லாவிட்டால், அரசனில்லாத பட்டணம்போல வொழுங்கற்றநிலையினதாக முடியும்: — நெருப்பு நீர்களாங் கசப்புமேமதுரமா நீசனுமறையோதும் (எ-து) — (எங்ஙன மெனில்) நெருப்பு சலமாகவும், கசப்புத் தித்திப்பாகவும், சண்டாளன்

வேதாத்தியயனஞ் செய்வதாகவுமுடியும்:—பொருப்பு மேகமாங்கட லெலாமண்களாம் புவனமிப்படிபோமே (எ-து)—மலைகள் மேகங்களாக வும், சமுத்திரமுழுதும் மண்களாகவும், இதுபோலப் பூமிமுழுவதும் இங்ஙனமாகவு முடியுமே. எ-று.

அருப்பம், துக்கமெனினுமமையும். நியமம் — ஒழுங்கு. பறவைக் கிடம், முட்டை, முட்டைக்கிடம், கருப்பை, எனவே, கருப்பையி லிருந்து முட்டையும், முட்டையிலிருந்து பறவையும் உண்டாதலால், கருப்பை முட்டையுட் பறவைகளென்றார்.

(க-து) அனைத்தும் அரசிலா நகர் போல நிலை மாறும் என் பது. சத்தி, அகமுகத்திற் சிற்சத்தியாகவும், புறமுகத்தில் மாயா சத்தியாகவும் இருக்கும். (100)

## 101 - கவி (அ—கை)

[எல்லா விபரீதங்கட்கும் ஆதாரமாதலின் இந்தச்சத்தியை நீக்கு வது எங்ஙனம். சத்தனுக்கபேதம் எனின், ஏகமாகக் காண்பது எங்ஙனம். அரிதெனின், நிரதிசயானந்தம் அவது எங்ஙனம். என மூன்று வினாவையும் இக்கவியிற் கூறுகின்றார்.]

ஆர்க்குங் காணவு மறியவும் படாதென்று மவாச்சிய வடிவென்றுஞ்
சேர்க்கு நாமரூ பப்பயிர் வித்தென்றுஞ் செப்பிய சிற்சத்தி [ரும்
பேர்க்கு மாறெங்ஙன் பிறத்திடப் படாதெனிற் பிரமபா வனையொன்
பார்க்கு மாறெங்ஙன் முத்தியா குவதெங்ஙன் பரமசற் குருமூர்த்தி.

(இ-ள்) ஆர்க்குங் காணவும் மறியவும் படாதென்று மவாச் சியவடிவென்றும் (எ-து) — அரியாதிகட்கும் ஏனையோரெவர்க்குங் கண்ணாற் காணவும், மனதால் அறியவும்படாததென்றும், அநிர்வசன ரூபமென்றும்:—சேர்க்குநாமரூபப்பயிர்வித்தென்றுஞ் செப்பியசிற்சத்தி (எ-து) — விபரீதத்துக் காளாகச் சேர்க்கின்ற நாமரூபமென்னும் பயிர் களுக்கு விதையென்றுஞ் சொன்ன சிற்சத்தியை:—சேர்க்குமாறெங் ஙன் பிறித்திடப்படாதெனிற் பிரமபாவனை யொன்ருப்பார்க்குமா றெங்ஙன் (எ-து) — நீக்குமாறெங்ஙனம், வேறுபடுத்தக் கூடாதாயின், பிரம்பாவனை ஏகமாகப் பார்க்குமாறெங்ஙனம்: — முத்தியாகுவதெங் ஙன் பரமசற்குரு மூர்த்தி (எ-து) — முத்தியடைவதெங்ஙனம், மேலான சற்குருமூர்த்தியே. எ-று.

அறிவையன்றி அறியாமை ஓர் முதலன்று. அறியாமையே சிற்சத்தி யென்னுமிடத்து, காணவும் படாதென்றும், அறியவும் படாதென்றும், அவாச்சியமடிவென்றும், நாமரூபப்பயிர் வித்தென்றும், கூறச் சிற்சத்தி ஏற்கலாமே, தடையென்னையுளது இதுபற்றி இங்ஙனங் கூறினர்.

(க-து) மாணுக்கனுக்கு உதித்த வினு இனையவென்பது. சித்தில்லாவிடிற் சித்தினது கற்பிதமெங்கே. உண்டெனில், தெரிவிக்கலாம். கல், மரமுதலியவைகளெனில், சத்தினது பிராதிபாஸிகமன்றி வேருகக்கண்டிலமே எங்ஙனமெனின், சோதனையில் நியதிகளையப் பட்டவையனைத்தும் அன்னியமாகாது அறிவாகமுடிவதென்னே? முடிவதனுல் சத்தாகுமாவெனின், சத்தையன்றி அசத்தெனலெங்கே. இன்ருதலால் அனைத்துஞ்சிற்சத்தி நியமமே யென்று அறியாதைலின் விஞவினனென்க. அறிவினு, அறியாவினு என்பவற்றுள் இஃது அறியாவினு. (101)

## 102 - கவி (அ—கை)

[முதல் இரண்டு விஞவுக்கும் இக்கவியில் உத்தரங் கூறுகின்ருர் ]
வாயுஸ் தம்பனஞ் சலஸ் தம்பன மணிமந்திர மருந்தாலே
தேயுஸ் தம்பனஞ் செய்திடி லதிலதிற் சிறந்தசத் திகளெங்கே
நீயச் சச்சிதா னந்தமாய் வேறென்று நினைந்திடா திருப்பாயேல்
மாயைச் சத்திபோ மீதன்றி மந்திர மறைகளிற்காணுமே.

(இ-ள்) வாயுஸ்தம்பனஞ்சலஸ்தம்பன மணிமந்திரமருந்தாலே தேயுஸ் தம்பனஞ்செய்திடி லதிலதிற்சிறந்தசத்திசளெங்கே (எ-து) —மணி, மந்திரம், மருந்து, என்னு இம்மூன்ருனும்; வாயுஸ்தம்பனம், சலஸ்தம்பனம், தேயுஸ் தம்பனஞ்செய்வமாயின், அவ்வவற்றிற்குரிய முக்கியமாயுள்ள, சலனம், நெகிழ்ச்சி, உட்டணமென்னும் இம்மூன்று சத்திகளும், எங்ஙனே, இப்போது கண்டிலமே. (அதுபோல):— நீ அச் சச்சிதானந்தமாய் வேறென்று நினைந்திடாதிருப்பாயேல் (எ-து)—நீ அந்தசச்சிதானந்த சொருபமாகி இவற்றிற்கு மாருக வேறென்றும் நினையாதிருப்பையாயின்: — மாயைச்சத்திபோமீதன்றி மந்திரமறைகளிற்காணுமே (எ-து) — மாயாசத்தியானது உன்னையன்றியில்லாமற்போம், இல்லாமற்போவதற்கு உபாயம் இங்ஙனம் புரிவதன்றி வேறே மந்திரம் உளதாக வேதங்களிற் கண்டிலமே. எ-று.

ஸ்தம்பனம், ஸ்தர்பித்தல். அதாவது; சற்று அடங்கிநிற்றல். சிறந்தசத்திகளென்றதினால், சலனம், நெகிழ்ச்சி, உட்டணமெனக் கொண்டாம் எங்கே என்பதனால், இப்போதெனவருவித்தாம். எங்கே யென்பது, எவ்விடம், இல்லையென்னும் பொருள் தரற்பாலதாதலின், பலபொருளொருசொல் அஃது இங்கே இல்லையென்னும் பொருடர நின்றது நீ இரு, மாயைச்சத்திபோம், என இரண்டெழுவாய் இரண்டு பயனிலைகளாதலால், இரண்டு விடையெனக்கொள்க மாயச்சத்தி போமென்பாருமுளர் நீ அச்சச்சிதானந்தமாயிருத்தலே, பிரமபாவனை யொன்றுப் பார்த்தலுக்கு விடையும்; வேறொன்றும் நினைந்திடாதிருத் தலே, சிற்சத்தி பேர்த்தலுக்கு விடையுமெனக்கொள்க சத்து, சித்து, ஆனந்தம் என்னும் இவற்றுள்; சத்து, தான். சித்து, சுயஞ்சோதி. தானே சுயஞ்சோதியாக விளங்கல். சத்தேசித்தாகும். சுயஞ்சோதியே தானாக விளங்கல், சித்தே சத்தாகும். இங்ஙனமாய ஒருமையே துக்க நிவிர்த்தியாதலால், ஆனந்தமாகும் இதுதான் சச்சிதானந்தமாயிருத் தல். இங்ஙனம் இடைவிடாது நிற்கில், அநிர்த, சட, துக்கம், தானே யகலும். இங்ஙனமகலல், வேறொன்றும் நினைந்திடாதிருத்தலின் பயன். அவ்விரண்டு வினாக்களுக்கும், இவ்விரண்டும விடை.

(க-து) மேற்கூறியவினாக்கள் இரண்டிற்கும், விடை இரண்டுந் தந்தனரென்பது அனுபவமில்லார் இவ்விடைகாண்டலரிது. (102)

### 103 - கலி (அ - கை)

[மூன்றும் வினாவுக்கு விடை இக்கவியிற் கூறுகின்றார் ]

மேவுமண்ணிலவ் வியத்தமே வியத்தமாம் விவகரித் திடவேண்டி
நாவினான் மண்ணைக் கடமென்ப ரக்கட நசிப்பதும் நாவாலே
பாவுநாமரூ பங்களை மறந்து மண் பார்ப்பதே பரமார்த்தஞ்
சீவ பேதகற் பிதங்களை மறந்து நீ சின்மய மாவாயே.

(இ-ள்) மேவு மண்ணிலவ் வியத்தமே வியத்தமாம் விவகரித் திடவேண்டி நாவினான் மண்ணைக் கடமென்பர் (எ-து) — கடசத்தி தங்கிய மண்ணினிடத்தில் அக்கடத்தோற்றமெழுதற்குரிய வினை நிகழ்தற்கு முன்னர்த் தோற்றமெழாது மறைபட்டு நிற்கும், அங் ஙன்மறைபட்டு நிற்றலே வினை நிகழாநிற்புழி வெளிப்பட்டுக்காணும, அங்ஙனம் வெளிப்பட்டுக்காண்டலையே அன்னபானுதி பாக விவகார நிமித்தம், சொல்லாலே மண்மயவுடிவைக் கடமென உலகர் வழங்கா

நிற்பர்:—அக்கட நசிப்பதும் நாவாலே பாவுநாமரூபங்களை மறந்து மண்பார்ப்பதே பரமார்த்தம் (எ-து) அந்தக்கடம் உடைந்த தென்பதுஞ் சொல்லாலேயே. முன்னு மண்ணே பின்னு மண்ணே, இப்போதும் பானைசட்டி குடுவை சால் முதலியவா எங்கனும் வழங்கப்பட்டுள்ள நாமரூபங்களைச் சற்று நினையாது மறந்து மண்ணாகப்பார்பதே பரமார்த்தமாம் (அது போல) சீவபேதகற்பிதங்களை மறந்து நீ சின்மயமாவாயே (எ-து)—சீவபேதமா நின்றுள்ள கற்பித வடிவங்களனைத்தையு மறந்து, நீ சின்மயமாக விளங்குதி எ-று

அவ்வியத்தம், வெளிப்படாமை வியத்தம், வெளிப்படல் பித்தளை முதலியவற்றாலாய பாண்டங்களைக் கூறாதது; செல்வம் வந்துழியன்றி நிரந்தரமன்றாமையினென்க. விவகாரிப்பான்வேண்டிக் கடமெனல், விவகாரிகசத்து. நான்குகாலத்தும் மண்ணையன்றிக் கடமெனற்குப் பொருள் தோற்றன்மாத்திர மாதலால், அதனை மண்ணாகக் காண்டல், பாரமார்த்திகசத்து மண்ணையன்றிக் கடமெனல் ஓர் முதலன்றென உணராமல் சுயம்பெனக்கருதிக் கடமெனக் கூறல், மூடம். கடமெனக்காணாது மண்ணெனக் காண்கை. விவேகம். சொல்லாலென்னாது நாவினாலென்றது; நாவினாலாயது சொல்லாதலால் இது நாதுணைக்கருவியெனப்பெறும், ஆதலின் கருவியாகுபெயர். இவ்வுவமைபோல; அறிவைச், சீவனீசன் செகத்தெனக் கற்பணையாகக் கொள்ளும் விபரீதங்களை மெய்யெனக்கோடல், விவகாரிகசத்து. இப்பேதங்களை யெல்லாம் விசாரத்தால் மறந்து, அறிவாகக் காண்டல், பாரமார்த்திகசத்து. சீவபேதமென்பது; சீவனாதியாகப் பேதிக்கும் பேதம். அதாவது; சீவேஸ்வர சகம். இம்மூன்றும் அறிவின் கற்பிதமன்றிச் சுயல்பல்லாமையின், சீவபேத கற்பிதங்களென்றார். தெளிந்தவிடத்து அனைத்தும் அறிவாக முடிதலின், நீ சின்மயமாவாயே யெனப்பட்டதென்க. கடமெனினுங் குடமெனினு மொக்கும். பரமார்த்தம், உண்மை. எனவே விவகாரிகம், கற்பிதம். என்றாயிற்று. அவ்வியத்தம், வியத்தம், எனக்கூறவந்தது; மண்ணையன்றிக்கடமின்றெனற்கு. அதுபோல, அனைத்தும் அறிவையன்றி இன்றெனற்கென். கடாதிகளை மண்ணைப்பார்ப்பதுபோல, சகமாதி திரிபதார்த்தங்களையுஞ் சின்மாத்திரமாப்பார்க்கில் அன்னியமின்றித் தானாய் விளங்கும். இங்ஙனம் விளங்குதலே முத்தி ஆதலால், இது மூன்றாம் வினாவிற்குவிடையெனக் கொள்க.

(க-து) அன்னியமயமாகாமற் சின்மயமாகுதி என்பது. கடமாதற்குரியதே மண், ஏனையவை மண்ணன்றெனற்கு, மேவுமண்

ணென அடை கொடுத்ததென்க. இது முடிவிடங் கூறலென்னு முத்தி. (103)

## 104 - கவி (அ - கை)

[திரிசியம் எனக்கில்லையாயினுந் தோற்றுவானேன், என்ற வினாவிற்கு விடை இக்கவியிற் கூறுகின்றார்.]

பூரிக் குங்கன சச்சிதா னந்தத்திற் பொய்சடந் துயர் மூன்றுந்
தூரத் தாயினுந் தோன்றுபாழ் விபரீதந் துடைப்ப தெப்படி யென்று
னீரிற் றேன்றுந்தன் னிழறலைகீழதாய் நின்றலையினுநேராப்
பாரிற் றேன்றிய தன்னை நோக் கிடிலந்தப் பாழ்நிழல் பொய்யாமே.

(இ-ள்) பூரிக்குங்கன சச்சிதானந்தத்திற் பொய்சடந்துயர் மூன்றுந் தூரத்தாயினுந் தோன்றுபாழ் விபரீதந்துடைப்பதெப்படி யென்றால் (எ-து) பரிபூரணமா நிறைந்துள்ள மேலாய சச்சிதானந்த சொரூபத்தில் அநுர்த சடதுக்கமென்னு மூன்றும் எனது திருஷ்டிக்கு அதிதூரத்ததாயினும், மெய்போலத் தோன்றுகின்ற பாழும், நாமரூப விபரீதங்களுமாகிய அழுக்கைத் துடைக்குமாறெங்ஙனமோ அங்ஙன மாயநெறி இனையதெனத் தெரித்தருள வேண்டுமெனக் கேட்பை யாயின்: — நீரிற்றேன்றுந் தன்னிழறலைகீழதா நின்றலையினும் (எ-து) நீரிற்காணப்படுந் தன்னிழல் தலைகீழதாக நின்றலைந்தாலும்: — நேராப்பாரிற் றேன்றிய தன்னை நோக்கிடி லந்தப்பாழ்நிழல் பொய் யாமே (எ-து) — தலைகீழதாகவின்றி நேராகத் தரையில் தோற்றிய தன்னைக்காண அந்தப்பாழான சாயையானது உண்மையன்றாய் முடியும். எ-று.

தூரத்தாயினுமென்றது இடைக்குறை அசத்தையன்றி சத்தும், சித்தையன்றிச் சடமும், ஆனந்தத்தையன்றித்துக்கமும், இல்லை யெனத்திட விசாரத்தால் தெளிதலின், தூரத்தாயினுமெனவும், தெளி யினும் பாழான செகசீவபரந் தோன்றுகின்றனவே இதற்கென்செய் தும், இந்தத்தோற்றத்தையும் அகற்றுமாறெங்ஙனமென வினாவின னென்பார், தோன்றுபாழ் விபரீதந்துடைப்பதெப்படி யென்றாலென வும், கிணறு, தடாகம் முதலியவற்றின் கரையினின்றான் ஒருவன், எட்டிப்பார்க்குமிடத்துத் தன்னிழல் தலைகீழதாகத தோன்றுமன்றோ? அதனைக்கண்டு வியப்புற்றுத் தன்னைக் கரையிற்காண அம்மயக்கம் அக்கணமே தீரும். அதுபோல வியட்டியாகவேனுஞ் சமட்டியாக

வேனு நின்ருனெருவன், தன்னை அங்ஙனமாகக்கருதி நின்று அண்ட பிண்டங்களை எட்டிப்பார்க்குமிடத்துத், தான் சோபாதிகமாக வுந் தலைகீழதாகவும் இடைவிடாது அலைவதாகத் தோற்றக் காண்பனன்ரே? பரிபாக காலம் வந்துழி, அதனைக்கண்டு அருவருப் புற்றுத் தன்னை நிருபாதிகமாகச் சிதாகாயத்திற் காண அம்மயக்கம் அக்கணமே தொலையுமென்பார், நீரிற்ருேன்றுந் தன்னிழறலை கீழதா நின்றலையினு நேராப்பாரிற் ருேன்றிய தன்னை நோக்கிடில் அந்த பாழ் நிழல்பொய்யாமே எனவுங்கூறினர். உபமானத்தால் உபமேயம் வருவித்தாம் நீர். அவித்தை. நிழல், தத்துவக்குழாம். தலைகீழதா நின்றலைதல்; எழுவகைத் தோற்றத்து எதிலு நிலையுருது புண்ணிய கன்மத்தால் மேலும், பாபகன்மத்தாற் கீழும உபாதியளவாக நின்றலைதல். பார், சிதாகாயம். தோன்றுதல், நிருபாதிகமாக விளங் கல் தன்னை நோக்கிடில், தான்சொப்பிரகாசமாக விளங்கக் காண்டல். அந்தப்பாழ் நிழல், அந்த விவர்த்த தத்துவக்குழாமாகிய தனது சாயை. பொய், தோன்றியுந் தனக்கின்மை. எனத் திஷ்டாந்த தாஷ்டாந்தங்களைக் காண்க. நீரிற்ருேன்றுந் தன்னிழ றலைகீழதா நின்றலையினுமென்பது பகிர்முகம். நேராப்பாரிற்ருேன்றிய தன்னை நோக்கிடில் அந்தப் பாழ்நிழல் பொய்யாமேயென்பது, அந்தர்முகம் இவ்விரு முகமும் ஞானஞ்ஞானங்களி லெனவறிக.

(க-து) தனது எதார்த்தவடிவைநேராக்காணத் தனதுகற்பித வடிவந் தனக்கின்ரு மென்பது. பொய் சடந்துயர்மூன்றும் அறிவா கியகண்ணுடிக்கு அழுக்கெனக்கருதித் துடைத்தலை வினையாக்கினா. தனது ஸ்மரணை இருவகைப்படும் அதாவது; விஸ்மரணை, தஸ்மரணை யென. விஸ்மரணை, அநுர்த சடதுக்கம். தஸ்மரணை, சச்சிதானந்தம். தனது விஸ்மரணையைத், தனது தஸ்மரணையால் துடைக்க வேண்டு மெனப்பெற்ரும். பெறவே, தன்னைவிட இவ்விரண்டு ஸ்மரணையும் இன்றெனக்கண்டாம். காணவே, இருப்பது தானேயெனத் தெளிந் தாம். சச்சிதானந்த சிவத்தைச் சச்சிதானந்தம் என்றதூஉம், அநுர்த சடதுக்க மாயையை அநுர்தசடதுக்கமென்றதூஉம், குணவாகுபெயர். திரிசியந் தனக்குத் தாணுவகைக்கு உத்தி கூறியது. (104)

105 - கவி. (அ—கை.)

[அறிவையன்றிக் காரணகாரியம் இன்றென இக்கவியிற் கூறுகின்ருர்.]

ஞானங் காரண மறிவுகாண் காரிய நாமரு பப்போர்க

ளான தெப்படி யழிந்ததெப் படியென வாய்குதல் பலனன்றே
மான மைந்தனே தீர்க்கசொற் பனசகம் வந்ததும் பாராமற்
போன துந்நினை யாமலுன் போதமாய்ப் பூர்ணமா யிருப்பாயே.

(இ-ள்) ஞானங்காரணமறிவுகாண்காரிய நாமரூபப்பேர்கள் (எ-து) — அறிவேகாரணமாகவும், அவ்வறிவேகாரியமாகவுமிருக்கின்றது. அந்தக்காரியமோ நாமரூபப்பேர்களாயுள்ளவைகளாம்: — ஆனதெப்படியழிந்ததெப்படியென ஆய்குதல்பலனன்றே (எ-து) — இந்தவறிவே திரிசியமான தெப்படி ஆகாதழிந்தவாறெப்படியென்று ஆராய்ந்துதெளிந்தவாறு நில்லாது மீண்டு மீண்டும் இதுவேதொழிலாக ஆராய்தல் புரியாநிற்றல், அத்மலாபமன்றே, ஆயின் யாது செய்வதெனின்: — மானமைந்தனே தீர்க்க சொற்பனசகம் வந்ததும் பாராமல் போனதுந்நினையாமலுன்போதமாய்ப் பூர்ணமாயிருப்பாயே (எ-து) — தனக்கு இழிவுவராது காக்கும் மானமுள்ள ஞானபுத்திரா! என்றும் விடாது தோற்றுந் தீர்க்க சொற்பனசகம்போல்வதாகிய இச்சகமானது மூடத்தாலுதித்ததைப் பாராமலும், தெளிவால் அழிந்ததை நினையாமலும் உனது ஞானப்பிரகாச நின்றவாறு எங்ஙனமோ அங்ஙனமாகவே நிற்றி. எ-று.

அறிவே காரணகாரியமென்கை; அறிவையன்றிக்கடபடமென்னுங்காரியமும், மண் நூலென்னுங்காரணமுமின்றும் இவ்விரண்டும் அறிபடுபொருளன்றோவெனின், காரணநாட்டத்திற்காரியமும், காரியநாட்டத்திற்காரணமுங்காணாது அன்னியோன்னியாபாவமெய்துவதென்னை. இவ்விரண்டவசரத்தும் அதத்துவாத்தோற்றலறிவன்றோ. ஆனதுகொண்டென்க. இவ்வபிப்பிராயத்தைக் கண்டுபிடித்தல் மிகவுமரிது. எங்ஙனமெனில், அறிபடுபொருளென்னும் மயக்கம் அகலாமைபற்றியென்க. காரணத்தைத்தவிரக் காரியம் ஓர் முதலெனவுஞ் சுயம்பெனவு முணர்தல் அறிவேனும் அறியாமையெனப்படும். கடபடத்தைக் காரிய மெனக்கோடல்பற்றியன்றோ? மண்ணூலையன்றிக் காரியமுளதாயின் மண்ணூல் காரணமாகலாம். மண்ணூல்காரியமல்லாத போது காரணமுமல்ல. மண்ணூலுக்குக் காரணகாரியமெனவந்தது; கற்பிதமென்றுணர்கை நிசமாதலால் அறிவெனப்படும். அறிவறியாமையென்னும் நாமம் இவ்விரண்டவசரம்பற்றி வந்ததன்றி எதார்த்தமாத் தனக்கின்மையின், ஆய்குதல் பலனன்றே யுன்போதமாய்ப் பூரணமாயிருப்பாயேயென்றார். அறிவே அறியாமையாதலால் அறிவு காண்காரியமெனப்பட்டது தொன்று தொட்டுப் பிறவிதோறும் விடாதுவழங்கி

ஒருதலினுலும், சுயம்பெனற்குப் பொருளின்றிச் சொப்பனக்காட்சி போல்வதினுலும், சொப்பனம்விழித்துழி இல்லாவாறுபோல, இச் சகமுந்தன்னைத்தான்காண விழித்துழி இல்லாமற் போதலானும், சொப்பன போகத்தில் நித்தியதிருத்தி இல்லாவாறுபோல, இவ்வுலக போகத்திலுநித்தியதிருத்தி சற்றும் இல்லாமையானுந் தீர்க்கசொற் பனசகமெனப்பட்டதென்க. வந்ததும் பாராமல் போனது நினையாம லென்றது; இவ்வுலகம் பயனற்றதெனக்குறிக்க. அறிதல்காண்காரிய மெனப்பாடமு முண்டு. அறியாமையை அறிவென்றது, காரணவாகு பெயர். அறியாமையன்றி நாமரூபப்பெயர்களுண்டாயின் காரியமுள தாம். இன்றேல் இலதாம். ஆராய்தலின்கண் நாமரூபமாயுள்ள அனைத்தும் அறியாமையா முடிவதென்னை இஃதறியார் மறுத்தலாற் பயனென்னை? பிறர்மதிக்கற்கென்க.

(க-து) இருப்பது அறிவொன்றுமேயன்றி வேறின்றென்பது. இதுபற்றியுன்போதமாயிருப்பாயென்றதென்க. ஞானம், அறிவு, ஒரு பொருட்கிளவி.

## 106 - கவி (அ - கை)

[பகிர்முகத்தில் எவ்வளவுகாலம் பழகியதோ, அவ்வளவுகாலம் அந்தர்முகத்திலும் பழகவேண்டுமென இக்கவியிற் கூறுகின்ருர்.]

அசத்தி லெம்மட்டுண் டம்மட்டும் பராமுக மாகினு யம்மட்டு
நிசத்தி லுள்விழிப் பார்வையா யிப்படி நிரந்தரப் பழக்கத்தால்
வசத்தி லுன்மன நின்றுசின் மாத்திர வடிவமா கிடின்மைந்தா
கசத்த தேகத்தி லிருக்கினு மானந்தக் கடல்வடி வாவாயே.

(இ-ள்) அசத்திலெம்மட்டுண்டம் மட்டும் பராமுகமாகினுய் (எ-து) — மெய்போலத் தோற்றுஞ் செகசீவபர மென்னும் பொய்யில் எவ்வளவு காலஞ் சம்மந்தமுண்டாயிருந்ததோ அவ்வளவு காலமள வும் பராக்காகிய பகிர்முகப் பட்டனை: — அம்மட்டுநிசத்திலுள் விழிப் பார்வையாயிப்படி நிரந்தரப்பழக்கத்தால் (எ-து) — பகிர்முகமான அவ்வளவுகாலவளவும் அறிவென்னு முன்மையில் அந்தர் முகநாட்ட மாநின்று இங்ஙனம் இடைவிடாது பழகுவையாயின் அந்தப் பழக் கத்தால்: — வசத்திலுன்மனநின்று சின்மாத்திர வடிவமாகிடின் மைந் தா (எ-து) — மனதின் வசத்திற் செல்லாது உன் வசத்தில் உன்மன

நின்று சைதன்ய வடிவமாத்திரமாக விளங்குமாயின் ஞானபுத்திரா:—கசத்ததேகத்தி லிருக்கினுமானந்தக் கடல்வடிவாவாயே (எ-து) — மலமூத்திரபாண்டமாதலின் அருவருக்கத்தக்க தேகத்தில் நீ யிருக்கினும் பிரமானந்த சமுத்திர ஸ்வரூபமாவை. எ-று.

சத்தெனற்குப் பொருள் அறிவையன்றிச் சகசீவபரமின்மையின் இவற்றை அசத்தென்றும், பராமுகம், பகிர்முகம். நிசம், சைதன்யம். உள்விழிப்பார்வை, தனது எதார்த்தவடிவை விடாது காண்டல். சின்மாத்திரவடிவமாதல் மனஞ் சொப்பிரகாசமாகவிளங்கல். மட்டு, அளவு தஸ்மரணை, விஸ்மரணை யென ஸ்மரணையிருவகைப்படும். தஸ்மரணை, தன்னைத்தானுள்ளவாறு காண்டல். விஸ்மரணை, தன்னைத்தான் அயலாகக்காண்டல். பொருளல்லவற்றைப் பொருளாகக்கொண்டது எவ்வளவுகாலமோ, அவ்வளவுகாலமும் பொருளைப்பொருளாகப் பழகவேண்டும். அன்றேல், பழகிய காலவளவு பயன்றரும். சைதன்யத்தையன்றி யாதுமில்லை, ஆயின் யாதுமல்ல. எங்ஙனமெனில், மண்ணாலையன்றிக் கடபடமில்லை, ஆயின்மண்ணால் கடபடமல்ல; என்றாற்போலும். இங்ஙனமாய விசாரமுகத்தாற் பழகல். நிசத்திற்பழகல் இங்ஙனமாய விசாரமின்றிப்பழகல். அசத்திற் பழகல், என்பது உபநிடதசம்மதவசனம். கசத்ததேகம். உரிச்சொல்லடியாகப் பிறந்த பெயரெச்சத்தொடர். கசத்தல், தேகத்தியல்பு உணர்ந்தார்க்கு மாத்திரமெனக்கோடல் வழு. ஏனையோர்க்குப் பிரியவடிவாயினும், மலமூத்திரபாண்டமன்றாயிற்றே? ஆதலின் ஏற்போர்பிழை. அறிவு, சத்து. அறியாமை. அசத்து. அறியாமையன்றிச் சகமாதி திரிபதார்த்தமும் இன்றாதலால் இவற்றை ஓர் முதலாகவுஞ் சுயம்பாகவுங் கொண்டு சத்தாகவேனும் அசத்தாகவேனும் பிரதிவாதிப்பமல்லம். தன்னைச் சொப்பிரகாசமாகக் காண்டல், அறிவு. அன்றாகக் காண்டல் அறியாமை.

(க-து) அசத்திற் பழகியதுபோல், நிசத்திலும் பழகவேண்டுமென்பது. நிசத்தில் உள்விழிப்பார்வையால் இப்படி எனப்பாடமும் உண்டு அவ்வளவு காலம் பழகாவிடின் ததாகாரமாவதின்றி விவர்த்தமாக முன்போலழிதும். (106)

## 107 - கவி (அ – கை)

[ஆன்மா சச்சிதானந்தமென்றீர் சத்து, சித்தைபோல ஆனந்த ஸ்வரூபமாயின், அயலே அவாவுவதென்னை? என்ற விஞவை இக்கவியிற் கூறுகின்றார்.]

தானன்றி வேறொன்று மில்லாது பூரணச் சச்சிதா னந்த குண மா, யூனின்ற வுயிர்தோறு மொன்றாக மென்றால தொக்கின்ற படிக ண்டிலே, நானென்ற சீவன்கள் சத்தான வகையொக்க ஞானங்கள் வெளிகண்டதா, லானந்த மிவைபோல வெளியாக வுதியாக வடை வேது குருநாதனே.

(இ-ள்) தானன்றி வேறொன்று மில்லாது பூரணச் சச்சி தானந்தகுணமாய் (எ-து) — ஆன்மா, தான்மாத்திரம் இருப்பதன்றித் தன்னைத்தவிர அயலாக வேறே யாதொன்று இருக்க இடந்தருத லின்றி அங்கிங்கெனாது எங்கும் பரிபூரணமாயும், சத்து, சித்து, ஆனந்தகுணமாயும்:— ஊனின்றவுயிர் தோறு மொன்றாகமென்றால தொக்கின்றபடிகண்டிலேன் (எ-து) - மாமிசவடிவாயமைந்த தேகங் களிலுள்ள உயிர்களிலெல்லாம், அக்குணம் வெவ்வேறாகாமல் ஏகமா நிற்க விளங்குமாயின் அக்குணம் தமக்குள் பேதியாது ஏகமா நிற்கும் வண்ணம் அடியேன் சற்றும் ஐயமின்றிக் கண்டிலேனே: — நானென்ற சீவன்கள் சத்தானவகை யொக்க ஞானங்கள் வெளிகண்டதால் (எ-து) — நானெனக் கூறுநிற்கும் சீவர்கள் அறிவதுபற்றிக் கரணேந் திரியமென்னு ஞானங்களுளவாக நேரே காணப்படுவதால் சத்தாக வன்றிச் சித்தாகாது, சித்தாயிருப்பதுபற்றி உயிர்கள் சத்தாயிருக்கிற விதம் யுத்திக்கொத்திருக்கின்றது: — ஆனந்தமிவைபோல வெளியாக உதியாதவடைவேது குருநாதனே (எ-து) — சத்துஞ்சித்தும் ஒத்துத் தோன்றுமாறுபோல, ஆனந்தமும் ஒத்திருக்க நேரே காணப்படாத வகையாதுகொலோ, யானறிகிலன் குருமூர்த்தியே இவ்வையந் தவிர்த்தருள வேண்டுமென்றிரந்தனன். எ-று.

தானெனப் பொதுப்படக் கூறியதால், ஆன்மா வருவித்தாம். என்னை, "முதற்பெயர் நான்குஞ் சினைப்பெயர் நான்கும், சினைமுதற் பெயரொரு நான்கு முறையிரண்டுந், தன்மை நான்கு முன்னிலை யைந்தும், எல்லாந் தாந்தானின்னன பொதுப்பெயர்," என்றார் பவணந்தி. தானன்றி வேறொன்றுமில்லாதது ஆன்மா ஆதலின், இல்லாது என வினையெச்சமாக்கினும், பெயரெச்சமாக்கின் குணத் துக்காகின்றது. அங்ஙனமாக்கின், தானன்றி யென்றிருக்க வேண் டும், ஆதலிற் பொருந்தாது. பூரணச்சச்சிதானந்த குணமாயென்றத னால், ஆன்மாவெனப் பெற்றாம். ஆன்மா தானாதலின் தானன்றி யெனவும், ஆன்மா தன்னைத்தான் விசாரியாதுழி அயலுளவாம்.

விசாரித்துழிச் சற்றுமின்ரும். ஆதலின் வேறொன்றுமில்லாதெனவும், சொல்லால் வேருயினும் அர்த்தத்தால் ஒன்ருதலின், பூரணச்சச்சி தானந்த குணமாயெனவும், தேகத்தை யூனென்றது, காரணவாகு பெயர். ஆன்மா சச்சிதானந்தமாயின் சத்து சித்தைப்போல ஆனந்தமா யிருக்கவேண்டும். இருக்கின்றதெனில், அயலையவாவி அலைவதென்னே? ஆதலிற் பொருந்தாதென்பார், ஆனந்தமிவை போல வெளியாகவுதியாத வடைவேதெனவுங் கூறினர். உபாதிபற்றிப் பலவாகக் காண்டலின், சீவன்களெனப்பட்டது. நானென்ற சீவனென்றது; நானென்னுத சீவனைக்காட்ட அந்தச்சீவன், மகான். ஆனந்தமாயிருத்தல்பற்றியென்க.

(கு-து) ஆன்மா சச்சிதானந்தமாயின், ஆனந்தம் எங்கே என்பது உடன்படாமைக்கு ஏது இஃதெனவுணர்க. சீவன்கள் சத்தானவகையொக்கு மென்பதற்கு ஏதுகாட்ட, ஞானங்கள் வெளிகண்டதாலெனப் பாடங் கொண்டாம். வெளிகண்டதாமெனப் பாடங் கொள்ளின், சத்தான வகை யொக்குமெனற்குப் பொருத்தமின்றி வேரும். இவ்வியைபு உணராவிடத்து உரை என் பயனுறும். அஃதொக்கின்றபடி யொளினுமமையும். (107)

## 108 - கவி. (அ நை.)

[அதற்கு விடைகூறப்புகுந்தார் இக்கவியில் உவமான பூர்வமாக விருத்தி பேதத்தினுற் குணங்கள் பேதித்ததாகக் காண்பதைக் கூறுகின்ருர்]

உருவங்க ளிரதங்கள் பரிசங்க ளொருபூவி லொன்ருகு மென்ருலுமே
கரணங் ளோரொன்றி னேரொன்றுதெரியுங் கணக்கன்றி வாராதுகா
ணருமந்த சச்சிதா னந்தச் சுபாவங்க ளான்மாவின் வடிவாயினும்
பிரபஞ்ச மயமாம் விருந்திபே தத்தினல் பேதங்க ளாமைந்தனே.

(இ-ள்) உருவங்களிரதங்கள் பரிசங்களொருபூவி லொன்ருகு மென்ருலுமே (எ-து) — உருவங்களும், சுவைகளும், பரிசங்களும், ஓர் மலரின்கண் பேதமாகாது அபேதமா யேகமா யிருக்கின்றனவெனினும்; — கரணங்களோ ரொன்றினேரொன்று தெரியுங் கணக்கன்றி வாராதுகாண் (எ-து) — புறக்கரணமாகிய பஞ்சேந்திரியங்களில் ஒவ்வொரு பொறிகளால், அததற்குரிய வொவ்வொரு விடயமுமுணரப்படும்; இங்ஙனமுணரப்படும் வகையாலன்றி வேறொன்ருலுணரப்படும வகை யெங்ஙனம் வரும், வராதே: — அருமந்த சச்சிதானந்தச்

சுபாவங்க ளான்மாவின் வடிவாயினும் (எ-து)--அடைதற்கு மிகவுமரி தாயுள்ள சச்சிதானந்தமாவிளங்குஞ் சுபாவங்கள், ஆன்மாவின் சுய வடிவாம், சுயவடிவாயினும்:—பிரபஞ்சமயமாம் விருத்தி பேதத்தினற் பேதங்களாமைந்தனே (எ-து)சத்தபரிசாதி விடயமயமா நின்றுள்ள சாத்துவிதமாகிய முக்குணத்தால் வரும் விருத்தி பேதத்தினுல் பேதங் களெய்தற்குரித்தாய், ஞானபுத்திரா. எ-று.

உருவங்கள், அழகுகள். இவை கண்ணுலுணர்பவைகள். இரதங்கள், சுவைகள், இவை நாக்காலுணர்பவைகள். பரிசங்கள், தொக்காலுணர்பவைகள். கண், நா, தொக்கு, இவற்றிற்கு விடயம், உருவம், இரதம், பரிசம் என்பன இக்கவியிற் கூறுமுறைமை. உருவ முதலிய மூன்றும் மலரில் அபேதமாயினும் அவற்றைத் தனித்தனி உணரும், பொறிகளால் பேதமுறு மாறுபோன்று, சத்துமுதலியமூன் றும் ஆன்மாவில் அபேதமாயினும் அவற்றைத் தனித்தனி உணருஞ் சாத்துவித முதலியவற்றுல்வரும் விருத்திபேதத்தினற் பேதமுறுமென வுணர்க. அகக்கரணம், மனம். புறக்கரணம், பொறிகள். இவ்விரண் டுங் கரணமெனினும் இங்கே கரணங்களென்றது பொறிகளை யெனக் கொள்க. கணக்கு, விதம் அருமருந்தன்ன சச்சிதானந்தமெனற் பாலது, அருமந்த சச்சிதானந்த மென்றுயது, மரூஉ. ஆன்மாவுக்குச் சச்சிதானங்கள் சுபாவமெனவும், வடிவமெனவுங் கூறியதால், மூன் றும் ஒன்றுக்கொன்று அபேதமெனவும், இங்ஙனமிருத்தல் சுபாவ மெனவும் பெற்றும். விருத்திபேதத்தினு லென்னுது பிரபஞ்சமயமா வென வடை கொடுத்தது, விடயாகாரமன்றி வேருகாரஞ் சற்று மாகாமையி னென்க.

(க-து.) சச்சிதானந்தங்கள்; தத்தமிலக்கணங்களைத் தனித்தனி அறிவதாற் பேதமுறுவதுபோற் காண்டலன்றித் தமக்கின்மையின் அபேதமேயென்பது. விருத்திபேதம் மறுபாட்டிலிருப்பதால் ஆங்கே விளக்குதும். உருவ முதலிய மூன்றும் மலருக்குவேருயின், சத்து முதலிய மூன்றும் ஆன்மாவுக்கு வேருகலாம். உருவமுதலிய மூன்றும் அறிவதாலன்றித் தனித்தனி வெவ்வேருயின், சத்துமுதலிய மூன்றுந் தத்தமிலக்கணங்களை யுணர்வதாலன்றித் தனித்தனி வெவ்வேருக லாம். ஆகாதெனின், ஆன்மா ஆனந்தவடிவமெனலைத் தடையின்றி ஏற்கவேண்டுமென்றுயிற்று காண், அசைநிலை. (108)

109 - கவி. (அ - கை)

[விருத்திபேதம் இனையவெனவும், அவை வந்தவகையும் இக்கவியிற் கூறுகின்றார்]

தாமதமிராசதஞ் சாத்துவித முக்குணத் தால்வரும் விருத்தி மூன்று
மாமவைகண் மூடமுங் கோரமுஞ் சாந்தமு மபிதான மாகு மகனே
யேமுற விருக்கின்ற சச்சிதா னந்தங்க ளென்றென்று மொன்றாகிலு
நாமுரைக் கும்விருத் திப்பிரிவி னாற்சொரூப ஞானாதி பிரிவாகுமே.

(இ-ள்) தாமத மிராசதஞ் சாத்துவித முக்குணத்தால் வரும் விருத்தி மூன்றும் (எ-து) - தாமதம், இராசதம், சாத்துவிதமெனக் குணமூன்றும், இம்மூன்றானும் வரும் விருத்திபேத மூன்றும்: — ஆமவை கள் மூடமுங் கோரமுஞ் சாந்தமுமபிதானமாகுமகனே (எ-து) — ஞான புத்திரா! அங்ஙன மூன்றானவைகள் மூடமுங்கோரமுஞ் சாந்தமெனப் பெயர்பெறுவனவாம்: — ஏமுறவிருக்கின்ற சச்சிதானந்தங்களென் றென்று மொன்றாகிலும் (எ-து) — கெம்பீரமாயிருக்கின்ற சத்து, சித்து, ஆனந்தமென்பன, என்றென்றைக்குமொரு படித்தாய் ஏகமாயிருப் பனவாயினும்: — நாமுரைக்கும் விருத்திப்பிரிவினாற் சொரூப ஞானாதி பிரிவாகுமே (எ-து) — யாமுற்கூறிய விருத்திபேதத்தினால் ஆன்ம சொரூபமாகிய சித்துமுதலிய மூன்றும் பேதிக்கும். எ-று.

தாமதம், மூடம். இராசதம், கோரம். சாத்துவிதம், சாந்தம். என்பன நேர் நிரனிறை தாமதமுதலிய மூன்றுகுணத்தின் தர்மம், மூடமுதலிய மூன்றும் சத்தாதியென்னாது ஞானாதியென்றது, அடி யியைபுத்தொடை பற்றி யென்க. ஒவ்வொருயிர்க்கண்ணுமேனும், மக்களிடத்தும் ஒவ்வொருவர் பாலுமேனும், மூன்றுகுணமிருக்கின் றன, இருக்கினும் மூன்றுள் ஓர் குண மேலிட்டு நிற்கும். நிற்பதால் அதற்கியைந்த விருத்தி யொன்று மேலிட்டே நிற்கும். விருத்தியுள் ஒன்று சாந்தம். இந்தச்சாந்தம் இருவகைப்படும். அவை காருணியசாந் தம், உபசாந்தமென்பன உயிர்க்கு இடுக்கணுறுது பொருத்தல், காரு ணிய சாந்தம். அன்னியமின்றிச் சமஸ்தமுஞ் சின்மாத்திரமாவினங்குஞ் சாந்தம், உபசாந்தம். இக்கவியில் சாந்தமென்றது, உபசாந்தத்தை. இந்நெறித்தாய உபசாந்தமெங்கே யுண்டோ, அங்கேவிடயானத்த மின்றி ஆத்மானந்தம் விளங்கும். விளங்குதல் அனுபவமாய் என்று நிகழ்தலால் இன்றெனமறுத்தல், தானகாப்பிழை எனக்குறிப்பித் தற்கு இக்கவிகூறியதென்க.

(க-து) ஆத்மா ஆனந்தவடிவமன்றெனல்; விருத்திபேதம் அறியாக்குறை யென்பது. தாமிகுந் தமசு, ரசசு, சத்வமெனும் முக் குணத்தால் வரும் விருத்தி மூன்றும் எனப்பாடமும் உண்டு. ''இஃதெஞ்சிய சொல்லினெய்தக் கூறலென்னு முத்தி'' ''பிறிதொடு படா அன்றன்மதங்கொளலென்னுமதம்'' ஆன்மாவைக்காணுதார் ஆனந்தம் வேறெனும் ஞானியர். (109)

## 110 - கவி (அ - கை)

[மூடத்திற் சத்தும், கோரத்திற் சத்துஞ்சித்தும், சாந்தத்திற் சத்து சித்து ஆனந்தமும் இருக்கக் காணலாமென இக்கவியிற் கூறுகின்றார்.]

சடமான மூடத் தருக்கல்லு மண்களிற் சத்தொன்று மேதோ ன்று மால், விடமான காமாதி கோரத்தி லானந்தம் விளையாது மற்ற வைகளாந், திடமான் வொழிவாதி சாந்தத்தி லேசச்சி தானந்த மூன்றும் வெளியா, மடமான மூடங்கள் கோரங்கள் விடுசாந்த மன மாகி லானந்தமே.

(இ-ள்) சடமான மூடத்தருக்கல்லு மண்களிற் சத்தொன்று மே தோன்றுமால் (எ-து) மரம், கல், மண் இவைபோல்பவை சடமா நின்றுள்ள மூடவிருத்திகளாம். இம்மூடவிருத்திகளில் சத் தொன்று மாத்திரமிருக்கக்காணும்:— விடமானகாமாதிகோரத்தி லா னந்தம் விளையாது மற்றவைகளாம் (எ-து) — விஷம்போல்வன ஆகிய காமம், க்ரோதம், லோபம் இவைபோல்வன கோரவிருத்திகளாம். இந்தக்கோர விருத்திகளில் ஆனந்தமாத்திரமிருக்கக்காணுது, ஏனைய சத்துஞ் சித்தமிருக்கக்காணும்:— திடமானவொழிவாதி சாந்தத்திலே சச்சிதானந்த மூன்றும்வெளி யாம் (எ-து) — முத்தியெனற்குத் திடமா நின்றுள்ள, ஒழிவு, சுத்தம், சூனியமுதலாயுள்ளவை சாந்தவிருத்தி களாம். இந்தச் சாந்தவிருத்திகளில், சத்து, சித்து, ஆனந்தமென்னு மூன்றும் யாவரும் காண விளங்கும்:— மடமான மூடங்கள் கோரங் கள் விடுசாந்தமனமாகிலானந்தமே (எ-து) — மடமையே வடிவாயுள்ள மூடவிருத்திகளும், கோரவிருத்திகளும் அல்லாதகன்ற சாந்தவிருத்தி மயமாக மனமாயிடின் அப்போதுதான் ஆன்மா இயல்பாகவே ஆனந்தவடிவமெனக்காணும் எ-று.

சச்சிதானந்தமல்லாத சகசீவபரமில்லை. இல்லையாயினும்,

உணர்தலால் இப்பேதங்காணும். எங்ஙனமெனின், உணர்தல்; தாமத முதலிய குணத்திரயத்தில் ஒன்றின்வயப்பட்டு நிற்கும். இக்குணத் திரயத்தில் ஒன்று தத்தமக்கியைந்த விருத்திபேதமுன்றனுள் தன் சுய தர்மம் விருத்தியதாகும் இதனுலெனவுணர்க. மூடவிருத்தியிற் சத்தும். கோரவிருத்தியிற் சத்துஞ் சித்தும், சாந்தவிருத்தியிற் சத்துஞ் சித்துமானந்தமு மிருப்பதேங்ஙனமெனின்? மூடவிருத்தியாகிய மரம், கல், மண் முதலியவைகள் அணுக்கள்சை யோகமேனும் அவ்வணுக் பரமாணுவையன்றியில்லை. அந்தப்பரமாணு தன்மாத்திரயைத்தவிர வில்லை. தன்மாத்திரை அகங்காரத்தைத் தவிரவில்லை அகங்காரம் மகதத்துவத்தைத் தவிரவில்லை மகதத்துவம் மூலப்பிரகிருதியைத் தவிரவில்லை. மூலப்பிரகிருதி ஆன்மாவாகிய தன்னைத்தவிர வில்லை, தானுகிற சத்தே இங்ஙனம் பிரதிபலித்தலாற் சத்தொன்று மே தோன்றுமெனவும், கோரவிருத்தியாகிய காமக்குரோதாதி கள் தனதுவிஸ்மரணை காரணமாக எழும் அனர்த்தரூபமாத லால் இவைகளை மெய்யெனக்கோடலால் யானெனதென அகமமதை தோன்றும். தோன்றவே, யுத்தாயுத்தந் தெரியாது மனஞ் சென்ற வழியே பிறர்மனைநயத்தல், பிறர்பொருளை வஞ்சித்தலாதி தீவினை கள் புரியவேண்டிவரும் வரவே, அப்போது சுகம்போலக்காணினுந் துன்பமாகமுடியும். முடிதலால் கோரத்திலானந்தம் விளையாது மற்ற வைகளாமெனவும். சாந்தவிருத்தியாகிய வொழிவு, சுத்தஞ், சூனியஞ், சுபாவம், அதீதமாதிகள் தனது தஸ்மரணைகாரணமாகவெழும் அர்த்த ரூபமாதலால், அவற்றைத்தனது சொரூபமாக விடாது அனுசந் தானஞ் செய்யவேண்டும். செய்யவே, யானெனதென்னும் அகமம தை தாமே கழலும், கழலவே, யுத்தாயுத்தமென்பதிறந்து மனஞ் சின்மாத்திரமாகவிளங்கும். விளங்கவே, அன்னியமின்றித் தான்மாத் திரமாக நிற்கும். நிற்கவே, சத்தே சித்தாகவும், சித்தே சத்தாகவும் ஐக்கியமெய்தும். எய்தவே, ஆனந்தந் தானுக முடியும். முடியவே, சச்சிதானந்த ஒருமையதாம், ஆதல்பற்றி யொழிவாதி சாந்தத்திலே சச்சிதானந்த மூன்றும் வெளியாமெனவுங் கூறினர்.

(க-து) விருத்தித்திரயமிவையெனவும், அவற்றுற் சச்சிதானந்த பேதம் இவையெனவும், ஒருமை இவையெனவும் விளக்கியதென் பது. மூடங்கள் கோரங்கள் விடுசாந்த மனமாகிலானந்தமேயென் றது; மனது மூடவிருத்தியாகில் சத்தும, கோரவிருத்தியாகில் சத்துஞ் சித்தும், சாந்தவிருத்தியாகில் சத்துஞ் சித்தும் ஆனந்தமுமெனப் பொருடாற்கென்க. எனவே, மனங்காரணமாக இப்பேதா பேதந்

தோன்றியவேயன்றி ஆன்மாவுக்கின்றெனப் பெற்றும். பெறவே, ஆன்மா சச்சிதானந்தமென்றுயிற்று. இஃதறியார் சச்சிதானந்த சொரூபந் தன்னைவிடவேறென்பர். இவர் தன்னிலக்கணங்கல்லாது அன்னிய இலக்கணங்கற்றார் போலும். ஆல், அசைநிலை. தருக்கல் மண்ணென்னுது கல்லுவென உகரச்சாரியைபெற்றது; "ஞணநமல வளனவொற்றிறு, தொழிற்பெய ரேவல்வினை நனியவ்வன் மெய்வரி, னுவ்வுறு மேவலுறுசில சிலவழி" யென்னும் விதியாலென்க ஆன்மா சச்சிதானந்த விலக்கணம் அகன்றதுங் கூடியதும் போல்வதன்றி வேறன்றென்க. (110)

## 111 - கவி. (அ - கை.)

[சச்சிதானந்த இலக்கணம் இனையதெனத்தெரியாது எங்ஙனம் ஆன் மாவுக்கென்று ஏற்பனென்ற வினாவுக்கு விடை இக்கவியிற் கூறுகின்றார்.

இகமான குருநாத னேசச்சி தானந்த மெனுமிலக் கணமறிகிலே
னகலாத சத்தாவ தேதுசித் தாவதே தானந்த மேதென்றிடின்
மிகுகால மூன்றுங் கெடாதிருப் பதுசத்து வேறுபா டறிதல் சித்தா
மகிழ்காம நுகர்போது சுகமாகு மனுபூதி வாழ்வென்ப தானந்தமே.

(இ-ள்) இகமானகுருநாதனேசச்சிதானந்தமெனு மிலக்கண மறிகிலேன். (எ-து) — இம்மையில் அடியேனுக்கு இயைவதான குருசாமியே! சத்து, சித்து ஆனந்தமென்னுமிலக்கணம் இனைய வெனக்கேட்டறிகிலேன். ஆயினும்: — அகலாதசத்தாவதேது சித்தாவ தேதானந்தமேதென்றிடின் (எ-து) — விடாது நின்றுள்ள சத்தென்பதி யாது, ஆனந்தமென்பதியாது எனக் கேட்பையாயின்: — மிகுகால மூன்றுங்கெடாதிருப்பது சத்து வேறுபாடறிதல் சித்தாம் (எ-து) — அளவுக்கடங்காது மிகுகின்ற இறப்பு எதிர் நிகழ்வெனக்கூறுங் கால மூன்றினும் இடையில் நீங்காதிருப்பதுயாதோ அது சத்தெனவும், இங்ஙனமாகநின்று அங்கலிங்க வேறுபாடகல அவற்றைவிசாரித்திடு தல்யாதோ அது சித்தெனவும் வழங்கப்படுவதாம்: — மகிழ்காமநுகர் போது சுகமாகுமனுபூதி வாழ்வென்பதானந்தமே (எ-து) — எவருமுமகிழத் தக்க காமவின்பத்தை அனுபவிக்கும்போது எங்ஙனஞ் சுகவெழுமோ அங்ஙனம் போல்வதாகிய சுவானுபூதி சுகவாழ்வெனப் படுவதி யாதோ அஃது ஆனந்த மெனப்படுவதாம். எ-று.

சச்சிதானந்த இலக்கணம் பிரமத்துக்கல்லது வேறொன்றுக்கு

அல்லாமையின் பிரமம் இலக்கியமெனப் பெற்றும். இலக்கியத்தினை மைதி இலக்கணமாதலானும், இலக்கியங்கண்டு அதற்கிலக்கணமியம்பலின் என்றிருப்பதானும், மாணாக்கன் இலக்கியமாகிய பிரமத்தை யுணர்ந்ததுபற்றி அதினிலக் கணத்தை உணரவேண்டி வினவினனென்க. மிகுவென்னுமிகையால் இங்ஙனங் காலந்திரிவிதமாதல் கணக்கின்மை எனக் குறிக்கக்கண்டாம். மிகுகால மூன்றுங்கெடாதிருப்பது சத்தென்றதனல், காலாதீதமெனவும்; வேறுபாடறிதல் சித்தாமென்றதனுல், அங்ஙனங் காலாதீதமாநின்று அறிவறியாமை பாகுபாட்டை ஏகமாக்கற்கு விசாரியாநிற்றலெனவும்; மகிழ்காம நுகர்போது சுகமாகுமனுபூதி வாழ்வென்பதானந்தமே என்றதனுல், ஆலிங்கனகாலத்து இருவரு மனமொத்துப் புணருங்கால் இருவர்மனத்தையும் அடக்கி மேலெழுஞ்சுகம் எங்ஙனமோ அதுபோல, அறிவும் ஆனந்தமும் தமக்குள் பேதமின்றி விசாரித்துத் தெளியுங்காலத்து அறிவே ஆனந்தமாகவும், ஆனந்தமே அறிவாகவுமாகும். ஆகுங்கால் மனமென்பதிறந்து சின்மாத்திரமாக விளங்கும். விளங்கவே, சங்கற்பமிறக்கும். இறக்கவே, துக்கநிவர்த்தியாம். ஆகவே, தடையற்ற ஆனந்தமாத்திரமேலிட்டு நிற்கும் நிற்கவே, சமஸ்தமும் ஆனந்தமயமாகவே நிகழுமெனவும் அருத்தந்தரக்கண்டாம்.

(க-து) இங்ஙனமாயநிலையே சச்சிதானந்த விலக்கணமென்பது. இந்நிலைவழுவுவார்க்குப் பயனென். (111)

## 112 - கவி. (அ – கை)

[ஆன்மா தான் சச்சிதானந்தமேயென விசாரித்துத் தெளிந்த விடத்து நிகழுமனுபவம் யாதெனவினவலை இக்கவியிற் கூறுகின்றார்.]

நாசச் சரீரத் திருக்குஞ் சரீரிதனை நால்வேத மாவாக்கிய
நீசச்சி தானந்த மென்றிடினு மாசிரியர் நீபிரம மாகுமெனினு
மாசற்ற சச்சிதா னந்தநா னென்னவிவன் மன்னுமனு பவமெங்ஙனே
கோசப் புரங்களை யிடித்துத் தகர்த்தமத் குஞ்சரக் குருநாதனே.

(இ-ள்) நாசச்சரீரத்திருக்குஞ் சரீரிதனை நால்வேதமாவாக்கியம் (எ-து)—நாசமுறுதலையே இயல்பாகவுடைய சரீரத்திலிருக்குஞ் சரீரியாகிய வான்மாவை நோக்கி நான்குவேதங்கட்கும் முடிவாயுள்ள மகாவாக்கியங்கள்:– நீசச்சிதானந்தமென்றிடினுமாசிரியர் நீபிரமமாகு

மேனினும் (எ-து) – நீசச்சிதானந்த சொரூபமே வெறன்றெனச்சொல் லினும், அல்லது சற்குருநாதனெழுந்தருளிவந்து நீ பிரமசொரூபமே வேறன்றென உறுதியாகச்சொலலினும்: — மாசற்ற சச்சிதானந்த நானென்னவிவன்மன்னுமனுபவமெங்ஙனே (எ-து) -- இயல்பாகவே மலரகிதமாயுள்ள சச்சிதானந்தசொரூபமே தனதுசுயவடிவமெனவொருவன் விசாரித்துத் தெளிந்துழி அதனல் இவனடைந்த சுவானுபவமெங்ஙனமாயதோ. கோசப்புரங்களையிடித்துத் தகர்த்தமத குஞ்சரக் குருநாதனே (எ-து) — தடையாயுள்ள அன்னமய முதலிய பஞ்சகோசம் என்னும் பட்டணங்களை இடித்துத்தூளாக்கிய மதயானைபோன்ற குருசாமியே. எ-று.

நீ சச்சிதானந்தமென்றதும், நீ பிரமமென்றதும் உபதேச மொழி. அங்ஙன அனுஷ்டித்துத்தெளிந்தவன் எய்தியபலனை விசாரித்தது, தானுதற்கென்க. அவனனுபவமெங்ஙனமாயதோ அதனையானறிய உணர்த்தியருளுமெனப் பொருடருதலால், ஓகாரமொழியிசை நானேசச்சிதானந்தசொரூபமென ஒருவன் விசாரித்துத்தெளிந்து சொல்லாநிற்கவெனப் பொருள்கொண்டு சச்சிதானந்த நானென்ன வென்பதைச் செயவென்னும்வாய்ப்பாட்டு வினையெச்சமாக்குக. எங்ஙனேயெனப்பாடமுமுண்டு. கோசப்புரங்கள், உருவகம் புரங்களையிடித்தலுந் தகர்த்தலும் மதங்கொண்டபோது யானைக்கியல்பாமாறு போன்று, கோசங்களை உருவழித்தலும், அவையிருந்தவிடமுந் தெரியாதழித்தலும் ஞானச்செருக்குமேலிட்டபோது ஞானவானுக்கியல்பாதல்பற்றி இங்ஙனங் கூறியதென்க.

(க-து) சச்சிதானந்தமாயவிடத்து எய்துமனுபூதி யாதென வினவினனென்பது. ஆன்மாவே சச்சிதானந்தமாயவிடத்துப் பிரம்மாதற்கு ஐயமென்னை? இவ்விரண்டு உபதேசமும் ஒன்றே. (112)

### 113 - கவி. (அ—கை)

[ஆன்மா சத்தென இக்கவியிற் கூறுகின்றார்.]

சென்மாந்தரஞ் செய்தவினைகளுடறரு மெனிற்செல்கால மிவனுண்டலோ, கன்மானு பவநரக சொர்க்கமெனில் வருகின்ற காலத்து மிவனுண்டலோ, வுன்மாத யாதனு வுடல்கடவுளுடன்மனுட வுடன் மாறி மாறியழியுந், தன்மாயவுடல்கெடினு மிவனிருப் பதுகொண்டு சத்தென்ப தொக்குமகனே.

(இ-ள்) சென்மாந்தரஞ்செய்தவினைகளுடறருமெனிற் செல்கால காலமிவனுண்டலோ (எ-து) — ஆன்மா தான் பூர்வசென்மங்களிற்

செய்துவந்த நல்வினை தீவினைகள் தேகத்தைத்தருமெனச் சத்தப்பிர மாண இருக்குமெனில், ஆன்மாவாகிய இவன் முன் சென்றகாலங்களி லெல்லாம் இருந்திருப்பானல்லவா: — கன்மானுபவநரக சொர்க்கமெ னில் வருகின்றகாலத்துமிவனுண்டலோ (எ-து) — இப்போது செய்து வரு நற்கன்மந் துர்க்கன்மத்துக்கீடாக இனிவரும் அநுபவமாவது; நரகமாவது சொர்க்கமாவதெனக்கூறின், இனி வருங்காலத்தும் ஆன்மா இருக்கவேண்டுமல்லவா: — உன்மாதயாதனுவுடல் கடவுளு டன் மனுடவுடன் மாறிமாறியழியும் (எ-து) — உன்மத்தமாகிய யாதன சரீரமும், தேவசரீரமும், மனிததேகமும் நிலையாது மாறிமாறியழிந்து போகும்: — தன்மாயவுடல்கெடினு மிவனிருப்பது கொண்டு சத்தென்ப தொக்குமகனே (எ-து) — தனதுபிராந்தி காரணமாக வந்த தேகமழியி னுந் தானல்லாததால் ஆன்மா இருக்கின்றானன்றே, இவனிருப்பது பற்றிச் சத்தென்பது இவனுக்குப்பொருந்தும் சற்புத்திரா எ-று.

சென்மங்காரணமாக ஆன்மாவுண்டெனல் எவர்க்குமரபாதலினா னும், அந்நெறியேயேனும் ஆன்மா முக்காலத்துமுண்டெனலே நிலை யுறுத்தப்புகுந்தார் இந்நூலாசிரியர் ஆதலினாலும், இதனைமறுக்கற் பாற்றன்று. மறுப்பார் ஆன்மா காரணமாகப் புகவேண்டும், புகினும், ஆன்மா திரிகரணங்கட்குமெட்டுவதன்று, ஆதலின் அனுமானத்தால் உண்டெனலேபொருந்துமென்க. அனுமானம், புகைகாரணமா நெருப்புண்டெனல். இங்ஙனமாக வேனும் ஆன்மா சத்தெனற்குத் தடையென்னையுள. கன்மத்துக்கீடாகத் தேகங்கள் வந்தகல்வன எனவே, ஆன்மாவிருந்தன்றே கன்மம் புரியவேண்டும் என்பதனால் நித்தியமாயிற்று. தேகங்கள் ஆன்மாவாயின் அவைபோல ஆன்மா வும் வந்துவந்தகலலாம். போகம் ஆன்மாவுக்கோ, தேகத்துக்கோ? தேகஞ் சடம், அகர்த்தா, விகாரவடிவம், துணைக்கருவியாதலின் தேகத்துக்கன்று. ஆன்மாவுக்கெனப்படும். ஆன்மாவிருந்துதானே தேகபோகங்களை அனுபவிக்கவேண்டும், இன்றேல் யாதுக்கனுபவம், ஆதலின் ஆன்மாவே சத்தெனப்படும். ஆதியந்தமேற்றலின் தேகந் தேகியன்று. ஆராவியற்கை அவாக்கோடலும், அகற்றலும், பந்த முத்தியாதலின் இதனையுடையது தேகமன்று தேகியெனற்கு ஐய மென்னை? இதனாலும் ஆன்மா சத்தெனப்படும். ஆன்மா தான் எத் தேகமுமன்று, தன்னைத்தவிரவுமில்லை. எனவே, எல்லாமாயும் அல்லவு மாயுமிருப்பது ஆன்மா வெனப்பெற்றாம். பெறவே, பிராதிபாஸிக சத்து, விவகாரிக சத்து, பாரமார்த்திக சத்தென்னும் போலிசத்

தன்று எதார்த்தசத்து ஆன்மாவென்றுயிற்று. ஆகவே; இதனையகற் ற்றிகிடமின்றென்க்கண்டாம். இஃது சம்து துணிபு.

(க—து) ஆன்மாவே சத்தெனப்படுவதன்றி வேறின்றென வுணர்க என்பது. தெளிந்தார்க்கு இஃதுடன்பாடு, ஏனையோர்க்கன்று வேறென்பர். வேறென்னல் சொல்வாதம், அர்த்தவாதமன்று. அல்லவோவெனற்பாலது அலோவென்றுயது இடைக்குறை. (113)

114 - கவி. (அ—கை)

[ஆன்மாவே சத்தென்றுற்போலச் சித்தெனலையும் ஆனந்தமெனலையும் ஏற்குமென்று இக்கவியிற் கூறுகின்றார்.]

இருளாக மூடுஞ் சுழுத்தியி லிராத்திரியி லிரவிசுடரற்ற பொழுதும்
மருளாமலிருளையும் பொருளையுந்தெரிகின்ற வகைகொண்டு சித்தாகுமே
பெருவாழ்வு மிக்கதானே தன்னிடத்தினிற் பேராத பிரியமதனு
லருகாத பிரியஞ் சுகத்தில் வருமாதலாலனந்த மாமைந்தனே.

(இ-ள்) இருளாக மூடுஞ்சுழுத்தியிலிராத்திரியி லிரவி சுடரற்ற பொழுதும் (எ-து)—இருள்மயமாக எங்கணும் மூடிக்கொள்ளத்தக்க சுழுத்திய வத்தையிலும், கருக்கலிரவிலும், சூரியனும் விளக்குமில் லாதபொழுதும்:—மருளாமலிருளையும் பொருளையுந் தெரிகின்ற வகை கொண்டு சித்தாகுமே (எ-து) — ஐயத்தால் மயங்காமல் அங்ஙன மூடிய இருளையும் வைத்த பொருள்களையும் தெரிந்து கொள்ளும் விதத்தினுல் ஆன்மா சித்தெனப் படுவதாம்:— பெருவாழ்வுமிக்க தானே தன்னிடத்தினிற் பேராத பிரியமதனுல் (எ-து)—தடையற்ற ஆனந்தந் தானுதலால் பெரிதான வாழ்வில் மிகுந்தது தானே; இங்ஙனமாய தானே தன்னிடத்தில் நீக்கமற்ற பிரியவடிவாயிருப்ப தினுல்:—அருகாதபிரியஞ் சுகத்தில் வருமாதலாலானந்தமா மைந் தனே (எ-து)—என்றுஞ் சுருங்காத தற்பிரியமானது தானுனந்த வடிவ மாதலால் தனது ஆனந்தத்திலெழுகின்றது. இதுபற்றி ஆன் மா ஆனந்த சொரூபி யெனப்படுவதாம். ஞானபுத்திரா. எ-று.

இரவிசுடரென்றத்தனுல், இரவி முதல் சுடரிறுவாயுள்ள வெளிச்சப் பேத மேற்கினும்மையும். ஏனையபொருள் உண்மைத்தற்பாலதன்றுதலி னும், மருளாம லென்றமையானும் வைத்தபொருளென்றும். இங்ஙன மாய வாழ்வும் ஆன்மாவுக்கு அயலாதல் பற்றிப் பெருவாழ்வு மிக்க தானே என்வும், தன்னிடத்தில் தானே பேராத பிரியவடிவாயிருப்

பது ஆன்மாவையன்றி இன்றாதலின், தானே தன்னிடத்தினிற் பேராத பிரியமெனவும்; அநுகாதப்பிரியம், நித்திய திருத்தி. இதுதன் னிடத்தன்றி பிறி திடத்தெங்கணுமின்மையின் அநுகாத பிரியஞ் சுகத்தில் வருமென்னவும், தானின்பவடிவமாதலால் ஆன்மா ஆனந்த மாம் எனவுங் கூறினார். 'இங்ஙனமானார்க்கு இது தெரியுமன்றி அயலாரை வெறுப்பதென்னை யாவரும் நன்குறங்குந் தினசுழுத்தியில் ஆனந்தம் வருவானேன், சாக்கிரசொப்பன அல்லலைச் சாந்தப்படுத்துவது யாது, நான் இன்றுதான் அயர்ந்துறங்கினேனென்று எவருஞ் சொல்வதற்கு நியமென்னை, சுகவடிவம் ஆன்மாவன்றேல், 'அங்கே யாதோர் விகற்பமுமின்றித் தனித்து நின்றது யாமன்றோ, அங்கே தன்தேக முதலிய சகமனைத்துங் கண்டிலமென்றுணர்ந்து விழித்துக் கூறவந்ததும் யாமன்றோ, யாமென்றற்கு ஆன்மாவையன்றிப் பேருளுண்டோ? இன்றே, இங்ஙனமிருக்க, ஆன்மாவை ஆனந்தவடிவமெனற்கு ஐயுறவேதென்னை. சகலத்தில் ஆன்மா இருந்தும் அங்ஙனங் காணப்படாதது நமது குற்றம். அதன் குற்றமன்று. எங்ஙனமெனில், தேகமாதி நாதமிறுவாக்கிடந்த தத்துவக்குழாமயமாகக் காண்கின்றது, அங்ஙனமாகக் காண்கின்றோம். விசாரணையில் அல்லவல்லவெனப் போவானேன், போவதால் ஆன்மா தத்துவக் குழாத்துள் ஒன்றுமன்றே. அப்போது ஆன்மா மாத்திரந் தனித்துவிளங்குவதென்னை, விளங்குவதால் உலகமெங்கே? உலைவெங்கே? காணாதிருப்பதென்னை? காணாத்தாற் துக்கநிவர்த்தியுந் தடையற்ற வானந்தமும் எய்துவதென்னை? எய்துவதால் அதன்குற்றமன்று. விசாரித்துத்தெளியாத நமது குற்றமே. நமதுகுற்றத்தால் நில்லாது. கேவலத்தில் ஆனந்தவடிவாகக் காண்கின்றது அதன்சுயவடிவாதல்பற்றியென்க. ஆன்மாவின் சுயவடிவம் ஆனந்தமெனற்கு இழுக்கென்னை? தினசுழுத்தியில் இயல்பாகவே ஆன்மா தனிக்குமாறுபோன்று சகலத்திலும் இயல்பாகவே தனித்திருத்தலை யாங்கண்டிலம், இது தத்துவக்குழாத்தை விசாரித்தால் அத்திறங் காணும். உதாரணம். "என்றும் இருந்தபடியிருப்பதியல்பே என்னும் ஒரு வேதம்" என்பதனாற்காண்க என்றுந் தனித்திருத்தல் ஆன்மா ஆதலால் ஆனந்தமென்றார். தடுப்பார் அயலைச்சுகிப்போர்.

(க-து) ஆன்மா தன்னைத்தான் உணரற்பாலதாதலின் தானே ஆனந்தவடிவாமெனற்கு ஐயமின்றென்பது. (114)

115 - கவி (அ—கை)

ஆன்மா சுகசாதனம் போல்வது அன்றென இக்கவியிற் கூறுகின்றார்.]

அன்னபா னாதிசுக சாதனம தாகையா லார்க்கும் வெகு பிரியமாகு
மின்னவா றான்மாவு மானந்தசாதன மெனக்கருதல் பொருளல்லவே
சொன்னவான்மாவை யொரு சுகசாதனங்களொடு சொல்லுவா யாகின் [மகனே
யுன்னதா னந்தம்வே றேவனுப விப்பதா முபயவான் மாவு முளதோ.

(இ-ள்) அன்னபானாதி சுகசாதனமதாகையா லார்க்கும்வெகு பிரியமாகும் (எ-து)—அன்னமாகிய உணவும், பானமாகிய நீரும் இவைபோல்வன பிறவும், சுகத்துக்குச் சாதனக்கருவியாயிருப்பதால் எவர்க்கும் வெகு பிரிய வடிவமாயிருக்கும்:— இன்னவாறான்மாவு மானந்த சாதனமெனக்கருதல் பொருளல்லவே (எ-து) — இதேப்பிரகாரமாக ஆன்மசொரூபமுஞ் சுகத்துக்குச் சாதனக்கருவியென நினைத்தல் பொருளாகுமா? ஆகாதே:—சொன்ன வான்மாவையொரு சுக சாதனங்களொடு சொல்லுவாயாகின் மகனே (எ-து) ஞான புத்திரா! மேற்கூறிய ஆத்மசொரூபத்தைச் சுகசாதனங்களில் ஒன்றோடு உவமையாகக் கூறுவையாயின்:—உன்னதானந்தம் வேறே அனுபவிப்பதா முபயவான்மாவு முளதோ (எ-து) உன்னைவிட உனது ஆனந்தமென்பது வேறுதானோ. வேறாயின் அதனை அனுபவிப்பதற்கு இரண்டாவதாக நின்றுள்ள ஆன்மாவென்பது முண்டோ. எ-று.

பசிதணித்தற்குரியவைகளை அன்னமெனவும், தாகந்தணித்தற்குரியவைகளைப் பானமெனவுங் கூறுவது பொது. ஆதியென்றமையால் சத்தபரிசாதிவிடயமெனப் பெறும். அன்னபானாதிகளைச் சுகமென்னாது சுகசாதனமென்றது; பசியுந்தாகமுந்தணிந்தவுடன், எதிரில் இவையிருந்தும் வெறுப்பாகக் காண்டலினென்க ஒப்பின்மையின் வெகுபிரியமாகுமெனவும், பொருளல்லவற்றைப் பொருளெனக்கோடலால் சுகமல்லவற்றைச் சுகமெனக்கோடல் வரும், இங்ஙனமாகார் அரியர். ஆவாரெவரும். இதுபற்றியார்க்குமெனவும், நிரதிசயானந்தமொன்று, அதையனுபவிக்கும் ஆன்மாவொன்று, ஆகவிரண்டாக வேண்டும். இரண்டாயின், விடையானந்தம்போல்வதாகும். அன்றேல் ஆன்மானந்தமெனச் சிறப்பெய்தற்கு அடையாளமென்னை? விடயானந்தம் போல் ஆன்மானந்தமுஞ் சுகசாதனமெனின், விடயானந்தத்தைவேறுநின்று அனுபவிப்பது ஆன்மாவைப்போல் ஆத்

மானந்தத்தை வேருநின்று அனுபவிப்பது ஆத்மாவாகவேண்டும். அங்ஙனங்கொள்ளில்; இரண்டான்மாவிருக்க வேண்டும். ஆதலின் உபயவான்மாவு முளதோ வெனவுங்கூறினர். உபயவான்மாவும் என்பதிலும்மை, எதிர்மறை. உளதோவென்பதில் ஓகாரம், வினா. விடயானந்தத்தை அனுபவிப்பது ஆத்மா, ஆத்மாநந்தத்தை அனுபவிப்பது ஆத்மாவென்புழி, அஃதயலே, இஃதுதன்னைத்தானேயெனத் துணிபுதரலால், இன்னவாருன்மாவுமானந்தசாதன மெனக்கருதல் பொருளல்லவே யெனத்துணிந்து கூறினரென்க. இத்துணிபறியார் ஆன்மாவை ஆன்மா அனுபவிக்குமா என்று இகழ்ந்து கூறு வதென்ன விவேகமோ யாமறிகிலம்.

(க-து) விடயத்தைப்போல ஆன்மாவையுஞ் சுகசாதனமெனல் கூடாதென்பது ஆர்க்குமென்பதில், உம்மை முற்றும்மை. ஆன்மாவு மென்பதில் உம்மை, உயர்வுசிறப்பு. நீ ஆகிற சுகத்தை அனுபவிப்பதற்கு நீ யெனல் வேறுளதோவென்பார், உன்னதானந்தமெனத் தற்கிழமையர்க்கினர். (115)

## 116 - கவி. (அ—கை)

[ஆன்மானந்தத்தை ஆன்மாவே அனுபவிக்குமென்றது உறுதி பெறுமாறு நால்வகையேதுக்களை இக்கவியிற் கூறுகின்றார்.]

விடயசுக மதில்வருதல்பிரியமாத்திரமாகும் வெகுபிரியமான்மாவிலாம்
விடயசுகம்வருபிரிய மாறிவருமான்மாவில் வெகுபிரிய மாருதுகாண்
விடயசுகம் விடலுமாங்கொளலுமா மான்மாவைவிடுவதெவர்கொள்வதெவர் பார்
விடயசுக போகங்கள் விடுமவனையவனல் விடப்படா தொருநாளுமே.

(இ-ள்) விடயசுகமதில்வருதல் பிரியமாத்திரமாகும் வெகுபிரிய மான்மாவிலாம் (எ-து) — விடயத்தைச் சுகமெனக்கருதி அனுபவிக்குங்கால் அச்சுகத்தில் வரும்பயனாகியபிரியம், அப்போது பிரியம்போற் காணுமளவின்தாம், ஆன்மாவைச் சுகமெனக்கருதிச் சுருதியுத்தியனுபவங்காரணமாக அனுபவிக்குங்கால், அவ்வான்மாவில் அப்போது எழும்பிரியங் கணப்போதளவினதன்று என்றும் விடாதிருத்தலின் வெகுபிரியமாயிருக்கும்: — விடயசுகம்வருபிரிய மாறிவருமான்மாவில் வெகுபிரியமாருதுகாண் (ஏ-து) — விடயசுகங் காரணமாக மேலிட்டு வரும் பிரியமானது நிலையாது மாறிமாறி வரும், ஆன்மநாட்டத்தை விடாதிருக்குங்கால் அப்போது அவ்வான்மாவில் மேலிட்டெழும் பிரிய

மானது இன்னவளவினதென உவமைகொண்டு கணித்தற்கரியதா கும். அன்றியும் என்றும் மாருது ஒருதன்மையதாகவுநிற்த நிலேயின தாம்:—விடயசுகம்விடலுமாங் கொளலுமா மான்மாவை விடுவதெவர் கொள்வதெவர்பார் (எ-து)—விடயசுகமானது வெறுத்துவிடுதற்கும் விரும்பியேற்றுக்கொள்ளுதற்குந் தகுதியதாம். இதுபோல, ஆன்மா வைவெறுத்து விடுவார்யாவர், வெறுத்துவிடாது விரும்பியேற்பவர் யாவர் இதனை நீயே ஆராய்ந்துகாணுதி விடயசுகபோகங்கள் விடு மவனையவனல் விடப்படாதொருநாளுமே (எ-து)—இஃதன்றியும், விடயசுகமயமாயுள்ள போகங்களை யொருவன் வெறுத்து விடக்கூடும், அங்ஙனமதை வெறுத்துவிட்டவன் தன்னல் தன்னை வெறுத்துத் தன்னைத்தான் புறம்பிலகற்றக் கூடுமோ? ஒருநாளுங்கூடாதே. எ-று.

விடயசுகமென்னது பிரியமென மிகைபடக்கூறியது, விடயஞ் சுகமாயிருப்பது இயல்பேனும் பிரியமியல்பாயிருப்பதுமுறையோ? நம் மிடத்தினின்றும் பிரியத்தை விடலுங்கொளலுங்கூடும், சுகத்தைவிட யத்தினின்றும் பிரிக்கவுங்கூட்டவுங்கூடுமா? சுகம், விடயத்துக் கியற் கை போல்வது. பிரியம், நமக்குச் செயற்கை போல்வது பற்றி யென்க. விடயசுகமென்ருற்போல் ஆன்மசுகமென்னவேண்டும். ஆத லினிங்கே சுகமென்பது எஞ்சிநின்றது. விடயசுகப்பிரிய மென்னது விடயசுகமதில்வருதல் பிரியமென்றமையின். சுகம்வேறு பிரியம் வேறெனப்பெறும். ஆன்மாவில் வெகுபிரியமென்றதனல், விடயப் பிரியம் அற்பமெனத்தோன்ற. விடயசுகமதில் வருதல் பிரியமாத்திர மாகுமெனவும், மாத்திரம்-அளவு. இங்கே அற்பத்தைக்குறிக்க நின் றது. விடயம் ஆன்மாவுக் கன்னியமாகும்போது, அதன்சுகமும், அது பற்றிவரும் பிரியமும், அன்னிய மாகவேண்டுமன்றே? அப்போது பிரியம் அற்பத்தன்மையையும், மாறும் புடைபெயர்ச்சியையும் ஏற் பதற்கிடையூறென்னையுளது. அதுபோல, ஆன்மாவுக்கு ஆன்மா அன் னியமாகாதபோது, அதன்சுகமும், அதுபற்றிவரும் பிரியமும் அன்னிய மன்ருகவேண்டும். அப்போது பிரியம் அதிகத்தன்மையையும், மாருப் புடைபெயர்ச்சியையும் ஏற்பதற்கு இடையூறென்னையுளவென்பார், இங்ஙனங்கூறினரென்க. "இஃது எஞ்சியசொல்லினெய்தக்கூறல்" என்னு முத்தி.

(க-து) விடயப்பிரியஞ் சிறுபான்மை, ஆத்மப்பிரியம் பெரும் பான்மை. விடயப்பிரியம் மாறிவரும், ஆத்மப்பிரியம் மாருதுநிற்கும். விடயப்பிரியம் விடவுங்கொளவுமியையும், ஆத்மப்பிரியம்விடவுங்

கொளவுமியையாது. விடயப்பிரியத்தை நீக்கினவன் தன்னைத்தானீக்கி விடக்கூடுமாகூடாது. இங்ஙனமாய ஏதுக்களால் ஆன்மாவுஞ் சுக சாதனமெனலை மறுத்தாரென்பது. எப்போதுமென்றுணர்த்த, ஒரு நாளென்றது ஒரு நாளுமெனப்பட்டதென்க, இஃது ஆத்மானுபவிக் குடன்பாடன்றி விடயானுபவிக்கெங்ஙனமுடன்பாடாம். உடன்பாடாமை விசாரியாக்குற்றமன்றி ஆன்மக்குற்றமன்று. தன்னைத்தான் விசாரித்துத் தெளியாதார், ஆன்மா சச்சிதானந்தமெனல் ஏலாது வேறென்பார், இது நிற்க. இதுகன்மம்பத்திபோல் நம்பிக்கையன்று, பிரத்தியட்சம் ஆதலின் பாரென்றார். நிரதிசயானந்தம் ஆன்மப்பிரியம், ஏனையவிட யானந்தம் பிரமானந்தம் அன்னியோன்னியபாவ மெய்தலால், அதிசயானந்த மெனப்பெற்று] அயல்பிரியமென்றாயிற்று. (116)

117 - கவி (அ - கை)

[ஆன்மாவிடயம் போல விருப்பு வெறுப்புருவன்றெனின் சிலர் தன்னைத்தான் வெறுத்துக் கொலை செய்துகொள்வானேனென்ற விளுவிற்கு விடை இக்கவியிற் கூறுகின்றார்.]

வேகின்றகோபங்க ளாலென்னை நான்கொன்று விடுகின்றேனென் றுசிலபேர், சாகின்ற படியினுற் றன்னையே தான்கொன்று சாவனெ னல் சங்கையலவே, தேகந்தனைக்கொல்லு மவனுல் விடப்பட்டதே கமவ னல்லன்மகனே, யாகந் தனிற்கோபமலதுதனை பொருநாளு மான்மா வெறுப்பதிலையே.

(இ-ள்) வேகின்ற கோபங்களாலென்னை நான்கொன்று விடு றேனென்றுசிலபேர் (எ-து) - சிலபேர் யாதேனுமோர் காரணம்பற்றி மிக்கோபங் கொண்டு என்னை நான்கொலைசெய்து கொள்ளுகிற னென்று:—சாகின்றபடியினுற்றன்னையே தான்கொன்றுசாவனெனல் சங்கையலவே (எ-து)—அதற்கியைந்த முயற்சிசெய்து, சாகின்றபடி யினுல் இதற்கென்செய்துமெனக் கேட்பையாயின்; மெய்யே, இங்ங னந்தன்னையேதான் கொலைபரிந்து கொண்டு ஒருவன் சாகின்றன னே இஃதென்னை கொலோவெனச் சங்கித்தல் சரியானசங்கையல்ல வே:— (எங்ஙனமெனின்) தேகந்தனைக்கொல்லுமவனுல் விடப்பட்ட தேகமவனல்லன் மகனே (எ-து)— ஞானபுத்திரா! தன்தேகத்தைத் தானே கொலைசெய்து கொள்பவனெவனோ அவனுல் விடப்பட்ட அவன்தேகமவனுகுமா, அவன் தேகமல்லனே ஆயின்சம்மதிவசனம் யாதெனின்:— ஆகந்தனிற் கோபமலதுதனையொருநாளு மான்மாவெ றுப்பதிலையே (எ-து) - அவனுக்கெழுந்தகோப மவன்தேகத்தின்மே

லன்றியவனுகிய ஆன்மாவின் மேலன்றே, ஆன்மாதன்னைத்தான் வெறுத்துக்கொள்வது முண்டோ ஒருநாளுமில்லையே, இதனை யோசியாது கூறுவதென்னைகொலோ யாமறிகிலம். எ-று.

வேகின்றகோபமென்றமையின் மிக்ககோபமென்றும் பலருக்கு முண்டாங் கோபமனைத்து மொருங்குதிரண்டுநக் கொண்டாற்போல வதின், கோபங்களெனப்பன்மையிற் கூறியதென்க அவன் சங்கித்ததாக இவர் ஆசங்கித்துக் கொண்டது. விடயம்போல் ஆன்மாவும் விருப்புவெறுப்புநவாமெனலைக் குறிப்பித்தற்கு. தேகஞ் சடம் அகர்த்தாவாதலின் தன்னைத்தான் கொலை செய்துகொள்ளுமோ கொள்ளாதே, ஆதலின் தேகியாகிய ஆன்மா தன்னைத்தான் காணவகையறியாதே தன்னைத்தான் எங்ஙனங் கொலைசெய்து கொள்ளும், அங்ஙனமன்று. ஆன்மா தன்னைத் தேகமெனக்கருதிய பாவமே வீட்டால் அதனைத்தானெனத் தொன்றுதொட்டு வழங்காநிற்றலின், அதுபற்றி மீக்கொண்ட கோபத்தால் என்னை நான் கொலைசெய்து கொள்ளுகிறேன் என்று சொல்லித் தன்னைத் தான் கொன்று செத்தானெனல் உலக வழக்கம் அதனைச் சங்கையெனக் கொள்வது தவிர்கவென்பார், தன்னையே தான் கொன்றானெனல் சங்கையலவேயெனவும், ஆன்மா தேகமானல் தேகத்தைமாய்த்துக் கொள்வது கூடும், அங்ஙனமன்றே இதுபற்றித் தேகம் அவனல்லனெனவும், மூடத்தனத்தால் தன்கோபத்தைத் தன்கோபத்தைத் தன் தேகத்தின் மேற் காட்டினன்றித் தன்மேலன்றென்பார், ஆகந்தனிற்கோப மலதுதனை யொருநாளும் ஆன்மாவெறுப்பதிலையே எனவும் கூறினர். விடயமல்லாதது பிரமம், அதற்குரிய ஆனந்த இலக்கணத்தை ஆன்மாவுக்கு உரியதென மாட்டிநடத்தலின், இதுமாட்டெறிந் தொழுகலென்னுமுத்தி.

(க-து) ஒன்றை ஒன்ருகக்கொண்டு சங்கிப்பது தவிர்கவென்பது. சங்கை யென்றுலென்று ஓர் பிரதி இருக்கின்றது. - தன்னையே தான்கொன்று சாவனெனல் மயக்கவணி. (117)

## 118 - கவி (அ—கை)

[ஆன்மாவே பிரியவடிவமெனக்காட்டப் பிரியபேதங்களை இக்கவியிற் கூறுகின்றார்:]

தாகப் படும்பொருளி லும்மகன் பிரியமாந் தனயனிலு முடல்பிரியமா, மாகத்தி லும்பிரிய மிந்திரிய மாங்கரண மதனிலும் பிரிய

முயிரா, மேகப் பிராணனிலும் வெகுபிரிய மான்மாவி லிந்தவான்மா முக்கிய, மூகத்தி னுற்கௌண மித்தைகர்த் தாமூன்று மொன்றினொ ன் றதிகமகனே.

(இ-ள்) தாகப் படும்பொருளிலும்மகன் பிரியமாந் தனயனிலு முடல் பிரியமாம் (எ-து)—எவரும் பிரியப்படற்கியைந்தது தனம், அந்தத் தனத்திலுமிக்கது சுயபுத்திரப்பிரியம், அந்தச் சுயபுத்திரப் பிரியத்திலுமிக்கது தன் தேகப்பிரியம்:-ஆகத்திலும் பிரிய மிந்திரிய மாங்கரண மதனிலும் பிரியமுயிராம் (எ-து)—அந்தத்தேகப் பிரியத் திலுமிகாது பஞ்சேந்திரியப் பிரியம் அந்தப்பஞ்சேந்திரியப் பிரியத் திலும் கரணமாகிய மனம் பிரியமாகக் காண்கை, அந்தமனம் பிரிய மாகக் காண்பதிலுமிக்கது, உயிர் பிரியமாகக் காண்கை:- ஏகப் பிராணனிலும் வெகுபிரியமான்மாவி லிந்த வான்மாமுக்கியம் (எ-து) —அந்தத் தனது ஒன்றான உயிர்பிரியமாகக் காண்கையிலுந் தனது ஆன்மப்பிரியம் மிகப்பெருக்காக் காண்கை, ஆதலின் இந்தவான்மா வே எவற்றிலுமுக்கியமாகும்:-ஊகத்தினுற் கௌணமித்தை கர்த்தா மூன்றுமொன்றினொன்றதிகமகனே (எ-து) ஞானபுத்திரா! இவற்றை யெல்லாம் மனத்தினுல் ஊகிக்குங்கால், கௌணம், மித்தை; கர்த்தா, என் ஆத்மா மூன்றுவகையினதாகப் பெயர்பெறக்காணும், இம்மூன்று வகையும் ஒன்றுக்கொன்று அதிகமாகக்காணும். எ-று.

தனம், மகன், உடல், புறக்கரணம், அகக்கரணம் உயிர், ஆன்மா எனப்படுவனவாகிய இவ்வேழும், பிரியத்தில் ஒன்றுக்கொன்று அதிக மேனும், ஆன்மா மகா முக்கியமென்றதனுல் ஏனையவாறும், அம்முக்கிய மெனப்பெற்றும் இனி இவற்றையெல்லாஞ்சுருக்கி நான்கு ஆத்மா வாக்கப்புகுந்தார் இக்கவியில் தொகையாக மூன்றைக்கூறியொன்றுக் கொன்று அதிகமென்றாரென்க. ஒருவன் தன் வீடுபற்றி வேவதை அசதியிற்காணமுன்னர் தன் பணப்பெட்டியை யெடுக்கத்துணிவன் கூடாவிடத்தில், தொட்டிலில் உறங்குந்தன் மகனையெடுக்கத்துணி வன். கூடாவிடத்தில், தன்னுடலைப்பாதுகாக்கத் துணிவன் கூடா விடத்தில், கண்முதலியதன் பொறிகட்கு இடையூறுவராது காக்கத் துணிவன். கூடாவிடத்தில், மனமுதலிய அகக்கரணங்கட்கு இடை யூறுவராதுகாக்கத் துணிவன், கூடாவிடத்தில், தன்னுயிரையேனுங் காக்கத் துணிவன். கூடாவிடத்தில், முடிவில் தானுகிய ஆன்மா இடையூறெய்தாது காக்கத் துணியா நிற்பன். ஆதலின் இம்முறை வந்தவாறு இவ்வேது பற்றியென்க.

(க-து) உயிர்க்கு இயற்கையெனப் பிரியபேதங்களை நிரையே யெடுத்துக் காட்டினரென்பது. இங்ஙனங்காட்டியது; தனமாதிபிரியங் களில் ஒவ்வொன்றிற்கு நட்டமெய்தத் தனக்குவந்ததாக மரணமெய் தலும் உளவென்றுணர்த்தற்கென்க இங்ஙனமாயபிரியபேதமனைத் தும் ஆத்மப்பிரிய லேசமாதலின், தற்பிரியத்துக்கு இடையூறின் றென்க. தனமாதிகளிலுள்ள உம்மைகள் இழிவு சிறப்பு. கரணத் திலுமென்பதும், இவற்றிலென்பதிற் பெயருஞ் சாரியையும் தொக் கின. ஆக்களினைக்குறிப்புமுற்று மூன்றுவிரியும் மூன்று தொகையுமா யிருத்தலின் அனைத்தையுந் தொகையாக்கி முடிவில் முற்றுக்கி உரை யிட்டாம் இது சிறப்புப்பற்றியென்க. (118)

119 - கவி (அ—கை)

[நான்காத்மாவென்றும், ஒன்றுக்கொன்று முக்கியமெனற் குர், அவசரம் இக்கவியிற் கூறுகின்றார்.]

கெடலான பொழுதிவன் காணிக்கு மகனான கௌணவான்மா முக்கியம், விடலாத வுடலம் பரிக்குநா ளுடலான மித்தையான் மா முக்கியந், திடமான நன்மைகதி வேண்டினற் கர்த்தனுஞ் சீவவான் மாமுக்கியஞ். சடமாயு முத்தியினில் ஞானவான் மாவான தானே மகாமுக்கியம்.

(இ-ள்) கெடலான பொழுதிவன் காணிக்குமகனான கௌண வான்மா முக்கியம் (எ-து)—தன்னுயிர்க்குக் கேடுவந்தபோது தனது ஆஸ்திக்குரியோன் மகனாதலால் அவன் கௌணவான்மாவெனப்படு வன், அந்த அவசரத்திற் கௌணவான்மாவே முக்கியமாகும்:—விட லாதவுடலம்பரிக்குநாளுடலான மித்தையான்மா முக்கியம் (எ-து)— தன்னைவிட்டு நீங்காத தனதுடலைத்தானெனச் சுமக்கும்போது தானெ னற்கு உரியது இவனுக்குடலாதலால் அவ்வுடல் மித்தையான்மா வெனப்படும், அந்த அவசரத்தில் மித்தையான்மாவே மகாமுக்கிய மாகும்: — திடமானநன்மைகதிவேண்டினற் கர்த்தனுஞ்சீவவான்மா முக்கியம் (எ-து) — இடையில் அழியாது உறுதியாயுள்ள நற்கதி அடையவிரும்பினல், அப்போது தானொருமுதலா நின்று அதற்குரிய அரியமுயற்சிசெய்து அப்பலனை அனுபவித்தற்குக் கர்த்தத்துவமா யிருப்பவன் சீவனாதலால், அந்த அவசரத்தில் அச்சீவன் சீவவான் மாவெனப்படுவன், அதனல் அந்த சீவவான் மாவே மகாமுக்கிய மாகும்: — சடமாயுமுத்தியினில் ஞானவான்மாவான தானே மகா

முக்கியம் (எ-து) — சடத்துவமாயுள்ள அனைத்தும் ஒருங்கே நசித்தற்கிடமாயது முத்தியாதலால் அந்தமுத்தியில் ஞானகாரமாயிருந்த தன்னை அதுவாய் அனுபவிப்பவன் ஞானத்மாவாதலால், அந்த அவசரத்தில் ஞானன்மாவெனப்படுவன், அதனாலந்த ஞானன்மாவான தானே மகாமுக்கியமாகும். எ-று.

காணி, உரிமை. உரிமையாவது, ஆஸ்தி. இதுபற்றி ஆஸ்தியென்றும் தனதுரிமைக்கு மகன் பாத்தியனாதல், தனது அந்தத்திலாதலால், கெடலான பொழுதென்பதற்கு, தன்னுயிர்க்குக்கெடுதி வந்தபொழுதென்றுரை கொண்டாம். விடலர்லாதவென்றது, விடலாதவென்றாயது இடைக்குறை. மகன் முக்கியமாயவிடத்துக்கௌணவான்மாவெனவும், உடலமுக்கியமாயவிடத்து மித்தையான்மாவெனவும், சீவான்மா முக்கியமாயவிடத்துக் கர்த்தான்மாவெனவும், ஐக்கியமுத்திக்கு ஆன்மா முக்கியமாயவிடத்து ஞானன்மாவெனவும் பெயர் வந்ததென்க. இந்த அவசரம் எல்லாம் ஆன்மாவாயிருத்தலின் இந்நான்கையும் ஆன்மாவென்றதென்க. சடமாயு முத்தியினிலென்றதனால் திரிபுடியற்றதென்றாயிற்று, இங்ஙனமாயது பற்றி ஐக்கியமுத்தியென்றும். அம்மூன்றையும் ஆன்மாவென்றது அவசரம்பற்றியும், தானாகிய ஆன்மாவை ஞானவான்மாவென்றது எதார்த்தம்பற்றியுமென்க. ஆதலின் அம்மூன்றும் பூர்வ பட்சம் இது சித்தாந்தம்.

(க-து) ஞானவான்மாவே முக்கியமாமெனற்கு இங்ஙனங் கூறினாரென்பது. பிரியபேதங்காட்ட நான்கு ஆன்மாவென்றது; ஞானவான்மாவைக் காட்டிலும் பிரியவடிவம் வேறின்றென நாட்டியதை வைப்புறுத்தற்கென்க. ஐக்கியமுத்தி என்றது; நிரதிசயானந்தத்தை. வேறெனல் பிதற்றல். இதில் முக்கியநான்கில், ஆக வினையெஞ்சி நின்றன. (119)

## 120 - கவி (அ - கை)

[விருப்பு முதலியமூன்றுமயமாகாத ஆனந்தமே ஆன்மசொரூபமென்பதை இக்கவியிற் கூறுகின்றார்.]

புலியுமனு கூலமெனி விட்டமாம் பகைசெயிற் புதல்வனெனி லும்வெறுப்பா, முலகிலிரு வகையுமல் லாதபுல் லாதியிலு தாசீனமாமாதலான், மலினமறு சின்மயன் பல்வகையு மிப்படி மகிழ்ச்சியில் விருப்பமிகழா, னலகிலா னந்தவடி வாகுமுன் சொரூபத்தையாராய்ந்துபார் மைந்தனே.

(இ-ள்) புலியுமனு கூலமெனி லிட்டமாம் பகைசெயிற் புதல்வனெனினும் வெறுப்பாம் (எ-து) - புலியேனுநமக்கு நயமுண்டாகற் கனுகூலமாய் இருக்குமாயின் விருப்புருவாகும், தந்தைக்கு விரோதமா நடக்கில் புத்திரனேனும் வெறுப்புருவாகும்: -- உலகிலிருவகையுமல்லதா புல்லாதியி லுதாசீனமாமாதலால் (எ-து) - உலகின்கணிவ் விரண்டுவகையு மல்லாத புல்முதலியவைகளிருப்பது உதாசீனமாகும், ஆதலின்: — மலினமறுசின்மயன் பல்வகையுமிப்படி மகிழ்ச்சியில் விருப்பமிகழான் (எ-து) - களங்கரகிதமான ஞானமே வடிவாவிளங்கும் ஆன்மாவென்போன். இங்ஙனமவைபோலப் பலவிதத்தானும் ஆனந்த மென்பது சற்றுமில்லாத விருப்பமுதலிய மூன்றுனும் அவமதிப்பெய்தான்: அலகிலானந்தவடிவாகுமுன் சொரூபத்தை யாராய்ந்துபார் மைந்தனே (எ-து) - அந்தவான்மா நீயாதலால் நீயே தடையற்ற வானந்தவடிவமென்பதாகும், ஞானபுத்திரா! இதிலையமுளதேல் உனது எதார்த்த வடிவத்தைச் சுருதியுத்தி யனுபவங்காரணமாக நீயே ஆராய்ந்து தெரிந்து காணுதி. எ-று.

அனுகூலத்தாற் புலியும் விருப்புருவாகவும், பகைத்தலாற் புத்திரனும் வெறுப்புருவாகவும், புல்முதலியவை இவ்விருவகையுமல்லாததால் உதாசீன வடிவாகவுங் காணும். உதாசீனம்; விருப்பு வெறுப்பின்றி யிருக்கை. புலியுமென்பதிலும்மை, இழிவுசிறப்பு புதல்வனெனிலு மென்பதிலும்மை, உயர்வு சிறப்பு. ஆன்மா தன்னுணருந்திரிசியத்தில் விருப்பாதி மூன்றுமன்றித் தன்னிடத்தின்று. எனவே, தான் இம்மூவுருவாகக் காணப்படாதென்பதாயிற்று. தற்றெரிசனத்தில் இவைமூன்றுந் தன்பாலின்மையின் மலினமறு சின்மயன் பல்வகையுமிப்படி மகிழ்ச்சியில் விருப்பமிகழானெனவும், இம்மூன்றுருவுமாகத்தானியைதற் பாலதன்றாமையின் ஆன்மா அலகிலானந்தவடிவாகுமெனவும், நீயுமான்மாவாதலால் அலகிலானந்த வடிவநீயே இதனைக்கண்டு தெளிதியென்பார், உன்சொரூபத்தை ஆராய்ந்து பாரெனவுங் கூறினார். இது கன்மகாண்டம் பத்திகாண்டம் போல்வதன்று, ஞானகாண்டமாதலின் இப்போதே உள்ளங்கை நெல்லிக்கனிபோல இவ்வருத்தங்களை அனுட்டித்துக்காணலாம். தானுகிய ஆன்மா சத்துஞ்சித்துமன்றி ஆனந்தம் வேறென்பார், தன்னைத் தான்காணுதார். இவர்தன்னிழப்பு, அருட்டெரிசனம், பரைதெரிசனம், ஆனந்தோதயம், ஆனத்தாதீதமென்பவற்றைத் தனக்கயலாகக்கண்டு வாளாபோயினர். இவர்களெல்லாங் கிரியாயோகக்குறியினரன்றி ஞானியரன்று. இது நிற்க.

(க-து) ஆன்மா, விருப்பு, வெறுப்பு, உதாசீனத்துளொன்றன்றுதலின் ஆனந்தவடிவமே யென்பது. இனிக்கூறப்புகும் அஷ்டவிதானந்தத்துள் இஃது ஆத்மானந்தமாதலின் அதற்கு இதுவே விதியெனக் கொள்ள வேறு கூறுதொழிந்தனர் இஃதுரைத்தாமென்றலென்னுமுத்தி. தன்னிலக்கணமினையதென இதனால் உணர்க. தன்னைத்தரிசியாவளவுந் தற்பிரியம் இம் மூவகையாகக் காணுமென்பது அருத்தாபத்தி. அனைத்தும் ஆத்மப்பிரதி பலனமாதலின் எல்லாச்சுகமும் ஆன்மாவேயெனப் பொருள்கொள்ளினும் அமையும். (120)

## 121 - கவி (அ கை)

[தனவானந்தமுதலிய ஆனந்தபேதங்கள் பலவென்றீர் அத்தொகையின் விவரத்தைத் தெரிவிக்கவேண்டுமென்வினவ அதற்கு விடை இக்கவியிற் கூறுகின்றார்.]

மானஞ் சிறந்தகுரு நாதனே யானந்த வகைகளைத் தனையென்னிலோ, ஞானந் திகழ்ந்தப்பிரமானந்தம் வாசனா னந்தம்விட யானந்தமென், றானந்த மூன்றுவித மெட்டுவகை யென்பர்சில ரவ்வைந்து மிதிலடக்கம், யானந்தவகைசொலக் கேண்மைந்தனே யெட்டுமஃதின்ன தின்னதெனவே.

(இ-ள்) மானஞ்சிறந்தகுரு நாதனேயானந்த வகைகளைத்தனையென்னிலோ (எ-து) பெருமையிற்சிறந்த சற்குருநாதனே, ஆனந்த வகைகள் பலவெனக்கூறினீரே அவையாவையெனில்: ஞானந் திகழ்ந்த பிரமானந்தம் வாசனானந்தம் விடயானந்த மென்றானந்த மூன்றுவிதம் (எ-து) ஞானமே விளங்குகின்றவடிவா பிரமானந்தம், வாசனானந்தம், விடயானந்தம், என ஆனந்த மூன்றுவகையாம் எட்டுவகையென்பர் சிலரவ்வைந்துமிதிலடக்கம் (எ-து)—சிலரெட்டுவகையென்று சொல்லுவர் அந்தஐந்துவகையும் இம் மூன்றிலடக்கமாம்:— ஆனந்தவகை சொலக்கேள் மைந்தனேயெட்டு மஃதின்ன தின்ன தெனவே (எ-து)—ஞானபுத்திரா! அந்தவெட்டுவித ஆனந்தங்களும் இன்ன தின்னதென்று தனித்தனியே சொல்லப்புகுதும அதனைக் கேளுதி. எ-று.

சமஷ்டி யுபாதி குணந் தொழில் காரணமாகப் பகவத்நிலை கூறு நிற்பர், மதத்தர். மகாவாக்கியமும், சத்துக்களும், இந்நூலாசிரியரும், ஞானமே பிரமமெனக் கூறுநிற்பர். அஞ்ஞானமே வஸ்து

வெனில் எவர்க்கு முடன் பாடன்று, ஞானமே வஸ்துவெனலை மறுப்பதென்னை இதுநிற்க. அவ்வைந்து மென்றது: ஆத்மானந்தம், முக்கியானந்தம், நிசானந்தம். அத்துவிதானந்தம். ஞானானந்தமென் பவற்றை. இதிலடக்கமென்றது. பிரமானந்தத்திலாதலால் ஒருமை யிற் கூறலாயினர். ஏனையவைந்தும் எனற்குப் பதிலாக அவ்வைந்து மென்றார். இதிலெனப் பொதுபடக் கூறியிருக்கப் பிரமானந்தத்தி லெனக் கொண்டது; ஏனைய விரண்டின் அம்சங்களன்றாதல் பற்றி யென்க. எட்டும் இக்கவியிற்கூறாது மறுகவியிற் கூறப்புகுவதால், அஃதெனப் புறச்சுட்டாக்கினும். எட்டுமென்பது தொகையொருமை பற்றி அஃதென ஒருமையிற் கூறினர். எட்டுவகையென்பர் சில ரென்றதனால், மூன்று விதமென்றது பலரெனப்பெறும். எட்டுமென் பதிலும்மை, முற்றும்மை இனி வகுத்துக்காட்டப் புகுதலால் இது தொகுத்துச்சுட்டலென்னு முத்தி.

(க-து) ஆனந்தபேதங்களையெல்லாஞ் சுருக்கித் தொகையாக எட்டென்பது.

## 122 - கவி (அ - கை)

[மேல்அட்டவிதானந்தமென்றார் அதன்வகையை இக்கவியிற் கூறுகின்றார்.

போகத்தில் வருசுகம் விடயசுக நித்திரைப் போதுளது பிரமசுகமா
மோகத் தனந்தலிற் சுகவா சனைச்சுக முழுப்பிரிய மான்மசுகமாம்
யோகத்தி லுள துமுக் கியசுகமு தாசீன முற்றசுக நிசசுகமதா
மேகத்தை நோக்கலத் துவிதசுகம் வாக்கிய மெழுந்தசுக ஞானசுகமே

(இ ள்) போகத்தில்வருசுகம் விடய சுகநித்திரைப் போதுளது பிரமசுகமாம் (எ-து) — போகங்காரணமாக எய்துஞ்சுகம் விடயசுக மெனவும், நித்திரையெனற்கு உரியது யாதோ அதனிலெழுஞ்சுகம் பிரமசுகமெனவும்: — மோகத்தனந்தலிற்சுகம்வாசனைச்சுக முழுப்பிரிய மான் மசுகமாம் (எ-து) — மயக்கமாயுள்ள வுறக்கத்தெழுஞ்சுகம் வாசனு சுகமெனவும், எங்குந்தனது பிரியவடிவாகக்காணுஞ்சுகம் ஆன்மசுக மெனவும்: — யோகத்திலுளது முக்கியசுக முதாசீனமுற்றசுகநிசசுகம தாம் (எ-து) — சமாதிகாரணமாக எழுஞ்சுக முக்கியசுகமெனவும், உதா சீனங்காரணமாகவெழுஞ்சுகம் நிசசுகமெனவும்: — ஏகத்தை நோக்கலத் துவிதசுகம் வாக்கியமெழுந்தசுகஞானசுகமே (எ-து) — தான்மாத்திரா

மாக மிஞ்சிநிற்றலை நோக்குவதால் எழுஞ்சுகம் அத்துவிதசுகமெனவும், மகாவாக்கியங் காரணமாக வெழுந்தசுகம் ஞான சுகமெனவும்பெயர் பெறும். எ-று.

இனி இவற்றைத் தனித்தனி கூறப்புகுதலாற் ஒவ்வொன்றின் இலக்கணங்களை ஆங்காங்கு கூறுதும். போகட, இரண்டொன்றுக இணைதல் அவ்வவற்றையும் அவ்வவ்விலக்கணங்களாற் காணலாம். (122)

## 123 க-வி (அ—கை)

அஷ்டவிதானந்தங்களையுந் தனித்தனிசொல்லப்புகுவார், இக்கவியில் விடயானந்த இலக்கணம் இனையதெனக் கூறுகின்றுர் ]

வேறு.

இவ்வா றுரைசெய்த சுகபே தங்களி னியல்பா மவைசொல மக னேகே, ளொவ்வா நனவினி லுழல்வா னிடர்கெட வுறங்குஞ் சயந த்தி லுறுநேரஞ், செவ்வா மனமக முகமா மதிலொளிர் சித்தின் சுக நிழல் சேருங்கா, ணவ்வா றிவனுள மகிழ்வா மனுபவ மதுதான் விட யசு காநந்தம்.

(இ-ள்) இவ்வாறுரைசெய்த சுகபேதங்களி னியல்பாமவை சொலமகனேகேள் (எ-து) — இங்ஙனந்தொகை வகையாகக் கூறிய வானந்தபேதங்களுக்கியல்பாயுள்ள இலக்கணங்களைத் தனித்தனியே விரிவாக யாங்கூற ஞானபுத்திரா நீ கேளுதி: — ஒவ்வாநனவினிலுழ ல்வா னிடர்கெடவுறங்குஞ் சயனத்திலுறுநேரம் (எ-து) — இயைதற் கொண்ணுதபந்த சாக்கிரத்தில் விவகாரநிமித்த முழல்வோன் தனதல் லல்கெட உறங்கற்கமைத்த பஞ்சணைமெத்தையில் விழிதுயிலுங்கால் - செவ்வாமனமக முகமாமதிலொளிர் சித்தின். சுகநிழல்சேருங் காண் (எ-து) — தடையின்றி மனமானது சுகாகாரமாதலை விட்டு அகமுகமாக நழுவும், அப்போதம் மனதில் அறிவானந்தத்தின்சாயை படும்: — அவ்வாறிவனுள மகிழ்வாமனுபவ மதுதான் விடய சுகானந்தம் (எ-து) - அங்ஙனம்படுநெறியால் அவனுள்ளமானது சுகாகாரமாகக் காணும், அங்ஙனங்காண்பதே தினுனுபவமாம், அந்நெறித்தாய சுகமே விடயானந்த மெனப்படும். எ-று.

சுகமெனக் கருதற்கு ஒவ்வாதது பற்றி ஒவ்வாநனவென்றுர். இந்நனவு அல்லலைத் தரற்குரித்தாதலிற் பந்தசாக்கிரமென்றும். உறங் குஞ் சயனமது றுநேரமெனப்பாடமுண்டு. உறக்கம்வரும்போது

மனமானது இயல்பாகவே தினந்தோறுஞ் சகாகாரத்தினின்று நழுவலும், சுகாகாரமாதலும் எவ்வுயிர்க்கும் அனுபவமாயிருக்க, இதனை வேறுவழியில் வருத்தியுரைகோடல் பொருந்தாது. பொருந்துமெனின், விடயானந்தமெனவும், உறங்குஞ்சயனத்திலுறு நேரமெனவுங் கூறுவதெற்றிற்கு, ஆதலிற்கூடாதென்க. முன்கவியில் போகத்தில் வருசுகமென்றார். போகமாவது, இணைதல். இங்கேமனமுஞ் சிதானந்தசாயையும் இணைதலே. விசாரத்தெளிவால் மனம்சகாகாரத்தினின்று நழுவிச் சுகாகாரமாதலொன்று. மூடத்தாலாதலொன்று, இங்கே விசாரத்தாலெனின், ஒவ்வாநனவினி லுழல்வானிடர்கெட விசாரத்தாலுறங்குறு நேரமென்றிருக்கவேண்டும். தொக்கியிருக்கின்றதெனின், உறங்குஞ்சயனத் திலுறுநேரமென்பானேன். இங்கேசயனமென்றது ஆசனங்கட்டலேயெனின், அப்போது அடயோகமென்னல் வேண்டும். அதுதானெனில், உரையிற் கோடலென்னுமுத்தியால் அங்ஙனங் கொள்ளினும் மொறுமொறுப் பொருந்தும். பொருந்துமேனும், இது விடயங்காரணமாகவந்த சுகமன்றே, குண்டலிசத்தியில் மனம் லயித்தலால் இந்தக்குண்டலிசத்தியும் ஓர்விடயமன்றோ? மனலய மாதற்கிடமாமேயெனின், தினசுழுத்திபோல்வதாம் அதனால்விடயசுகமென்றார். மனம் ததாகாரமாக அதனாலெய்துஞ்சுகமெனக்கூறுமையின் விடயசுகமே என்க.

(க-து) விடயானந்த இலக்கணம் இனையதெனக் கூறினாரென்பது (123)

## 124 க-வி (அ—ஃகை)

[பிரமானந்த இலக்கணம் இனையதென இக்கவியிற் கூறுகின்றார்.]

ஈனந் தருசுக விடயந் திரிபுடியிடரா மெனமன மசையாமற்
சேனந்தனது குலாயந் தனில்விழு செயல்போ னித்திரை செறிசீவன்
ஞானந் தமில்பர னுடனொன் றுவனொரு தனையல் லதுபிற நினையாமல்
லான்ந் தம்மய மாவன் சுகமிது மதுதா னுயர்பிர மானந்தம்.

(இ-ள்) ஈனந்தருசுகவிடயந்திரிபுடி யிடாரமெனமன மசையாமல் (எ-து)— பிறப்புவீடென்னுமிரண்டினுள் இழிவாயுள்ள பிறவியையே தரற் பாலதாகிய சுகமயம்போற் றோற்றும் விடயந் திரிபுடியாயிருப்பதால் அவை துன்பமேயென விசாரத்தால் துணிந்து மனம் சற்றும் சலியாது நிற்க:— சேனந் தனது குலாயந்தனில்விழு செயல்போனித்திரை செறிசீவன் (எ-து)- ஆகாயத்திற் பறக்கும் பருந்து

தனது கூட்டிலலுத்து விழுஞ் செயல் போல உறக்கத்து அபேதமாக அமைந்த சீவனென்போன் :— தானந்தமில்பரனுடனென்று வனொரு தனையல்லது பிறநினையாமல் (எ-து.) — தானிங்ஙனமாய நிலையதென அளவைகளாற் கணித்தற்கரிய பிரமத்தோடு இரண்டறக்கலக்கா நிற்பன். தெளிந்தவிடத்துத் தனித்து நின்றதுதான் மாத்திரமாதலால் அங்ஙனந்தனித்து நின்ற தன்மைமாத்திரமன்றி அயலென்பது உளதாக அதனை ஓர் பொருளெனக் கருதாது :- ஆனந்தம்மயமாவன் சுகமிகு மதுதானுயர் பிரமானந்தம் (எ-து) - ஆனந்தமயமாக விளங்குவன். அங்ஙனமாக மீக்குள்ள அவ்வானந்தமே மேலாய பிரமானந்தமெனப் படுவதாம், எ-று.

ஈனம். குணவாகுபெயர். விடயந் திரிபுடியிடராமெனமன மசையாமனித்திரை செறிசீவனென்பதினால், இங்கே நித்திரை யென்பது நனவிற்சுழுத்தி. சுத்தகேவல நிலையென்பாருமுளர். தனக்கயலென்பது ஒன்றுமின்றி அனைத்துஞ் சின்மாத்திரமாக விளங்கப் புரிந்தது அந்நெறித்தாச் சலியாது நிற்கவேண்டிவரும். யாதினா லெனில், விடயந்திரிபுடி யிடராமெனக் கண்டதுபற்றி. அங்ஙனஞ் சலியாது நிற்றலே சுத்தசகலம். இந்நெறித்தாயசுத்த சகலமய மாகவே, மனமெனலேது? அது சலித்தலெனலேது? இன்றுதலின்? மனமசையாத சுத்தசகலமயமாக நிற்புழி உறக்கம் வருமன்றோ? அவ்வுறக்கந்தான் சுத்தகேவலமெனப்படுவது இந்நெறித்தாயவன் சீவனாதலால் நித்திரை செறிசீவனெனவும். அந்நித்திரை, சுகமேவீடு. அச்சுகமேவீடு. மலாகித மாதலாற் பரனெனவும், அப்போது சீவன அந்தச்சுகாகாரமாய்விகுவன் ஆதலால், பரனுடனென்றுவனெனவும், அங்ஙனஞ் சுகாகாரமாக நின்றவன சீவனாதலானும், தன்னையன்றி வேறு கண்டிலனாதலானும், ஒருதனையல்லது பிறநினையாமலெனவும், ஆனந்த மயமன்றித் தான்வேறுகாரமாதற்கிடமின்மையின் ஆனந்த மயமாவனெனவும், இந்நிலைத்தாய அவசரத்தையே ஞானநூலனைத் தும் பிரமானந்தமெனலானும், இப்பெயரை ஏற்றற்பாலதாதலானும், சுகமிகுமதுதானுயர் பிரமானந்த மெனவுங் கூறினார்.

(க து) பிரமானந்த இலக்கணம் இனையதெனக் கூறியதென் பது. ஆனந்தமயனுமாவனெனப் பாடமுமுண்டு. திரிபுடி; ஞாதுரு, ஞானம், 'ஞேயமென்பன. ஒருதனை யென்றதனால், தான்மாத்திர மெனப் பொருள் கொண்டாம். திரிபுடியிடராமென்றதனால், உபமானத்

தில் அழுந்துவிழுஞ் செயல்போல் என்றார். அளவைகள், அஷ்ட வித்ப்பிரமாணங்கள். முன்கவியில், ஆலிங்கனசுகத்தை விடயானந்த மென்னுதது. தினசுழுத்தி சுகப்போல் ஆறுதல் செய்யாமை பற்றி யென்க. இக்கவியிலும்; நித்திரையென்ல், நனவிற்சுழுத்தியை. (124)

**125 - கவி. (அ - கை)**

[ஐயமுறுதற்கு இன்னும் பிரமானந்தம் இனையதென இக்கவியிற் கூறுகின்றார்.]

தூங்குஞ் சுகமது பிரமச் சுகமெனல் சுருதிப் பொருள்விழி துயில்வோர்க டாங்கும் மலரணை நன்று கச்சிலர் சம்பா திப்பது தானசுகந், தீங்குந் நன்மையு மாண்பெண் முறைமையுந் தெரியா தமளிசெய் பொழுதேபோ, லாங்குள் வெளிகளு மறியாவனுபவ மதனு லதுபிரமானந்தம்.

(இ-ள்) தூங்குஞ்சுகமது பிரமச்சுகமெனல் சுருதிப்பொருள்விழி துயில்வோர்கள் (எ-து) – நனவிற்சுழுத்திசுகத்தைப் பிரமானந்தமென்பது மகாவாக்கியார்த்தமேயன்றி வேறன்றெனக்கொள்வோர் தூங்காமல் தூங்குபவர்:— தாங்கும்மலரணை நன்றுகச்சிலர் சம்பாதிப்பது தானசுகம், தீங்குந்நன்மையு மாண்பெண்முறைமையுந் தெரியாதமளி செய்பொழுதேபோல் (எ-து) – சிங்கம் போன்றமைத்த கருவிகளாற்றாங்கப்பெற்ற புஷ்பசயனத்தைச் சிலர் நன்றாகச் சம்பாதிப்பது ஸ்தானசுகம் வேண்டி ஆதலால், அம்மலரணையில் இது தீமையெனவும், நன்மையென்வும், ஆண்பெண்முறைமையெனவு முணரும் பாகுபாடு சற்றுந்தெரியாது உறங்குமாறுபோல: – ஆங்குள்வெளிகளு மறியுாவனுபவ மதனுலதுபிரமானந்தம் (எ-து) - அந்த நனவிற்சுழுத்தியின்கண் அக்ம்புற மினையவென்பதுந் தெரியாது உறங்குமனுபவமாம், அவ்வனுபவத்தாற் கணிக்குஞ்சுகமெதுவோ, அதுவே பிரமானந்தமெனப்படுவதாம். எ-று.

விழிதுயில்வோர்கள் தூங்குஞ்சுகமது பிரமச்சுகமெனல் சுருதிப்பொருள், எனக்கொண்டுகூட்டித் தூங்காமற்றூங்குவோர் தூம் அங்ஙனந் தூங்குங்காலெழுஞ்சுகம் பிரமசுகமாமெனக்கூறுவது சுருதிப் பொருளாம், வேறன்றெனப் பொருள்கொள்ளினுமமையும். எனவே, வேதார்த்தமும், மகான்கள் பிரமமெனலும் ஒக்குமென்பதாயிற்று. பிரமச்சுகமெனல், எழுவாய், சுருதிப்பொருள் பயனிலை. இதுகாறும்

இவ்வெல்லைகடவாமைக்கு எழுவாய் பயனிலை கூறிய தென்க.தாங்கு மென்னும் வினைக்கெழுவாய் தொக்கியிருப்பதால் சிங்கம்போன்ற மைத்த கருவியென்றும். தாங்கும்மலரனை நன்றாகச்சிலர் சம்பாதிப்பது தானசுகம்பற்றியாதலால், அதிலுறங்கில், நன்மைதீமையாண் பெண் முறைமையாதிகள் எங்ஙனந்தெரியும். தெரியாதாதல்பற்றி இவ்வுவ மைவேண்டிக் கூறினர். மலரணை மிகத்துயில்வினைத்தற்குத் தானமாத லின் அச்சுகம்வேண்டி நன்றாகச்சம்பாதிப்பதென்றாரென்க. பலரென் றது சிலரென்றது, நிரந்தர மிங்ஙனஞ்செய்வோர் மிக்கசெல்வத்தார் சிலராதல் பற்றி என்க. தானசுக மென்றது; இவ்விடத்திற்கியைந்த காரணப்பெயராம். யூக்கசுகமெனின், யூகமெனற்தப்பொருள்கள், ஓர் புல், கருங்குரங்கு, காந்தி, தருக்கம், படை, படைவகுப்பு. பெண் குரங்கு, முசு, என்பன. இதுபல்பொருளொருசொல். இவற்றுள் யாதிங்கே பொருந்தும். பொருந்தாமையின், ஐயிருகுற்றத்துள் மாறு கொளக்கூறலெனலை யேற்கும். இதற்கென்செய்தும். சான்றோராட்சி யெனின், பொருத்தமின்றி யிராது. சம்பாதிப்பதுதானாகமென்ப் பாடங்களிருக்கின்றன வெனிலோ; ஊகமென்பது. உத்தி, குரங்கு. நினைவு, புலியென்பன. இதுபலபொருளொருசொல் இவற்றுளெவ் வருத்தம்பற்றி அம்மொழிவந்தது. யுத்திபற்றியெனின், உபமானவு பமேயசாதாரணதர்மம் இனையதென்றறியார்போலும். உபமானத் தையுபமேயமாக்கலாமா அதைச் சுருதியுத்தியனுபவத்துள், யுத்தியனுபவமாக்கலாமா? தாங்கும்மலரணை நன்றாகச்சிலர் சம்பாதிப்பதுதானாகம், தீங்குநன்மையும் ஆண் பெண் முறைமை யுந் தெரியாதமனி செய்ஒப்புமையே [illegible] மூவுமையன்றோ? இதற்குவமேயம், ஆங்கதன்வெளிகளுமென்பது முதலறியாவனுபவ மென்பதுகாறும் தானசுகமெனப்பிரிதிகளிருப்பதென்னை? அங்ஙனமாக வும் இங்ஙனமாகவும் பிரிதிகளிருக்கின் ஒருதலையாகத் துணிதலை நோக்குதும். தானசுகமெனினும், தானாகமெனினு முபமேயத்தொடர் பன்று, உபமானத்தொடர்பு. இவ்வுரம்புகடந்துரைகூறுவது, கல்வி வரம் பறியார்போலுமே இதற்கென்செய்தும். கவிக்குற்ற மன்று, கவியிலக்கணங்கல்லாது உரைகூறு நமதுக்குற்றம். ஆதலின் தானசுக மெனலே ஐயமின்றிப் பொருந்தும். இலக்கணமில்லாக்கல்வி உப்பில் லாவுணவுபோலும். அதையாதரவர்க்க் கொண்டு உரைகூறலென்னு மரை பசையற்றதாம். வெறுவாய்மெல்வதுபோலும். சுருதியுத்தியனு பவங்காண்டல் உபமேயத்திலன்றி யுபமானத்திலன்று. உபமேயம்

விளங்கக்கூறுவது உபமானமாதலின் கூடாதென்க தூங்குஞ்சுகமது பிரமச்சுகமெனல் சுருதிப்பொருள்விழி துயில்வோர்களென்பது சுருதிப் பிரமாணமாம். தாங்கும்மலரணை நன்ருகச்சிலர் சம்பாதிப்பது தானூக மெனக்கூறி இதுயுத்திப்பிரமாணமென்பது பொருந்தாது ஆங்குள் வெளிகளுமறியாவனுபவமென்றது அனுபவப்பிரமாணமாம். கல்வித் திறமின்மையால் இக்கவியிலில்லாத யுத்திப்பிரமாணத்தை உண்டெனின் எங்ஙனம் ஏற்கப்படும். அவர்போல்வாரேற்பர்.

(க-து) பிரமானந்தமென்பது சுருதிக்குமனுபவத்துக்கு மியைந் திருக்கக் காட்டினரென்பது. உரையை யாவர்கூறினும் இலக்கண வழுவின்றிக் கூறவேண்டும். கவிக்கிலக்கணமுரண வுரைகூறின், எல் வாசிரியராயினு மெந்த சாம்பரதாயமாயினும் என்சிறப்பு. கவிக் குரையன்று. உரைக்குக்கவிபோலும், இதனையெவரேற்பர். இந்நூலா சிரிய ரெண்விதானந்தமென்ருர், இவற்றுள் தானூகமெனல்கிடை யாது. இத்திறத்தார், பிறருரைமேற்குற்றங்காட்டலின் என்சிறப்பு. தன்கோணலைத் தானிமிர்த்தவறியார்போலும் தெரியாதமளிசை பொழுதேபோலெனச் சிலபிரதிகளிருக்கின்றன. பொருந்துமாறுரை யிடுக. போலிவேதாந்திமயம் உலகமாதலின், தாங்கும்மலரணை தீங் குந்நன்மையும், விரித்தல்விகாரம்.. (125)

## 126 - கவி. (அ—கை)

[பிரமானந்த இலக்கண இனையதென நன்குறத்தெளிந்தேன், இப்போது ஓரனுபவம் என்னுள் உதிக்கக்கண்டேன் அதனைக் கேட்டருளுமென மாணக்கன்வியந்துகூறுவதை இக்கவியிற் கூறுகின்ருர்.

உதவும் புவியினி லொருவன் னனுபவ மொருவன் மனதினி லூதியாதே. மதியுங் கெடுகிற துயில்கொண் டானந்த மயனன் ரேசுக முறுகின்ரு, னிதுவிஞ் ஞான மயனுஞ் சிந்தையி னினைவாய் வந்திடு மெனல்கண்டேன், சுதைவிண் ணேர்புகழ் குருவே நீரிது சொல்லீர் சகலமும் வல்லீரே.

(இ-ள்) உதவும்புவியினிலொருவன்னனுபவ மொருவன்மன தினிலூதியாதே (எ-து) - வேண்டுவதைத்தடையின்றி உதவத்தக்க ஞானபூமியேழனுள், ஒருவன்கண்டசுவானுபவ மற்றெருருவன்மனதிற் காணுமா, காணுதே இதென்னவியப்பு, அதனைச்சொல்லுகிறேன்,

அதாவது:- மதியுங்கெடுகிறது யில் கொண்டானந்த மயனன்றேசுக முறுகின்ருன் (எ-து) - மனதும் நசிக்கத்தக்க யோகநித்திரை காரண மாக ஆனந்தமயனுகிற ஆன்மாவன்றே பிரமானந்தவடிவமாகின்ருன், இங்ஙனமிருக்க:— இதுவிஞ்ஞானமயனுஞ் சிந்தையினினைவாய்வந்திடு மெனல்கண்டேன் (எ-து)—இவ்வானந்தமரனது விஞ்ஞானமயனுகிய மானதனிடத்தில் நினைவுவடிவாகவந்து விடுமெனச் சத்துக்கள் கூறு வதைப் பிரத்தியட்சமாக அடியோனிடத்திற் கண்டனன்:—சுதை விண் ணோர்புகழ்குருவேதீரிது சொல்லீர் சகலமுழ்வல்லீரே (எ-து)—அமிர் தத்தை யுட்கொண்ட தேவர்களாலுந் துதிக்கப்பெற்ற குருநாதனே! சகலார்த்தமும் ஐயமின்றி விளங்கப் போதிப்பதில் வல்லமையுடைய வரே! இஃது எங்ஙனங்கூடும் தேவரீரே இவ்வையமகலத் தெரித் தருளவேண்டும். எ-று.

உதலுமெனப்பொதுப்படக்கூறியதனுல் வேண்டுவதையென வும், புவியெனப்பொதுப்படக்கூறியதால் ஞானபூமியெனவும், துயி லெனப்பொதுப்படக்கூறியதால் யோகநித்திரையெனவும், ஆனந்த மயனெனப்பொதுப்படக் கூறியதால் ஆத்மாவெனவுங் கொண்டாம் இரட்டுறமொழிதலென்னு முத்தியால், முத்திக்குச்சாதனமான தனு கரணங்களை உதவத்தக்க இப்பூமியில் ஒருவன்கண்ட அனுபவம் ஒருவன்மனதினில், எங்ஙனங்காணும், காணுதேயென உதாரணமாக் கியதாக உரைகொள்ளினுமமையும்.

(க-து) நினைவிறந்த ஆனந்தம் நினைவாயதெங்ஙனமெனவினு வினுனென்பது. ஏனெனில், இவன் தன்சமாதியில் மனநாசத்திற்கண்ட தடையற்ற ஆனந்தம், சமாதிவிட்ட காலத்திலும், தன்னினைவு எல் லாம் இடைவிடாது உற்றுக்கொண்டிருந்தலாவது; யாது புரியினும், யாது நினைக்கினும், யாது சுகிக்கினும், கலை யாது நெஞ்சில் நிறையுமாயிருத்தல், முலடியுறியூரள் பிள்ளைவருத்தம், அதுபோல, ஏனையரறியார் இவ்வானந்தநிலைமை. இவனெய்திய இவ்வனுபவமொழி சத்தியமாதல்பற்றி இங்ஙனம் வினவினனெனக. எனலென்பது, என்றுசொல்லுதல். இதனுல் சத்துக்களின் வருவித் தாம் யாதினுலுங் கெடாததென்பதுதோன்ற மதியுங்கெடுகிற வென் ருர், மதியுமென்பதிலும்மை உயர்வு சிறப்பு. ஆனந்தநினைவாய்வந்திடு மென்றதனுல், ஆனந்தமே நினைவே ஆனந்தமெனப்பெற்ரும்

(க-து) நினைவிறந்தசுகம்; நினைவாக நிற்பதற்கு ஏதென்னே

யென்பது. மனமிறந்தவிடத்து உதிக்கும் பிரமானந்தத்தை ஆன்மா வனுபவிக்க, மனதுக்கு எட்டுவானேனெனல் வினா. (126)

127 - கவி (ஷை)

[சுத்தமனதும், பரமாத்மாவும்; ஒன்றேயென உபமானமுகத்தால் இக்கவியிற் கூறுகின்றார்.]

நெய்யும் வெண்ணெயு மிருபேர் களுமறி நினைவிற் பிறிவறி
வினிலில்லை, செய்யுந் நனவினி லிறுகும் மனமொடு சேருஞ் சின்
மய விஞ்ஞானன், நையுந் துயர்மன நழுவும் பொழுதுணர் ஞானச்
சுகமுணு மானந்தன், பெய்யுந் துளிகளு நீருங் குளமொடு பாரும்
போலிவர் பிறிவன்றே.

(இ-ள்) நெய்யும் வெண்ணெயுமிரு பேர்களுமறி நினைவிற்பிறிவறிவினிலில்லை (எ-து) நெய்யென்றபெயரும், வெண்ணெயென்ற பெயருமாகிய இவ்விரண்டும், பகுத்துணரத்தக்க மனத்தாலாய பேதமேயன்றி அவ்விரண்டையும் ருசிக்கத்தக்க நாவுணர்வுக்குச் சற்றுமில்லை:—செய்யுந்நனவினிலிறுகும் மனமொடு சேருஞ்சின்மய விஞ்ஞானன் (எ-து)—இச்சாஞானக்கிரியைகளைச் செய்தற் கியைந்த சாக்கிராவத்தையில் விசாரத்தாற் றனதுசெயலிற் சுருங்கிய மனதோடு கூடிய சின்மாத்திரமாயிருக்கும் விஞ்ஞானமயனென் போனும்:—நையுந்துயர்மன நழுவும்பொழுதுணர் ஞானச்சுகமுணுமானந்தன் (எ-து)—வதையத்தக்க துயர்மயமானமனது மெல்ல நழுவற்கியைந்த சமாதிகாலத்தில் தன்னையே உணரத்தக்க ஞானானந்தத்தை அனுபவிக்கின்ற ஆனந்தமயனான ஆன்மாவும்:—பெய்யுந்துளிகளுநீருங்குளமொடு பாரும்போலிவர் பிறிவன்றே (எ-து)—துளிக்குந்துளிகளும், சலமும், குளமுங் கரையும், எங்ஙனம்பேதமின்றோ அதுபோல விஞ்ஞானனும், ஆன்மாவுமாகிய யாவும் இவ்விருவருந் தம்முள்பேதமிலராம். எ-று.

அறிநினைவெனவே, சட்சுகாரணமாக அறியுநினைவென்றுயிற்று. கண்ணுக்கு இரண்டாகத் தோற்றினு நாவுணர்வுக்கொன்றே. அன்றியும், நெய்வெண்ணெயெனச் சொற்பேதமேயன்றிப் பொருட்பேதஞ்சற்றுங்கண்டிலம் அதுபோல; விஞ்ஞானமயன், ஆனந்தமயனெனச் சொற்பேதமுந் தோற்றபேதமுமேயன்றிப் பொருட்பேதமும் அனுபவபேதமுஞ் சற்றுங்கண்டிலம். வெண்ணெயன்றி நெய்யென

லும், சலமன்றித் துளியெனலும், கரையன்றிக் குளமெனலும், எங்கே. அதுபோல, விஞ்ஞானமயனையன்றி ஆனந்தமயனென்பவனெங்கே. எனவே, அறிவையன்றி ஆனந்தமெனலெங்கேயென்றயிற்று. ஆகவே, அறிவே ஆனந்தமெனப்பெற்றும். பெறவே, ஞெப்தியே பிரியம் பிரியமே ஞெய்தியெனக்கண்டாம் காணவே அனுபவத்திற்பேதமின்றேனத்துணிந்தாம், இத்துணிபு; இதனைமறுக்கற்கவெனக் குறிப்பிக்கநின்றது.

(க-து) விஞ்ஞானமயனெனலும், ஆனந்தமயனெனலும், ஓரவசரம் பற்றிச் சொல்லாற்பேதங் கூறவந்ததேயன்றிப் பொருளாற்சற்றுமின்றென்பது. இவ்வனுபவஞ் சககானுபவத்திற் குருமுகத்தாற்காணப்படுவது. (127)

## 128 - கவி (அ - கை)

[வாசனானந்த இலக்கணம் இனையதென இக்கவியிற் கூறுகின்றார்.]

ஒன்றுகியபிர மானந் தன்சுக மொழிவானேன் வெளிவருவானே, னென்றுன் முன்செய்த கருமம் வெளியினி லிழுக்குஞ்சுழுத்திவிட் டெழுந்தோனு, நன்றுயினசுக மகலான் வெளியிலுநடவான் மறதியும் பெறமாட்டா, னன்று மெனவிருந் துறங்குஞ்சிலகன்ம மதுவே வாதனை யானந்தம்.

(இ-ள்) ஒன்றுகியபிரமானந்தன்சுக மொழிவானேன் வெளிவருவானே னென்றல் (எ-து)-ஏகமாக விளங்கும் பிரமானந்தனென்போன் தனதுசுகாநந்தத்தினின்று நீங்குவானேன் வெளிப்படுவானேன் எனக்கேட்பையாயின்: - முன்செய்த கருமம்வெளியினிலிழுக்குஞ்சுழுத்திவிட் டெழுந்தோனும் (எ-து) — பூர்வத்திற்செய்தகன்மமானது புறம்பில் மெல்லவிழுக்கும், அதனல் சுழுத்தியைவிட்டுநீங்கினவனும்: — நன்றுயின சுகமகலான் வெளியிலு நடவான்மறதியும் பெறமாட்டான் (எ-து) — வெகுபிரியமான அந்தச் சுகத்தினின்றும் நீங்கான், புறம்பிலும் செல்லான், அச்சுகத்தை மறக்கவுமாட்டான்: — அன்றுமெனவிருந்து றங்குஞ்சிலகன்ம மதுவே வாதனையானந்தம் (எ-து) — இப்போது அவசியமல்ல, இப்போது அவசியமாமென நினைத்துறங்குதான் சிலபிரயத்தனம் அப்போது நிகழ்வனவாம், அங்ஙனநிகழ்த்லே வாசனானந்தமெனப்படுவதாம். எ-று.

பிரமானந்தமென்றது பிரமானந்தனென்றதனால் அம்மயமானவன் ஆன்மாவாகிய புருடனெனப்பெற்றும். முன்செய்த கன்மமென்றது; தினமும் வழக்கமாகச் செய்துகொண்டுவந்த நினைவிர்த்தியை, தினசுழுத்தி கலையில் எங்ஙனமோ, அங்ஙனம் பிரமானந்தமேலீடாகிய சுழுத்தி கலையுங்கால் நிகழும் அனுபவானந்தமாதலின் இதனை வாசனானந்தமென்றார். சுழுத்தி கலையில், விவகாரவிர்த்தி வெளியிவிழுக்கும்போது, அவ்வானந்தப் பிரியந் தடுக்கும், அவ்வானந்த வசத்தாகது மெனின், விவகாரசங்கற்பந்தடுக்கும். சுகத்தை விட்டு அகலக்கூடாமையில் இது தருணமல்லவெனவும், இப்போதே செய்யாவிடில் இவ்வளவு நட்டம்வரும், ஆதலினிது தருணமாமெனவும் அங்கே அங்ஙன நிகழ்தலின், அன்றுமென விருந்துறங்குஞ் சிலகன்மமெனப்பட்டது வெளிக்கு வரவொட்டாமல் தடுப்பது அவ்வானந்தாம்சமாதலால் வாசனானந்த மென்றதென்க.

(க-து) இடுகுறிப்பெயரன்றெனக்காட்ட இவவேதுக்களைத்தெரிவித்து வாசனாநந்த இலக்கணங்கூறியதென்பது. வெளிக்கிழுத்தல் இருவகையேது பற்றியெனினும் அமையும். அதாவது; பிராரத்தகன்மம், சகசநிட்டையென்பன. வெளிக்குவருதல், விஞ்ஞானமயத்துக்கு வருதலை, இருவகை ஏதுக்கள் இனையவெனத் துணிவது, நயப்பற்றியென்க. அதாவது; கன்மமாயின்பிராரத்துவமெனவும், நிலையாயின் இந்நிட்டையெனவுமாம். சகசநிட்டைக்கிழுத் தலெனக்காண்டல் கூடாமையின் முன்செய்தகன்மம்வெளியினிலிழுக்கு மென்றதென்க சுழுத்தி விட்டெழாதவனு மென்பது தோன்றச்சுழுத்தி விட்டெழுந்தோனு மென்பதின் கண்ணுள்ளவும்மை, இறந்ததுதழீ இயவெச்சவும்மை

## 129 கவி (அ—கை)

[நிசானந்த இலக்கணம் இனையதென இக்கவியிற்கூறுகின்றார்.]

அந்தக் கணமுட லகமென் றிடர்களி லலைந்தே சுகந்தனை மறந்தேபோ
முந்தைச் செயும்வினை சுகதுக் கந்தரு மோனந் தருநடு வடிவேகா
ணெந்தப் புருடனு மொருசிந் தையுமற விருந்தே னெனலனு பவமாகு
மிந்தப் படிதனுதாசீ னச்சுக மிதுவே நிசமெனு மானந்தம்,

(இ-ள்) அந்தக்கணமுடலகமென்றிடர்களி லலைந்தேசுகந்தனை மறந்தேபோம் (எ-து)-தேகமே நானென்றுன்ன வக்கணமே ஆன்மாதுன்பப் பெருக்கில் அகப்பட்டு இன்னதிசையெனக்காணாது அலைந்து தற்பிரியத்தைச்சற்றுமெண்ணமின்றி மறந்தேவிடுவன்: —முந்தைச்செயும்வினை

சுகதுக்கந்தரு மேனெந்தருநடுவடிவேகாண் (எ-து) - முன்செய்த கன்மமானது சுகத்தையேனுந் துக்கத்தையேனுந்தநும். மோனநிலையோ அங்ஙனந்தராது, மத்தியகத நிலையையேதரும்: - எந்தப்புருடனுமொருசிந்தையுமற விருந்தேனெனலனு பவமாகும் (எ-து) - எந்தப் புருடனுமினும் யாதோர்சிந்தையுமின்றி யானிருந்தேனெனக் கூறுவது, எவர்க்கும் அனுபவமாம்: - இந்தப்படிதனுதாசீனச்சுக மிதுவேநிசமெனுமானந்தம் (எ-து) - இவ்வாறு தன்னாலனுபவிக்கப்பட்டது உதாசீனசுகமாதலால் இதுவே நிசானந்தமெனப் படுவதாம். எ-று.

அந்தக்கணமென்றற்கு. தனது எதார்த்தவடிவை மறந்த வந்தக்கணமென்றும், மறந்ததனால் தனது எதார்த்தசுகந்தனை மறந்தேபோமென்றுங் கூறியது அனுபவமிருத்தலிற் பொருந்தும். பூர்வவினை; சுகதுக்கத்துள் ஒன்றுதரு மாயின் மகாமெளனம்; மத்தியகத நிலையைத்தருமென்றார். காண், அசைநிலை. தன்னுதாசீனச்சுகம்; தனதுவிருப்பு வெறுப்பற்றசுகம்.

(க-து) விழிப்பில்லொருசிந்தையுமற நிற்றலாலாயசுகமே, நிசானந்த மென்பது. இது யாதோர் நினைவுமற நின்றவிடத்துதித்த சுகமாதலாற் காரணப்பெயராயிற்று. சுழுத்திசுக மென்னலாமேயெனின், உணர்வற்றவிடத்ததன்றாமையின் பொருந்தாது. இதனைச் சமரசசுக மெனினுமமையும் ஒரு சிந்தையுமறவிருத்தல், கற்பனையறல. எனவே, நிசமென்றாயிற்று. நிசத்திலுதித்தலால் நிசானந்தமெனப் படுமென்க. ஞானஞ் ஞானத்துக் கிடையாதல்பற்றி நடுவடிவெனப் படும். இதனை முக்கியானந்தமெனக் கூறுவார், முன்பின்னறி யார் போலும். (129)

## 130 - கலி (அ - கை)

[முக்கியானந்த இலக்கணம் இனையதென இக்கவியிற்கூறுகின்றார்]

நிசமா னதுமுக் கியமோ குடத்துள நீரன் றேவெளி யீரந்தான்
வசமா மகங்கர மறைந்தா னிசமது படிந்தான் முக்கிய வகையாகுந்
தி சயார் திரிசய மறியா தேதுயில் செறியா தேயுட றறிபோலே
யசையா தேமதி சமமா கியநிலை யதுதான் முக்கிய வரந்தம்.

(இ-ள்) நிசமானதுமுக்கியமோகுடத்துள் நீரன்றேவெளியீரந் தான் (எ-து) - நிசானந்தமானது முக்கியமானந்தமெனப்படுமோவெனின், குடத்திலுள்ள நீரின்றன்றே புறம்பில் ஈரமாகக் காணப்படுவது, ஆதலின் முக்கியானந்தமெனப்படாது. — ஆயினெங்ஙனமெனின், வசமாமகங்கர மறைந்தா னிசமதுபடிந்தால்முக்கியவகையாகும (எ-து)

— பிறவிதரற்குவசமாயுள்ள அகங்காரமானது திரிசைகாணுதகன்று நிசவடிவங்கைகூடுமானல் அப்போது முக்கிய மென்கிறவகையை யேற்பதாகும்: — திரிசையார்திரிசய மறியாதேதுயில் செறியாதேயுடற்றி போலேயசையாதேமதிசமமாகிய நிலையதுதான் முக்கியவானந்தம் (எ-து) — எங்கணு நிறைந்துள்ளதிரிசயத்தைநாடாமலும், உறக்கத்து தன் வயப்படாமலும், தேகந்தறிபோல் அசையாமலும் மனமானது நடு நிலையதாகின் அதுவேமுக்கிய ஆனந்த மெனப்படுவதாம் எ-று.

முக்கியமோவென்பதிலோகாரம், வினா. அகமுகமாகச் சொரூப சமாதியிற்கண்டசுகமன்றே புறம்பில் தானே விருப்புவெறிப்பின்றிய சுகமாகக்காண்கின்றதென்பதுகுறிப்பிற்றோன்ற உவமையாற்கூறிய தென்க. அகம்புறமொத்தலின் நிசானந்தமெனவும், அகங்கார மறுதலும், உண்மைசேர்தலும், திரிசயமென்பது சற்றுங்காண வறியாமலும், முழுதுமானந்த நித்திரையில் மூழுகாமலும், தேகந்தறி போலசையாமலும், மனமானதுஞானஞ்ஞான நெறித்தாச்செல்லாமலு நிற்றல் அகத்திலாதலால், முக்கியானந்தமெனவுங்கருதிக் கூறியதாகக் காண்கின்றது. இதனையறியாது ஒன்றை ஒன்ருக்கூறுவார் செய்யுட் பிரயோக மறியார்போலும். இங்ஙனநிற்கவேண்டியது மனமாதலால், மதியை மனமென்றும். அதுதானென்பது சுட்டுப்பெயராதலின், மதிசம மாகிய நிலையென்பதை வினையெச்ச மாக்கினும். செறிதல், நெருங்கல், ஆதலின் துயில் செறியாதே யென்பதற்கு, உறக்கத்து அதன் வயப் படாமலென்றும்.

(க-து) இனையவாய ஏதுக்களால் இது நிசானந்தமன்று, முக்தியானந்தம் என்றுரென்பது. இக்கவிக்குரை இந்நெறித்தாயது; கவிநோக்காலென்க. (130)

131 கவி (அ—கை)

[இவ்வெண்விதானந்தங்களுள் அடங்காத ஆனந்த பேதங்களுள, அவையும் பிரமானந்தலேசமென இக்கவியிற் கூறுகின்றூர்.]

மனுடன் மனுடகந்தரு வன்றே வகந்தரு வன்பிதிர் பிறவித்தேவன்
றனுடன் கரும சுரன்சுர னிந்திர ஞசான் பிரசா பதியா னேன்
கனவி ராட்ட னிரணிய கருப்பன் கருதும் மிப்பதினெரு பேரின்
பினவா னந்தங்க ளுரையாம் பிரளய வெள்ளக் கடல்பிர மானந்தம்

(இ-ள்) மனுடன் மனுடகந்தருவன் றேவகந்தருவன் பிதிர் பிறவித்தேவன்றனுடன் (எ-து) — மனுடன், மனுடகந்தர்வன், தேவ

கந்தருவன், பிதிரர், பிறவித்தேவன்றனுடன்: – கருமசுரன் சுரனிந்தி ரனுசான் பிரசாபதியானேன் (ஏ-து) – கருமசுரன், சுரன், இந்திரன், ஆசான்; பிரசாபதியானேன்: – கனவிராட்டனிரணியகருப்பன் கருது மிப்பதிஞெரு பேரின் (எ-து) – கனவிராட்டன், இரணியகருப்பன், எனக்கருதத்தக்க இந்தப்பதி ஞெருபேர்களின் – பினவானந்தங் கணுரையாம் பிரளய வெள்ளக்கடல் பிரமானந்தம் (எ-து) – ஒன்றுக் கொண்று பேதமாயுள்ள இவ்வானந்தவகைகள், கற்பஞந்தத்திற் பிரளயம்போன்றெழும் பிரமானந்தமென்னும். பிரவாக சாகரத்தின் நுரைபோல்வனவாம். எ-று.

ஆனந்தபேதங்களிற் தனித்தனி சிலந்தோர், மனிதரில்; சார்வ் பூமனும், மனுடகந்தர்வரில்; மனிதனுயிருந்து புண்ணிய பரிபாகத்தாற் கற்பாந்தத்திற் கந்தர்வனை மனுடகந்தர்வனும், தேவகந்தர்வரில்; பூர்வபுண்ணியகர்மத்தால் மனுடகந்தர்வ பதவியினின்று தேவகந்தர் வபதவியடைந்த தேவகந்தாவனும் பதிரரில்; சிருஷ்டிகாலத் தேயுண்டான அக்கினி ஸ்வாந்தா முதலிய பிதிரரும், பிறவித் தேவர்களில்; கற்பத்துக்காதியில்தானே தேவப்பிறவியையுடைய ஆசானதேவனும், கருமசுரரில் மனுடனுயிருந்துசெய்த அசுவமேதா திகன்ம பலத்தாற் தேவனுகச் செனித்த கன்மதேவனும், சுரரில் காலன்முதலியோருமாம், பிரகஸ்பதி, பிரசாபதியானேன், பிரமன் என்பன கனவிராட்டு; வியாபகமான விராட்புருடன். பின்னவெனற் பாலது. பினவென்றுயது இடைக்குறை. இப்பதிஞேரானந்தங்களும் நுரையெனவே அஷ்டவிதானந்தங்களும் அலையெனப் பெற்றும். பிரளயமென்றது, இங்கே கற்பஞந்தத்தை. மண்ணுதிய யாவுந்தன துருவாகக் கொள்ளுமவசரத்தை, விராட்புருடனெனவும், எங்குமாப் பிரகாசிக்கின்றவற்றை யெல்லாந் தனது தரத்ததாக நிற்குமவசரத் தை, இரணியகருப்பனெனவுங் கொள்க. மண்ணுதியென்றது, அஷ்ட மூர்த்தத்தை.

(க-து) அஷ்டவிதானந்தமாக்கியது அளவிலானந்த பேதங்களை யாதலால், அவற்றுட் சிலவற்றைக் கூறினுரென்பது. சிலபிரிதிகள், பிதிர்கருமத்தேவனெனவும், தனுடன் அசுரனெனவும், இந்திரனு சானுமெனவும், கனகன் விராட்டிரணியகருப்பனெனவும், பதிஞெரு பேர்களெனவும், இருக்கின்றன. இதனுள் இயைதற்பாலதேற்கப்படும். தைத்திரியவுபநிடதப்படி விராட்டிரண்ணிய கர்ப்பமொன்ருக்கிப் பதி ஞென்ருக்குக. (131)

## 132 - கவி (அ - கை)

இங்ஙனமாய அனுபூதியுடையோன் மகிமையை இக்கவியிற் கூறுகின்றார் ]

எவனு கிலுமிந்தத் துரியா தீதத்தி லேழாம் பூமியி லிருந்தானே
ல்வனு ரதன்சுகன் சிவன்மா லயன்முத லறிவோ ரனுபவ சுகபோதம்
விவகா ரதிர்சிய மிதுவே யனுபவ மெனமுன் சொல்லிய விவகாரி
யுவமா னமுமறிமகனே யவனடி யுதிரும்பொடிகளென் முடிமேலே.

(இ-ள்) எவனுகிலுமிந்தத் துரியாதீதத்தி லேழாம்பூமியிலிருந்தானேல், (எ-து)— யாவனுயினுமிந்தத்துரியாதீதமாகிற வேழாம்பூமியிலிருப்பனுயின்:—அவனுரதன் சுகன்சிவன் மாலயன் முதலறிவோ ரனுபவ சுகபோதம் (எ-து) — அவன்: நாரதன், சுகன், சிவன் விஷ்ணு, பிரமன் முதலிய அறிஞரது சுகபோத வடிவமெனப்படுவன்:— விவகாரதிர்சியமிதுவே யனுபவமென முன்சொல்லிய விவகாரி யுவமானமுமறிமகனே (எ-து)—விவகாரிகதிரிசய விழப்பும், இதுவே யனுபவ நிலையாமென முன்னர்க்கூறிய விவகாரியுபமானமும் இனைய வெனஞரன புத்திரா! நீயறிதி:— அவனடியுதிரும்பொடிகளென்முடி மேலே மகுடம்போல்வனவாம் எ-று.

சண்டாளனையுங் குறிக்க எவனுதிகிலுமெனவும், துரியமே துரியாதீதமாவதுபற்றித் துரியாதீதத் திலெனவும், துரியம்ஞானபூமி யிலேழாவதாதலின் ஏழாம் பூமியிலெனவும், இருப்பானேலென்பது, இருந்தானேலென்றது காலமயக்கம். அவன், எழுவாய். சுகபோதம், பயனிலை. விவகார, அதிர்சியம், விவகாரதிர்சியமென்றுயது; குண சந்தியினுலென்க. விவகாரியுவமானமும் என்றதனுல், விவகாரதிர்சய முமென வும்மைவருவித்தாம். இஃதெண்ணும்மை. எவனுகிலுமென் பதிலும்மை, ஐயம்.

(க-து) மகானதுபெருமையைக்குறிக்கத் துரியமே துரியாதீத மாயினுரென்றுரென்பது விவகாரம், திரிசியம், எனப்பிரித்து விவ காரத்திற்கியைந்த திரிசியமென்றுரை கூறில் இங்கே பொருத்தாது. ஆதலின் குணசந்தியாக்கினும் துரியாதீதத்தை முன்னர் கூருதிருக்க, இந்தவெனச்சுட்டியது; எப்போது துரிய நிலைவாய்த்ததோ, அப்போ தே அது துரியாதீதமாக்குமென்னுந் துணிபுபற்றியென்க (132)

133 கவி - (அ - கை)

[வித்தையானந்தநீங்கலாக ஏனையசுகவகைகளைக் கூறினும். இதிலின்னுமையமுளதேற்கேட்குதியென மாணாக்கனைக் கேட்டலை இக்கவியிற் கூறுகின்றார்]

வேறு.

இந்தவா றைந்துசுகஞ் சொல்லினோம் வித்தைசுக மினிமேற் சொல்வா, முந்தைமா யையுஞ்சச்சி தானந்தப் பொருளுமே மொழியும் போதி, லந்தமா மத்துவித சுகமான்ம சுகமிரண்டு மங்கே சொன்னோந், தொந்தமாற் றியமகனே யின்னமுனக் கையமுண்டேற் சொல்லு வாயே.

(இ-ள்) இந்தவாறைந்துசுகஞ்சொல்லினோம் வித்தைசுகமினிமேற்சொல்வாம் (எ-து) — இவ்வாறாக விடயானந்தம், பிரமானந்தம், வாசனானந்தம், நிசானந்தம், முக்கியானந்தமெனப்படும் ஐந்துசுகத்தையுஞ் சொல்லினோம் வித்தையானந்தத்தை இனிமேற்கூறுதும்: — முந்தைமாயையுஞ் சச்சிதானந்தப் பொருளுமே மொழியும்போதில் (எ-து) — முன்னரே மாயையைப்பற்றியும் சச்சிதானந்தப் பொருளைப் பற்றியுஞ், சொல்லிக்கொண்டுவரும்போது: — அந்தமா மத்துவித சுகமான்ம சுகமிரண்டும் அங்கே சொன்னோம் (எ-து) — வேத முடிவிலுள்ள அத்துவிதானந்தமும், ஆத்மானந்தமுமாகிய இவ்விரண்டிலக்கணங்களையும் அவவிடத்தில்தானே சொல்லிவிட்டோம்: — தொந்தமாற்றிய மகனே இன்னமுனக்கையமுண்டேற் சொல்லுவாயே (எ-து) — பந்தங்களை நீக்கிக்கொண்ட சற்புத்திரா! இன்னுமுனக்கையமுண்டாயிற் சொல்லுதி எ-று

வித்தைசுகம் இனிமேற் சொல்வாமென்றதை, இப்படலத்தில் தானே, 194, கவிமுதல், 174, கவிவரையிலும்; அத்துவிதசுக மாத்ம சுகமங்கே சொன்னோமென்பதில், அத்துவிதசுகத்தை, 102, முதல், 109, கவிவரையிலும்; ஆத்மசுகத்தை. 107, முதல், 120, கவிவரையிலும்; ஐந்துசுகஞ்சொல் லினோமென்றதில், விடயசுகத்தை, 123, கவியிலும்; பிரமானந்தத்தை, 124, முதல், 127, கவிவரையிலும்; வாசனானந்தத்தை, 128, கவியிலும்; நிசானந்தத்தை. 129, கவியிலும்; முக்கியானந்தத்தை, 130, கவியிலும் காணலாம்.

(க-து) சத்து, சித்து, ஆனந்தங்களைத் தனித்தனியே சொல்லிவிட்டோம். இன்னும் ஐயமுளதேற் கேளுதியென்பது.

134 - கவி (அ - கை)

சச்சிதானந்த இலக்கணங்களைத் தனித்தனி சொன்னவாறு போல ஏகமாக்குமாறும் உணர்த்தவேண்டுமென மாணாக்கன் கேட்டலை இக்கவியிற் கூறுகின்றார்.]

குகன்றனையு மெனையுமுல கினையுமீன் றளித்தருளுங் குருவே கேளீர், புகன்றசச்சி தானந்தப் பதங்கடனித் தனியாயே பொருள் வேறானு, லுகண்டமன முறைப்பதெங்ஙன் பரியாய பதங்களைப் போ லுறவுங் காணே, னகண்டமா யொருசுவையாய்த் தேனீக்கூட் டியமதுவா வறிவிப்பீரே.

(இ-ள்) குகன்றனையுமெனையுமுலகினையு மீன்றளித்தருளுங்குரு வேகேளீர் (எ-து) — முருகக்கடவுளையும் அடியேனையும் உலகினையும் பெற்று அளித்தருளிய சற்குருநாதனே! யோர்விண்ணப்பமுண்டு அதனைக்கேட்டருளும், அஃதி யாதெனில்: — புகன்ற சச்சிதானந்தப் பதங்க டனித்தனியாயே பொருள்வேறானுல் (எ-து) — தேவரீர் கூறிய சச்சிதானந்தப்பதங்கள் தனித்தனியானவாறு போலப் பொருளுந் தனித்தனி வெவ்வேறானுல்:-உகண்டமனமுறைப்பதெங்ஙன் பரியாய பதங்களைப் போலுறவுங்காணேன் (எ-து) — அணைகடந்துபாயத் தக்க மனமானது அலையாது உறுதிபெறுவதெங்ஙனம், ஒன்றிற்குப் பல வாகக் கூறும் பரியாய நாமங்களைப் போல் உறவுங்கண்டிலன்: — அகண்டமாயொரு சுவையாய்த் தேனீக்கூட்டியமதுவாவறிவிப்பீரே (எ-து) — ஏகமாகவும், ஒரே ருசியாகவும், தேனீக்கள் பலமலரில் எடுத்து ஒன்றாக்கிய தேனைப் போல அடியேனுக்கு உணர்த்தியருள வேண்டும். எ-று.

வேதமுடிவையெடுத்து விளக்கல் பரமசிவத்துக்கேயன்றி யேனை யர்க்கு இன்றாமையின், பரமசிவமே குருவெனக்கருதிக் குகன்றனையும் எனையும் உலகினையும் ஈன்றளித்தருளுங் குருவேயெனக் கூறினதாகக் கொள்க. அன்றேல், முரணும். உகண்டமான முறைப்பதெங்ஙனென் பதற்கு, பலவாறுகச் சிதைவுற்றலைகின்றமனம் ஒருமைப்பாடு எய்துவ தெங்ஙனமெனப் பொருள் கொள்ளினுமமையும் எங்ஙனமென்பது; எங்ஙனென்றாயது, கடைக்குறை. பரியாய பதங்கள், ஒருபொருள் குறித்தபலசொல். ஓர்பொருளாகிய பரம்பொருளை விளக்குவிப்பதற் குச் சச்சிதானங்கள் தக்கவாகலின் பரியாயபதங்களைப் போலுறவுங் காணேனெனவும், பலமலரிலுள்ளதேனைக் கூடாக்கியதுபோல சச்சி

தானந்தங்களை யொருமையாக்கி அருளவேண்டுமெனக் கருத்துக் கொண்டதால். அகண்டமாயொருசுவையாய்த் தேனீக்கூட்டியமதுவா வறிவிப்பீரே யெனவுங் கூறினுரென்க. மதுவைப்போல வென்றதை மதுவாவென்றது உவமைத்தொகை. தனித்தனியாகவே எனற்பால தை, தனித்தனியாயே யென்றது, மரூஉ. அகண்டமா யொருசுவை யாந் தேனீயெனச் சிலபிரதிகளிருப்பது பற்றி மெல்லொற்றுக்கின், அகண்டம், ஒருசுவை என்பன மதுவுக்கு விசேடணமாகவும், அகண்ட மாயொரு சுவையாய்த் தேனீயென வல்லொற்றுக்கின், அறிவிப்பீ ரென்னும் வினைமுற்றிற்கு வினையெச்சங்களாகவு முடியு மென்க.

(க-து) சச்சிதானந்தங்களைத் தனித்தனியாகத் தெரிவித்தவாறு போல, அவற்றின் ஒருமையையுந் தெரிவிக்கவேண்டுமென்பது. இங் ஙனந் தெரிவித்தல் அருமைபற்றியென்க. (134)

### 135 - கவி (அ - கை)

[சுருதிப்பிரமாணத்தால் அவற்றினெருமையை உபமானங்காரண மாக இக்கவியிற் கூறுகின்றார்]

குளிரிளகல் வெண்மையென்ற பதங்களினு னீர்மூன்று கூருயிற் ருே, வொளிதவனஞ் செம்மையென்றபதங்களா லக்கினியு மொருமூ ன்றுமோ, வெளிமுதலாஞ் சகமசத்து மூடமிட ரெனப்பிரித்து வில க்கி வேத, மெளிதறிய முரண்மொழிந்த சத்தாதி யெனும்பிரம மேகந் தானே.

(இ-ள்) குளிரிளகல் வெண்மையென்ற பதங்களினு னீர்மூன்று கூருயிற்ருே (எ-து) - குளிர்ச்சி, நெகிழ்ச்சி, வெண்மை யென்கிற பேதமொழிகளாற் சலமும் மூன்றுபிரிவாயிற்ருே: — ஒளிதவனஞ்செம் மையென்றபதங்களா லக்கினியு மொருமூன்ருமோ (எ-து) - பிரகாசம், சுடுகை, சிவப்பென்கிற பேதமொழிகளால் அக்கினியு மூன்றுபிரிவா யிற்ருே: — வெளிமுதலாஞ் சகமசத்து மூடமிடரெனப்பிரித்து விலக்கி (எ-து) - ஆகாயமுதலிய பஞ்சபூத வடிவாயுள்ள சகமானது, அநுர் தசடதுக்கமாமென அதனை வேறு பிரித்துத்தானலவென்றகற்றி: — வேதமெளிதறியமுரண்மொழிந்த சத்தாதியெனும் பிரமமேகந்தானே (எ-து) — வேதமானது எளிதிலுணர்ந்து கொள்ளுமாறு அநுர்தாதிக்கு மாருகக்கூறிய சச்சிதானந்த சொரூபமெனத்தக்க பிரமமானது குண பேதமின்றி ஏகமேயாம். எ-று.

குளிர்முதலிய மூன்றும், ஒளிமுதலிய மூன்றும், சலமினைய தெனவும், அக்கினி இனையதெனவும் விளக்குவான்வேண்டிக் கூற வந்த சொற்பிரிவே யன்றிப் பொருட்பிரிவன்று. அதுபோல; அசத்து முதலிய மூன்றும், சத்து முதலிய மூன்றும், சகத்து இனையதெனவும் சிவம் இனையதெனவும விளக்குவான் வேணடிக்கூறவந்த சொற்பிரி வேயன்றிப் பொருட்பிரிவன்று. உலகமானது எவர்க்கும எப்போதுஞ் சச்சிதானந்தமாகக் காணடலின், இஃதன்று வேறு. அதாவது, பர மெனல். ஆயினும் உலகமோ? அவற்றிற்கு மாருய அநுர்தசடதுக் கமாயது, எனக்காட்டற்கு வேதம் இங்ஙனங்கூறியதென்க. சோதனை யிற் பஞ்சபூதங்களுள் ஒவ்வொன்றுந் தனக்கெனச் சொரூபமொன்றி ன்றிக்காணுது போதற்கேதென்னை. இது கற்ருேர்க்கும் மற்ருேர்க்கு மாதலரல் சத்தெனலெங்ஙனங்கூடும். கூடாதாகவே சித்தெனலும், ஆனந்தமெனலும் எங்ஙனம் பொருந்தும். பொருந்தாது ஆதலாற் சத்தாதியெனும பிரமமென்ருர். சத்தாதி மூன்றினொருமையே பிரம மெனலைச் சம்மதிக்கச் செய்வான் வேண்டிப் பிரத்தியட்ச உலகை அசத்தாதிமூன்றின் ஒருமையெனக் காட்ட வந்ததென்க.

(க-து) அநுர்தசடதுக்க வொருமையே சகமென்ருற்போல, சச்சிதானந்தவொருமையே பிரமமெனக் கூறியதென்பது. வேத மெரிதறியவென்றதனல், அவ்வேதமே பலசாகைகளாலும், பதவே துக்களாலும், பலதிஷ்டாந்த தாஷ்டாந்தங்களாலும், பலவாய அள வைகளாலும், அரிதறிய உணர்த்தும் என்ருயிற்று. ஏகந்தானே யென்னும் பயனிலைக்குப் பிரமமெழுவாயாயின். சத்தாதியெனும் பிரமமென்றது; குணமே குணியாகவேண்டும். ஆதலின் ஏகமெனல் பொருந்தும். சத்தாதிகுணமன்றிப் பிரமம் வேறெனல், அசத்தாதிக் குச் சகம் வேருகாமையாற் பொருந்தாது. (135)

**136 - கவி (அ - கை)**

[இவை போல இன்னும் அளவிறந்த பரியாயநாம குணங்களுள,
அவற்றுட் சிலவற்றைச் சொல்லுது மென்பதை
இக்கவியிற் கூறுகின்ருர்.]

நித்தியம்பூ ரணமேகம் பரமார்த்தம் பரப்பிரம நிதானஞ் சாந் தஞ், சத்தியங்கே வலந்துரியஞ் சமந்திருக்குக் கூடஸ்தன் சாட்சி போதஞ், சுத்தமிலக் கியஞ்சநா தனஞ்சீவன் றத்துவம்விண் சோதி யான்மா, முத்தம்விபு சூக்குமமென் றிவ்வண்ணம் விதிகுணங்கண் மொழியும் வேதம்.

(இ-ள்) நித்தியம் பூரணமேகம் பரமார்த்தம் பரப்பிரமநிதா னஞ்சாந்தம் (எ-து)—நித்தியம், பூரணம், ஏகம், பரமார்த்தம், பரப் பிரமம், நிதானம், சாந்தமெனவும்:—சத்தியங்கேவலந்துரியஞ் சமந் திருக்குகூடஸ்தன்சாட்சி போதம் (எ-து)— சத்தியம், கேவலம், துரி யம், சமம், திருக்கு, கூடஸ்தன் சாட்சி, போதமெனவும்:—சுத்த மிலக்கியஞ்சநாதனஞ் சீவன்றத்துவம் விண்சோதியான்மா (எ-து)— சுத்தம், இலக்கியம், சநாதனம், சீவன், தத்துவம், விண், சோதி, ஆன்மாவெனவும்:—முத்தம், விபு சூக்குமமெனவும் இவ்வாறே வேத மானது விதியாகப் பரியாயநாம குணங்களைச்சொல்லும் எ-று.

நிதானம், ஆதிகாரணம்- சநாதநம், அநாதி. இவ்வண்ணம், இவை போல்வனவாக. இவை விதிகுணங்களாகுமெனவே, விலக்கு குணங்கள் வேறுண்டென்பது பெற்ருய.

(க-து) பரியாயநாம குணங்களை இக்கவியிற்கூறினுரென்பது.
(136)

137 - கவி. (அ—கை)

[அதுபோல விலக்குப் பரியாய நாமகுணங்களுள, அவற்றுட் சிலவற்றையுணர்த்துதும் என்றதை இக்கவியிற் கூறுகின்ருர்.]

அசலநிரஞ் சனமமிர்த மப்பிரமே யம்விமலம் வசனு தீத
மசடமநா மயமசங்க மதுலநிரந் தரமகணு நிருபா கண்ட
மசமனந்த மவிநாசி நிர்க்குணநிட்களநிரவ யுவம நாதி
யசரீர மவிகார மத்துவித மெனவிலக்கு மனேக முண்டே.

(இ-ள்) அசலநிரஞ்சனமமிர் தமப்பிரமேயம் விமலம்வசனுதீதம் (எ-து)—அசலம், நிரஞ்சனம், அமிர்தம், அப்பிரமேயம், விமலம், வசனுதீதமெனவும்:- அசடமநா மயமசங்க மதுலநிரந் தரமகணுநிருபா கண்டம் (எ-து)—அசடம் அநாமயம், அசங்கம், அதுலம், நிரந்தரம், அகணு, நிருபம், அகண்டமெனவும்:—அசமனந்த மவிநாசிநிர்க்குண நிட்களநிரவயுவமனுதி (எ-து)—அசம், அனந்தம், அவிநாசி, நிர்க் குணம், நிட்களம், நிரவயவம், அநாதியெனவும்: —அசரீரமவிகார மத்துவித மெனவிலக்குமனேக முண்டே (எ-து)—அசரீரம், அவிகா ரம், அத்துவித மெனவும் விலக்குப் பரியாயநாம குணங்களும் இன் னும் அனேக முளவாம். எ-று.

அசலம், சலனமின்மை. நிரஞ்சனம், களங்கமின்மை, அமிர்தம்,

அழிவின்மை. அப்பிரமேயம், அறியப்படாதது விமலம், அழுக்கின்மை. வசனாதீதம், வாக்குக்கெட்டாமை. அசடம், மூடமின்மை. அநாமயம், நோயின்மை. அசங்கம், சங்கமின்மை. அதுலம், கனகமின்மை. நிரந்தரம், இடையின்மை. அகனு, அனுவன்மை. நிருபம், ரூபமின்மை. அகண்டம், கண்டமின்மை அசம், பிறவிக்குடன்படாமை. அனந்தம், இறப்புக்குடன்படாமை. அவிநாசி, யாதினுனு நசியாமை. நிர்க்குணம், குணமின்மை, நிட்களம், சகளமின்மை. நிரவயம் அவயவமின்மை. அநாதி, ஆதியின்மை. அசரீரம், சரீரமின்மை. அவிகாரம், விகாரமின்மை. அத்துவிதம், துவிதமின்மை. எனக் கொள்க.

(க-து) விலக்கு குணப்பரியாய நாமங்கள் இனையவென்பது சிலபிரதிகளில், விமலமசனாதீதமெனவும், நிருமலமகோசரமெனவும், நிசமனந்தமெனவும் நிரஞ்சனம் மனாதியெனவும், விதிவிலக்கம் அனேகமெனவும் இருக்கின்றன. அவற்றையும் உய்த்துணர்க. சமஸ்த மதஸ்தரும் வஸ்து விதிகுணத்ததென நின்றனர் அஃதோர் பக்கத்ததாமெனக்காட்டவிலக்கு குணமும் வகுத்ததென்க. இதனை இனி வருங் கவியாற்காண்க. (137)

## 138 கவி. - (அ—கை)

[இவ் விதிவிலக்கு குணங்கள் ஒருபொருட்கேயன்றி வேறக் கன்றெனஇக்கவியிற் கூறுகின்ருர்.]

இன்னவகை விதிவிலக்குக் குணங்கணன்ருர் சேர்த்தொருமித் தெல்லாங் கூட்டிச், சொன்னபொரு ளொன்றன்றி யிரண்டில்லை யொருபொருளைச் சொல்லுஞ் சொற்கள், பின்னபத மாமதனுற் சத் தாதிகுணப்பொருளாம் பிரம மேக, மன்னபொரு ளொருமைபறிந் தகண்டபரி பூரணமா யாவாய் நீயே.

(இ-ள்) இன்னவகை விதிவிலக்குக் குணங்கணன்ருய்ச் சேர்த் தொருமித்தெல்லாங் கூட்டி (எ-து) — இன்னவாருக விதித்த விதி விலக்கு குணங்களைச் சேர்த்தொருங்கே அனைத்தையுங் கூட்டி:— சொன்ன பொருளொன்றன்றி யிரண்டில்லை யொருபொருளைச் சொல்லுஞ்சொற்கள் பின்னபதமாம் (எ-து) —வேதஞ்சொல்லியிருக்கிற பொருள் ஒன்றேயன்றி இரண்டாகவில்லை, ஆதலின் ஒருபொருளைப் பற்றிச் சொல்லுஞ்சொற்கள் ஒருபொருள் குறித்த பல வேறுவகைப்

பட்ட சொல்லுகளாம்:—அதனாற் சத்தாதிகுணப்பொருளாம் பிரமமே கம் (எ-து)—இங்ஙனம் கூறியிருப்பதாற் சத்துமுதலாகக் கூறப்படு முக்குணப்பொருளாவது பிரமம், அஃது ஏகமாய்:—அன்னபொரு ளொருமையறிந் தகண்டபரி பூரணமாயாவாய் நீயே (எ-து)—அத் தகையதான பொருளின் ஒருமையையறிந்து, அஃதிருந்தவண்ண நீயும் அகண்டபரிபூரண மாயாகுதி, வேறு சங்கற்பிக்கற்க. எ-று.

சேர்ந்துகூடியென்றுக்கின் குணங்களெழுவாயாகவேண்டும், எழு வாய் ஆக்கின் பயனிலையெங்கே. சொன்னவென்பதெனின், குணங் கள், சொல்லுமா? கூடாதுபற்றிக் குணங்களைச்செயப்படுபொருளாக் கிச் சேர்ந்துகூடி யென்னுந்தன்வினைகளைப் பிறவினையாக்கிச்சொன்ன வென்னும் பயனிலைக்கு எழுவாய் வேண்டுமாதலால் வேதத்தைவரு வித்தாம். ஒருபொருளைச்சொல்லுஞ் சொற்கள் பின்னபதமாம் என்றத னால், ஒருபொருள்குறித்த பலசொல்லென்றும். இங்ஙனம் விதிவிலக் குக் குணங்கள் கூறவந்தது; சச்சிதானந்தம் ஏகமெனற்கன்றே? அதனாற் சத்தாதிகுணப் பொருளாம்பிரமம்ஏகமென்றார். அறிந்தாவாய் நீயே யென்றது, அகண்டபரிபூரணமாயென்றதனால், அஃது இருந்த வண்ணமென வருவித்தாம். சச்சிதானந்தம் ஒருமையெனக்கண்ட அக்கணமே அவ்வொருமையே பிரமமெனத் தானே விளங்கும். அங்ங னம் விளங்கல்; நிருபாதிகம் ஆதலின் வியாபகவிளக்கமாம், அவ் வியாபகவிளக்கம் அபரிச்சின்னம் ஆதலின் ஏகமாம். அதுபற்றிப் பிரமமேகமென்றதென்க. இந்நெறி கடவுள் ஏகமெனல் அவர்போல் வரேற்பர். வஸ்து விளங்க விதி குணமும், அதுவும் இறக்க விலக் குக் குணமும் வகுத்ததென்க. எனவே, தானே தானாதற்கெனப் பெற்றும்.

139 - கவி. (அ—கை)

[நிர்க்குணவஸ்துவிற்குக் கூறுஞ் சகுணம் எங்ஙனமமையுமென்ற வினாவிற்கு விடைஇக்கவியிற் கூறுகின்றார்.]

நிர்க்குணவஸ் துவின்குணங்க ளுரைப்பதுதாய் மலடியென னிக ரென் றதே, சற்குணனே வஸ்துநிலை யுரையாம லறியவல்ல சதுர ருண்டோ, நற்குணவே தங்களிந்தச் சீவன்முத்தி பெறப்பிரம ஞானந் தோன்றச், சொற்குணங்கள் பிரமத்தின் குணங்களல்ல பிரம மாஞ் சொருபந்தானே.

(இ-ள்) நிர்க்குண வஸ்துவின் குணங்களுரைப்பதுதாய் மலடி யெனனிகரென்றதே (எ-து)—நிர்க்குணவஸ்துவினுக்குக் குணங்களு ரைத்தல் மலடியைத் தாயெனற்குச் சங்கியாதுநிற்றி:—சற்குணனே வஸ்துநிலை யுரையாம லறியவல்ல சதுரருண்டோ (எ-து)—சற்குண முடையோனே! வஸ்துநிலை இனையதென அதற்குரிய குணங்களைப் பிறருணர்த்தாமல் தானே யுணர்ந்து கொள்ளத்தக்க வலியுள்ள மாணுக்கருமுளரோ? இன்றே அதனுல்: – நற்குணவேதங்களிந்தச் சீவன்முத்திபெறப் பிரமஞானந்தோன்றச் சொற்குணங்கள் (எ-து)— சச்சிதானந்தங்கள நல்லசகுணமென வேதங்கள், இங்ஙனமாய சீவன் முத்தி நிலை பெறவும், பிரமக்ஞானம் விளங்கவுஞ் சொல்லவுந்த குணங்களாம் :—பிரமத்தின் குணங்களல்ல பிரமமாஞ் சொரூபந்தா னே (எ-து)— அவைபிரமத்தினது குணங்களல்ல பிரமசொரூபமாம் எ-று.

நிற்குணவஸ்துவின் குணங்களுரைப்பதென்பதற்கு, சகுணங் களை நிர்க்குணவஸ்துவின் குணங்களாக வுரைத்தலெனப் பொருள் கொள்ளினு மமையும். "சுரையாழ வம்மிமிதப்ப வரையனைய யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப கானகநாடன்சுனை." என்னுங் கவியில், சுரையாழாது, அம்மிமிதவாது, யானைக்கு நீத்தாகாது, முயற்கு நிலையாகாது. இவைமுறனுகையில்; சுரைமிதப்ப, அம்மி யாழ, யானைக்குநிலை, முயற்குநீத்தென மொழிமாற்றிப் பொருள் கொள்ளவேண்டும். அதுபோல இங்கும், தாய்மலடியென னிகரென் றதே யெனக்கவியிருப்பினும், குணரகிதமான வஸ்துவுக்குக் குணங் கற்பித்தல், மலடியைத் தாயென்றற்போலும் எனப்பொருள்படுத லால், தாய் மலடி யென்பதை, மலடிதாயென மொழிமாற்றிப் பொருள்கொள்ளவேண்டும். கொள்ளாவிடில், முரணும். எங்ஙனமெ னிற்; சகுணவஸ்துவினிர்க்குணங்களுரைப்பது தாய்மலடியெனனிக ரென்றதேயெனக் கவியிருக்கின் முரணுது, இங்ஙனங் கவியின்றே ஆதலின் முரணும். சகுணமாகவஸ்துவைக்கூறுது நிர்க்குணமாகக் கூறின் வஸ்து எங்ஙனம் விளங்கும். விளங்காதுபற்றி இங்ஙனங் கூறியதென்க. சொற்குணங்கள் பிரமத்தின் குணங்களல்லவெனின், யாதினுலென வருஞ்சங்கைக்கு உத்தரமின்றும், ஆதலினிங்ஙனம் உரைகொண்டாம். சச்சிதானந்த நற்குணங்கள் வேதங்கள்சொல்லிய சகுணங்களாம். இதுவும் வஸ்துநிலை தெரிவிப்பதற்காகவென்க. இக் குணங்களே பிரமசொரூபமாதலின் பிரமத்தின் குணங்களெனின் தற் கிழமைப் பொருளதாம், பின்னுபின்னமதாம், பொருந்தாது. இக்

குணங்களால் அறிபடுவது வஸ்துவாய் இருக்கக் குணங்களே வஸ்து வெனல் கூடாதெனின், சூரியனுக்குப் பிரகாசங்குணம், நமக்கு அக்குணமின்றிச் சூரியன் காணப்படான். எனவே, நமக்குச்சூரியன் வேருயினும் பிரகாசத்திற்குவேறே? அல்லவே. பிரகாசரூபமே சூரியனெனற்குத் தடையென்னை? அதுபோலவே இதனையுங் கோடற்குத் தடையென்னை? இதனைவிடார்த இலக்கணையாற் காணலாம்.

(க-து) சுருதிப்பிரமாணத்தால் சச்சிதானந்த வொருமையே பிரமமெனச் சிந்தித்துத் தெளிய அத்தே குணுதீதமாக்கு மென்பது இதனைக்கணிப்பது; அனுபவத்தாலன்றிக் கூடாது. கூடுமெனின், அவம். (150)

**140 - கவி (அ - ங)**

[சுருதிப்பிரமாணத்தால் உணர்த்தியதுபோல் இதனை யுத்திப்பிர மாணத்தாலும் உணர்த்தவேண்டுமென விஞவலை இக்கவியிற் கூறுகின்றார்.

மோகவிருள் கேடக்கோடி யருணனென வருகுருவே மொழியக் கேளீ, ரேகபரி பூர்ணமா மென்சொரூப மென்னுள்ளத்தி லிறுகும் வண்ண, மாகமங்கள் சொன்னபடி யென்னையண்டார்த்தமா வறிந்தே னையா, வூகமுமொத் திடவுரைத்தாற் பசுமரத்தி லாணிபோ லுறையு நெஞ்சே

(இ-ள்) மோகவிருள் கெடக்கோடியருணனென வருகுருவே மொழியக்கேளீர் (எ-து) - மோகாந்தகாரமொருங்கே நசிக்க வுதித்த கோடிசூரியர் களைப்போல் அடியேனுக்காக எழுந்தருளிவந்த குருநாதனே! இன்னும் ஓர் ஐயமுளது அதனையான் கூறக்கேட்டருளும்:— ஏக பரிபூரண மாமென்சொரூப மென்னுள்ளத்திலிறுகும் வண்ணம் (எ-து)—ஏகபரிபூரமாக விளங்கும் எனது சொரூபமானது எனதுள்ளத்தின்கண் திரம் பெறுமாறு:-ஆகமங்கள் சொன்னபடி யென்னையகண்டார்த்தமா வறிந்தேன் (எ-து) - சுருதிகள் கூறிய முறையே யென்னை அகண்டபரிபூரண சொரூபமாகத் தரிசித்தேன்: — ஐயா வூகமுமொத் திடவுரைத்தாற் பசுமரத்திலாணிபோ லுறையுநெஞ்சே (எ-து) — ஐயனே! யுத்திக்கும் ஒத்திருக்கும்படி தெரிவித்தால் பசுமரந்திலறைந்த ஆணியைப்போல் அஃதென்னுள்ளத்தில் உறைந்துபோகும். எ-று.

மோகவிருள், உருவகம். மோகவிருள் கெடவருகுருவே எனக் கொள்க கோடியருணனென வென்பதுவமை. சிலபிரதிகளில் என்னுளத்திலிருக்கும் வண்ணமெனவும், உறைக்குநெஞ்சேயெனவுமிருக்

கின்றன. ஆகமங்கள் சொன்னபடி யென்னை யகண்டார்த்தமாவறிந் தேனென்பதினால், சச்சிதானந்தவொருமையைக் கண்டேனென்றவாறு. ஊகமுமொத்திடவுரைத்தாற் பசுமாத்திலாணி போலுறைக்குநெஞ்சே யெனக்கொள்ளின், உறைக்குமென்பதுபிற வினையாதலின், அவ் ஒருமையினெஞ்ச முறையும்படி செய்யுமென்று உரைகொள்ளவேண்டும். அப்போது; உரைத்தல், எழுவாய். நெஞ்சத்தை செயப்படுபொருள், உறைக்கும், பயனிலை, தன்வினையாக்கில் அனுபூதி, எழுவாய். உறையும், பயனிலை. நெஞ்சம், ஏழாம் வேற்றுமைத்தொகை.

(க-து) அவ்வனுபவம் யுத்திக்கொக்கத் தெரிவிக்கவேண்டுமென்பது. சுருதியுத்தியனுபவத்துள் இனியுத்திவேண்டல். இங்கே ஆகமங்கள் என்றது ஞானத்தைமாத்திரம் பிரதிவாதித்தலால் அற்ப சுருதியை யன்று. பிரபல சுருதியை. அதாவது; ஞானகாண்டமென வறிக. (140)

141 - கவி (அ கை)

[அவ்வினாவிற்கு விடைகூறுவான் வேண்டிச் சத்துஞ்சித்தும் மாறாது இணங்கில் சச்சிதானந்தமாம், மாறப்பெறின் அநுர்தசட துக்கமாமென இக்கவியிற் கூறுகின்றார்.]

சத்தேசித் தாகுமய லெனிலசத்தா மசத்தானாற் சாட்சி யெங்கே
சித்தேசத் தாகுமய லெனிற்சடமாஞ் சடங்களுக்குத் திதியுமில்லை
யொத்தேதோன் றியசத்துஞ் சித்துதல்ல சுகமாகு மூகத்துக்கோர்
வித்தேயன் னியமாகிற் சடமசத்தாஞ் சுகானுபவம் விளைந்திடாதே.

(இ-ள்) சத்தேசித்தாகுமயலெனிலசத்தா மசத்தானாற் சாட்சி யெங்கே (எ-து)—சச்சிதானந்தமென்னுமொழி; சத்து, சித்து, ஆனந்த மெனமுப்பதாயிருக்கும். அம்முப்பதங்களுள், சத்தேசித்தாகவேண்டும். ஆகாது சத்துக்குச் சித்துவேறெனின், அப்போது சத்தெனல் அசத்தெனப்படும். அசத் தெனப்படின், அவஸ்தாத்திரயம், காட்சித்திரயம், அபிமானத்திரயம் போல் மாறாதுநின்று அவற்றை ஆங்காங்கு சாட்சியாய் அறிவதெங்கே? இன்றெனின், இது தினவனுபவமாயிற்றே அது கூடாது, இருந்தன்றோ அறிய வேண்டும், இங்ஙனமிருந்து அறிதலின், சத்தேசித்தாகுமென்பதொக்கும்:— (இதனால்) சித்தேசத்தாகு மயலெனிற் சடமாஞ் சடங்களுக்குத் திதியுமில்லை (எ-து) — சித்தே சத்தாகவேண்டும். ஆகாது சித்துக்குச் சத்து வேறெனின்

அப்போது சித்தெனல் சடமெனப்படும். சடமெனப்படின், புல்லையாதியாஞ் சராசரப் பொருள்களாகிய சடங்களுநித்தலுக்கும், உதித்துப் பூத்துக்காய்த்தலாகிய திதிக்குதுடமெங்கே, இருப்பதனுலன்றே இவளவும் உண்டாகின்றன, இவற்றிற்கெல்லாம் ஆதாரஞ் சிற்சத்தியாதலின், இச்சிற்சத்தி இருப்பதுகொண்டு, இத்தனையு நிகழ்கின்றன. ஆதலின் சித்தேசத்தாகும். இஃது முரணின்மையினெக்கும்:—ஒத்தே தோன்றியசத்துஞ்சித்து நல்லசுகமாகு மூகத்துக்கோர்வித்தே (எ-து) —இங்ஙனம் ஒத்துத்தோன்றுவதாற் சத்துஞ் சித்தும் நல்லசுகமெனப்படுவதற்கு ஐயமின்று. ஐயமின்ருமையின் இது யுத்திக்கோர் விதைபோல்வதேயாம்:—அன்னியமாகிற் சடமசத்தாஞ் சுகானுபவம் விளைந்திடாதே (எ-து)—நமது மூடத்தாற் சத்துஞ்சித்தும் அன்னியமாகக் காணப்படுமாயின்; சித்து, சடமாகவும்; சத்து, அசத்தாக முடியும்; முடியவே, துக்கானுபவமன்றிச் சுகானுபவம் எங்ஙனம் விளையும்? விளையாது. எ-று.

இது; பாசஞ், சத்தெனவும்; பசு, சச்துசித்தெனவுத்; பதி, சத்து, ஆனந்தமெனவுங் கூறுமடமையை மறுத்தது. இவர்வாதம், தோற்ற வாதமுஞ் சொல்வாதமுமேயன்றி அர்த்தவாதமன்று. அர்த்தவாதமெனின், இத்திரிபதார்த்தத்திற்கும் ஓர் சுயம்பேனும் ஓர் முதலேனும் உளவாகச் சோதனையாதி முகத்தால் முரணின்றிக் காட்டவேண்டும், அங்ஙனம் எவர்க்குங் கூடாமையின் அது பொருந்தாது.

(கூ-து) சச்சிதானந்தவொருமை இங்ஙனமன்றி வேறுவகையாற் கூடாதென்பது. இதனுக்கு முறணுகவொருமைகூறுவது; அவர்போல்வாரேற்றறற்கன்றி அறிஞருக்கன்று. முறணுவொருமையருமை. தானல்லாத வுபாதி குணங்களைத் தொடாது தன்னைத்தான் தத்கோரால் நோக்கினல்லால் சச்சிதானந்தவொருமை யெங்ஙனம் வாய்க்கும். வாயக்காமைக்கு அடையாளம், அயலைச் சச்சிதானந்தமெனல். முரணுமைக்கு இடமின்று, இஃதேற்றற்பாற்றன்து (141)

## 142 - கவி (அ—கை)

[இன்னும் அவ்வொருமையை வலியுறுத்துவான் வேண்டிச் சிலசங்கைகளைத் தானே யாசங்கித்து, அதற்குரிய தக்க விடைகளால் தானே சமாதானங்களை இக்கவியிற் கூறுகின்ருர்.]

வீயாத சத்து முன்னம் விளங்குவது தன்னாலோ வேறொன்று லோ, வாயால்வே றெனிலதுவு மசத்தோசத் தோவசத்தேன் மலடி மைந்தன், பேயாகா ரியஞ்செய்யுமோ வசத்தெனவிப் படியதையும் பிரித்துச்சொன்னால், லோயாத வவத்தையாங் குதர்க்க விகற் பங்களை விட்டொழிந்தி டாயே.

(இ-ள்) வியாதசத்து முன்னம் விளங்குவது தன்னாலோ வே றொன்றாலோ (எ-து) — என்றுமழியாது ஒருதகைத்தா நின்றுள்ள சத்தெனப்படுவது; பிரத்தியட்சமாகத் தான் விளங்குவது தன்னாலே தானோ? அல்லது, வேறொன்றாலோ: வாயால் வேறெனிலதுவு மசத் தோசத்தோவசத்தேன் மலடிமைந்தன்பேயா காரியஞ்செயுமோ (எ-து) — வெறுஞ்சொன்மாத்திரத்தால் வேறொன்றாலெனின், அந்தவே றொன்றாலெனப்படுவதும் அசத்தெனப்படுவதோ சத்தெனப்படுவதோ? அசத்தெனப்படுவதெனின், மூடாமலடிபுத்திரன் ஓர் காரியஞ்செய்வா னோ? செய்வானாயின் அதுவும் விளக்குதும்: — அசத்தென விப்படி யதை யும் பிரித்துச்சொன்னால், ஓயாத அவத்தை யாங் குதர்கக விகற்பங்களை விட்டொழிந்திடாயே (எ-து) — அதையும் இப்படி யசத்தெனப் பிரித் துச் சொல்லுவையாயின் முடிவுபெறாது அனவஸ்தாதோடம் பல மாகமுடியுமே இதென்னவிபரீதம், ஆதலின் இங்ஙன்மாய குதர்க்க விகற்பங்களினின்று விலகுதி எ-று.

ஞானமே பிரமமாதலால் இங்கே சத்தென்பது, ஞானம். ஞான மெனினும் அறிவெனினு மொக்கும். அறிவுக்கறிவென்பது ஓர்பட்சம், அறிவொன்றே யென்பது ஓர் பட்சம் அறிவுக்கறிவென்பதில்; முன் னறிவு, சீவனெனவும், பின்னறிவு சிவமெனவுஞ் சொல்வர், முன்ன றிவு தன்னையறிவதும், தான் விளங்குவதும், தன்னாலன்று பின்னறி வாலெனின், அந்தப்பின்னறிவும்; தன்னையறிவதும், தான் விளங்கு வதும் வேறொன்றாலெனல் வேண்டுமே? இங்ஙனங்கூறுதல் கூடாதெ னின், அங்ஙனங்கூறுதல் கூடுமோ? முடிவுபெறாதேயெனின், அறிவுக் கறிவெனக்கூறுதொழியின் முடிவுபெறும். ஆயின், முன்னறிவு தன்னைத் தானறிவதும், தன்னால் தான்விளங்குவதுங் கூடுமோ? கூடுமெனின், நாமும் அவ்வறிவாதலால் இவ்வனுபவம் அப்போதெங்கே? விசாரணை செய்யில் இப்போதுங்காணும. எங்ஙனமெனின்; அவஸ்தாத்திரயம், காட்சித்திரயம், அபிமானத்திரயமென்னும் இவை திரிசியமோ, திருக்கோ? திரிசியமெனின், எந்தத்திருக்குவுக்கு? அறிவுக்கெனின், அவ்வறிவு ஒன்றோ, இரண்டோ? இரண்டெனின், ஒவ்வொன்றிற்கும்

எல்லைவரையறை இருக்கவேண்டுமே? இருக்கின்றதெனின், எங்கே? வியஷ்டி உபாதியளவினதொன்று, சமஷ்டியுபாதியளவினதொன்று இதில்; சிற்றறிவுவியஷ்டியுபாதி யளவினதெனின், அதுநனவிலன்றே? ஏனைய ஈரவத்தையிலுமெங்கே? இம் மூன்றவத்தையுந் தினமு நிலையாதுமாறும், இதையறியும் அறிவுமாறுகின்றதோ? மாறுகின்றதெனின், அவ்வவ் அவத்தைகளை ஆங்காங்கு நின்று சாட்சியாய் அறிவதெது? வேறின்றுமையின் ஒன்றேயென உணர்க. நனவாகிற சாக்கிராவத்தை தோன்றும் போது, அண்டபிண்டங்கள்தோற்றும், அதுதோற்றச் சீவேசுராகிற சிற்றறிவு பேரறிவு பேதந்தோற்றும். இங்ஙனந் தோற்றுவதைத் திண்ணமெனக் கொள்ளின், இதுமாறுது ஏனைய அவத்தைகள் அறிவுக்குக் காணுதிருக்கவேண்டும். அங்ஙனமனுபவம் எவர்க்குமின்றே, ஆதலின் அறிவொன்றேயென்க. அறிவொன்றுதலாற் சத்தொன்றேயெனவும், அதுவே சித்தெனவும், தன்னால் தானறிவதெனவும், தன்னால் தான் விளங்குவதெனவுங் கூறியதென்க.

(க-து) சத்துக்குச்சத்து வேறின்றென்பது. உண்டெனல்மூடம். தன்னை விட்டு ஆய்வாருக்கு அயலின்பமேயன்றிச் சுயானந்தமின்றென்க காரியஞ் செயுமோ சத்தென, இங்ஙனஞ் சில பிரதிகளிருக்கின்றன. வேறென்றுலன்றித் தன்னால் தானிருப்பதுயாதோ? அது சத்தெனவும், தன்னால் தன்னையுணர்வதும், தன்னால் தான்விளங்குவதும் யாதோ அது சித்தெனவுமாம், இதனால், இருப்பதே விளங்கலின் சத்தே சித்தெனவும், விளங்குவதே இருத்தலின், சித்தே சத்தெனவுங் கொள்ளப்பெற்றும். பெறவே, சத்துஞ்சித்துஞ் சொற்பேதமேயன்றிச் சிறிதும் பொருட்பேதமின்றென விளங்கக் கண்டாம். காணவே, இவ்வொருமையே நிரதிசயானந்தமெனத் துணிதலுக்கிடமாயிற்று. ஆகவே, சிவானுபவப் பேற்றிற்கு இஃதே தக்கயுத்தியென்று ஏற்கநின்றது. இவ்விரண்டு கவியானும் சச்சிதானந்த ஒருமைக்கு உத்தி கூறியவாறுகாண்க. யுத்தியெனல்; தர்க்கம், அனுமானம், யுத்தியென்னு மூன்றுமடங்கிய மனனத்துளொன்று. இவற்றையொக்க ஆயாவிடத்து நமதுயுத்திக்கு இயைவதெங்ஙனம், ஐயந்திரிபின்றித் தெளிவதெங்ஙனம்? இன்றுதலால் அமைதியின்றென்பதாயிற்று ஆகவே, ஞானநூல் கற்றலெற்றிற்கு, நூலிலுள்ள யுத்திக்குச்சமாதானம் வேண்டுவதின்றெனின், பொய்யைமெய்யென்ற மூடரென்னுங்கவியில்

ஞானமெய் ஏனைய பொய்யென்னலாமா? மூர்த்தியாதிகளைக் கூறும் புராணமுஞ் சான்றோரும் அதையேற்போருமுடரா? இதென்னவியப்பு. பயனின்றெனக்கண்டாம். (142)

## 143 - கவி. (அ—கை)

[சச்சிதானந்த ஒருமையைச் சுருதியுத்தியால் விளக்கியவாறுபோல, அனுபவத்தாலும் விளக்குது மெனலே இக்கவியிற் கூறுகின்றார்.]

சுருதியுத்தி யொத்ததுபோ லனுபவமுங்கேள்சுழுத்திசுக வானந்த
மிருதிவடி வாதலினவ் வானந்தமேயறிவாம் வேறங்கில்லை
கருதுபிர ளயஞ்சுழுத்தி யிரண்டிலுநீ யிருந்திருளைக் காண்கின்றாயே
யிருதயத்திப் படிநோக்கி யேகபரி பூரணமா யிருந்திடாயே.

(இ-ள்) சுருதியுத்தியொத்ததுபோ லனுபவமுங்கேள் சுழுத்தி சுகவானந்த மிருதிவடிவாதலினவ்வானந்தமே யறிவாம் வேறங்கில்லை (எ-து)—முன்னர் கூறியது சுருதியுத்திக்கொத்து நின்றாற்போல, இனி யனுபவத்துக்கு மொத்துநிற்கக் கூறுதும், அதனையுங்கேளுதி. அதாவது; சுழுத்தியிற்காணுஞ் சுகமானது ஸ்புரணரூபமாதலின், அவ்வானந்தமேயறிவாம், இங்ஙனமன்றி அறிவாதற்கு வேறோர்நெறி அங்கிருக்க யாங்கண்டிலம்: கருதுபிரளயஞ் சுழுத்தியிரண்டிலு நீயிருந்திருளைக்காண்கின்றாயே (எ-து) - எவருநினைத்தற்குரிய யுகாந்தப் பிரளயம், சுழுத்தியவஸ்தையென்னும் இரண்டுகாலத்தினு நீயிருந்து கொண்டு ஆங்கு மூடிய இவ்விருவித இருளையுங் காண்கின்றனையன்றோ:—இருதயத்திப்படிநோக்கி யேகபரிபூரணமா யிருந்திடாயே (எ-து)- இவ்வாறு உனதுள்ளத்தில் எக்காலத்திலும், எவ்விடத்திலும் நீ யிருக்கநோக்கி ஏகபரிபூரணமாக நீ யிருந்திடுதி.

தினசுழுத்தி, நனவிற்சுழுத்தியெனக்காட்டாது பொதுப்படக் கூறியது; சுகரூபமே ஸ்புரணரூபமாகத் தடித்தலும், மீண்டுமந்த ஸ்புரணரூபமே அந்தச் சுகரூபமாகப் பெருகலும் இவ்விரு சுழுத்தியிலுமாதலினென்க. ஆயிற்சுழுத்தி பேதமென்னை? ஒன்று நனவிற்சுழுத்தி, ஒன்று மூடசுழுத்தி. இதனால், ஞேப்தியேபிரியம், பிரியமே ஞேப்தியெனக்கண்டாம். இவ்வனுபவம் மூடசுழுத்தியில் எங்ஙனமெனின், நித்திரைத்தெளிவிலெழுநினைவு சுகமாயிருத்தலினானும், விவகாரமுடிவில் மீண்டுமுறங்குங்கால், அந்நினைவு சகத்தாகாரநழுவித் தனிப்படும், அங்ஙனந் தனிப்படுதலே சுகப்பெருக்காம், அச்சுகம்

பெருக்குக்கு ஆங்கு ஆனி நேரிடும்போது சீறியெழுதல் நினைவன்றே, அப்போது அச்சுகம் நினைவாயிருந்தலினுனுமென்க. சத்தென்பது வேறன்று நீயேயெனக்காட்டப் பிரளயஞ்சுழுத்தியிரண்டிலு நீயிருந் திருளைக் காண்கின்றுயேயெனவும், உன்னையிடப் பரிபூரணம் வேறன்றெனக்காட்ட, இருதயத்திப்படி நோக்கி ஏக பரிபூரணமா யிருந்திடாயேயெனவுங் கூறியவாறுகாண்க. தன்னையிங்ஙனம் விசாரித் துத் தெளிந்தவரோ? அருள், பரிபூரணம், ஆனந்தம், ஆனந்தாதீதந் தன்னைவிடவேறென்போர்? நீயேதெளிதியெனத் தன்னனுபூதிநிலை யைக் குறிப்பித்தாரென்க. முந்திஅனுபூதிகூறுதது; தலைதடுமாற்ற மென்னுந் தந்திரயுத்தி.

(க-து) அறிவேயானந்தம், ஆனந்தமேயறிவெனல் விசாரணைத் தெளிவிலென்பது, ஆயின் மூடத்திலின்றேவெனின், உண்டு. விசாரி யாக் குற்றமே யென்க. அறிவன்றிய ஆனந்தமும், ஆனந்தமன்றி அறிவுமில்லை. அறிவு நானெனலாயின், ஆனந்தம்யாது? பரமெனின், நானெனலின்றே? அது ததாகாரமாயதெனின், அப்போது அயலெ னல் சற்றுமின்மையின் ஆனந்தமுமயலன்றும். இது கற்பிதபேதமன்றி அறிவானந்தபேதம் என்றுமின்றும். (143)

## 144 - கவி. (அ கை)

[இவ்வனுபூதி கேட்டஅக்கணமே சமாதிகூடித் தெளிந்தானெனலை இக்கவியிற் கூறுகின்றார்.]

பலகலையு முணர்ந்தகுரு மொழிந்தபடி யிவனுமனு பவம்விடா மற், பலமலரின் மதுப்போலச் சச்சிதானந்தமொன்றும் பரமார்த்தத் தைப், பலபொழுதுங் கண்மூடிச் சமாதியிருந்தான் விழித்துப்பார்த்த போது, பலவடிவாஞ் சராசரசித் திரங்களெலாந் தோன்றுமொரு படமானனே.

(இ-ள்) பலகலையுமுணர்ந்த குருமொழிந்தபடி யிவனுமனு பவம்விடாமல் (எ-து) – சகலசாஸ்திரத் தேர்ச்சியுமுள்ள சற்குருநாதன் கூறியவண்ணம் மாணுக்கனுந் தனது அனுபூதி நிலையினைவிடாமல்: — பலமலரின் மதுப்போலச் சச்சிதானந்தமொன்றும் பரமார்த்தத்தைப் பலபொழுதுங்கண்மூடிச் சமாதியிருந்தான் (எ-து) – பலமலரினின்று சேர்க்கப்பட்டதேன் கூடுபோன்று, சச்சிதானந்தவொருமை யெனப் படுவதே பரமார்த்தமாதலால், அதனைக்காண ஊனக்கண்மூடி வெகு நேரஞ் சமாதியினின்று அகலாதிருந்தனன்: — விழித்துப் பார்த்தபோது

பலவடிவாஞ் சராசரசித்திரங்களெலாந் தோன்றுமொரு படமானுனே (எ-து) — பின்னர்விழித்துப் பார்த்தபோது, பலவேறுவகைவடிவாயுள்ள சராசரசித்திரங்களனைத்துந் தோன்ற வரையப்பட்டிருக்கின்ற வொரு படத்தைப் போலத் தானுயினன் எ-று.

பரமார்த்தத்தையென்னுஞ் செயப்படுபொருளுக்குப் பயனிலை யின்ருதலால், காணவென்பதை வருவித்தாம். தனக்கன்னியமாகக் காணது தானுகிய வியாபகவிளக்கத்திற் சராசரமாயுள்ள அனைத்தை யுங் காண்டலிற் படத்தை உவமைகூறினுர். படத்தைப்போல் என்ஞது தான்படமானுனென்றதனுல் உருவகமெனினுமமையும். பரமார்த்தத்துக்குச் சச்சிதானந்தங் குணமென்பாரை மறுக்கச் சச்சிதானந்தமொன்ரும் பரமார்த்தத்தையென்ருர். சமாதிவிட்டு பிரியக் கூடாமையிற் பலபொழுதுமென்பதற்குப் பலதரமுமென்பாருமுளர். சமாதியிலென்ஞது விழித்துப்பார்த்தபோது தானெருபடமானுன் என்றதனுல், சகச சமாதி யெனப்பெற்ரும்.

(க-து) தானேசமஸ்தமுமாக விளங்கினனென்பது. இங்கே இவன் படமானுனென்றதனுல், விருத்தி திருட்டாந்தமெனப் பெற்ரும். பெறவே, ஏனைய மூன்றுந் தானே அமையுமெனல் அருத்தக் பத்தி எனக்கண்டாம். மதுவென்பது, ஆகுபெயர். பலமலரின் மதூ கூட்டரவன்றித் தேன்கூடு இன்மைபோலச் சச்சிதானந்த ஒருமை யன்றிப் பரமார்த்தமின்மையின், ஒருமையே வடிவாயிற்று. ஆகவே, வடிவும் பண்பாதலாற் பண்புவமை. என்னை? "பண்புந் தொழிலும பயனுமென்றிவற்றின்" என்னும் விதியாற்காண்க. (144)

## 145 - கவி. (அ—கை)

[துரியாதீதமும் ஏழாம் பூமியு முக்கியமாமெனக்கூறிய நிலையினையும் அதன் வகையையுந் தெரிவிக்கவேண்டுமென்று மாணுக்கன் வினவலை இக்கவியிற் கூறுகின்ருர்.]

இதயமொத்த சற்குருவே நமக்கிதுவே விநோதமன்றி யினிவேறுண்டோ, வதையுரைத்து மதைநினைத்து மிருப்பதன்ருே ஞானிகளுக் கான நீதி, முதலுரைத்த துரியாதீதமு மேழாம்பூமியுமுக் கியமாமென்ற, பதமுமதின் வகையுமெனக் கெளிதாகத் தெளியும் வண்ணம் பணித்திடீரே.

(இ-ள்) இதயமொத்த சற்குருவே நமக்கிதுவே விநோதமன்றி

யினிவேறுண்டோ (எ-து) — அடியேன் மனதுக்கியைந் தெழுந்தருளிய சற்குருநாதனே! நமக்கு விநோதமாயது இந்நிலையேயன்றி இதுபோல் வது இனிமைவேறுளதாகக் காணுமோ? இன்றுதலின்: — அதை யுரைத்து மதைநினைத்து மிருப்பதன்றோ ஞானிகளுக்கான நீதி(எ-து) — அங்ஙனமாய அனுபூதியை உரைத்துக்கொண்டும், அதையே சிந்தித் துக்கொண்டும் இருப்பதல்லவோ ஞானிகளுக் கியைந்த வொழுக்கமா வது:— முதலுரைத்ததுரியாதீதமு மேழாம் பூமியு முக்கியமாமென்ற பதமுமதன்வகையு மெனக்கெளிதாகத் தெளியும் வண்ணம் பணித் திடீரே (எ-து) — முன்கூறிய துரியாதீதநிலையும், ஞானபூமியில் ஏழாம் பூமியும், முக்கியாமென்று கூறிய பதமும், அதன்விவரமும் இனைய வென எளிதிற்றெளிந்து கொள்ளும் வண்ணம் அடியேனுக்கு விளக்கி யருளும். எ-று

இதுகாறுமில்லையெனக்காட்ட, இனிவேறுண்டோ வெனவும், ஏனையருக்கு அன்றெனக்காட்ட, ஞானிகளுக்கானநீதி எனவும், இந்தநிலையைப் பொதுவாக, 132 — கவியிற் கூறியிருப்பதால், முதலு ரைத்த வெனவுங் கூறினர். இவ்வினுக்களுக்குவிடை, 153-முதல், 153-கவிவரையிற் காணலாம். முக்கிய மாமென்னும் வினைக்கெழு வாய், துரியாதீதமும், ஏழாம்பூமியுமாதலால் அவற்றைச் சங்கையிற் சேர்க்கப்படாது. என்றவென்னும் வினைக்கெஞ்சியது; பதமும், அதன் வகையுமாதலால் இவ்விரண்டைப்பற்றி வினவியதாக இக்கவிகாட்டு கின்றது. நான்கெனக்கோடற்குக் கவி இயையிற்கொள்ளலாம்.

(க-து) மாணாக்கனிவ்விரண்டையுந் தெளிந்துகொள்ளுமாறு வினவினனென்பது இவ்விரண்டிற்கும் விடைகூறுங்கால் தானே துரியாதீதமும், ஏழாம் பூமியுமமையும் உரைக்குக் கவியன்று, கவிக் குறையாதலால் இக்கவிக்கு இயைந்தவாறு உரையெழுதினும். என் செய்தும். (145)

## 146 - கவி (அ — கை)

[இவ்வினவுக்கு விடை ஞானபூமியிற் சேர்ந்ததாதலின், ஞானஞ்ஞான பூமிகளை விளக்காவிடில் தெரியாதெனக்கருதி இக்கவியில் அஞ்ஞான பூமிகளைத் தெரிவிக்க அவற்றின்பெயர்களைக் கூறுகின்றார்.]

வினவுமிடத் தஞ்ஞான பூமிகளேழ் ஞானபூ மிகளே ழென்பா
சினியவற்றுளஞ் ஞானபூமிகளேழையுமுந்தி யியம்பக் கேளாய்

தனிவித்துசாக்கிரஞ் சாக்கிர மகாசாக்கிரஞ் சாக்கிரத்தைச் சார்ந்த
கனவு கனுக் கனவு சாக் கிரஞ் சுழுத்தியென்றெழுபேர் கணித்தார்
[மேலோர்.

(இ-ள்) வினவுமிடத்தஞ்ஞான பூமிகளேழ் ஞானபூமிகளே மென்பாரினியவற்று ளஞ்ஞான பூமிகளேழையு முந்நியியம்பக்கேளாய் (எ-து) - அதைக்குறித்துச் சொல்லுமிடத்தில், அஞ்ஞான பூமிகளே மென்றும், ஞான பூமிகளேழென்றுஞ் சத்துக்கள் சொல்லுவார்கள். இனி அவ்விரண்டுபிரிவினுள்; அஞ்ஞான பூமிகளேழையு முன்னர் சொல்லுதும் அதனைக்கேளுதி:—தனிவித்து சாக்கிரஞ்சாக்கிர மகா சாக்கிரஞ் சாக்கிரத்தைச்சார்ந்த கனவு கன (எ-து) — தனிமையாயுள்ள விந்துசாக்கிரம், சாக்கிரம், மகாசாக்கிரம். சாக்கிரசொப்பனம், சொப் பனம்:— கனவுசாக்கிரஞ் சுழுத்தியென்றெழுபேர் கணித்தார்மேலோர் (எ-து) — சொப்பனசாக்கிரம், சுழுத்தியென்று இங்ஙனம் எழுபேர்களை யுஞ் சத்துக்கள் சொல்லினர் எ-று.

தனித்துநிற்றலின், தனியென்றார் என்பாரென்றதனுற் சத்துக் கள் வருவித்தாம், இதுதோன்றுவெழுவாய். (146)

((க-து) வெளிப்படை.

## 147 - கவி (அ - கை)

[அஞ்ஞான பூமியேழனுள் நான்கு பூமிகளின் இயல்பை இக்கவியிற் கூறுகின்றார்.]

முந்தவகண் டத்தெழுமோ ரறிவுமாத் திரமதுதான் முதல்வித்தாகு
மிந்தவறிவிற் பண்டில்லா வகந்தை முளைபோலா மிதுநனவாம்
வந்துவந்து பிறவிதொறு மகமமதை வளருமது மகாநனவா
நந்துமகங் கொடுநனவின் மனோராச் சியஞ்செயலே நனக்கனவே.

(இ-ள்) முந்தவகண்டத்தெழுமோரறிவுமாத்திர மதுதான்முதல் வித்தாகும் (எ-து)—அகண்ட பரிபூரணமாக விளங்குஞ் சுத்தசுயஞ் சைதன்னியத்தில் முதலில் தான்மாத்திரமாக வெழுந்த ஜெப்திஸ் புரிப்பெதுவோ அதுவே விந்துசாக்கிரமெனப்படும்:—இந்தவறிவிற் பண்டில்லாவகந்தை முளைபோலா மிதுநனவாம் (எ-து) — இந்தஜெப்தி ஸ்புரிப்பில்முன் என்றுமிலாத ஆணவம் அங்குரம்போலெழும், இது வே சாக்கிரமெனப்படும்:—வந்துவந்து பிறவிதொறு மகமமதைவளரு

மிதுமகாநனவாம் (எ-து) அந்த அகந்தையால் யானெனதென்னும் அகமமதை பிறவிதோறும் வந்துவந்து வளர்ந்து கொணடிருக்கும், இதுவே சமகாசாக்கிரமெனப்படும்: — நந்துமகங்கொடுநனவின்மனோ செயலேநனுக்கனுவே, (எ-து) - அங்ஙனம் வளர்ந்து கொண்டிருக்கும் அகமமதைகொண்டு சாக்கிரத்தில் மனோராச்சியஞ்செய்வதே சாக்கிர சொப்பனமெனப்படும். எ-து.

மகாசமுத்திரத்திற்பரமாணு போலெழுந் திவலைபோல்வதின், ஓரறிவென்னுது மிகைபட மாத்திரமெனவும், அங்ஙனம் வளர்ந்து கொண்டிருப்பதைப் பற்றி நந்துமகங்கொண்டடெனவுங் கூறினர். முன் என்று மில்லாத அறிவு ஸ்புரித்தல் போன்றலின், விந்துசாக் கிரமெனவும், அங்ஙனம் ஸ்புரித்தலளவா நின்ற அறிவானது அகந் தையென்றங்குறம் போலாகத் தானும் அதன்மயமாகக்காண்டலின், சாக்கிரமெனவும், இவ்வகந்தை மேலீட்டால் பிறவிதோறும் அகம மதை ரூபமாக வளர்தல்போன்று அறிவுகாண்டலின், மகாசாக்கிர மெனவும், அவ்வகமமதை மேலீட்டால் தடையின்றி மனோராச்சியம் புரிதல் போன்று அன்வறிவுகாண்டலின், சாக்கிரசொற்பனமெனவும் வந்ததென்க. (147)

## 148 - கவி (அ-கை)

[ஏனைய மூன்றுபூமியின் இயல்பை இக்கவியிற் கூறுகின்றார்.]

உண்டுறங்கி மனோராச்சி யஞ்செயல்சொற் பனமெனும்பே
ருடைய தாகும், பண்டுநனுக் கண்டுமறந் ததைமீண்டு நினைப்பது
சொற்பனநனவா, மண்டுமிருண் மூடுவது சுழுத்தியா மஞ்ஞான
வகைகள் சொன்னோம், முண்டுநிறை முத்திதரு ஞானபூமிகளே
ழும் விளம்பக் கேளாய்.

(இ-ள்) உண்டுறங்கி மனோராச்சியஞ்செயல் சொற்பனமெனும் பேருடைதயாகும் (எ-து) — உண்டுறங்கிமனோராச்சியஞ் செய்தலே, சொற்பனமென்னும் பெயர்பெறுவதாம்: — பண்டுநனுக்கண்டுமறந் ததைமீண்டுநினைப்பது சொற்பனநனவாம் (எ-து) — முன்சாக்கிரத்திற் கண்டு மறந்ததை மறுபடியும் நினைப்பது சொற்பனசாக்கிரமாம்: — மண்டுமிருண் மூடுவதுசுழுத்தியா மஞ்ஞானவகைகள் சொன்னோம் (எ-து) — மிகுந்தவிருள் மூடிக்கொள்ளத்தகுவது சுழுத்தியெனப்படுவ தாம், இதுவரையிலும் அஞ்ஞான பூமிபேதங்களைச் சொல்லினோம்: — விண்டு நிறை முத்திதருஞான பூமிகளேழும் விளம்பக்கேளாய் (எ-து)

—பரிச்சேத பேதமகன்று பரிபூரணமாவிளங்கு முத்தியைத் தரத்தக்க ஞானிபூமிகளேழையும் அனியாஞ்சொல்லக்கேளுதி. எ-று.

அங்ஙனமனோராச்சியஞ் செய்தலோடு உண்டுறங்குவது போல் அறிவுகாண்டலே, சொற்பனமெனவும், முன்கண்டு மறந்ததை மீண்டு நினைப்பதுபோல் அறிவுகாண்டலே, சொற்பனசாக்கிரமெனவும், நன்குறங்குங்கால்மிக்க இருள் மூடிக்கொள்வதுபோல் அறிவுகாண்டலே, சுழுத்தியெனவுங் கூறியதென்க.

(க-து) இந்த அஞ்ஞானபூமியேழும் அத்தியாரோபமெனக் காட்டக்கூறிய தென்பது. ஆகாயமானது; காற்று, அக்கினி, நீர், மண்ணாகப்பரிணமித்ததுபோற் காணினும், அவற்றால் தனக்கு ஆனி விர்த்தி தினைத்துணையுமில்லை. அதுபோல; சுசாதியாதி விகற்பமின்றிய அறிவானது; அஞ்ஞான பூமிகளாகிய மூலப்பகுதி முதல் தனுவிகுதியீருக்கிடந்த கற்பனைகளாகப் பரிணமித்தது போற்காணினும் அவ்வவற்றின் ஆனிவிர்த்தி தினைத்துணையுந் தனக்கில்லை. உள்ளது போற் காண்டலில் இங்ஙனங்கூறினரென்க. இல்லாததை உள்ளது உள்ளதுபோற்கூறவந்தது; உள்ளதாகக்கருதியதை விலக்கற்கென்க. இல்லாததைதையில்லையெனக்கூறின் எவருமேலார். அதாவது; அறிவையன்றிச் சகமென்பதில்லையெனக் கூறுதல் போல்வது. சிருஷ்டிக் கிரமங்களாற் சகமுள்ளதாகமுடிக்கின் எவர்க்குமுடன்பாடு. இங்ஙனம் உடன்பாடாக யாமுங் கடவுள் சங்கற்பத்தாலன்றித் தோன்றச்சற்றுஞ் சுருதியுத்தி கண்டிலம். ஆகவே, அந்தச்சங்கற்பம், நமக்கும் உலகுக்குங்காரணமோ அன்றோ? காரணமெனின், மூன்று காரணமெனின், மூன்று காரணத்துள்யாது? துணைக்காரணமெனின், அப்போது போது கடவுள் நிமித்தகாரணமாமின்றது. முதற்காரணமெங்கே? மாயையெனின், யாமர சா மாயா, என்பதற்கு அருத்தமென்னை? இதுமலடிமைந்த என்றாற்போலும், எனக்காட்டி வயப்படுத்துவதென வறிக. (148)

## 149 - கவி (அ-னீக)

[இனி ஞானபூமிகளேழையுங் கூறுவான்வேண்டி அவற்றின் நாமங்களை இக்கவியிற் கூறுகின்றார்.]

புலவர்புகழ் முதற்பூமி சுபேச்சைவிசா ரணையிரண்டாம் பூமி யாகு
நலதனுமா னசிமூன்றும் பூமிசத்து வாபத்தி நாலாம் பூமி

சொலுஞ்சமுசத்திப்பேரும் பதார்த்தாபா வனைப்பேருந் துரியப்பேரு
மலினமறு மகனேயைந் தாறேழு பூமிகளா வகுத்தார் மேலோர்.

(இ-ள்) புலவர்புகழ் முதற்பூமி சுபேச்சை விசாரணையிரண்டாம் பூமியாகும் (எ-து)—மகான்களால் மதிக்கப்பெற்ற ஞானபூமிகளில், சுபேச்சை முதற் பூமியெனவும், விசாரணை இரண்டாம் பூமியெனவும்: நலதனுமானசி மூன்றும்பூமி சத்துவாபத்தி நாலாம்பூமி (எ-து)—நல்ல தனுமானசி மூன்றும்பூமி யெனவும், சத்துவாபத்தி நான்நாம் பூமியெனவும்: சொலுஞ் சமுசத்திப்பேரும் பதார்த்தாபாவனைப் பேருந் துரியப்பேரும் (எ-து)—சொல்லாநின்ற சமுசத்தியென்னும் பெயரும், பதார்த்தாபாவனையென்னும் பெயரும், துரியமென்னும் பெயரும்:—மலினமறுமகனே யைந்தாறேழு பூமிகளா வகுத்தார்மேலோர் (எ-து) களங்கரகிதமான ஞானபுத்திரா! ஐந்தாம்பூமியெனவும், ஆரும்பூமியெனவும், ஏழாம்பூமியெனவும் பெரியோர்கள் வகுத்துச்சொன்னுர்கள். எ-று.

சமுசத்தி, பதார்த்தாபாவனை, துரியம், இவற்றை; ஐந்தாம் பூமி, ஆரும்பூமி, ஏழாம்பூமியெனக்கூறியது, நிரனிறை. சுபேச்சை, சுபம்விரும்பல். விசாரணை, அங்கலிங்க விசாரணையில் தலைப்புகல். தனுமானசி, மனஞ்சிறுகல். சத்துவாபத்தி, உண்மையில் நிலையுறல். சமுசத்தி, சங்கற்பம் அறல். துரியம், அறிவுவிளக்கம், எனபன, சுபம் விரும்பல், மங்களகரமாதலை விரும்பல். அதாவது; பூர்வபட்சமாதற் கியையாதது. நல, சொலும்; இடைக்குறை.

(க-து) ஞானபூமிகளின் நாமங்களை உணர்த்தியதென்பது. இனி வகையாதற்கு இது தொகையெனப்படும். (149)

## 150 · கவி (அ—கை)

[ஞானபூமிகளினிலை இனையவெனத் தனித்தனி விளங்க நான்கு பூமிகளை இக்கவியிற்கூறுகின்றுர்.]

துற்சங்க நிவிர்த்திவந்து சிவஞானம் விரும்புவது சுபேச்சையாகு
நற்சங்க மொழிவினவி ஞானநூல் பழகல் விசாரணியா நம்பி
முற்சங்க வீடணைகள் விடறனுமானசி யிந்த மூன்றினுலுஞ்
சற்சங்க மனதிலுண்மை யறிவுதித்தல் சத்துவாபத்தி தானே.

(இ-ள்) துற்சங்கநிவர்த்திவந்து சிவஞானம்விரும்புவது சுபேச்சையாகும் (எ-து) — பொருளல்லவற்றைப் பொருளாகக்கொள்ளுந்

துர்ச்சங்கசார் பகன்று மேலாய ஞானமாதற்கு விரும்புவது சுபேச்சையெனப்படுவதாம்:— நற்சங்கமொழியினாலி ஞானநூற்பழகல் விசாரணையாம் (எ-து)— பொருளைப் பொருளாகக்கொள்ளுஞ் சற்சங்கத்தைத் தழுவி அவருரைக்கும் மொழிகளை ஐயமறக்கேட்டு, இஃதொக்க ஞான சாஸ்திரங்களிற் பலகாற் பழகல் விசாரணை யெனப்படுவதாம்:— நம் பிமுற்சங்கவீடணைகள் விட றனுமானசி (எ-து) – உண்மையெனச் சொல்லுதலால் அவற்றில் நம்பிக்கையுற்று முன்னர் தனக்குச்சங்கமாநின்றுள்ள ஈடணத்திரயங்களை, விட்டகறல் தனுமானசியெனப்படுவதாம்:— இந்த மூன்றினுலுஞ் சற்சங்கமனதிலுண்மை அறிவுதித்தல் சத்துவா பத்திதானே (எ-து)— இந்த மூன்று ஏதுக்களாலுஞ் சற்சங்கமயமான மனதின்கண் மெய்யுணர்வெழல் சத்துவாபத்தியெனப் படுவதாம் எ-று.

(க-து) நான்குபூமி; சுபேச்சை, விசாரணை, தனுமானசி, சத்துவாபத்தியென்பன

151 - கவி. (அ—கை)

ஏனையமூன்று பூமிகளினிலே இனையவென இக்கவியிற் கூறுகின்றார்.]

தத்துவத்தின் மனமுறைந்து மித்தையெலா மறத்தல் சமுசத்தியாகு
மத்துவிதா னந்தம்வருந் திரிபுடிபோம் பதார்த்தாபாவனைய தாகும்
வத்துநிலை யிருந்தபடி யிருந்த மவுனசுபாவந் துரியமாகு
மித்துரிய பூமியைமுன் றுரியாதீ தப்பதமென் றதுவுங் கேளாய்.

(இ-ள்) தத்துவத்தில்மனமுறைந்து மித்தையெலாமறத்தல் சமுசத்தியாகும் (எ-து)— உண்மை யாதோ அதில் மனமானதழுந்தி மித்தையெனப்படுவனவெவையோ அவற்றை ஒருங்கே மறந்துவிடுதல் சமுசத்தியெனப் படுவதாம்:— அத்துவிதானந்தம் வருந்திரிபுடிபோம் பதார்த்தாபாவனையதாகும் (எ-து)—அத்துவிதானந்தம் உதயமாய் அதனால் திரிபுடி போகத்தகுவது பதார்த்தாபாவனை யெனப்படுவதாம்:— வத்துநிலை யிருந்தபடியிருந்த மவுனசுபாவந் துரியமாகும் (எ-து)— பிரமவஸ்துவினிலே எங்ஙனமிருந்ததோ அஃது இருந்தவண்ணந் தானுமிருக்க அதனுலெய்து மவுனசுபாவந் துரியமெனப்படுவதாம்:— இத்துரிய பூமியைமுன் துரியாதீதப்பதமென் றதுவுங்கேளாய் (எ-து)— இந்தத் துரியபூமியையே முன்னே துரியாதீதபதமென்று சொன்னமே அதனையும் இப்போது யாங்கூறக்கேளுதி எ-று.

உறைந்தென்பது, உறைத்தென்ருயது; தன்வினைபிறவினைமயக்கம். இங்கேயுண்மையாவது; ஆன்மா. உதாரணம் "மெய்யதேதெனிற் சச்சிதானந்தமா வியாபிக்குமான்மாவே" இன்னு முண்மையாவது; ஞானம். சிவமெனற்கும், ஆன்மாவெனற்கும் பொருள்; ஞானத்தையன்றிச் சோதனையில் வேறு கண்டாருளரோ? உளரெனில், உபாதி குணந்தொழிலன்றோ? இம் மூன்றையுந்தள்ளிக் காட்டவேண்டும், ஒத்துக்கொள்வதற்குத் தடையென்னே? இதுநிற்க. சுசாதியாதி பேதமிறந்ததாதலின் ஞானத்தில் மனமுறைதற்குத் தடையென்னே? உறையவே, மித்தையெல்லா மறக்கவரும். மறக்கவரவே, அத்துவிதானந்தம். வரற்கும், திரிபுடி ஒழிவுக்கும் இடமுண்டாம். உண்டாகவே பரம் எங்ஙனமிருக்கின்றதோ அங்ஙனமிருக்கத் தானேயன்மையும். அங்ஙனமாய அமைதியே, சுபாவமெனத்தக்கது. அச்சுபாவமே மகிமையென்னமாம்.

(க-து) இவ்விரண்டு கவியாலும் ஞானபூமி ஏழினிலை இனையவென விளக்கினுரென்பது இங்ஙனம் விளக்கியது, இனித் துரியத்திற்கும் அதீதத்திற்கும் அபேதங்காட்டவேண்டியென்க. இங்ஙனம் விளக்காவிடில் எழுத்தறியார் கவிபோலும். (151)

## 152 - கவி (அ| கை)

[துரியமே துரியாதீதமெனற்கு ஞானபூமி ஏழையுஞ் சுத்த பஞ்சாவஸ்தையாக இக்கவியிற் கூறுகின்றூர்.]

முற்புவிமூன் றினுமுலகந் தோன்றுதலாற் சாக்கிரமாம் மூன்றற்கப்பாற், சொற்பனமா மதுவுமெல்ல நழுவுமஞ்சாம் பூமியே சுழுத்தியாகு, மற்புதமாஞ் சுவானுபவமிகு மாறும்புவி துரிய மதற்கப்பாலோர், கற்பனையில்லாதவிட மதீதமென்று மவுனமாக் காட்டும் வேதம்.

(இ-ள்) முற்புவிமூன்றினுமுலகந் தோன்றுதலாற்சாக்கிரமாம் (ஏ-து) — ஞானபூமிகளில் முதலிலுள்ள சுபேச்சை, விசாரணை, தனுமானசி யென்னும் இம்மூன்றுபூமி நிலைகளெய்தினு முலகந்தோற்றிக் கொண்டிருப்பதால் சாக்கிராவஸ்தையெனப்படும்: — மூன்றற்கப்பாற் சொற்பனமாமதுவுமெல்ல நழுவுமஞ்சாம் பூமியேசுழுத்தியாகும்(ஏ-து) — அந்த மூன்றுபூமிக்கு அப்பாலெய்திய நான்காம்பூமிநிலையே சொற்பனவஸ்தையெனப்படும். அந்த நான்காம் பூமிநிலையு மெல்லமெல்ல நழுவத்தக்க அவசரத்துதிக்கும் ஐந்தாம் பூமிநிலையே சுழுத்தியவத்தை

யெனப்படும்:— அற்புதமாஞ் சுவானுபவமிகு மாரும்புவி துரியம்(எ-து) அவ்வைந்தாம்பூமி நிலைக்கப்பால் மிகவும் அற்புதமாயுள்ள தனது சுவானுபவநிலைதோன்றும், அந்நிலை மீக்குறலே ஆறும்பூமியாகும், அவ்வாறும்பூமி நிலையே துரியபதமென்னப்படும்:— அதற்கப்பாலோர் கற்பனையில்லாதவிட மதீதமென்று மவுனமாக்காட்டும்வேதம் (எ-து)— அந்த ஆறும்பூமி நிலைக்கப்பால் எழுநிலையாகிய ஏழாம்பூமி யாதோர் கற்பிதமும் இறந்தவிடமாம், அவ்விடமே துரியாதீதமென்று வேதமானது சொல்லாமல் மவுனமாகக்காட்டிவிடும். எ-று.

சிவஞானம் விருப்பல், ஞானநூல் பழகல், ஈடணைகள்விடல், இம்மூன்றும் உலகத்தை மறைக்கற்பாலதன்றாமையின், புவிமூன்றினும் உலகந் தோன்றும் எனவும், தொக்கியிருப்பதால், நான்காம் பூமியை வருவித்தாம். ஞானோதய விளக்க உலகஞ் சாயாவடிவம் போற் காணச்செய்தலின், மூன்றற்கப்பால் சொற்பனமாமெனவும், தத்துவத்தில் மனமுறைந்தபோது மித்தையெனப்படுவனவற்றை யெல்லாம் மறந்துபோகச் செய்தற்பாலதாதலின், அதுவு மெல்லநழுவும் ஐந்தாம்பூமியே சுழுத்தியாகும் எனவும், அப்போது அங்கேயெழும் ஆனந்தந் துவிதமிறந்தது ஆதலினானும், திரிபுடிஎன்பது இருத்தற்கு இடமன்றாமையினானும், அவ்வானந்தந்தெரிவுமயமாதலினானும், அதனை, அற்புதமாஞ் சுவானுபவமிகும் ஆறும்புவி துரியமெனவும், சுத்தசை தன்யமெங்ஙனம் இருந்ததோ அங்ஙனந் தானுதலை, அதற்கப்பாலோர் கற்பனை இல்லாதவிடம் அதீதமென்று மவுனமாக்காட்டும் வேதமெனவுங் கூறியதென்க.

(க-து) முன்னர் கூறிய துரியநிலையே துரியாதீதமன்றி வேறன்றெனற்கு இங்ஙனங் கூறியதென்பது. இதுவும் வேததந்திரம். மெல்லவென்பது செய்யுணடை, மெள்ளவென்பது உலகவழக்கம் சுகானுபவமெனினும், சுவானுபவமெனினுமொக்கும். இது மரூஉ. பூமியுமிடமாதலால் இங்கே கற்பனை இல்லாத விடமென்றதை ஏழாம் பூமியாக்கினாம். (152)

## 153 - கவி (அ—கை)

[துரியமே துரியாதீதமெனற்கு ஐயுருவண்ணம் இன்னும் வேறுவகையாற் சமாதானம் இக்கவியிற் கூறுகின்றார்.]

துரியநிலந் தனிற்றுரியா தீதமெனின் மயக்கமென்று சுருதிமேலோ, ரரியதொரு விதேகமுத்தி யதீதமென்பா ரதுகணக்கிலாறும்

பூமி, மருவுசுழுத் தியிற்காட்சி சுழுத்தியென்பா ரென்பதுநீ மனதிற் கொள்வாய், பெருமைதரு ஞானபூமியின்விகற்ப மின்னமுண்டு பேசக் கேளாய்.

(இ-ள்) துரியநிலந்தனிற் றுரியாதீதமெனின் மயக்கமென்று சுருதி மேலோ ரரியதொரு விதேகமுத்தி யதீதமென்பா ரதுகணக்கி லாரும்பூமி (எ-து) - வேறென்றது துரியபூமியில்தானே துரியாதீத மெனக்கூறின் ஐயமெய்துறுமென்று பிரபலசுருதியில் வல்லசான்றோர், அறிதற்கரிய ஒப்பற்ற விதேகமுத்தி யெனப்படுவது துரியாதீதமெனக் கூறுவர், அங்ஙனங்கூறப்படுவதும் ஞானபூமி ஏழென்னுங் கணக்கில் ஆரும்பூமியெனப்படுவதாம்: மருவுசுழுத்தியிற் காட்சிசுழுத்தியென் பாரென்பது நீ மனதிற்கொள்வாய் (எ-து) ஆயின் ஏழாம்பூமியோ, அங்குள்ள சுழுத்திசம்பந்த மில்லாத அறிதுயிலென்பர், என்றவர்கள் கூறுவதையும் உன்மனதிற்கொள்ளுதி:—பெருமைதருஞான பூமியின் விகற்ப மின்னமுண்டு பேசக்கேளாய் (எ-து) - யாவற்றினுமிக்க உயர்வுதரத்தக்க ஞானபூமிகளின் விகற்பங்கள் இன்னுமுண்டு, அதனை யாங்கூறக்கேளுதி எ-று.

அது வென்பதில் உம்மை தொக்கது அதுகணக்கில் ஆரும் பூமியென்றதனால், முன்கவிப்படி துரியமென்றாயிற்று, ஆகவே துரிய மே துரியாதீதமெனக் குறிப்பித்ததாகக் கண்டாம். ஆரும்பூமி துரியா தீதமாகவே, ஏழாம்பூமியோ வென்றும், அவ்வேழாம்பூமி துரியா தீதத்துக்கு மேலிட்டதெனத்தோன்ற, மருவுசுழுத்தியிற் காட்சிசுழுத்தி யெனற்குச் சுழுத்தியாயினு மூடமல்லாததால் சுழுத்தி சம்பந்தமில் லாத அறிதுயிலென உரைகொண்டாம். இல்லென்பது வினைத்தொ கையாதலின் இயல்பாயிற்று. என்பதும் என்றதிலும்மை, இறந்தது தழீஇயவெச்சவும்மை. அதீதமெனிற் போதுமே மேலறிதுயிலென்றது; மிகைபடக்கூறலென்னுங் குற்றமாமேயெனின், அறிதுயிலாவது; எல்லாமறிந்தும் எல்லாம்மறியாதது. துரியாதீதமாவது; எல்லாமறியா தது. ஆயின் மூடசுழுத்தியினும் அதீதஞ் சிறந்ததென்றது என்பற்றி யெனின் தத்துவவிசாரத்தெளிவு காரணமாக வந்ததாதலினென்க எல்லாமறிந்தும் அறியாததில் என்சிறப்பெனின், மூடமுமன்று, தெளிவுமன்றெனலைப்பற்றியென்க. சத்துக்கள் ஏழாம்பூமியைக் காட்சி சுழுத்தி என்பரெனமுடிக்க. ஏழாம்பூமி இசையெச்சம் துரியம், சீவன் முத்தி. துரியாதீதம், விதேகமுத்தி. எனவே, துரியமேலீடே துரியாதீத மெனற்கு, கணக்கில் ஆரும் பூமியென்றார். துரியமேதுரியாதீதமெனின்

மயக்கமுறுமேயெனின். சுருதிமேலோர் விதேகமுத்தியே துரியாதீத மெனக்கூறலாமா? அதுவு மேற்கவியிற் கூறியகணக்கில் ஆரும் பூமி யென்னலாமா? அங்ஙனம் பிரபல சுருதிகளிருப்பதாற் கூழலாமெனின், இதுவுங்கூறலாம். ஆதலினையமென்னை, எனவே. சுருதிசம்மதமிங்ஙனம் இருப்பதுபற்றிக் கூறலாமென்க. இதுகூடாதெனின், அதுவுங் கூடாது. அது சான்றோராட்சியாதலால் இங்ஙனங்கூறினரென்க. இன்னும், மருவுசுழுத்தியிற் காட்சி சுழுத்தியென்பதற்கு, பிரபல சுருதிகளில் மருவிய சீவசுழுத்தி. சிவசுழுத்தி பரசுழுத்தி யெனப்படுஞ் சுழுத்தி பேததங்களில் ஏழாம்பூமி காட்சி சுழுத்தியெனப் பொருள் கூறினுஞ் ஐயமின்றியமையும். இங்ஙனம் உரை கொள்ளில் ஏழாம் வேற்றுமையாதலால் லகரம் றகரமாகத்திரியலாம்.

(க-து) சுருதிசம்மதப்போல மகான்கள் சம்மதமும் இங்ஙன மிருத்தலின் துரியநிலந்தனில் துரியாதீதமெனல் பொருந்துமென்பது. இங்ஙனம் கவிநோக்கறியார் உரை வேறென்பர். இதனாற் கவி வேருகுமா. கவிக்கிலக்கணம் வேருகுமோ? இதெல்லாந் தோன்ருமை. (153)

## 154 - கவி (அ - கை)

[இந்த ஞானபூமிகளை அடைந்தோர் அவசர நாமங்களை இக்கவியிற்கூறுகின்ருர்.]

முன்னிலங்க ளேறியமூவரு மப்பி யாசிகளா முத்தரல்லர், [குஞ்
பின்னிலங்கள் வரன்வரியான் வரிட்டனெனுஞ் சீவன் முத்தர் பேதமா
சொன்னநடுப் பூமிவந்த ஞானிகளே பிரமவித்தாந் தூய முத்த
ரின்னமுமப் பூமிகளின் பெருமைதனை நீ யறிய யான் சொல்வேனே.

(இ-ள்) முன்னிலங்க ளேறிய மூவரு மப்பியாசிகளா முத்தரல்லர் (எ-து) — முதலிலுள்ள சுபேச்சை, விசாரணை, தனுமானசி யென்னு மூன்று பூமிகளில் ஏறிவந்த மூன்றுபேரும் அப்பியாசிகளன்றிச்சீவன் முத்தரல்லர்: — பின்னிலங்கள் வரன்வரியான் வரிட்டனெனுஞ் சீவன் முத்தர் பேதமாகும் (எ-து) — கடையிலுள்ள ஐந்தாநிலத்தேறியோன் வரன், ஆருநிலத்தேறியோன் வரியான், ஏழாநிலத்தேறியோன் வரிட்டனெனக் கூறப்படுவர் இதுதான் சீவன்முத்தர் பேதங்களாம்: — சொன்னநடுப்பூமிவந்த ஞானியே பிரமவித்தாந் தூயமுத்தன் (எ-து) — இப்போது சொல்லிவந்த பூமிகளில் நடுவாயுள்ள நாலா நிலத்தேறி வந்த ஞானியே, பிரமவித்தென்னும் பரிசுத்த சீவன் முத்தனெனப்

படுவோனும்: — இன்னமும் அப்பூமிகளின் பெருமைதனை நீயறிய யான் சொல்வேனே (எ-து) — இஃதன்றியும் இன்னுமந்த ஞானபூமிகளின் மகிமையை நீ செவ்விதாக உணர்ந்து கொள்ளுமாறு யான் சொல்லுவன் கேளுதி எ-று.

முன்னிலம், பின்னிலம், நடுப்பூமி என்றதனால், முன்னிலம்; சுபஇச்சை, விசாரணை, தனுமானசியெனவும், பின்னிலம்; சமசத்தி, பதார்த்தாபாவனை, துரியமெனவும், நடுநிலம்: சத்துவாபத்தி யெனவும் பெறும். முன்னிலங்கள் என்பதினானும், மூவருமென்பதினானும், பன்மைபற்றி முன்று நிலமெனக்கண்டாம். மூவருமென்பதிலும், பின்னிலங்களிலும் இல்லாமையால், ஒருமைபற்றி நடுப்பூமிவந்த ஞானியே பிரமவித்தாந் தூய முத்தனென்றும். வரன், வரியான், வரிட்டனெனு மூவரைப்பற்றிச் சீவன்முத்தரெனப் பலர்பாலாக்கினரன்றி; வரர், வரியார், வரிட்டரென ஒவ்வொன்றையும் பலர்பாலாக்கவில்லை. ஆதலின், பிரமவித்தாம் ஞானியே தூயமுத்தனென ஒருமையாக்கினும். முன்னிலங்களேறிய என்றதனால், பின்னிலங்களேறிய நடுப்பூமியேறி வந்தவென்றும். மூவரும் முத்தரல்லரென்றதனால், ஏனையர் முத்தராமென்றாயிற்று முதல் மூன்றுபூமியும் அப்பியாசமெனவே, ஏனைய பூமிகள் ஆரூடமென்றாயிற்று. இதனால் ஞானபூமிகள்போல் பூமி இன்றெனக்கண்டாம். (154)

155 - கவி. (அ கை)

[முதற்கண்ணுள்ள மூன்று பூமி செய்யுமகிமையும், முதற்பூமியின் அருமையும் இக்கவியிற் கூறுகின்றார்.]

நாலாம்பூ மியின்வருமுன் மூன்றுபூமியுமடைந்து நடந்து மாண்டோர்
மேலான பதமடைந்து பிறந்து மெல்ல மெல்லவந்து வீடுசேர்வார்
மாலான பவத்தில்விழார் முதற்பூமி கிடைப்பதுவே வருத்தமைந்தா
காலான முதற்பூமி கைவந்தான் முத்தியுங் கைவந்ததாமே.

(இ-ள்) நாலாம்பூமியில் வருமுன் மூன்றுபூமியுமடைந்து நடந்து மாண்டோர் (எ-து) — நாலாவதான ஞானபூமிக்கு வருமுன்னரே மூன்று பூமியுமடைந்து, அவற்றில் வழுவின்றி நடந்துவருகையிற் பிராரத்துவ நீக்கத்தால் இறந்தோர்: — மேலான்பதமடைந்து பிறந்து மெல்ல மெல்லவந்து வீடுசேர்வார் (எ-து) — பதவிகளில் மேலாயதைப் பலனுகவடைந்து, பந்தசென்மமல்லாத விடுதிசென்மமெடுத்துக் குழந்

தைபோல் மெல்லமெல்ல ஒவ்வொரு பூமியாகத் தவழ்ந்து கடந்து வந்து, ஐக்கிய முத்தியடைவார்கள்:—மாலானபவத்தில் விழார் முதற் பூமி கிடைப்பதுவே வருத்தமைந்தா (எ-து) ஞானபுத்திரா! இவர்கள் பிராந்தி ரூபமான பந்த சென்மத்தில் ஒருக்காலுஞ் செனியார், இங்ஙனமிருக்க, இதில் முதற்பூமி கிடைக்கிறதே வெகுவருத்தமாகுமே:—காலான முதற்பூமி கைவந்தால் முத்தியுங் கைவந்ததாமே (எ-து)—அஸ்தி பாரப்போல்வதாகிய முதற்பூமி ஒருவேளை கைகூடுமானல் அப்போதே முத்தியுங் கைகூடினதாம். எ-று.

நடவாநிற்கவென்பது; நடந்தென்றது, காலமயக்கம் அங்ஙனமாய ஞானனுஷ்டானஞ் செய்துகொண்டிருக்கும்போது தேகநழுவினும் இன்னும் அவ்வனுஷ்டானஞ் செய்து முடித்தற்கியைந்த தேகம் வரும். வரவே, அதனை முடித்து, அப்பால் செய்து முடித்தற்குரிய ஞானனுஷ்டானஞ் செய்யவேண்டிவரும். இம்முறையே முடிவுவரையிலுஞ் செய்துவரும்போது, இடையிடையே தேகநழுவும். நழுவினும் அனுஷ்டானம் விடாமற்செய்து முடித்தல், மரபும், அனுபவமுமாதலின் இங்ஙனங்கூறினரென்க. இதனை இவ்வுலகில் தானே காணலாம். இங்ஙனமாய சிந்தையிலார்க்கு எங்ஙனங் காணப்படும். ஆந்தந்த முயற்சியுடையோருக்கு, அதது தெரியுமன்றி மற்றெங்ஙனந்தெரியும் நழுவியசென்மம் மீண்டும் வருமாவெனின், அதுவராவேனுந் தானியற்றி வந்த கன்மபேத அவசரநிலைகள் பற்பல பேதமாதலின், அவ்வவற்றிற்கியைந்த பலனும், பற்பலபேத அவசரபேதங்களாயிருக்குமன்றோ? அப்பலனை அனுபவித்தாலன்றித் தீருமோ, தீராதுபற்றிச் சென்மம் வரவேண்டியதன்றோ? வராவிடின், உயிர்கள் அவரவடங்கற்கேதென்னை, அங்ஙனம் அவாவி விதிவிலக்குகட்கு அகலாது கன்மம் புரிவதற்கேதென்னை? வேண்டுவதின்றேல், உயிர்கள் ஒரேபிரகாசமாக அல்லாது பற்பலபேத அவசர போகங்களை அவ்வவற்றிற்குரிய தனுகரணபுவனங்களைச் சாதனக்கருவியாகக் கொண்டு எதிரில அனுபவிப்பதால், மறுத்தற்கேதென்னை? அவாவற்றஉயிர்களில்லை. அந்தவவா; பந்தம், விடுதியென்பவற்றுள் ஒன்றன்பாலதாயிருக்கும். பந்தவவா காமியத்தவத்தாலும், விடுதியவா; நிட்காமியத் தவத்தாலுங் காணப்படும். பந்தவவா; தனக்கயலைச் சுகித்தற்பாலது. விடுதியவர்; தன்னைத்தான் சுகித்தற்பாலது. இவ்விருவகையும் உலகிற்காண்கின்றேம். யாது தடுக்கினும், அனுபவத்தைத் தடுக்கலாமா? உயிர்கட்கு அனுபவம் ஒருதகையதாலின்றே, இன்ருதலால் ஒத்துக்கொள்ள வேண்

டும். இதனையுமறுக்கில், குதர்க்கத்திற் சேர்க்கப்படும். மனதின்றேல், வினவுதற்கிடமின்றி விடைதரவேண்டும். கூடாதேல், வாய்பொத்திக் கிடக்கை நன்குமதிப்பு. இதனைச் சுருக்கியுரைத்தாம். விரிக்கிற் பெருகும் இதுநிற்க.

(க-து) ஞானபூமிகளின் பெருமையும் அருமையுங் கூறியதென்பது. முதற் பூமிகைவந்தால் முத்தியுங் கைவந்ததாமேயென்றது, காலமயக்கம். இது; உரையளவையானும், காட்சியளவையானும் இவற்றிற்கிவை காரணமாகத் தெளிந்தமையின் தெளிவாயிற்று. மாலானபவம், பந்தகன்மத்துக்கியைந்த சென்மம். பிறந்தென்றது; இங்கே விடுதிகன்மத்துக்கியைந்தது. (155)

## 156 - கவி (அ - கை)

[இந்த ஞானபூமிகளில் ஒன்றையேனும் இரண்டையேனும் எய்தினோன் மிக்க இழிஞனேனும், சீவன்முத்தனே என்பதை இக்கவியிற் கூறுகின்றார்.]

இப்புவியி லிஞ்ஞான பூமியொன்றி லிரண்டிலடைந் திருந்தாரானு
லப்புருடர் மிலேச்சரா கிலுமுத்தர் குருபாதத் தாணை மெய்யே
தப்புரையென் றவர்கெடுவார் நடுவான மறைகளை நீ சங்கியாதே
செப்புமொழி வழிதிடமா யகம்பிரம மென்றிருந்து தெளிந்தி டாயே.

(இ-ள்) இப்புவியிலிஞ்ஞான பூமியொன்றி லிரண்டிலடைந் திருந்தாரானால் (எ-து) — இவ்வுலகின்கண் இந்த ஞானபூமிகள் ஏழெண்களுள் ஒன்றிலேனும் இரண்டிலேனுஞ் சேர்ந்திருப்பாராயின்: — அப்புருடர் மிலேச்சராகிலும் முத்தர் குருபாதத்தாணை மெய்யே (எ-து) — அந்தப்புருடர்கள் மிக்க இழிஞராயினும் இச் சீவன்முத்தர்களே இதில் ஐயஞ்சற்றுங் கொள்ளற்க; இது குருபாதத் தாணைப்படி சத்தியமே: — தப்புரையென்றவர்கெடுவார் நடுவானமறைகளை நீ சங்கியாதே (எ-து) — இவ்வளவு ஆணையிட்டும் இது தப்பார்த்தமென்று இதனைச் சற்று மேலார் இனி யென்றும் மீளாது கெடுவர். ஞானஞ் ஞானங்களுக்கு நடுநிலையாயுள்ள வேதவாக்கியங்களைப்பற்றி நீ விபரீதமாகச் சங்கை செய்யாதே: — செப்புமொழி வழி திடமாய் அகம் பிரமமென்றிருந்து தெளிந்திடாயே (எ-து) — இதுவரையுங் கூறிவந்த உபதேசமொழிவழியே உறுதியாக நின்று அகம்பிரமமெனச் சிந்தித்திருந்து தெளிதி. எ-று.

பொதுப்பட ஒன்றிலிரண்டிலெனக் கூறினும்,, முதற்பூமியும் இரண்டாம் பூமியுமெனக்கொள்க. மிலேச்சர், விதிமார்க்கத்துட் சற்று மடங்கார் நடுவானமறைகள், மத்தியகத நிலவடிவாயுள்ள வேதங்கள் அகம்பிரமம், யானெனல் யாதோ அதுபிரமம். யானெனல் பூர்வ பட்சமாதற்கு இடமின்றிக்கண்டு தெளிந்துழியன்றிப் பிரம்மெனல் பொருந்தாதென்பார், இருந்து தெளிந்திடாயே யென்றார். எனவே, சொல்லாலும், நினைவாலும், யான்பிரமமெனக்கோடற்க என்றாயிற்று. ஆகவே, எது யானெனலோ அதனையுள்ள வாறு கண்டாற்போலும். அதுவே பிரமநிலையதாகும். நீ கொள்வதில் விபரீதத்ததாகும், அப்போது நீ கெடுவை யெனக்கண்டாம்.

(க-து) இந்த ஞானபூமி வேதசம்மதமாதலின் இதின் வழித்தாகவே சிந்தித்து நிற்றி யென்பது. மிலேச்சராகிலுமென்பதிலும்மை, இழிவுசிறப்பு. (156)

### 157 கவி (அ—கை)

இழிஞனுக்கும் முத்தியெனில் துறவறங்கொள்வானேன் என்பதைப்பற்றி இக்கவியிற் கூறுகின்றார்.]

பொல்லாத மிலேச்சருக்கும் விதேகமுத்தி தருஞான பூமியென்று
நெல்லாகி முளைக்குமெனைத் தண்டுலமாக் கியகுருவே நீர்சொன்னீரே
இல்லாளுங் குடும்பம்விட்டுச் சந்நியா சம்புகுந்தே காங்கி யானே
ரல்லாமன் முத்திபெறு ரென்றுசிலர் சொலுமயக்க மகற்று வீரே.

(இ-ள்) பொல்லாதமிலேச்சருக்கும் விதேகமுத்திதருஞான பூமியென்று, நெல்லாகிமுளைக்குமெனைத் தண்டுலமாக்கிய குருவே நீர் சொன்னீரே (எ-து)—நெல்போன்று முளைக்கின்ற அடியேனை அரிசி போன்று பதமாக்கிய சற்குருவே! கொடியபாதகருக்கும் ஞானபூமியானது; விதேகமுத்தியைத் தருமென்று தேவரீர் சொன்னீரே அதுவே சரியென்று கொள்ளின்:—இல்லாளுங் குடும்பம்விட்டுச் சந்நியா சம்புகுந்தே காங்கியானேரல்லாமல் (எ-து) — மனைவியோடுகூடி ஆளுகின்ற குடும்பத்தைப் பற்றறவிட்டுச் சந்நியாச ஆசிரமத்திற்கு, ஏகாங்கியானேரெவரோ அவரேயல்லாமல்:—முத்திபெறுரென்று சிலர் சொலுமயக்க மகற்றுவீரே (எ-து)—ஏனையோர் எவ்வண்ணத்தராயினும் முத்தியடையார்களென்று சிலர் சொல்லிக்கொள்ளுகின்ற பெரிய மயக்கத்தை நீக்கியருளவேண்டும். எ-று.

இங்கே நெல்லென்பது, பதரோடு கூடிய அரிசியை. எனவே, முளைத்தற்கு இடம்பெறுமாறுபோன்று பிறவிக்கு இடம் பெறுமா றென்றுயிற்று. இல்லாளோடு கூடியாளுங் குடும்பமெனவே. தாய் தந்தை மக்கள் சகோதரர் பாட்டன் பேரன் முதலியோரைப்பெற்றும். மயக்கம், தெளிவின்மை. அதாவது; எங்கே குடும்பக் கலக்கமின்றே; அங்கே ஞானம் பலிக்குமன்றி யேனையிடத்து எங்ஙனம் பலிக்குமென் பார் சிலர். எவ்வருணத்தார் எத்திறத்தாராயினும் பூர்வசமஸ்காரத் தாற் பரிபாகிகளாயின் பலிக்குமென்பார் சிலர். இவற்றுள் யாதிலுந் துணிவுறுமை. மிலேச்சரென்றது பொல்லாதவென்றடை கொடுத்த தினல், கொலைபாதகரென்றுயிற்று. சீவன்முத்திதருமென்றது விதேக முத்திதருமென்றது, ஞானபூமியின் மகிமை தோன்றவென்க.

(க ரு) துணிபுதோன்ற வினவியதென்பது. (157)

## 158 - கவி (அ—கை)

[அதற்குவிடை கூறுவான் வேண்டித் துறவு நால்வகையென அவற்றினுபயங்களை இக்கவியிற் கூறுகின்றார்.]

சிட்டர்புகழ் மகனே நீ சங்கித்த சங்கைநன்று தெரியக் கேளாய்
கட்டழியுந் துறவுநால் வகையாகு மவைகளுக்கங்காகும் பேர்கள்
பட்டதுயர் கெடுங்குடீசகம்பகூதகம்ஹம்சம் பரமஹம்சம்
விட்டகலுந் துறவுக்கு விராகங்காரணமன்றி வேடமன்றே.

(இ-ள்) சிட்டர்புகழ் மகனேநீசங்கித்தசங்கை நன்று தெரியக் கேளாய் (எ-து)—சற்சனரால்மதிக்கப்பெற்ற ஞானபுத்திரா! நீ கேட்ட கேள்வி மிக்ச் சிறப்புடையது, அதுதெரியக்கூறுதும் அதனைக்கேளுதி —கட்டழியுந் துறவு நால் வகையாகும் அவைகளுக்கங்காகும் பேர் கள் (எ-து)—பந்தக்கட்டழியத்தக்க சந்நியாசத்துவம் நான்குவகை யாயிருக்கும், அவைகளுக்காங்காங்குவரும் பெயர்களோ,—பட்டது யர் கெடுங்குடீசகம் பகூதகம் ஹம்சம் பரமஹம்சம் (எ-து)—பிறவி தோறும் பட்டதுயர் நசிக்கத்தக்க குடீசகம், பகூதகம், ஹம்சம், பரமஹம்சம், என நான்குவகையாகும்:—விட்டகலுந்துறவுக்கு விராகங் காரணமன்றிவேடமன்றே (எ-து)—பந்தத்தைவிட்டு நீங்கத்தக்க சந் நியாசத்துக்கு நிராசை காரணமே யல்லாமல் வேஷங் காரணமல்லவே. எ-று.

ஆசை நீக்கத்துக்குச் சந்நியாசம்வேடம் அடையாளம். அது நீங்காவிடத்து வேடத்தாற் பயனென்னை. பெருமைக்கும், உணவுக்கு

மன்றே. மிகக்கற்றுச் சந்நியாசத்தை நிலையுறுத்துவதாற் பயனென்னை. இன்றென்பது தோன்றத் துறவுக்கு விராகங்காரணமன்றி வேடங் காரணமன்றே யென்றார்.

(க-து) சந்நியாசம் நான்குவகைக்கும் பெயர் இனையவென் பது. இங்ஙனங்கூறியது, விராகத்தை நோக்கற்கு. விராகமில்லார் வேடம் பசையற்றதென்க. (159)

## 159 - கவி (அ - கை)

[அந்த விராகம் மூன்று வகையாமென இக்கவியிற் கூறுகின்றார்.]

மந்தமுந்தீ விரமுந்தீ விரதரமு மெனமூன்று வகைவி ராகம்
வெந்துயரம் வரும்பொழுது குடும்பத்தை வெறுத்துவரும் விராகமந்த
மிந்தவுட லளவுமனை தனம்வேண்டா மெனவிடறீ விரமென் பார்க
ளந்தணர்நூன் மித்தையென விடலதுதீ விரதரமா மறிந்திடாயே.

(இ-ள்) மந்தமுந் தீவிரமுந் தீவிரதரமுமென மூன்றுவகை விராகம் (எ-து)—மந்தம், தீவிரம், தீவிரதரம் எனவிராகம் மூன்று வகைப்படும்:—வெந்துயரம் வரும் பொழுது குடும்பத்தை வெறுத்து வரும் விராகமந்தம் (எ-து) - மிகக்கொடிய துயரநேரிட்டபோது குடும் பத்தை வெறுத்துவிடற்கெழும் விராகம் மந்தமெனவும்: - இந்தவுட லளவுமனைதனம் வேண்டாமென விடறீவிரமென்பார்கள் (எ-து)— இத்தேகமுள்ளளவு மனைவிதனமாதிகள் வேண்டாமென்றவற்றைவிட்ட கலல் தீவிரமெனவும்:—அந்தணர்நூல் மித்தையென விடலது தீவிர தரமா மறிந்திடாயே (எ-து) — பிராமணர்கள் அனுட்டிக்கத்தக்க நூலாகிய கன்மகாண்டத்தை மித்தையெனக் கையறவிட்டுவிடும் நிலையாதோ அதுதீவிரதரமெனவுமாம். இதனை நீ தெரிந்துகொள் ளுதி. எ-று.

குடும்பத்தில் தோட திருஷ்டியெழலாகிய விராகம், மந்தம். இது காரணமாக மனைவியாதிகளை ஒருங்கே விட்டகலலாகிய விரா கம், தீவிரம். ஒருங்கேவிடல் காரணமாக ஞானகாண்டத்தை யனுட் டிக்க வேண்டிக் கன்மகாண்டத்தில் எழுந் தோடதிருஷ்டியாகிய விராகம், தீவிரதரம் என்க. வெறுத்து வரும் விராகமென்பது, வெறுத்துக்கொண்டுவரும் விராகத்தை வெந்துயரம் வரும் பொழு தெனவே, வராதபோது விராகந் தோன்றற்கிடமின்றாயிற்று. இட மின்றாகவே, மந்தம், தீவிரம் தீவிரதரமென்ற பெயர் வருதற்கிட மென்னை. இன்றாகவே, அறத்துளொன்றாகிய துறவறமென்றதே

இல்லை. இல்லையாகவே, ஞானநூலென்பது எற்றிற் கெனப்பெறும்.

(க-து) நிராசையேதுறவென்பது. வேடமுங் அஃதுண்டாயிற் சிறக்கும்.

160 - கவி (அ—கை)

[அம்மூன்று வகையில் மந்தமுந் தீவிரமுமிலையவென இக்கவியிற் கூறுகின்றார்.]

பாவிமந்த விராகத்திற் சந்நியாசங்களொன்றும் பலித்தி டாதே
தீவிரத்திற் குடீசகமும் பகூதகமு மென்றிரண்டு திறங்க ளுண்டாந்
தாவிநடந் திடத்திடமி லாதவர்க்குக் குடீசக முஞ் சகங்க ளெங்கு [ர்.
மேவிநடந் திடத்திடமுள்ளவர்க்கு பகூதகமுமென விதித்தார்மேலோ

(இ-ள்) பாவிமந்தவிராகத்திற் சந்நியாசங்க ளொன்றும் பலித்திடாதே (எ-து) கொடிய மந்த விராகத்தைச் சார்ந்த சந்நியாச நிலைகளில் ஒன்றேனும் பலிக்கமாட்டாது:—தீவிரத்திற் குடீசகமும் பகூதகமு மென்றிரண்டு திறங்களுண்டாம் (எ-து) - தீவிர விராகத்தில் குடீசகம், பகூதகமென இரண்டு பாகுபாடுகளுள:—தாவிநடந் திடத் திடமிலாதவர்க்குக் குடீசகமும் (எ-து)—அவற்றுள், கொஞ்சதூரந்தாவி நடக்க வலியில்லாதவர்க்குக் குடீசகமெனவும்:—சகங்களெங்கு மேவிநடந்திடத் திடமுள்ளவர்க்குப் பகூதகமுமென விதித்தார் மேலோர் (எ-து) உலகில் எத்தேசத்தின் கண்ணுஞ் சென்று, அப்பாலப்பால் தாவிநடக்க வலியுள்ளவர்க்குப் பகூதகமெனவும் பெயர் விதித்தனர் அறிவிற்சிறந்த சத்துக்கள். எ-று.

மந்தம்; விராகம் போற் சொல்லாலும், அபிநயிப்பாலுங் காண்டலே யன்றி வேறின்மையின் அதனைக்காண்பார் அவரை மெய்யென நம்பி விடுவர், அதனால் அவர் கரவிற் போக நுகர்தற் திடமுண்டாம், இது பற்றிப் பாவி மந்தவிராகத்திற் சந்நியாசங்களொன்றும் பலித்திடாதென்றார். மீண்டும் அவ்வூர்களிற் செல்லா வண்ணந் தினமொன்றிற்கு ஏழூர் சுற்றலென்னும் விதியிருப்பதாற் சகங்களெங்கு மேவிநடந்திடத் திடமுள்ளவர்க்குப் பகூதகமெனவும் அங்ஙன நடக்கத் திடமற்றவர்க்குக் குடீசகமெனவும் பெயர்வந்தமை காண்க. இங்ஙனஞ் சுற்றல் பற்றறுகாமைக்கு.

(க-து) மந்தவிராக சந்நியாசங்கள் பயனின்றெனவும், தீவிர விராகப்பாகு பாடாகிய இரண்டுவித சந்நியாசங்களின் இனையவெள வுங் கூறியதென்பது.

## 161 - கவி. (அ கை)

[தீவிரதர விராகப் பாகுபாடாகிய இரண்டுவித சந்நியாச நிலைகள் இனையவென இக்கவியிற் கூறுகின்றார்.]

இருவகைதீ விரதரத்து மம்சனென்றும் பரமாம்ச னென்றுஞ் சொல்
வருமம்ச னுக்குமுத்தி சத்தியலோ கத்தன்றி வாரா தென்பார் [வார்
பரமாம்ச னுக்குமுத்தி யிவ்வுலகின் ஞானத்தாற் பலிக்கு மென்பார்
திரமருவும் பரமாம்சன் றானுமிரு வகையாகுஞ் செப்பக் கேளாய்

(இ-ள்) இருவகை தீவிரதரத்துமம்சனென்றும் பரமாம்சனென்றுஞ் சொல்வார் (எ-து)—தீவிரதரம் இருவகைப்படும். அங்ஙனமாய தீவிரதரத்தும் அவ்விருவகையையும், அம்சனென்றும் பரமாம்சனென்றுஞ் சத்துக்கள் சொல்வார்கள்:—வருமம்சனுக்குமுத்தி சத்தியலோகத்தன்றி வாராதென்பார் (எ-து)—சந்நியாசவிதி வழுவாது நடந்து வரும் அம்ச சந்நியாசிக்கு மோட்சமானது பிரமன் வசிக்குஞ் சத்தியலோகத்தெய்தினாலன்றி இம்மையில் வராதென்று சொல்வார்கள்:—பரமாம்சனுக்குமுத்தியிவ்வுலகில் ஞானத்தாற்பலிக்குமென்பார் (எ-து)—பரமாம்சனுக்கு மோட்சமானது, இம்மையிற்றானே ஞானத்தாற் கிடைக்குமென்று சொல்வார்கள்:—திரமருவும் பரமாம்சன்றானும் இருவகையாகுஞ் செப்பக்கேளாய் (எ-து)—நிலைபெற்ற பரமாம்ச சந்நியாசனும் இருவகைப்படுவன், அவற்றையாஞ் சொல்லக்கேளுதி. எ-று.

வருமென்பதனால், சந்நியாச நூல்களின் விதி வழுவாது நடந்து வரும் என்றாம்.

(க-து) தீவிரதரத்தின் இருவகை சந்நியாச நிலைகள் இனையவென்பது (161)

## 162 - கவி. (அ—கை)

[பரமாம்சம் இருவகையாமென்பதை இக்கவியிற் கூறுகின்றார்.]

சிஞ்ஞாசு ஞானவா னென்றிரண்டு பேர்களவ ரிற்சிஞ் ஞாசு [ன்
மெய்ஞ்ஞான பூமியின்முன் மூன்றுபூமி யுண்டாக்கும் விவேகியானோ

சுஞ்ஞான வானென்போன் சீவன்முத்தி யடைந்திருக்குந் தூயமே
னஞ்ஞான மகலுமந்தச் சிஞ்ஞாசு மிருவகையாமதுவுங்கேளாய். [லோ

(இ-ள்) சிஞ்ஞாசு ஞானவானென்றிரண்டு பேர்களவரில் (எ-து) — மேற்பரமஹம்ச சந்நியாச மிருவகை யாவனென்றால் அவை, சிஞ்ஞாசெனவும், சுஞ்ஞானவானெனவும் பெயரன. அப்பெயரையுடைய சந்நியாசிகள் இருவரில்: — சிஞ்ஞாசு மெய்ஞ்ஞானபூமியின் முன்மூன்றுபூமி யுண்டாக்கும் விவேகியானோன் (எ-து) - சிஞ்ஞாசென்போன் மெய்ஞ்ஞானபூமியேழனுள், முதலிலுள்ள மூன்றுபூமி யுண்டாக்கிற விவேக வடிவானவன்: — சுஞ்ஞான வானென்போன் சீவன்முத்தியடைந்திருக்குந் தூயமேலோன் (எ-து) - சுஞ்ஞானவானென்பவன் சீவன் முத்தி நிலையை அடைந்த பரிசுத்த நெறியிற் சிறந்தவன்: — அஞ்ஞானமகலுமந்தச்சிஞ்ஞாசு மிருவகையா மதுவுங் கேளாய் (எ-து) — அஞ்ஞானம் நீங்கத்தக்க அந்தச் சிஞ்ஞாசென்பேரனும் இருவகையாவன், அதனை யும் யாங் கூறக்கேளுதி. எ-று.

சுஞ்ஞானவானென்பது, ஞானவானென்றிருத்தல் முதற்குறை. சிஞ்ஞாசுமென்பதிலும்மை, எதிரது தழீஇய எச்சவும்மை.

(க-து) பரமஹம்சன் இருவகை சந்நியாசநிலை இனையவென்பது (162)

## 163 - கவி. (அ—கை)

[சிஞ்ஞாசுவின் இருவகை நிலையும் இனையவென இக்கவியிற் கூறுகின்றார்.]

பந்தமனை துறந்துசில ரதிதிகளா யிருந்தடைவர் பரம ஞானம்
மந்தணர்மன் னவர்வணிகர் சூத்திரரா யிருந்துசில ரடைவர் ஞான
மிந்தவகை சாத்திரத்து முலகத்து நடப்பதுங் கண் டிருந்து மைந்தா
சிந்தனையின்மயக்கமென்ன சுருதியுத்தியனுபவத்தாற்றெளிந் திடாயே.

(இ-ள்) பந்தமனை துறந்து சிலரதிதிகளா யிருந்தடைவர் பரம ஞானம் (எ-து) — சிலர் பந்தத்துக்கிடமாயுள்ள மனைவியாதிகளைத் துறந்துவிட்டுச் சந்நியாசிகளாயிருந்து பிரமஞானத்தை யடைவார்கள்: — அந்தணர் மன்னவர் வணிகர் சூத்திரராயிருந்து சிலரடைவர் ஞானம் (எ-து) - சிலர்பிராமணராயும், அரசராயும், வைசியராயும், சூத்திரராயுமிருந்து உண்மை ஞானத்தை அடைவர்கள்: — இந்தவகை சாத்திரத்து முலகத்து நடப்பதுங்கண் டிருந்துமைந்தா (எ-து)-சற்புத்திரா! இவ்வண்ணஞ் சாஸ்திரங்களிற் சொல்லியிருப்பதையும், உலகத்

திற் சாதாரணமா நடந்துவருவதையும் பிரத்தியட்சமாகக் கண்டிருந்தும்:—சிந்தனையின் மயக்கமென்ன சுருதியுத்தி யனுபவத்தாற்றெளிந்திடாயே (எ-து)-மனதில் இன்னும் ஐயமென்னையுளது. உளதேல், அதனையும் இவ்வண்ணஞ் சுருதி, யுத்தி, அனுபவத்தால் விசாரித்துத் தெளிதி. எ-று.

சாத்திரம், சுருதிப் பிரமாணம். உலகத்து நடப்பது, பிரத்தியட்சப் பிரமாணம். சிஞ்ஞாசென்பவன் இருவகைநிலையாவது; இல்லறம் துறவற மென்பன. அவை; முதலடியால் துறவறமும், இரண்டாமடியால் இல்லறமுங் காணப்படும்.

(க-து) சிஞ்ஞாசுவினிலை இல்லறந் துறவறமாமென்பது. இதனால் இல்லறத்திலேனுந் துறவறத்திலேனும் ஞானமுடையலா மென்த்யிற்று. இவ்விரண்டறத்தும் பலரென்னது சிலரென்றது, விராகருதைக் காட்டற்கென்க. (163)

## 164 - கவி (அ—கை)

[முன்னர் வித்தியானந்தத்தைப்பற்றி நூற்றறுபத்துநாலாங் கவி முதல் நூற்றெழுபத்தேழாங் கவிவரையானுஞ் சொல்லுது மென்றனமே அதனை இக்கவிமுதல் பதினாலு கவிவரையானும் விளக்குவான் வேண்டி. அகம்பிரமமென்பதில்; அகமென்பது, நான். பிரமமென்பது, சிவம். இவ்விருவகையும் ஞானத்தையன்றி இன்மையின், நானேசிவமெனலை இக்கவியிற் கூறுகின்றூர் ]

பிறந்ததுண் டானு லன்றே பிறகுசா வதுதா னுண்டாம்
பிறந்ததே யில்லை யென்னும் பிரமமா வதுவு நானே
பிறந்தது நானன் றுகிற் பிரமமென் றந்த நானே
பிறந்தது மிறந்த தந்தப் பிரமமா நானே நானே.

(இ-ள்) பிறந்ததுண்டானலன்றே பிறகு சாவதுதானுண்டாம் (எ-து)—நானென்னும்பொருள் யாதோ அதுபிறந்தது உண்டாயிருக்குமானலல்லவா பிறகு சாவதென்பதும் உண்டாயிருக்கலாம். நானெனலைப்பற்றி இதுகாறுங் கூறிவந்ததில் இல்லாமையின்:—பிறந்ததே இல்லையென்னும் பிரமமாவதுவுநானே (எ-து) — என்னைப்போலப் பிறந்ததே இல்லையென்னத்தக்க பிரமமென்பதும் நனேயாம்:—பிறந்தது நானன்றுகிற் பிரம மென்றந்த நானே (எ-து) — பிறந்ததென்

பது நானல்லனுயின் நானே பிரமமென்றதும் அந்த நான்தான்:—பிறந்ததும் இறந்ததந்தப்பிரமமா நானே நானே (எ-து)—ஆயின், பிறந்ததுபோலும் இறந்ததுபோலுங் காணப்படுவதும் அந்தப்பிரமமாகிய நானே, நானலது வேறுளதோ, இல்லையே. (எ-று)

நானேயென்பதில் ஏகாரமீற்றசை. நானென்னும்பொருள் பிறந்தாலன்றோ சாகலாம், இல்லையே, இதுபோலப் பிரமமென்னும் பொருளும் பிறந்தாலன்றோ சாகலாம், இல்லையே. பொருளொன்று சொல்லிரண்டு அப்போது ஒரு பொருள்குறித்த பலசொல். ஆகவே, எவ்வாறு இரண்டென்னலாம்? அந்த ஒரு பொருளாவது ஞானம். ஆயின், சிற்றறிவு பேரறிவு என்னற்கிடைபவானேன்? உபாதிகுணங்களையே அறிவாகக் கோடலினாலும், அவ்வுபாதிகுணங்கள் சமஷ்டி வியஷ்டியாகக் காண்டலானும், இவற்றைப்பற்றிய விசாரஞ் சற்றுமில்லாததினானும், பிறர்சொல்லினுங் கல்விச்செருக்கால் எனக்குத் தெரியாதாவென்னும் அகங்குன்றாமையானும். இஃது என்று மாதலினானுமென்க. சமஷ்டி வியஷ்டியாகக் காணப்பட்டுள்ள உபாதிகுணங்கள் ஞானத்தின் பிரதிபலனமேயன்றி ஞானமல்ல ஆதலின், ஞானத்தைத்தவிர உயிர் பரமிரண்டில்லை. இதற்கு உதாரணம். "விண்ணுருவமீசனென்பார் வேற்றுருவஞ்சீவனென்பார் கண்ணுமிரவியும் போற்காணென்பார், திண்ணமதாய், அத்துவிதமாகாது அவை இரண்டும் ஆகாத, சித்துருவந்தானேசிவம்'' என்பதினாற்காண்க. சித்தெனலும், ஞானமெனலும் ஒரு பொருட்கிளவி. நானெனக்கொள்ளாத பரமும் உயிருமில்லை, அங்ஙனங் கொள்வது உபாதிகுணமன்று, இவ்விரண்டும் ஓர் முதலன்று, அந்தமுதல்; அறிவையன்றியில்லை. ஆதலின், நானே பிரமமெனப்படும். இவ்விருவகை நானெனல்; அறிவாதலால், நானேபிரமம், பிரமமே நானெனற்கு இழுக்கென்னை? இன்னும் பிறப்பிறப்பு, உபாதிகட்கன்றி அறிவுக்கெனச் சுருதி யுத்தியனுபவம் யாதானுமுளதோ? இல்லையே இதனுமுணர்க "உடலுதித்தல்யோனி உயிருதித்தல்யோனி உயிருதித்தலெங்கே, உடலுயிர் சித்துசடமொன்றோ." அன்றேயென்பதினானுங் காண்க. இவற்றையும் உணராதுமறுத்தல் என்னுணர்வு. அந்தர்முகநோக்கிற்கு உடன்படாதார்க்கு என்சொல்லினுமென்பயன். பிரமமாவது நானேயென்றது, பிரமமாவதுவுமென உம்மைகொடுத்ததினாலன்றோ, நானென்னும்பொருள் பிறந்தாலன்றோ இறக்கலாம், என உரைகொண்டாம். இங்ஙனமாதலைப்பற்றிப் பிறந்ததே இல்லையென்

னும் பிரமமாவதுவு நானேயெனவும். அதுபோலப் பிறந்ததும் நானென்னும் பொருளன்றுமையின் நானே பிரமமெனக்கொண்டதும் அந்த நானே யென்பது தோன்றப் பிறந்தது நானன்றாகிற் பிரம மென்றந்த நானேயெனவும், இறந்ததுமென்ற உம்மைதொக்கது. பிறந்ததுபோலவும் இறந்ததுபோலவுங் காணப்படுதல் நானுகையால், பிறந்ததுமிறந்ததந்தப் பிரமமா நானேநானெனவுங் கூறினர். பிம்ம நானே நானேயென்றது. பிரமமாநானேயென்றது: நானேபிரமம், பிரமமே நானென்னும் ஐக்கியங்காட்டற்கென்க. அறிவே பரமும் உயிருமெனற்குதாரணம். வேதாந்தசூடாமணி, "இகலிலாவறிவு மாத்திரமாகிநின்ற விலக்கியமாம் பிரமகூடஸ்தவுயிர்கொள்ளில், புகரில்லாவது விதுவே யிதுவதுவேயென்னப் பொருந்துதாதான்மியம் வந்துறுமெனவே அறிக." என்பதினுற்காண்க. உற்றுக்காணுதுழி மதி மேகங்களி னுழைந்து நுழைந்து செல்வதுபோலவும், கண்டுழி அங்ஙனஞ்செல்லாது நிலையுறுவதுபோலவுங் காணப்படுமாறுபோன்று, தெளியாதுழி, ஆன்மாவாகிய நானெனல் உடல்தோறு நுழைந்து நுழைந்து பிறப்பதுபோலவும், இறப்பதுபோலவும், தெளிந்துழி அங்ஙனஞ்செல்லாது நிலையுறுவதுபோலவுங் காண்பதென்னை? ஆதலின் இங்ஙனங் கூறினரென்க.

(க-து) இது வித்தையானந்தம் ஆதலினானும், இந்தவித்தையைத்தவிர உயிர்பரமின்றாதலினானும் ஏகமென்றாரெனபது. வித்தியானந்தமென்றாயது மரூஉ. அனைத்து நானுவதுமன்றி யெனப்பொருடரலின் பிரமமாவதுவும் என்ற உம்மை இறந்ததுதழீ இயவெச்சவும்மை. பிரமமாநானேயென்பது உருவகம். பிரமமாகிய நானேயன்றி நானென்பது வேறின்றெனத்தோன்ற ஈற்றில் நானேயென்றார். ஆறலினிது பொருந்தும். (164)

### 165 - கவி (அ - கை)

[ஞானத்தைத்தவிரப் பிரமமில்லாவாறுபோல ஞானத்தையன்றி ஆன்மா இன்றென இக்கவியிற் கூறுகின்றார்.]

நானென்ற பிரம மான நானேநா னறியே னென்று
ஞனென்ப தேது பின்னை நம்முடை புந்தி யென்னிற்
றானது மயக்கந் தன்னிற் சாகுமே சாவா தாகி
ஞனென நிறைந்தி ருந்த ஞானமா நானே நானே.

(இ-ள்) நானென்றபிரமமான நானே நானறியே னென்றால் (எ-து)—நானெனத்தக்க பிரமமாகிய யானே என்னை யான் அறிகில னென்று வருமாயின்:—நானென்பதேது பின்னை நம்முடை புந்தியென் னில் (எ-து)-அப்போது நானென்பதியாது, அத்தற்த உத்தரமாகப் பின்னர் நமது புத்தியெனக் கூறின்:—தானது மயக்கந்தன்னிற் சாகு மே சாவாதாகில் (எ-து)—தானே அந்தப்பிராந்தியாதலால் தன்னிடத் திலேயே நசிக்குமே, நசியாவிடில்:-நானென நிறைந்திருந்த ஞான மா நானே நானே (எ-து)—அப்போது நானாக வெங்கணும் ஒரு படித்தா வியாபித்து நின்ற ஞானமாகி நானெனலே நாணக்கூடியும். எ-று.

நானேயென்பதில் ஏகாரமீற்றசை நானாகியபிரமம், அந்தப் பிரமமாகிய நானென அபேதங் காட்டவந்தவராதலின், நானென்ற பிரமமான நானேயென்வும், அங்ஙனம் அபேதமான நானே என்னை யானறிகிலனென்பார் நானே நானறியேனெனவும், என்னை யானறி கிலனென்பது மூடம். அது தன்னைவிட வேறன்றாதலின் தன்னில் நசிக்குமேயென்பார், மயக்கந்தன்னிற் சாகுமே யெனவும், மயக்கம் விகற்பமாதலால் தானாகாது; எங்ஙனந் தன்னில் சாகுமென்பார், சாகாதாகிலெனவும், நசியாதிருத்தற்கு வேறிடமின்மையின் நசிக்கு மென்பது தோன்ற நானென நிறைந்திருந்த ஞானமெனவும், அந்த ஞானத்தைத்தவிர நானெனல் இன்மையின், ஞானமா நானே நானெனவுங் கூறினார்.

(க-து) ஞானமே பிரமமும் நானுமாதலின், ஏகமாயிற்றென் பது. அறிவையன்றிப் பிரமமெனலும், கூடஸ்தனெனலுஞ் சொன் மாத்திரமும், தோற்றன் மாத்திரமுமாதலாற் கற்பிதமெனக் குறிக்க இங்ஙனங் கூறினாரென்க. அறிவையன்றி உயிர் பரமெனல் இல்லை யென எங்கே விளங்கிற்றோ அங்கே அதுவே யானந்தமாதலன்றி வேறின்மையின் வித்தையானந்தமென தானே அமையப்பெற்றும் இஃது அனுபவமொழி. நம்முடையென்பது, கடைக்குறை. நானென்ற பிரமம், பிரமமான நான், என்னுமிரண்டும், இருபெயரொட்டுப் பண்புத்தொகையெனில், உருபுவிரிந்திருப்பதாற் கூடாது. உருவக மெனினமையும். உபமானவுபமேய பேதஞ் சற்றுமின்மையின். என்னை, "உவ்வமையும் பொருளும் வேற்றுமையொழி வித்தொன்றென மாட்டினஃதுருவகமாகும்" என்பதனாற்காண்க. (165)

166 - கவி (அ - கை)

[அறிவே ஆன்மாவாதலின் அவ்வான்மாவே பரிபூரணமும், ஆனந்தமுமாமெனலை இக்கவியிற் கூறுகின்றார்.]

நிறைந்தவா றெந்த வாறு நிலைதிரிந் திலனென் றுயே
லறிந்ததாஞ் சுழுத்தி தன்னி லாநந்த மதுவே யாகுங்
குறைந்ததுக் கானந்தந்தான் குவலயந் தன்னி லில்லை
நிறைந்ததே யிந்த வாத்மா நிதானமிவ் வறிவு தானே

(இ-ள்) நிறைந்தவாறெந்தவாறு நிலைதெரிந்திலனென்றுயேல் (எ-து) - யான் பரிபூரணமாயவாறெவ்வாறு, அந்நிலையை யென்பாற் கண்டிலனெனக் கூறுவையாயின்: - அறிந்ததாஞ் சுழுத்தி தன்னில் ஆனந்தமதுவேயாகும். (எ-து) - அறிந்து கொண்டிருப்பதாகிய நனவிற் சுழுத்தியிலிருப்பது ஆனந்தமாதலின், அவ்வானந்தமே பரிபூரணமாம்:-குறைந்ததுக்கானந் தந்தான் குவலயந்தன்னிலில்லை (எ-து) - ஆயின் ஏகதேசமாகிய சுகதுக்கமோ, நீ பூமியிலிருந்தும் அஃது உனக்கில்லை: - நிறைந்ததேயிந்தவான்மா நிதான மிவ்வறிவுதானே (எ-து) - ஆதலாலிவ்வான்மாவே பரிபூரணம், அப்பரிபூரணமே இந்த அறிவு. எ-று.

நிதானம், சாய்வின்மை. எனவே, குறைவின்மையாயிற்று. ஆகவே, பரிபூரணமெனக்கொண்டாம் சுழுத்தியென்னுது அறிந்தாஞ்சுழுத்தியென்றமையின், அறிந்து கொண்டிருப்பதாகிய சுழுத்தியென்றாயிற்று. ஆகவே, மூடசுழுத்தியன்றென விலக்கி நனவிற்சுழுத்தியெனப்பெற்றும். அந்த நனவிற் சுழுத்தி பரிபூரணானந்தம் ஆதலின், ஆனந்தம் அதுவேயாகுமெனவும், இந்நிலையை யுடையையாதலின் இவ்வுலகிலிருந்தும் உனக்கின்பதுன்பமில்லை மற்றவர்களுக்கென்பார், குறைந்ததுக்கானந்தந்தான் குவலயந்தன்னி லில்லையெனவும், விசாரித்துத்தெளியினுந் தெளியாவிடினும் ஆன்மா இயல்பாகவே பரிபூரணானந்தமே யென்பார், நிறைந்ததே இந்த ஆன்மாவெனவும், அங்ஙனமாய ஆன்மாவும், குறைவின்றி நிறைந்துள்ள இந்தச் சைதன்யமேயென்பார், நிதானமிவ்வறிவுதானே யெனவுங் கூறிய வாறுகாண்க. சிலபிரதிகள், குறைந்ததற் கானந்தந்தானென்றிருக்கின்றன.

(க-து) ஆன்மா வித்தையானந்தமே யென்றாரென்பது. வித்தையானந்தத்தினிலைமை இனையதேயென்க. முன்கவியில் பிரமமா

நானென்றது, பிரமமே கூடஸ்தனெனவும், பின்கவியில் நானென்ற பிரமமென்றது; கூடஸ்தனே பிரமமெனவும் பொருள்படற்கென்க. நானெனல், அறிவு பிரமமெனல். சுகம். எனவே, சுகமேயறிவு அறிவேசுகம். என்றுயிற்று. ஆகவே, சுகம்வேண்டி அலேவது உயிர்கள் அறிவாதலால், அலேவையொழித்தற்கு இங்ஙனங் கூறியதென்பெற்றும். ஆதிகாரணமெனப் பொருளிருப்பினும் இங்கே நிதான்மென்பது, குறைவின்மை. அறிந்ததாஞ் சுழுத்தியென்றதினல்; அறியாத சுழுத்தி குறிக்கின்றது. இதிலுள்ள சுகப்பெருக்கு, ஆன்மாவேயெனக்காட்ட நனவிற்சுழுத்தி கூறினுரென்க. நினச்சுழுத்தி ஆன்மாவையன்றி உளதேல் நனவிற் சுழுத்தியுமிருக்கலாம். (166)

167 - (கவி). (அ—கை)

[தனியே என்னை யான் விசாரிக்குமிடத்தில் வித்தையானந்தம்ரக் கண்டனனென்ன மாணுக்கன் கூறியதாக இக்கவியிற் கூறுகின்றுர்.]

மனத்தினு லெண்ணித் தானே வந்ததிவ் வுலக மாகு
நினைத்திடிலனேக லோக நிற்பதிவ் வறிவி லன்றே
வனைத்தையுங் கடந்தப் பாலு மந்தமற் றறிவி தாமென்
றெனைத்தனி விசாரித் திட்டா லேகமாய் நிறைந்தோ னேனே.

(இ-ள்) மனத்தினுல் எண்ணித்தானே வந்ததிவ்வுலகமாகும் (எ-து)—இவ்வுலகமானதுமனேஞ் சங்கற்பத்தினுலேதானே வந்ததாகக் காண்கின்றது: — (எங்ஙனமெனில்) நினைத்திடில் அனேகலோகம் நிற்பதிவ்வறிவிலன்றே (எ-து)—எண்ணினவைகளாலும், ஊகத்தாலும், அனுபவத்தாலு மொருங்கேநின்று சிந்திக்குமிடத்தில், இவ்வுலகமாத்திரமன்று, இன்னும் இவ் போல்வனவாகக் கூறப்படும் அனேக உலகங்களும் பதவிகளும் இருப்பது நாமாகிய இவ்வறிவில்லவா: —அனைத்தையுங் கடந்தப்பாலு மந்தமற்றறிவி தாமென்றெனைத்தனி விசாரித்திட்டா லேகமா நிறைந்தோனுனோ (எ-து)—இஃதன்றியும், இவ்வறிவிலுள்ள முன்கூறிய அனைத்தையும் ஒவ்வொன்றுக நியதிகளைந்து அவற்றினின்று நீங்கி அவற்றிற்கு அப்பாலும் யாதுளதென்று என்னைத் தனியாக விசாரிக்குமிடத்தில், முடிவின்றி விளங்காநின்ற இவ்வறிவாகவே எங்குங் காண்கின்றது, ஆதலின் பரிபூரணமாக எங்கணு நிறைந்து விளங்குவோன் வேறல்லன் யானே: எ-று.

மண்ணுதிகட்குச் சுயம்புவடிவம் யாதெனத் தனித்தனிப் பேதவாதம் ஆறுனும், அபேதவாதம் ஐந்தானும் ஐயந்திரிபறச் சோதிக்குங்கால் யாதும் அங்ஙனங்காணுது தோற்றன்மாத்திரமாகக் காண்பதென்னை? காண்பதால் அதனைச் சுயம்பாகப் பார்ப்பதென்னை? இவ்விருவகையாய நிலையும் விளைவது மனத்தாலோ, வேருலோ? மனத்தாலெனின் அப்போது மனதையன்றி உலகம் மெய்போலத் தோற்றுவதும், பொய்போலத் தோற்றுவதும் வேறன்றே. வேருமெனின், யாதோ இவ்விருவகையாகக் காண்பது? உலகமெனின், விசாரணை முடிவில் உலகமென்னு நாமரூபமெங்கே? யாது பொய்யாகக் காணப்படுகின்றது. நினைவுதானெனில், உலகப்போல் மெய்யாகக் காணப்படுவதும், பொய்யாகக் காணப்படுவதும், அதனை அவ்வாறுணர்வதும் வேறன்றே. நினைவாகிய மனோசங்கற்பமாதலின், மனத்தினுலெண்ணித் தானே வந்ததிவ் வுலகமாகுமெனவும், அங்ஙன நியதிகளைந்த விடத்து இல்லாமற்போன இவ்வுலகமாதி அனேகலோகங்களும் எங்கேயெனச் சுவானுபவத்தால் ஆராயும்பொது, அனைத்துஞ் சங்கற்பவடிவமாக யானுகிய அறிவிற்கண்டனனென்ருன் என்பார், நினைத்திடிலனேகலோக நிற்பதிவ்வறிவிலன்ரேவெனவும், அங்ஙனஞ் சங்கற்பவடிவமாக அவை எங்ஙனமிருக்கின்றனவெனத் தனித்தனி ஒவ்வொன்ருக ஆராயுமிடத்தும், அப்பாற்கடந்து ஆராயுமிடத்தும் இவ்வறிவாகவே அனைத்து முடிகின்றனவாதலின், அனைத்தையுங் கடந்தப்பாலு மந்தமற்றறிவிதாமெனவும், சமஸ்தமும் அறிவாகமுடியும் போது யானுரெனத் தனித்துநின்று என்னை விசாரிப்புழி அகண்டபரி பூரணமாகிய இவ்வறிவைத்தவிர இல்லையாகமுடிதலின், எனைத்தனி விசாரித்திட்டா வேகமாய் நிறைந்தோனுனே யெனவுங் கூறக்கிடந்ததென்க.

(க-து) அறிவே யானெனத் தெரிவிக்க இங்ஙனங் கூறியதென்பது. இதுவும் வித்தையானந்தமென்க. (167)

**168 - கவி. (அ – கை)**

[என்னைத்தவிரக் கற்பிதங்கள் இல்லாவிடத்து எங்ஙனம் பரிபூரணமாக விளங்குவதெனின், மூன்றவஸ்தா வயத்தாகாது அறிவாக விளங்கின் அங்ஙனமாவையென இக்கவியிற் கூறுகின்ருர்.]

அந்தவா றிருந்து கொண்டே யானந்த மனுப விக்க
வெந்தவா றிருந்து கொண்டா லெனக்கிது தெரியு மென்னி

லிந்தமுன் றவத்தை தம்மு ளெழுந்திடும் விருத்தி நீக்கி
லந்தவா றிருந்து நீயு மானந்த மடைய லாமே.

(இ-ள்) அந்தவாறிருந்துகொண்டே ஆனந்தமனுபவிக்க (எ-து) — என்னைத்தவிரச் சங்கற்பங்களில்லாவிடத்து. அங்ஙனஞ் சங்கற்ப மயமாக நின்றுகொண்டு யான் எங்ஙனம் ஆன்மானந்தத்தைப் பரி பூரணமாக அனுபவிப்பது, கூடாமையால்: — எந்தவாறிருந்துகொண் டா லெனக்கிதுதெரியுமென்னில் (எ-து) — யான் எவ்வண்ணமாய நிலையினின்று கொண்டால் எனக்கிந்தப் பரிபூரணமாயநிலை விளங்கு மெனக்கேட்பையாயின்: — இந்த மூன்றவத்தை தம்முளெழுந்திடும் விருத்திநீக்கில் (எ-து) — இந்த மூன்றவத்தையிலும் உதிக்கும் மனோ விருத்தியைத் தனது சொரூபமாகக்கண்டு நீக்கினால் அப்போது அஃது உனக்கு விளங்கும்: — (ஆதலின்) அந்தவாறிருந்து நீயும் ஆனந்த மடையலாமே (எ-து) — நீயும் அவ்வண்ணமாகவிருந்து, அந்தப் பரிபூரணானந்தத்தை அனுபவிக்கலாமே இதிலையமென்னை. எ-று.

அவஸ்தாத்ரையமும், விர்த்தித்ரையமும், தனது ஞெப்தி ஸ்புரிப்பையன்றி இல்லை எனக்காணத் தாமே தனது ஞெப்தியாகக் கரையும், கரைந்தவாறிருக்கவேண்டும், இருக்கின், பரிபூரணானந் தோதயமாம். அவ்வுதயமே நீயாதலினானும், உன்னையன்றி இல்லாத தினானும் அது நீயாவையென்பார், இந்தமூன் றவத்தைதம்முள் எழுந்திடும் விருத்தி நீக்கி லந்தவா றிருந்து நீயும் ஆனந்தமடைய லாமே என்றார். அவ்வாறிருந்தோர் எல்லாம் ஆனந்தம் அடைந் தாற்போல, நீயும் ஆனந்தம் அடையலாம் என்றாராகலின், நீயுமென் பதில் உம்மை, இறந்ததுதழீ இயவெச்சவும்மை. விருத்திநீக்கம், சிற்பிரகாசமாகக் கரைதல். எனவே, வித்தையானந்தம் எனக்குறிக் கப்பெற்றாம்.

(க-து) சிற்பிரகாசமாகக் காணில் அங்ஙனே விருத்தி அது வாகக்கரைய நீயதுவாவையென்பது. வேறு உபாயமெங்ஙனுமின் றென்க. விருத்திகள் உன்னை அன்றி இல்லையாயினும் உனது சிற் பிரகாசமாகக் காணின் நீயே பரிபூரணாநந்தமாவையென்க. (168)

## 169 - கவி. (அு—கை)

[வாசனாவிருத்திகளைக் களைவதெவ்வாறென்ற வினாவுக்கு விடை இக்கவியிற் கூறுகின்றார்.]

வாதனை வயத்தி னாலே வருகிற விருத்தி யெல்லா
மேதினு லடக்க லாகு மென்றுதான் விசாரஞ் செய்யின்
போதமா மிராசன் றானாய்ப் புந்தியைப் புலன்க ளெல்லாந்
தாதரா யிருக்கப் பெற்றாற் சகலமு மடங்குந் தானே.

(இ-ள்) வாதனைவயத்தினாலே வருகிறவிருத்தியெல்லா மேதினு லடக்கலாகு மென்றுதான் விசாரஞ்செய்யில் (எ-து) — பூர்வ வாசனை காரணமாக வருகிற மனோவிருத்தி அனைத்தையும் யாதுகாரணமாக அடக்கக்கூடுமென்று என்னை விசாரிப்பையாயின்: — போதமாமிராசன் றானாய்ப் புந்தியைப்புலன் களெல்லாந் தாதராயிருக்கப்பெற்றாற் சகலமு மடங்குந்தானே (எ-து) — அறிவை அரசனாக்கி அவ்வரசனே தானாகிப் புத்திமுதலிய அகக்கரணபுறக்கரணங்கள் அனைத்தையும் அடிமைகளாக்கின், இவ்விரு கரணங்களுந் தலையெடுக்காது அடங்கும். எ-று.

முன்னனுபவித்த பிரியங் காரணமாக எழுமனோவிருத்தியை, வாதனை வயத்தினாலேவருகிற விருத்தியெனவும், தானாகிற ஞானப் பிரகாசத்தைத் தலையாகக்கொள்ள, ஏனைய விருவகை கரணங்களும் என்செய்யும்? அடங்குமாதலின், போதமா மிராசன்றானாய்ப் புந்தியைப் புலன்களெல்லாந் தாதராயிருக்கப்பெற்றாற் சகலமு மடங்குந்தானே யெனவுங் கூறியவாறு காண்க. அரசனாக்கினை செல்லுவதிலும், அரசனே செல்லிற் குடிகளடுங்கும், இது பற்றி இங்ஙனங் கூறிய தென்க.

(கு-து) வாசனாவிருத்திகளை யடக்கும் உபாயம் இனையதென் பது. போதமாமிராசனாக்கியெனவும், புந்தியைப் புலன்களெல்லாமென வும் சில பிரதிகளுமுண்டு.

170 - கவி. (அ - கை)

[விருத்திகளையடக்க இங்ஙனம் வலியின்றியவிடத்தில் மற்றிரண்டு உபாயத்தாலேனும் அவற்றை அடக்குதியென இக்கவியிற் கூறுகின்றார்.]

விருத்திக ளடக்க வின்னும் விநோதமாம் யோகத் தாலே
துருத்திபோ லூது மூச்சைச் சுழுமுனை யடக்கி னிற்கும்
கருத்ததற் கில்லை யென்னிற் காரண சரீர மாகும்
பெருத்ததோ ரவித்தை தன்னைப் பிடுங்கிடி லடங்குந் தானே.

(இ-ள்.) விருத்திகளடக்கவின்னம் விஞேதமாம் யோகத்தாலே துருத்தி போலூ துமூச்சை சுகமுடனடக்கினிற்கும் (எ-து)—விருத்திகளையடக்குவதற்கு இன்னுமுபாயங்களுள. அவற்றுளொன்று, உலகத்திற்கு விஞேதமாகக் காணப்பட்ட கிரியாயோகங்காரணமாக உலேக்களத்தின்கண் துருத்தி போலூதத்தக்க உசுவாச நிசுவாசமென்னு மூச்சைத் தக்கமுறைப்படி பிரியங்கொண்டடக்கில் விருத்திகள் தாமே நின்றுவிடும்: —கருத்ததற்கில்லேயென்னிற் காரணசரீரமாகும் பெருத்த தோரவித்தைதன்னைப் பிடுங்கிடிலடங்குந் தானே (எ-து)—அது செய்தற்குச் சற்றுங் கருத்தில்லேயாயின் மற்ருென்று கேளுதி, காரண சரீரமாகிற மிகவும் பாரித்துள்ள ஒப்பற்ற அவித்தையை மாத்திரம் வேரறப்பிடுங்கிவிடில் அந்தவிருத்திகள் தாமேஅடங்கிவிடும். எ-று.

உபாயங்களுள, அவற்றுள் ஒன்றென்பது, இசையெச்சம். பார்ப்பவர்க்குத் தறிபோற்காண்டலின், விஞேதமாம் யோகத்தாலெனவும், மூச்சை அடக்கத்தக்கவாறடக்க உடலந் தறிபோலாம். ஆகவே, கன்மேந்திரியங்கள் நிற்கும். அதுநிற்க, ஞானேந்திரியங்கள் நிற்கும், அது நிற்க, மனமாதி அகக்கரணங்கள் ஒன்றன்பின் ஞென்ருக நிற்கும். அதுநிற்க, இச்சாஞானக் கிரியைகளாகிற விருத்திகள் தாமேநின்றுவிடும். இதுபற்றித் துருத்திபோலூதுமூச்சைச் சுகமுடனடக்கினிற்குமெனவும், வித்தை, அறிவு. அவித்தை அறியாமை. இதனைப்பிடுங்கிடல், பொருளல்லவற்றைப் பொருளாகக் கோடல் தவிர்தலே. இங்ஙனஞ்செய்யில் விருத்திகள் தாமே நசிக்குமாதலின், காரணசரீரமாகும் பெருத்ததோரவித்தை தன்னைப் பிடுங்கிடலடங்குந் தானே யெனவும் கூறியவாறு காண்க. வித்தையென்னுது பெருத்த தோரவித்தை யென்று அடைகொடுத்தது, பிறவிதரற்கு மிக்கவலியுள்ளதெனக் காட்டற்கு. எனவே, தொன்றுதொட்டு அனுதியாக வந்ததன்றி இடையில் வந்ததன்ருயிற்று. இடையில் வந்ததாயின், பிடுங்கிடிலென்னுது பிசைந்திடிலடங்குந் தானே யென்னல்வேண்டும். அங்ஙனங் கூருமையால் தொன்றுதொட்டு வந்ததென்பதே பொருந்தும். வேரோடெனப் பொருள்படநிற்றலின், இங்ஙனங் கூறியதென்க. பிடுங்கிடல், மேலாய ஞானனுஷ்டானத்தாலன்றி ஏனைய அனுஷ்டானத்தால் அன்ருதலின், இங்கே இம்மொழி தந்ததென்க.

(க-து) விருத்திகளையடக்கற்கு உபாயமினையதென்பது. அவித்தைகளைவதிலும் உபாயம் வேறுண்டெனலெல்லாம் அறிவீன வசன

மென்றுணர்க. கருத்ததற்கில்லையாகுமெனச் சிலபிரதிகளிருக்கின்றன.
(170)

171 - கவி. (அ - கை)

காரண சரீரத்தைக் களையுமாறு இங்ஙனமென இக்கவியிற் கூறுகின்றார்.]

காரண சரீரந் தன்னைக் களைவதெவ் வாறென் றோதி
லாரணம் பொய்சொல் லாதே யதன்பொரு ளகத்திலுன்னிற்
பூரண மாகு மென்மேற் புவனங்க டோற்று மென்னுந்
தாரணை வந்த தாகிற் றரித்திடு மவித்தை யெங்கே.

(இ-ள்) காரண சரீரந்தன்னைக் களைவதெவ்வாறென்றோதில் (எ-து)—தன்னைமறந்த மறதியாகிய அறியாமையே வேரோடு களையு, மாறு எங்ஙனமெனக் கேட்பையாயின்:—ஆரணம்பொய் சொல்லாதே அதன் பொருளகத்திலுன்னில் (எ-து)—வேதம் பொய்சொல்லாது ஆதலின், அதனது மகாவாக்கியார்த்தத்தை விடாது அகத்திற்கண்டு மனனிக்கவேண்டும், அங்ஙனம் விடாது மனனிக்கில்:—பூரணமாகு மென்மேற்புவனங்கடோற்று மென்னுந் தாரணைவந்ததாகில் தரித் திடுமவித்தையெங்கே. (எ-து)—பரிபூரணமாக விளங்குவதும், அங்ஙனம் அங்ஙனம் விளக்கில், புறம்பிலல்லாமல் சகலசராசரங்களும், அண்டாண்ட கோடிகளும், பரிபூரணமான எனது அகவியாபகத்தில், தானே தோற்றுமென்று சொல்லத்தக்க திடசிந்தை தானே வரும் அங்ஙனம் வருமாகில், அநாதியாக அறியாதுவந்து அகத்தில் தரித் திருக்கிற அவித்தையாகிய காரண சரீரம் எப்படி தங்கியிருக்கும். எ-று)

எம்மதத்தருந் தங்கள் தங்கள் வேதம் பொய்சொல்லாது என்னுமாறு போன்று இவருஞ்சொன்னால் இதில் என்சிறப்பெனின், திணைபாலிடமாயும் அன்றாயும் நிற்பது எவ்வறிவோ, அவ்வறிவே மெய்ப்பொருளென எம்மதத்தினுண்டு, இதுவே தக்கவிடையென்றற்கு இடையூறுளதேற் சோதனையாதிகளிற் சொல்லில் தானே விடை தருமென்க. இங்கே மேலென்பது, இடம். தோற்றுமென்று, எனப் பாடமுமுண்டு பூரணமாகு மென்மேற் புவனங்கடோற்று மென்னுந் தாரணை வந்ததாகில் தரித்திடுமவித்தை யெங்கே எனக்கூறியதில் யாதுநயமெனின், யாதுஞ் சுயம்பன்றெனத் தெளிந்தவாறு கலங் காது நிற்கின், அப்பில் உப்பென அனைத்துங் கரைந்து சின்மாத் திரமாகும், ஆதலே நயமெனவுணர்க.

(க-து) அவித்தாநாச தந்திரமிதனைய தெனக் கூறியதென்பது (171)

## 172 - கவி (அ - கை)

[சர்வமுந் தானுயும் அன்றுயுங் காண்கின்றது எந்தவறிவோ. அதுவே யானுவதென இக்கவியிற் கூறுகின்றார்.]

அப்படி யிருக்கச் சித்த மலைதலால் விவகா ரத்தி
லெப்படி கூடு மென்னி னென்னைவிட் டொன்று மில்லை
யிப்படி கண்ட வெல்லா மென்மய மென்க ணுப்போற்
கற்பித மென்றுந் தானே காண்கின்ற சித்து நானே.

(இ-ள்) அப்படியிருக்கச் சித்தமலைதலால் விவகாரத்தி லெப்படி கூடுமென்னின் (எ-து) — இவ்வாருய அனுபவம் அங்ஙனமிருக்க; விவகார வேளைகளிலெல்லாம் மனமலையுமே, அலையும்போது, இவ் வனுபவம் எங்ஙனம் வாய்க்குமெனக் கேட்பையாயின்: — என்னை விட்டொன்றுமில்லை யிப்படி கண்ட வெல்லாமென்மயம் (எ-து)— விவகாரவெளையில் இங்ஙன நானுவிகார ரூபமாகக் காணப்பட்டதே காதிப் பிரபஞ்சமனைத்தும் யானுகிய சிற்பிரகாசத்தையன்றி யாதொ ன்றும் இல்லையெனவும் அவை யெனது சொரூபமாமெனவும்: — என் கணுப்போற்கற்பிதமென்றுந்தானே காண்கின்ற சித்து நானே (எ-து) — எனது சொற்பனுக்காட்சியைப்போற் கற்பனுவடிவமெனவுங் காண் கின்றது யாதோ வதுவேயறிவு, அவ்வறிவே யானெனப்படுவது. எ-று.

(க-து) எல்லாமாயும் அல்லவாயும் விளங்குவது அறிவாதலால் அவ்வறிவே யானெனத் தெளிந்துழிக் கலக்கம் என்செய்யுமென்பது. (172)

## 173 - கவி (அ-கை)

[சிற்பிரகாசமே யானென விடாது கண்டு பலவிருத்திகள் செய்யினும் அவை தன்னை யணுகாவென இக்கவியிற் கூறுகின்றார்.]

சித்துநா னிறைந்தோ னென்ற திடமற வாதி ருந்தா
லெத்தனை யெண்ணி னுலு மேதுசெய் தாலு மென்ன
நித்திரை தெளிந்த பின்னர் நிற்கின்ற கனவைப் போல
வத்தனை யும்போய் தானே யானந்த வடிவா நானே.

(இ-ள்) சித்து நானிறைந்தோனென்ற திடமறவாதிருந்தா லெத்தனை யெண்ணினாலுமேது செய்தாலுமென்ன (எ-து) – யானெனப் படுவது சைதன்ய மாதலின் பரிபூரணமாக நிறைந்துள்ளோன் யானே, என்னுஞ் சுவானுபவ திடத்தை மறவாதிருக்கப் பெற்றால்' எவ்வெவ் விகற்பமாக எவ்வெவ்வண்ண நினைக்கினும், பலவேறு விகற்பமாயுள்ள தொழில் செய்யினும் யாதிடையூறு சம்பவிக்கும்:– நித்திரை தெளிந்த பின்னர் நிற்கின்ற கனவைப்போல (எ-து) – உறக்கந் தெளிந்தவுடன் கண்டசொற்பனம் எங்ஙனம் காணாது நின்றுவிடுமாறுபோல:– அத்தனையும் பொய்தானே யானந்தவடிவா நானே (எ-து) – தன்னை யுள்ளவாறு தரிசிக்கவே அவ்வளவு எண்ணங் களும் கிரியைகளும் பொய்யாக முடியும். முடியவே, சமஸ்தமும் ஆனந்தவடிவாக விளங்கும். அவ்வாறாய விளக்கமேயானெனப் படுவதாம். எ-று

சிற்பிரகாசம் அன்னியமெனக் காணுமயக்கந் தானே தவிர்ந்து யானே யென்னுந் திடஞ்ஞான முண்டாகும். உண்டாகவோ, பரி பூரணநிலை தானே தனக்கமையும். அங்ஙனந் தானாயதை மறவா திருக்க வேண்டும். மறவாதிருந்தால் யாது நினைக்கினும் யாது புரியினு மவற்றாற் சுவானுபவத்தடை எய்தற்கிடம் எங்ஙன முண்டா மென்பார், சித்து நானிறைந்தோனென்ற திடமறவாதிருந்தா லெத் தனை யெண்ணினாலு மேதுசெய்தாலு மென்னவெனவும், கனவு காண்புழி அங்கே காணும் பிரபஞ்சம் மெய்போலத்தோற்றி விழித் தவுடன் பொய்யாகுமாறு போன்று, நனவிற் காணும் பிரபஞ்சம் மெய்போலத் தோற்றித் தனது எதார்த்தத்தில் விழித்தவுடன் பொய் யாகத்தோற்றலின், நித்திரை தெளிந்த பின்னர் நிற்கின்ற கன வைப்போல வத்தனையும் பொய்தானே யெனவும், தினசுழுத்தியிற் செகந்தோற்றாமையால் துக்கநிவிர்த்தியும் மக்களாந்தப் பெருக்கும் உண்டாகுமாறுபோன்று, நனவிற்சுழுத்தியில் தேகாதிபிரபஞ்சந் தோற்றாமையால் துக்க நிவிர்த்தியும், அறிவானந்தப் பெருக்கும் உண்டாமாகையால், ஆனந்தவடிவெனவும், அந்த மக்களானந்தமே தினசுழுத்தியில் நானாக நிற்குமாறு போன்று, அவ்வறிவானந்தமே நனவிற் சுழுத்தியில் நானாக நிற்றலின் ஆனந்தவடிவ நானேயென வுங் கூறியவாறு காண்க.

(க-து) சுத்தசைதன்யமே நானாக விளங்கலை மறவாது விவ கரிக்கில் விர்த்திகளிருந்துஞ் சிதானந்தமாகக் கரையுமென்பது. நித் திரையுணர்ந்த பின்னரெனப் பாடமுமுண்டு. (173)

174 - க-வி. (அ—கை)

[என்னை யானுள்ளவாறு கண்டபடியால் இப்போதுதான் கிருதார்த்தன் ஆனேனென இக்கவியிற் கூறுகின்றார்.]

நானென வுடலைத் தானே நம்பினே னநேக சென்ம
மீனராய்ப் பெரியோராகி யிருந்தவை யெலாமிப் போது
கானலில் வெள்ளம் போலக் கண்டுசற் குருவி னாலே
நானென வென்னைத் தானே நம்பயீ டேறி னேனே.

(இ-ள்) நானெனவுடலைத்தானே நம்பினே னநேகசென்மம் (எ-து)—அனேகசென்மமாகத் தேகத்தையே நானெனத்திடமாக நம்பி நாசமானேன்:—ஈனராய்ப்பெரியோராகி யிருந்தவையெலாம் (எ-து)—இஃதன்றியும், பலசென்மங்களிலும் அறிவீனராயும், அறிவிற்சிறந்தவராயும் என்னையான் கொண்டிருந்த மயக்கங்களையெல்லாம்:—இப்போது கானலில்வெள்ளம் போலக்கண்டு (எ-து)—கானலிற்றோற்றும் பிரவாகத்தைப்போல் இப்போது ஐயந்திரிபறக்கண்டு:—சற்குருவினாலே நானெனவென்னைத்தானே நம்பியீடேறினேனே (எ-து)—சற்குருநாதன் அருளால் யாது உண்மைவடிவம் எனத் தெளிந்ததோ அதுவே நானெனக்கோடலில் ஐயமின்றுதலில் அங்ஙனமாய என்னையே யானென நம்பிப் பிழைத்தனன். எ-று.

கானலில்வெள்ளம்; நடுப்பகலில் சூரியகாந்தி ஆற்றுவெள்ளம் போற்காண்பது. நானெனவுடலைக்கோடலும் பெருமை சிறுமைக்கு ஆளாகலும், கானல்வெள்ளம்போற் காண்டலின் இவ்வுவமை வேண்டியவாறாயிற்று. ஐம்பெரும்பூதாம்ச சையோகத்தையன்றி உடலெனத் தோற்றற்கிடமின்று. இங்ஙனமாயதை யானெனக்கோடலாதி இவ்வுவமையை ஏற்றற்கிடையூறென்னை? கானலையன்றி மெய்யா வெள்ள முண்டாயின், தனது விகற்பத்தையன்றி மெய்யாத் தேகாதியுண்டாயிருக்கட்டும். அது வில்லையெனின், இதுவும் அங்ஙனமாகாதோ? முன்னர் உடலை நானெனநம்பி மோசம்போனேனென்றதனால் இப்போது உணர்வை நானெனக்கண்டு கண்டு கிர்தார்த்தனானேன் என்பது நயமாகக் காணப்பட்டது. இவ்விருவகை இயலு மூடந் தெளிவைக்காட்டநின்றது. எனவே மூடத்தில்தெளிவும், தெளிவில் மூடமும் ஒன்றிலொன்றில்லாவாறுபோலத் தானில்லையோ, இருப்பது பற்றி அப்போதப்போது அந்தந்தவாகார மானேமென்றாயிற்று. எங்ஙனமெனில், அப்போது மூடமாயிருந்தது நாமே, இப்போது தெளிவானதும் நாமே, ஆதலின் ஐயமின்றென்க.

(க-து) இப்போது வித்தையானந்தமே யானுயனிடத்துக் கிர்தார்த்தனேனென்பது. (174)

175 - கவி (அ - கை)

[இவ்வனுபவங் குருவை வியந்து புகழ்தலுக்கிடமாயதை இக்கவியிற் கூறுகின்ருர்.

என்னபுண் ணியமோ செய்தே னேதுபாக் கியமோ காணே
னன்னிலந் தனிலெ ழுந்த நாரணன் கிருபை யாலே
தன்னிய னேனு னுத் தரீயத்தை வீசு கின்றேன்
றன்னிய னின்னு நானே தாண்டவ மாடு கின்றேன்

(இ-ள்) என்னபுண்ணியமோ செய்தே னேதுபாக்கியமோ காணேன் (எ-து) — பூர்வத்தில் என்ன புண்ணியஞ்செய்தேனோ, அதனால் இப்போது கிடைத்த பாக்கியம் எத்திறத்தாயதோ, யானிதனை உணரவலியிலனாயினன்: — நன்னிலந்தனிலெழுந்த நாரணன் கிருபையாலே (எ-து) – நன்னிலமென்னும் பதியில் அடியேனுக்காகக் குருவாக அவதரித்த நாராயணனென்னும் பெயரையுடைய எனதாசிரியனது அருளினாலே: — தன்னியனேனுனுத்தரீயத்தை வீசுகின்றேன் (எ-து)—கிருதார்த்தனேனேன், அதனால் அடியேன் அங்கவஸ்திரத்தை வெற்றிக்கொடியாக வீசுகின்றனன்: - தன்னியனின்னுநானே தாண்டவமாடுகின்றேன் (எ-து) — அங்ஙனங் கிருதார்த்தனாகிய நான், இன்னும் ஆனந்தக் கூத்தாடுகின்றேன். ஏ-று.

செயமடைந்தோன் தனதுவெற்றிக்கொடியை வீசுமாறு போன்று, இவனுந் தத்துவக்குழாப் பகையைக் கோறலால், தன்னியனேனுனுத்தரீயத்தை வீசுகின்றேனெனவும், அதனால் ஆனந்தமீக்குறலாற் பரவசமாக, அப்பரவசத்தால் தானே கூத்தாடவரும், அதனைத் தாண்டவமாடுகின்றேன் எனவுங் கூறியவாறு காண்க.

(க-து) அனுபவமேலீட்டாற் பரவசப்பட்டு ஆனந்தக்கூத்தாடினன் என்பது. இது வியந்துபுகழ்தல். (175)

176 - கவி (அ-கை)

[யான் இங்ஙனமாவன் எனத் தான் தாய்தந்தையார் தாண்டவர் எனப் பெயரிட்டார்போலுமென அவரை வியந்ததை இக்கவியிற் கூறுகின்ருர்.]

தத்துவ ஞானம் வுந்த சந்தோட வதிச யத்தா
னித்தமா டுவன்கா ணென்ற நிலைமுன்ன மேய றிந்த

சத்திய மதனு லன்றோ தாண்டவா வென்ற ழைத்தா
ரத்தனை மகிமை யுள்ளோ ரன்னையும் பிதாவுந் தாமே.

(இ-ள்) தத்துவஞானம்வந்த சந்தோடவதிசயத்தால் (எ-து)—இவனுக்கு உண்மைஞானம் உதயமாகும், அங்ஙனம் உதயமான சந்தோஷத்தினலும் அதுகாரணமாக எழும் அதிசயத்தினலும்:—நித்தமாடுவன் காணென்ற நிலை முன்னமேயறிந்த (எ-து)-சதா காலமும் ஆனந்த நடனஞ்செய்து கொண்டிருப்பனென்னு நிலைமையை முன்னமே தெரிந்து கொண்டார்கள் போலும். அங்ஙனந் தெரிந்துகொண்ட:—சத்தியமதனுலன்றோ தாண்டவா வென்றழைத்தார் (எ-து)-உண்மையினலன்றோ, என்னைத் தாண்டவாவெனப் பெயரிட்டழைத்தனர்:—அத்தனை மகிமையுள்ளோர் அன்னையும் பிதாவுந்தாமே (எ-து)—அங்ஙனம் அழைத்தற்கு அவ்வளவு மகிமை வாய்த்தவர்கள் தாய் தந்தையர்களே. எ-று

(க-து) தன்னைத் தாண்டவா வென்றழைத்த தாய் தந்தையரை இந் நூலாசிரியர் வியப்புற்றுனென்பது. தனது அனுபவத்துக்கும், தாய் தந்தையரிட்ட பெயருக்குஞ் சம்பந்தங் காணவந்ததென்க. இஃது வியப்பு உவமையணி. (176)

177 - கவி. (அ—கை)

[இங்ஙனமாய சுவானுபவத்தை அருளிய சற்குருவை வியந்து வணங்கியதை இக்கவியிற் கூறுகின்றார்]

வந்ததோ ரிவ்வா னந்த மகிழ்ச்சியா ருடன்சொல் வேன்யான்
சிந்தையி லெழுந்து பொங்கிச் செகமெலா நிறைந்து தேக்கி
யந்தமில் லாத தாயிற் றப்படி குருவே தாந்த
மந்திர மருளு மீசன் மலரடி வணங்கி னேனே.

(இ-ள்) வந்ததோரிவ் வானந்த மகிழ்ச்சி யாருடன் சொல் வேன்யான் (எ-து)—இங்ஙனம் அடியேனுக்கு உதயமான வொப்பற்ற நிரதிசயானந்த மகிழ்ச்சியைக் குருவைத் தவிர யார்வருளரென அவர் பாற் சொல்லிக் கொள்வன்;—சிந்தையிலெழுந்து பொங்கிச் செகமெலா நிறைந்து தேக்கி யந்தமில்லாத தாயிற்று (எ-து)—அந்த மகிழ்ச்சி எனது சிந்தையிலெழுந்து பொங்கிச் செகமுழுவது நிறைந்து தேக்கிட்டு, முடிவின்றி விளங்குகின்றது:—அப்படிக் குரு வேதாந்த மந்திரமருளு மீசன் மலரடி வணங்கினேனே (எ-து)—அங்ஙனமாகக் குருநாதனுக் கெழுந்தருளி வந்து வேதாந்த ரகசியத்தை அனுக்கிர

கித்த வேதநாயகனுகிய வீசனது தாமரை மலர் போன்ற திருவடி களை வணங்க வேண்டியவாறு வணங்கினன். எ-று.

சொல்லிக் கொள்வதற்கு வேறில்லாமையாற் குருவை வரு வித்தாம். வேதாந்த மந்திரம், வேதமுடிவான மகாவாக்கியார்த்தம் பிரதிவாதிக்கும் ஐக்கிய முத்தியை. எனவே, பதவிமுத்தி அன்றென்று மிற்று. ஆகவே, பதவிமுத்தியைப் பிரதிவாதிப்பது, கன்மகாண்டமா கிய அற்பசுருதியெனக் கண்டாம். இங்கே அடியென்பது, கூடஸ்த பிரமமாகிய உபயபாதங்களை. வணங்கவேண்டியவாறு வணங்கல், அதனை ஏகமாக்கவேண்டிய வாருக்கல்.

(க-து) நவநவமாகச் சுபானுபவ மெய்திய காரணத்தாற் குருவை வணங்காமல் வணங்கினனென்பது. ஈசனே குருவெனல் மரபு. (177)

## 178 - கவி (அ—கை)

[இந்நூல் விளைவிக்கும் பயன் இஃதென இக்கவியிற் கூறுகின்றார்.]

வித்தியா னந்த மிந்த விதமென விளம்பி னேமே
பத்தியா யிந்த நூலைப் பார்த்தனு பவித்த பேர்க
ணித்திய தரும நிட்டை நிலைதனை யறிந்து சீவன்
முத்தியை யடைந் திருந்து முனிவர ராகுவரரே.

(இ-ள்) வித்தியானந்தமிந்த விதமெனவிளம்பினேமே (எ-து)— வித்தியானந்தமென்பது, இன்னவகையதெனச் சொல்லினம்:—பத்தி யாயிந்த நூலைப் பார்த்தனுபவித்தபேர்கள் (எ-து)—இந்நூலை மிக் கவன்போடு சிரவண மனனுதிகளைக் கொண்டு ஐயந்திரிபறப் பார்க்க வேண்டியவாறு பார்த்து நிட்டைகூடி அனுபவித்தபேர்கள்:—நித்திய தருமநிட்டைநிலைதனையறிந்து சீவன் முத்தியையடைந்திருந்து முனிவ ரராகுவாரே (எ-து)—நித்தமும் விடாது செய்யுந்தர்மமாகிய ஞான நிட்டையினிலை இனையதெனச் சுவானுபவத்தாலறிந்து, இருவகை முத்தியுள் சீவன்முத்தியை அடைந்து, அந்நிலையில் மாருதிருந்து சிறந்தரிஷிகளாவார்கள். எ-று.

நித்திய தருமத்துள் மேலாயது ஞானநிட்டை ஆதலின், நித் திய தரும நிட்டையென்றார்.

(க-து) இந்நூலை யுணரவேண்டியவாறு உணர்ந்தோர் எய்தும் பயன் இனையதென்பது. தருமமெனினும், அறமெனினுமொக்கும்.

இஃதொரு பொருட்கிளவி. அறமென்பது, தன்னிலையில் தான் அகலாதுநிற்றல். அதாவது; விவர்த்தம் பரிணாமம், ஆரம்பம், உற்பத்தி, விருத்தி தானெனக் காண்டல். விவர்த்தம்; கயிற்றரவு ககனாரவிந்தம், வத்தியாபுத்திரன், சசவிஷாணம் போல்வது. பரிணாமம்; பால் தயிர் போல்வது. ஆரம்பம்; பிதாமகன் போல்வது. உற்பத்தி; மட்கடம்போல்வது. விருத்தி; சித்திரப்படம்போல்வது. இதனை ஞான காண்டத்திற்காண்க.

(க-து) இந்நூற்பயன் இனையதென்பது. (178)

**179 - கவி. (அ—கை)**

எனதாசிரியர் இந்நூலை என்கனவில் எழுந்தருளிவந்து சம்பூரணம் ஆக்கினாரென்பதை இக்கவியிற் கூறுகின்றார்.]

ஆரணப் பொருளாம் வித்தை யானந்தம் விளங்க வேதுங்
காரணக் குறைவி லாமற் கைவல்ய நவநீ தத்தைப்
பூரண மாக்க வேண்டிப் பூர்வமா நன்னி லத்தி
னாரண குருந மக்கு நவின்றனர் கனவில் வந்தே.

(இ-ள்) ஆரணப்பொருளாம்வித்தை யானந்தம் விளங்கவேதுங் காரணக்குறைவிலாமல் (எ-து) — வேதார்த்தமாகிய வித்தை யானந்தம் இனையதென விளங்க, யாதோர் காரணமுங் குறைவில்லாமல்: — கைவல்யநவநீதத்தைப் பூரணமாக்கவேண்டி (எ-து) — கைவல்ய நவநீதமென்னும் இந்நூலை நிறைவேற்றவேண்டி: — பூர்வமாநன்னிலத்தினாரணகுருநமக்குநவின்றனர் கனவில்வந்தே (எ-து) — தொன்று தொட்டுள்ள நன்னிலமென்னும் பதியிலெழுந்தருளிய நாராயண தேசிகரென்போர் கனவில் அக்கோலமாகவே வந்து தெரிவித்தனர். எ-று.

பிரக்ஞானம், வித்தை. பிரமம், ஆனந்தம். எனவே, பிரக்ஞானம் பிரமமென்பது, வித்தையானந்தமாயிற்று. ஆகவே, இருக்கு வேத மகாவாக்கியமெனப் பெற்றும். இனிக்கேட்கவேண்டிய சங்கை யாதொன்றுங் குறைவில்லாமல் இந்நூலைப் பூரணமாக்கவென்பார், ஏதுங் காரணக்குறைவிலாமற் கைவல்யநவநீதத்தைப் பூரணமாக்க வேண்டியெனவும், தானே சங்கை சமாதானமாதலின் இது ஞாயஞ் சோதனை பொருத்தங்கட்கு இடையூறின்றி நிறைவேற உணர்த்தியது கனவிலாதலின், நவின்றனர் கனவில்வந்தே யெனவுங் கூறிய வாறுகாண்க.

(க-து) தனதுகனவில் ஆசிரிய மூர்த்தமாநின்று இந்நூலை நிறைவேற்றினர் என்பது. எனவே, யனேபாடவில்லை என்பதைக் குறிக்கப் பெற்றும். பெறவே, ஆணவ விழப்பைக்கண்டாம். யோகில் வந்தேயெனச் சில பிரதிகளும் உண்டு. அங்ஙனங் கொள்ளினும் பொருந்தும். யோகில்வந்தெதன்பது, ஞானயோகத்தில் வந்தெனக் கொள்க. (179)

180 - கவி (அ-கை)

[இந்நூல் ஆசிரியராகிய தாண்டவராயசுவாமிகள் இந்நூலில் தெரிவித்த அபிப்பிராயம் இனையதென இக்கவியிற் கூறுகின்றார்.]

அண்ணறன் னருளி னாலே யகம்புற மின்றி யொன்று
மெண்ணமி லிலக்கி யார்த்தத் தின்பொரு ளதுநா னென்ன
நீண்ணின சரீர மாதி நாதத்தி னுபாதி யென்றே
கண்ணதா யனைத்துங் காணக் காட்டினன் றண்ட வேசன்.

(இ-ள்) அண்ணறன்றருளினாலே யகம்புறமின்றி யொன்றும் (எ-து)—தனதுகர்த்தனாகிய ஆசிரியரது அனுக்கிரகத்தினால் அகமென்பதும் புறமென்பது மின்றி ஏகமாநிறைந்துள்ள:— எண்ணமிலிலக்கி யார்த்தத் தின்பொருளது நானென்ன (எ-து)—சங்கற்பரகிதமான இலக்கியார்த்தத்தின் நயம், அதுவென்னும் பிரமமும், நானென்னுங் கூடஸ்தனுமெனவும்:— நண்ணினசரீரமாதி நாதத்தினுபாதியென்றே (எ-து)—இப்போது கிடைத்துள்ள தேகாதிப்பிரபஞ்சமனைத்தும் மாயாகாரிய உபாதியெனவும்;—கண்ணதாயனைத்துங் காணக் காட்டினன் றண்டவேசன் (எ-து)—இவ்விரு வகைத்தா நின்றுள்ள அனைத்தும் ஞானக்கண்ணாக விளங்கும்படி இந்நூலில் ஐயமறத் தெரிவித்தனன். அவனாரெனில், தாண்டவேசனென்னும் பெயருடையோன் எ-று.

தனதாசிரியரது அருளாரும் இலக்கியார்த்தமே கூடஸ்தபிரமமெனவும், தேகாதிப் பிரகிர்தியிறுவாக்கிடத்த தத்துவக் குழாங்களனைத்தும் மாயாகாரியம் எனவும், இவ்விருவகையாகக் கூறக்கிடந்துள்ள அனைத்தும் ஞானக்கண்ணாக விளங்கும்படி அதற்கியைந்த அர்த்தங்களைத் தானியற்றிய இந்நூலிற் குறைவின்றிக்காட்டினன் தாண்டவேசனென்னும் இயற்பெயருடையோனெனமுடிக்க. இலக்கியார்த்தத்தின்பொருள் அது நானென்றதனால் அதுவென்பது; ஈசனெனவும், நானென்பது; சீவனெனவுங்கூறு தொழிந்தனம். வாச்சி

யார்த்தமெனின் இங்ஙனங்கூறற்கியையும். கூடஸ்தபிரமம், அகம், புறம் அற்றதெனற்கும், சங்கற்பநாச ரூபமெனற்கும் பொருள்பட; அகம்புறமின்றியொன்ருமெனவும், எண்ணமிலிலக்கியார்த்தத் தின் பொருளெனவுங் கூறியவாறுகாண்க. நானென்னவென்பதும், உபாதி யென்றே என்பதும் உம்மைத்தொகை. சரீரமாதி நாதத்தினுபாதி யென்னல்: மாயா சகிதம். இலக்கியார்த்தத்தின் பொருள் அது நானென்னல், மாயாரகிதம் இங்ஙனம் மாய சகிதமும், ரகிதமும் இறத்தற்குக் கண்ணதமயனைத்துங் காணவென்னல், துவிதநாசமெனக் கொள்க. எனவே, இதனினு முடிவில்லை என்பதாயிற்று ஆகவே, இஃது அத்துவிதத்தையே பிரதிவாதிக்கு நூலெனப்பெற்றும்.

(க-து) அகம், நான், பிரமம், அது. அனைத்துங் கண்ணதாக் காணல், அஸ்மி. என விளக்கினுரென்பது. —(180)

181 க-வி (அ—கை)

[சுவானுபூதி வாய்த்தல் இனையருக்கேயென இக்கவியிற் கூறுகின்ருர்]

(வேறு.)

ஆன்ற பதமா மூன்றிற்கு மதுநீ யானு யெனும் பொருளிற்
சான்ற துரியா தீதமெனத் தடையற் றிலகொண் சைதன்னிய
மூன்றி யுணர்ந்தோர் விகற்பமயக் கொழித்தெத் தடையுமுடறுத்துத்
தோன்றித் தானே தானுவர் துலங்கு மவர்க்கே சுவானு பவம்.

(இ-ள்) ஆன்றபதமாமூன்றிற்கு மதுநீயானுயெனும் பொருளில் (எ-து)—யாவற்றினு மிகச்சிறந்த தத்வமசியென்னு மூன்றுபதத்திற் கும் அர்த்தமாவது; அதுநீயானுயென்னும் பொருளாம். அப்பொரு ளில்: — சான்றதுரியாதீதமெனத் தடையற்றில கொண்சைதன்யம் (எ-து) - பரிபூரணமா நிறைந்திருக்கின்ற துரியாதீதமெனப் பெயர் பெற்றுத் தடையின்றி விளங்குஞ் சொப்பிரகாசவடிவாயுள்ள சைதன் யத்தை: —ஊன்றியுணர்ந்தோர்விகற்பமயக் கொழித்தெத்தடையுமுட றுத்து (எ-து)—யாதோர்விகற்பசிந்தையுமின்றி யூன்றி உணர்ந்தோ ரே பலவாருக வேறுபட்டுள்ள பிராந்திகளினின்று நீங்கி, வலியுள்ள எவ்வகைத் தடைகளையுஞ் கட்டறுத்து: —தோன்றித் தானேதானுவர் துலங்குமவர்க்கேசுவானுபவம் (எ-து) — மாயாரகிதமாகத் தோன்றித் தானே தானுவார். அங்ஙனந் தானே தானுக விளங்குபவர்க்கே சுவானுபவமெனப்படுவது. எ-று.

தத்துவமசி யென்பதை முப்பதார்த்தமாக்கி அதன்முடிவில் விளங்குந் துரியாதீத சைதன்யத்தை நன்குதெளிந்தோரே நிகரின் றித் தோன்றித்தானே தானவர். அன்னோருக்கேயன்றிச் சுவானுப வம் ஏனையருக்கன்றென முடிக்க. சான்றென்பது; சால், என்னுமுரி யடியாகப் பிறந்த பெயரெச்சம். சாலென்பது; போதுமென்னும் பொருள்படநிற்றலின், பரிபூரணமென்றும்.

(க-து) சுவானுபவம் வாய்த்தல், தானே தானனவருக்கே யென்பது (181)

## 182 - கவி. (அ-கை)

[நாராயண தேசிகர் அடிதொழுபவரும், அவர்கூறிய தீர்த்த நிலை அகலாதோரும், எய்தும் பயன் இனையதென இக்கவியிற் கூறுகின்றார்.]

என்னு மாவாக் கியநான்கு மிசைக்கும் வித்தியா னந்தஞ்
சொன்ன நாரா யணன்பாதந் தொழுது துதித்தோர் துகளற்றோ
ரின்ன மாணுக் கன்குருவாற் சந்தே கந்தீர்ந் திடுபதத்தே
துன்னி நிறைந்து நின்றோர்க டூய முத்த ராகுவரே.

(இ-ள்) என்னுமாவாக்கிய நான்கு மிசைக்கும் வித்தியானந் தஞ் சொன்ன நாராயணன் பாதந் தொழுது துதிப்போர் துகளற் றோர். (எ-து) — இங்ஙனம் ஆனோர்க்கே சுவானுபவம் விளங்கு மென்னு மகாவாக்கிய நான்கு முணர்த்தும் வித்தியானந்தநிலை இனையதென எடுத்துத் தெரிவித்த நாராயணதேசிகரது உபயபாதங்களை மாறாது தொழுது வழுத்துவோர் களங்கரகிதராவர்: — இன்னமாணுக்கன்குரு வாற் சந்தேகந் தீர்ந்திடுபதத்தே (எ-து) — இத்தகையான நின் போன்ற மாணுக்கன் தனது குருவாற் சந்தேக விபரீதந் தவிர்ந்த மேலாய நிலையில்: - துன்னி நிறைந்து நின்றோர்க டூயமுத்தராகுவரே (எ-து) — விடாதழுந்திப் பூரணமாக விளங்கி நிற்போர்கள் பரிசுத்த மான சீவன் முத்தராவர். எ-று.

இன்னநிலையினோர்க்கே சுவானுபூதி வாய்க்குமென்னு மகா வாக்கியப்படி வித்தையானந்தம் இனையதெனத் தெரித்தருளிய நாரா யண தேசிகர் அடி தொழுவோர் களங்கரகிதராவரெனவும், இஃது அன்றியும், யாவனொருவன் தக்க மாணுக்கனுநின்று சற்குருவாற் சந்தேகவிபரீதந் தவிர்த்துக் கொண்டு மேலாய நிலையிலமர்ந்து பூரண மாநின்றுனே அவனே சீவன்முத்தனுவனெனவு முடிக்க.

(க-து) குருபாதந் துகித்தோரும், துரியாதீத பதத்தே நின்றோரும் எய்துப்பயன் இனையவென்பது. (182)

183 - கவி (அ - கை)

[இன்னின்ன பயன்தோன்ற இந்நூல் இயற்றியதென இக்கவியிற் கூறுகின்றார் ]

வேறு.

தத்துவ விளக்கத் தானுஞ் சந்தேகந் தெளிதலானு
மொத்திருள் விடாதமாயா வுள்ளிரு ளிரியவோங்குஞ்
சித்ததா மொளிவி ளங்கச் செய்துபின் விருத்திபேதப்
புத்தியால் வருமை யத்தைப் புரையறத் தெளிவித்தாண்டான்.

(இ-ள்) தத்துவவிளக்கத்தானுஞ் சந்தேகந் தெளிதலானு மொத்து. (எ-து) – தத்துவவிளக்கம், சந்தேகந்தெளிதல், என்னுமிவ் விருபடலமும் பேதியாது இந்நூலை: – இருள் விடாத மாயாவுள்ளிரு ளிரிய வோங்குஞ் சித்ததா மொளிவிளங்கச்செய்து (எ-து) – இருள் மயமாநின்றுள்ள மாயையென்னும் அகவிருளோடவும், யாதினுக்கு மேலீடா ஓங்கிநின்றுள்ள சிற்பிரகாசம் எங்கணும் ஒருபடித்தாவிளங் கவும் பாடலாகச்செய்து: – பின் விருத்திப் பேதப்புத்தியால் வருமை யத்தைப் புரையறத் தெளிவித்தாண்டான் (எ-து) - பின்னர் இதுகாரணமாகப் பேதபுத்தி விர்த்தியால் வந்துகொண்டிருக்குஞ் சந்தேகவிபரீதங்களை யாதுமயக்கமுந் தோன்றாது நீக்கித் தெளிவுண்டாக்கி எம்மை யடிமைகொண்டனன் எ-று.

தத்துவவிளக்கம், சந்தேகந்தெளிதலென்னும் இவ்விருபடலத்தாலும் பொருளொத்திருக்குமாறு மாயாவிருளோடவும், சிற்பிரகாசம் விளங்கவும் இந்நூலைப் பாடலாகச்செய்து, பின்னர் பேதபுத்தி விருத்தியால் வரும் ஐயத்தை யாதோர் சந்தேகமுந்தோன்றாது தெளிவித்து எம்மை அடிமை கொண்டனனெனமுடிக்க ஒத்து, செய்து, தெளிவித்து எனனும் வினையெச்சங்களை ஆண்டானென்னும் வினைமுற்றோடு முடித்துப் பொருள்கொள்க. இக்கவியில்வந்த இருளிரண்டில்; முன்னையது, மாயாசொரூபம். பின்னையது, யாவருள்ளத்திலும் அகலாதுநிற்பது. அங்ஙனம்நிற்பதும் மாயையாதலின், மாயாவுள்ளிருளென வுருவகப்படுத்தினார். இரிய, விளங்கவென்னுஞ் செயவென்னும் வாய்பாட்டுவினைகள், செய்தென்னும் வினைப்பகுதியில் முடியுமாறு காண்க. இந்நூலை நன்குணர்ந்தோர்க்குப் பயன் இருளிரிதலும், ஒளி விளங்கலுமென்க.

(க-து) இன்னின்ன பயன் விளைய இந்நூல் செய்ததென்பது. எந்தெந்த வாதிகளும் இந்நூல் பூர்வபட்ச சித்தாந்தங்களை மாற்றற்கு அனுபவ மின்றியக்கண் என்செய்வர், கூடாதென்க. அனுபவம்வரின் மாற்றலாமோ? புலியடிக்கப்புக்கான் அதனைக் கண்டுழி போலாமென்க. இந்நூலருமை தெரியார் போலும் இதனை வைவார். (183)

184 - கவி (அ கை)

[இந்நூலாசிரியரை இவரது மாணாக்கன் துதித்ததாக இக்கவியிற் கூறுகின்றார்.]

ஆண்டதே சிகனு மைய ஞரண னனந்தன் பாதம்
பூண்டுமூ வாரோ பத்தாற் பொய்ம்மயக் காய்வந் தத்தை
மாண்டநல் லபவா தத்தான் மாய்த்தரு ளோக்கத் தென்றுங்
காண்டிட வைத்த ளித்த காரணா போற்றி போற்றி.

(இ-ள்) ஆண்டதேசிகனுமைய ஞரணனனந்தன் பாதம்பூண்டு (எ-து) — வலிந்தாட்கொண்ட குருவாகியும், கர்த்தனுயுமிருக்கின்ற நாராயணதேசிகரது அந்தமற்ற பாதங்களைத் தனது சிரமேற்கொண்டு: —மூவாரோபத்தாற் பொய்ம்மயக்காய் வந்தத்தை மாண்டநல் லபவாதத்தால் மாய்த்து (எ-து) மூன்றுவித ஆரோபத்தினுற் பொய்ப் பிராந்தி ரூபமாக வந்தெய்திய மாயையென்பதை மாட்சிமைப்பட்ட நல்ல அபவாத யுத்தியால் நசிப்பித்து: - அருளோக்கத்தென்றுங் காண்டிடவைத்தளிந்த காரணா போற்றிபோற்றி (எ-து) — கிருபா நோக்கிருல் எப்போதுங் கண்டு சிந்தித்து உய்ய நூலாகப்பாடி வைத்து எம்போலிகட்குக்கொடுத்த காரணகுருவானவரே நமஸ்காரம். எ-று.

நாராயணதேசிகரது அடிகளைச் சிரமேற்கொண்டு, ஆரோபத்தால் வந்த மாயையை அபவாதத்தாற்கெடுத்து நூலாகப் பாடிக் கொடுத்த தாண்டவமூர்த்தியே! சரணஞ்சரணமெனக்கூட்டுக. ஓர் பிரக்ஞையேதிரிபடியாகத் தோற்றலினுனும், அத்தோற்றம் பொய் மயக்காமுடிவதினுனும், அங்ஙனமுடிவது மாயை யென்னும் பெயர்த்தாதலினுனும், இதனை அத்தியாரோப மென்பார், மூவாரோபத்தாற் பொய்ம்மயக்காய் வந்தத்தையெனவும், அதனைக்கெடுத்தல் அபவாதத்தால் ஆதலின், மாண்ட நல்லபவாதத்தால் மாய்த்தெனவுங் கூறிய

வாறு காண்க. வைத்தென்பதற்குச் செயப்படுபொருளின்மையின், நூலைப்பாடி வைத்தெனக்கொண்டாம். அருணோக்கத்து என்றது, அருணோக்கம் என்றிருக்கின், அருணோக்கம் வைத்தெனப் பொருள் கொள்ளலாம், அங்ஙனம் இல்லாமையாற் கூடாது. இங்கே நூலைச் சிறப்பிக்கவந்த மாணாக்கனாதலின், பாடிவைத்தென்றும். வைத்தென் பதற்குத் திருவடிசூட்டி யெனின் ஒரு சாரமைபினு மமையும்.

(க-து) இந்நூலைச் செய்தளிந்தவருக்கு நமஸ்காரஞ்செய்த தென்பது. இங்ஙனஞ்செய்தது, இந்நூலருமைபற்றியென்க. (184)

## 185 - கவி (அ கை)

[சற்குருவின் பாதாபிடேக நீரைத் தலைக்கொண்டோரும், இந் நூலை உணரவேண்டியவாறு உணர்ந்தோரும், எய்தும்பயன் இனையவென இக்கவியிற் கூறுகின்றார்.]

குலவுசற் குருவின்பாதக் குளிர்புன றலைமேற் கொண்டா
ருலகினிற் றீர்த்தமெல்லா முற்றபே றடைவார் போல்வர்
நலமெய்யாகிய கைவல்ய நவநீத நூலைக் கற்றோர்
பலகலை ஞானநூல்கள் படித்தஞானிகளா வாழ்வார்.

(இ-ள்) குலவுசற் குருவின்பாதக் குளிர்புன றலைமேற் கொண் டார் (எ-து) - யாவுந் தானாகவிளங்கிய சற்குருவின் பாதத்தைப் பூசித்த குளிர்ச்சி பொருந்திய சலத்தை ஸ்நானமாகக் கொண் டோர்: - உலகினில் தீர்த்தமெல்லாமுற்ற பேறடைவார் போல்வர் (எ-து) - உலகத்தின்கண் சகலபுண்ணிய தீர்த்தங்களிலும் விதிமுறை யே மூழ்கியடைந்த பேறுடையார்போல்வர்: - நலமெய்யாகிய கை வல்யநவநீத நூலைக்கற்றோர் (எ-து) — மேலாயநன்மையும் எதார்த்த முமா நின்றுள்ள, இந்தக் கைவல்யநவநீதநூலைக் கற்கவேண்டியவாறு கற்றோர்: — பலகலை ஞானநூல்கள் படித்தஞானிகளா வாழ்வார் (எ-து) -- எண்ணிறந்த பலவேறுவகைப்பட்ட நூல்களையும், ஞானத் தைமாத்திரம் பிரதிவாதிக்கத்தக்க கடல்போல் விரிந்துள்ள ஞான நூல்களையும் தக்க சிரவணாதிகளாற் கற்றுத்தெளிந்த ஞானிகள்போல வே ஐயந்திரிபின்றி வாழ்வார்கள். எ-று.

எழுவாய் பயனிலையெனக் காட்ட யுடையார் போல்வரென் றும். இங்ஙனமன்று எமதுசுவாமிகள் உரைகூறியதெனின், கவிக் குறையாதலினானும் அக்கவி இலக்கணவழுவுக் கிடம்பெறுதிருக்க

வேண்டும் ஆதலினுனும் கூடாதென்க. இது சாம்பிரதாய உரையெனின், ஞாயஞ் சோதனை பொருத்தங்கட்கு முரணுதிருக்கவேண்டும் இங்ஙனமெல்லாம் வேதாந்தத்துக்கு வேண்டுவதின்றெனின், அப்போது நூல்களாயிருக்கவேண்டுவதின்று. வேண்டுவதின்றெனின், சுருதி யுத்தி அனுபவ மென்பானேன்? சுருதிவேண்டுவதின்றெனின், ஞானநூல்களெற்றிற்கு? யுத்தியாகிய ஞாயஞ் சோதனை பொருத்த மெற்றிற்கு? சுவானுபவமாத்திரம் போதுமெனின், யுத்திக்குமுரணுய சுவானுபவமாக வேண்டும். ஆதலின் சுவானுபவஞ்; சுருதியுத்தி யொத்த தென்ருர் சான்றோர்பலரும். இவையெல்லாந்தக்க சாம்பிர தாயத்தை அடுத்துக்கேளாத குற்றமெனவறிக. சுருதி யுத்தி முரணுது கூறற்கு வலியின்றேல் சுவானுபவமும் அங்ஙனமாகும். ஏட்டை மேற்கோளாகக் கூருதிருக்க வேண்டும். கூறவரின், குற்றம்வரும், எங்கள் சுவாமிகள் கூறியதெனின் அவருக்கும்வரவா, அவரை இழுப்பதுபோதும் வாயடங்கிநிற்கை நன்கு மதிப்புக்கு மேன்மை.

(க-து) எல்லாங்கற்றுத் தெளிதல்போலும் இந்நூலைமாத்திரங் கற்கவேண்டியவாறு கற்றுத்தெளிதலென்பது. நலமெய்யாகிய கைவல்யமெனவே, கைவல்யம்; நலமுமெய்யுமாயதெனப் பெற்றும். தான் அயலாகாது தானே தானுதல் எல்லாநலத்தினு மேலாயதாதலின் நலமெனவும், தானென்பதே மெய். ஏனையவை யெத்திறத்த வாயினும் பொய். எனத்துணிதலின் மெய் யெனவும், இந்நூலுக்கு அடையாக்கியதென்க சம்பூரணம், முற்றிற்று.

சந்தேகந்தெளிதல் படலம். கவி—185

தத்துவவிளக்கப்படலம். கவி - 108

கவிகள் – 263

முற்றிற்று.

நேரிசை வெண்பா.

தத்துவ மல்லாத சராசரங்க ளெங்கணுள
தத்துவத்தைச் சோதித்துத் தானுதற்—கித்துறையே
யன்றிப் பிறிதிலையா லாய்ந்துய்ம்மி னிந்நூலை
யன்றிச் சுருக்க மெஃதாம்.

